# பொருளடக்கம்

| அத்தியாயம் | | பக்கம் |
|---|---|---|

உ

# ஸ்ரீமத் பாகவதம்

## ஸ்கந்தம் 6

### அத்தியாயம்—1

அஜாமிளர் உபாக்யானம்

அதனைக் கேட்ட பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி, "ஓ பகவன்! அர்ச்சிராதி மார்க்கமாகப் பிர்ம்மலோகத்தை அடைந்து, அந்த பிர்ம்மதேவருடன் மோக்ஷத்தை அடைவது, அதற்குக் காரணமாகிய நிவர்த்தி மார்க்கங்கள் ஆகிய இவைகள் உம்மால் சொல்லப்பட்டன. பிரகிருதி ஸம்பந்தம் அற்றுப்போகாததனால் அடிக்கடி தேகத்தைக் கொடுக்கக் கூடியதும், சுவர்க்கம் முதலிய சுகத்தைக் கொடுப்பதுமான பிரவர்த்தி மார்க்கத்தையும் சொன்னீர். (மூன்றாவது ஸ்கந்தத்தில்) அதர்மத்தாலுண்டாகிய பலவகை நரகங்களையும் சொன்னீர். ஸ்வாயம்புவ மனு முதல் மன்வந்தரத்தையும் நிரூபித்தீர். மேலும் பிரியவிருதர், உத்தானபாதர் இவர்களுடைய வம்சம், இவர்களுடைய சரிதம் ஆகியவைகளையும், த்வீபம், வர்ஷம், ஸமுத்ரம், மலை, நதி, மரங்கள், பூ மண்டலம் இவைகளுடைய அளவு முதலியவைகளையும், ஜோதிச் சக்கரத்தையும் சொன்னீர் மிகுந்த பாக்யமுள்ளவரே! நரகத்தை அடைந்த புருஷன் எதனைச் செய்தால் அந்த வேதனைகளை யடையாமல் சுகத்தை அடைவான்? அதனைச் சொல்லவேண்டும்" என்றார்.

7—8. அதனைக் கேட்ட சுகர் "ஓ அரசனே! மனத்தாலும், வாக்கினாலும், சரீரத்தாலும் செய்த பாபங்களுக்கு

அவைகளைக் கொண்டே எவன் பிராயச்சித்தம் செய்து கொள்ளவில்லையோ அவன் மரணமடைந்த பிறகு மேற் சொல்லிய நரகங்களை யடைந்து கடுமையான வேதனைகளை அனுபவிக்கிறான். ஆனதால் ரோகத்தின் காரணத்தை அறிந்த வைத்தியன் ரோகத்திற்குத் தக்கபடி வைத்தியம் செய்வதுபோல் பாபத்திற்குத் தக்கபடி மரணத்திற்கு முந் தியே பிராயச்சித்தம் செய்துகொள்ள யதனிக்கவேண்டும்" என்றார்.

9—10. அதனைக் கேட்ட அரசர் மகரிஷியை நோக்கி, "பாபிகள் கஷ்டப்படுவதைப் பார்ப்பதாலும், சாஸ்திரங் களில் கூறியதைப் படிப்பதாலும் பாபமானது 'கெடுதியைக் கொடுக்கும்' என்று தெரிந்துகொண்டும் புருஷன் பாபத்தைச் செய்கிறான்; அதற்குப் பிராயச்சித்தத்தை எப்படி அநுஷ் டிக்கலாம்? ஆதலால் பிராயச்சித்தத்தால் பாபம் எப்படி நிவர்த்தியாகும்? சில சமயம் பாபத்தில் பயந்து அதனைச் செய்யாமலிருக்கிறான். சில சமயம் அதனையே அதிகமாகச் செய்கிறான். ஆனதால் யானை ஸ்நானஞ்செய்வதுபோலப் பிராயச்சித்தம் வியர்த்தமானதென்று நினைக்கிறேன்" என்றார்.

11—20. அதனைக் கேட்ட சுகர், "பிராயச்சித்தமாகிய கர்மாவினால் பாப கர்மங்கள் பாக்கியன்னியில் நாசமடைகிற தில்லை. பிராயச்சித்தம் முதலியவைகள் அவித்வானுக்காக ஏற்பட்டவைகள். கர்மங்களை அடியோடு நாசம் பண்ணக் கூடிய பிராயச்சித்தம் ஞானம் ஒன்றுதான். நித்தியம் ஆரோக்கியமான அன்னத்தையே புசிக்கும் மனிதனுக்கு வியாதிகள் எப்படி உண்டாகிறதில்லையோ, அதுபோலவே நியமம் முதலியவைகளைச் செய்துகொண்டிருக்கும் புருஷன் தத்வஞானத்தை அடைகிறான். தர்மத்தை அறிந்த

சிரத்தையுள்ள புருஷர்கள் முக்கரணங்களாலுண்டான பாபங்களைத் தபஸினாலும், பிர்ம்மசர்யத்தாலும், தமத்தாலும், தியாகத்தாலும், ஸத்யத்தாலும், சௌசத்தாலும், யமத்தாலும், நியமத்தாலும் அக்னியானது புதரை எரிப்பது போல் எரிக்கிறார்கள். ஸ்ரீ பகவத்பக்தர்களான சிலர் சூரியன் பனியைப் போக்குவதுபோல பக்தியினாலேயே ஸகல பாபங்களையும் நிவர்த்தித்துக்கொள்ளுகிறார்கள். கிருஷ்ணனிடத்திலேயே மனத்தைச் செலுத்திய பகவத்பக்தர்களை ஸேவிப்பதால் எப்படி சுத்தர்களாக ஆகிறார்களோ, அப்படி தபஸ் முதலிய பிராயச்சித்தங்களால் பாபிகள் சுத்தர்களாக ஆகிறதில்லை. இந்தப் பக்தி மார்க்கமானது மிகவும் நல்லது. க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியது; பயமற்றது; ஏனென்றால் அந்த மார்க்கத்தை அடைந்தவர்கள் நல்ல சுபாவமுள்ளவர்களும், ஒன்றிலும் ஆசையில்லாதவர்களும், நாராயணனையே முக்கிய கதியாய் உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். நாராயணனிடத்தில் பக்தியில்லாத பாபிகள் எவ்வளவு பிராயச்சித்தங்களை அனுஷ்டித்தாலும் அவைகள் பரிசுத்தியை உண்டுபண்ணுகிறதில்லை. கள் குடத்தை நதிகள் சுத்தப்படுத்துமா? எவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் மனத்தைச் செலுத்துகிறார்களோ, அவனுடைய குணங்களைச் சொல்வதில் ஆசையுடையவர்களோ, அவர்கள் யமனையும், யமபடர்களையும் சொப்பனத்திலும் பார்க்கமாட்டார்கள். இந்த விஷயத்தில் வெகுநாளைக்கு முன் யமதூதர்களுக்கும், விஷ்ணுதூதர்களுக்கும் நேர்ந்த ஸம்வாத ரூபமான ஒரு கதையைச் சொல்லுகிறேன், கேளும்.''

21—31. கந்யாகுப்ஜம் என்ற தேசத்தில் அஜாமிளர் என்ற ஒரு பிராம்மணர் இருந்தார். அவர் தாஸியினிடத்திலேயே ஆசையுள்ளவர்; நல்லொழுக்கமற்றவர்; தாஸியினுடைய சேர்க்கையால் நிந்திக்கப்பட்டவர்; மேலுமவர்

சொக்கட்டான் முதலிய சூதாட்டத்தாலும், வஞ்சனையினாலும் கீழான விருத்தியைச் செய்துகொண்டு குடும்பத்தைப் போஷித்து, மற்றப் பிராணிகளை உபத்திரவித்து வந்தார். இம்மாதிரி தாஸியின் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காகப் பாபத்தைச் செய்துகொண்டும், அவளுடைய புத்திரர்களைப் பார்த்துச் சந்தோஷித்துக்கொண்டும் எண்பது வயதைக் கழித்தார். அவருக்குப் பத்து புத்திரர்களுண்டு. அதில் இளையவனாகிய குழந்தைக்கு நாராயணன் என்று பெயர். தாய் தகப்பனார்கள் அந்தக் குழந்தையினிடத்தில் மிகவும் பிரியம் வைத்திருந்தார்கள். அஜாமிளர் இனிமையாகப் பேசும் அந்தக் குழந்தையினிடத்தில் மிகுந்த பிரியமுள்ளவராகி அதனுடைய விளையாட்டைப் பார்த்து மிகவும் சந்தோஷித்தார். மேலும், அவர் போஜனம் செய்யும்போதும் பானம் செய்யும்போதும் அக்குழந்தையினிடத்திலிருக்கும் சிநேகத்தால் அதற்கு ஆகாரம் முதலியவைகளைக் கொடுத்துச் சந்தோஷமடைவது வழக்கம். இம்மாதிரி விஷயங்களில் ஆசைகொண்டவராகி அவர் தமக்கு மரணகாலம் நெருங்கியதைத் தெரிந்துகொள்ளாமலிருந்தார். இப்படி அஞ்ஞானராகக் காலத்தைக் கழித்தும் அந்தப் பிராம்மணனுக்கு மரணகாலம் ஸமீபித்தது. அப்பொழுது நாராயணனென்ற தம்முடைய குழந்தையையே நினைத்துக்கொண்டிருந்தார். அப்பொழுது பயங்கர ரூபமுள்ள மூன்று புருஷர்களைக் கண்டார். அவர்கள் பாசத்தைக் கையில் வைத்துக்கொண்டிருந்தார்கள்; அவர்கள் வக்ரமான மூக்குள்ளவர்கள்; அவர்களுடைய மயிர்கள் மேலே தூக்கிக்கொண்டிருந்தன; அவர்கள் இந்தப் பிராம்மணனை அழைத்துக்கொண்டு போகவந்த யமதூதர்கள்; அந்த ஸமயத்தில் தூரத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் நாராயணனென்ற குழந்தையைப் பார்த்து, 'ஓ, நாராயண!' என்று உரக்க அழைத்தார். சாகுந்-

தருணத்தில் அஜாமிளருடைய முகத்திலிருந்து நாராயணன் என்ற திவ்ய நாமம் வெளிப்பட்டதால் அப்பொழுது விஷ்ணுவின் பார்ஷதர்கள் அவ்விடம் வந்தார்கள். பின்னுமவர்கள் யம தூதர்களைத் தடுத்து அஜாமிளனை விடுவித்தார்கள்.

32—36. விஷ்ணு தூதர்களால் தடுக்கப்பட்ட யம தூதர்கள் அவர்களை நோக்கி, "நீங்கள் யார்? தர்மராஜனுடைய உத்தரவிற்குத் தடைசெய்கிறீர்கள். எங்கிருந்து வருகிறீர்கள்? எதனால் இம்மாதிரி தடுக்கிறீர்கள்? நீங்கள் தேவர்களா அல்லது உபதேவர்களா? அல்லது சித்தர்களா? எல்லோரும் தாமரை இதழ்போன்ற கண்களுள்ளவர்களாக இருக்கிறீர்கள். பீதாம்பரத்தைத் தரிக்கின்றீர்கள்; கிரீடம், குண்டலம், தாமரைமலர் மாலை, வில், அம்பருத்தூணி, கத்தி, கதை, சங்கம், சக்கரம், தாமரை மலர் இவைகளைத் தரிக்கின்றீர்கள்? நான்கு கைகளைத் தரிக்கிறீர்கள்? யௌவன வயதுள்ளவர்கள்; சரீர காந்தியால் இருட்டைப் போக்கடிக்கின்றீர்கள்; அப்படிப்பட்ட நீங்கள் தர்மராஜனுடைய தூதர்களான எங்களை ஏன் தடுக்கிறீர்கள்" என்று கேட்டார்கள்.

37—68. அதனைக் கேட்ட விஷ்ணு தூதர்கள் அவர்களை நோக்கி, "நீங்கள் தர்மராஜனுடைய தூதர்களானால் தர்மத்தின் தத்வத்தையும், அதர்மத்தின் லக்ஷணத்தையும் சொல்லுங்கள். எந்தப் பிரகாரமாகச் சிட்சை செய்கிறது? அதற்கு விஷயம் யார்? எதைச் செய்தவர்கள் தண்டிக்கக் கூடியவர்கள்? எல்லோரும் தண்டிக்கக்கூடியவர்களா? அல்லது மனிதர்களுக்குள் சிலரா?" என்று மேகம்போல் கம்பீரமாகக் கேட்டார்கள். இதனைக் கேட்ட யமதூதர்கள் அவர்களை நோக்கி, "வேதத்தால் விதிக்கப்பட்டதே தர்மம்;

அதனால் விலக்கப்பட்டதே அதர்மம். வேதமென்பது ஸாக்ஷாத் நாராயணனே; தானாக உண்டானது ஒருவராலும் செய்யப்பட்டதல்ல. எவருடைய சுரூபத்தில் முக்குண சுரூபிகளான இந்தப் பிராணிகளும், குணங்களும் பிராம்மணன் முதலிய பெயர்களும், அத்யயனம் முதலிய கிரியைகளும், வர்ணாச்ரமங்களும் இருக்கின்றனவோ, அவரே நாராயணன். சூரியன், அக்னி, ஆகாசம், வாயு, ஹ்ருதயம், சந்திரன், ஸந்த்யை, இரவு, பகல், திக்குகள், ஜலம், பூமி, காலம், தர்மம் இவைகள் ஜீவனால் செய்யப்படும் தர்மாதர்மத்திற்குச் சாட்சிகள். இவர்களால் அதர்மஞ் செய்தவனின்னானென்று தெரியவருகிறது. அவனே சிக்ஷைக்கு இடமாக ஆகிறான். மேலும், எல்லா மனிதர்களும் அவரவர்களுடைய கர்மத்திற்குத் தக்கபடி சிக்ஷிக்கத் தகுந்தவர்களாக ஆகிறார்கள். கர்மங்களைச் செய்தவர்களுக்குக் குணங்களின் சேர்க்கை இருக்கிறது. தேகமுள்ளவன் கர்மத்தைச் செய்யாமலிருக்கமாட்டான். அதனால் சுகம், துக்கம் இரண்டும் உண்டாகின்றன. எவனால் தர்மமானது, அதர்மமானது எவ்வளவு செய்யப்பட்டிருக்கிறதோ, அதன் பலனைப் பரலோகத்தில் அவனே அடைகிறான். ஓ தேவ சிரேஷ்டர்களே! இந்த லோகத்தில் ஜனங்கள் மூன்று வகைகளாகக் காணப்படுவதுபோல் மறு லோகத்திலும் குண பேதத்தால் மூன்று வகையாக இருக்கிறார்களென்று ஊகிக்கிறோம். நடைபெறும் வஸந்தம் முதலிய ருதுக்கள் கடந்து சென்றது, வரப்போகிறது இவைகளின் புஷ்ப பலன்களைக் காட்டுகிறதோ, அதுபோல இந்த ஜன்மமானது முன் ஜன்மம், வரும் ஜன்மம் ஆகிய இவைகளுடைய தர்மம் அதர்மம் இவைகளைக் காட்டுகிறது. மேலும் அந்தர்யாமியாக இருக்கும் பகவான் தன் மனத்தாலேயே ஜீவனுடைய முந்திய ரூபத்தைத் தெரிந்து

கொண்டு, பிந்தி அவனுக்குத் தகுதியான தேகத்தைப் பற்றி யோஜிக்கிறார். அவர் உற்பத்தியற்ற பகவானல்லவா? அஞ்ஞானி எப்படித் தமோகுணமுள்ளவனாகி வியக்கத் தக்கதையே உபாஸிக்கிறானோ, அப்படி ஜீவன் முன் ஜன்மத்திய ஞாபகமில்லாதவனாகி முன ஜன்மத்தையாவது, பின் ஜன்மத்தையாவது அறிகிறதில்லை. மேலும், ஜீவன் ஐந்து கர்மேந்திரியங்களால் அதன் விஷயங்களையும், ஐந்து ஞானேந்திரியங்களைக்கொண்டு சப்தம் முதலிய ஐந்து விஷயங்களையும் தெரிந்துகொள்ளுகிறான். பின்னும் அந்த ஜீவன் தான பதினாறு உபாதிகளுள்ளவனானாலும் ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் இவைகளுடைய விஷயங்கள் ஆகியவைகளைத் தான் பதினேழாவதாக இருந்து அனுபவிக்கிறான். பதினாறு கலைகளுள்ள லிங்க சரீரமானது ஜீவனிடத்தில் சந்தோஷம், துக்கம், பயம் இவைகளைக் கொடுக்கும் ஸம்ஸாரத்தை உண்டுபண்ணுகிறது. தேகமுடைய ஜீவன் காமம், குரோதம் இவைகளுக்கு வசப்பட்டிருப்பதுமல்லாமல் கர்மங்களைச் செய்யவேண்டுமென்ற விருப்பமில்லாதவனாக இருந்தும் குளவியானது தன்னைச் சுற்றிக் கூட்டைக் கட்டிக்கொண்டு வெளிவரும் உபாயத்தை அறியாதிருப்பதுபோலக் கர்மங்களைச்செய்து அதனால் மோஹத்தை அடைகிறான். லோகத்தில் ஒருவனும் கண நேரங்கூட கர்மத்தைச் செய்யாமலிக்கிறதில்லை. ஆனால் முன் ஜன்மத்திய ஸம்ஸ்காரத்திற்குத் தக்கபடி இயற்கையான குணங்களால் கர்மத்தையாவது, அகர்மத்தையாவது தானாகச் செய்கிறான். மேலும், புருஷன் தாய்தகப்பனார்களுக்குத் தக்கபடி தங்களுடைய கர்மத்தால் ஸ்தூல ஸூக்ஷ்மசரீரத்தை அடைகிறான். புருஷனுக்குப் பிரகிருதியின் சம்பந்தத்தால் இம்மாதிரியான கெடுதி உண்டாகிறது. ஈசுவரனை **உபாஸிப்பதால் அந்த ஸம்ஸாரமானது நாசமடைகிறது.**

இந்தப் பிராமணன் வேதாத்தியயனஞ் செய்தவன்; நல்லொழுக்கம், நற்குணங்கள் இவைகளுள்ளவன்; விரதங்களை அனுஷ்டித்தவன்; மிருதுவான சுபாவமுள்ளவன்; சாந்தன்; உண்மையே பேசுகிறவன்; மந்திரங்களை அறிந்தவன்; சுத்தன்; குரு, அக்னி, அதிதி, பெரியோர்கள் இவர்களை உபாசிப்பவன்; அகங்காரமற்றவன்; ஸகல பிராணிகளிடத்திலும் பிரீதியுள்ளவன்; ஸாது; சொற்பமாய்ப் பேசுகிறவன்; அசூயை இல்லாதவன்; இம்மாதிரியான இந்தப் பிராம்மணன் ஒரு நாள் தகப்பனுடைய உத்தரவின்பேரில் பழம், புஷ்பம், ஸமித், தர்ப்பங்கள் இவைகளைக் கொண்டுவருவதற்காக வனத்திற்குச் சென்றான். அவ்விடத்தில் ஸமித் முதலியவைகளை எடுத்துக்கொண்டு வீட்டிற்குத் திரும்பிவரும்பொழுது இழிகுலத்து ஒருவனைக் கண்டான். அவன் ஒரு தாஸியுடன் வெட்கமில்லாமல் கிரீடித்துக்கொண்டிருந்தான். அந்தத் தாஸியானவள் கள்ளைக் குடித்து அதனால் சிவந்த கண்களுடனும், மயக்க வெறியுடனும் அந்த இழிகுலத்தோனைத் தன் கையால் ஆலிங்கனஞ் செய்துகொண்டு இருந்தாள். அவனும் அவளோடு சிரித்துக்கொண்டும், பாடிக்கொண்டும் இருந்தான். அதனைக் கண்ட பிராம்மணன் மன்மத தாபங்கொண்டு தன் மனதைத் தன்னால் கூடியமட்டும் அடக்கியும் அடக்கமுடியாமல் அதிக தாபத்தை அடைந்தான். அவள் நிமித்தமாக மன்மத பிசாசம் பிடித்து, பிராம்மணன் விவேகமில்லாதவனாகி அவளையே மனத்தில் தியானஞ் செய்துகொண்டு தன்னுடைய தாமத்தை விட்டுவிட்டான். மேலும், தகப்பனார் சம்பாதித்த திரவியத்தால் அந்தத் தாஸியைச் சந்தோஷப்படுத்தினான். பின்னுமவன் தாஸியினுடைய கடைக்கண் பார்வைக்குச் சுவாதீனப்பட்டு நல்ல குலத்தில் பிறந்தவளும், யௌவன வயதை அடையாத

வளுமான தன்னுடைய மனைவியையும் விட்டுவிட்டான். அல்ப புத்தியுள்ள இவன் தாஸியின் குடும்பத்தைப் போஷிப்பதற்காக நியாயமாகவாவது, அநியாயமாகவாவது பலவிதமாகப் பணத்தைச் சம்பாதித்தான். இவன் சாஸ்திரத்தை விட்டு தனதிஷ்டப்படி, பெரியோர்களால் நிந்திக்கப்படும் நெறியை அனுஷ்டித்துவந்தபடியால் அவனுடைய ஆயுள் பாபமாகவும், அவன் புசிக்கும் அன்னம் முதலியவைகள் அசுத்தமாகவும் ஆயின. இதற்குத் தகுந்த பிராயச்சித்தத்தையும் இவன் செய்துகொள்ளவில்லை. ஆனதால் இவனை யமனுடைய சமீபம் கொண்டுபோகிறோம். யமனால் சிட்சிக்கப்பட்டு இவன் சுத்தனாகிவிடுவான்" என்றார்கள்.

# அத்தியாயம் 2

## அஜாமிளர் விஷ்ணுலோகஞ் சென்றது

1—21. அதனைக் கேட்ட நியாயத்தையறிந்த விஷ்ணு தூதர்கள் யமதூதர்களை நோக்கி, "தர்மத்தை அறிந்தவர்களுடைய ஸபையில் அதர்மம் நடக்கிறது. இது கஷ்டம. தண்டிக்கக்கூடாதவர்களான புண்யசாலிகளுக்கு வீணாகச் சிட்சை விதிக்கப்படுகிறது. எவர்கள் சகல பிரஜைகளையும் பிதாபோல் காப்பாற்றுகிறவர்களோ, சாதுக்களோ, சமமாகப் பார்ப்பவர்களோ, அவர்களிடத்திலும் மாறுதல் ஏற்படுமானல் யாரைப் பிரஜைகள் சரணமடைவார்கள்? லோகத்தில் மேலானவர்கள் எதனைச் செய்கிறார்களோ, அதனையே மற்றவர்களும் செய்கிறார்கள். மேலும், அவர்கள் எதனைப் பிரமாணமென்று ஒப்புக்கொள்ளுகிறார்களோ, மற்றவர்களும் அதையே பிரமாணமென்று அனுசரிக்கிறார்கள். எவனுடைய மடியில் தலையை வைத்துக்கொண்டு தர்மம், அதர்மம் இவைகளை அறியாமல் லோகமானது,

பசுபோலக் கவலையற்றுத் தூங்குகிறதோ, பிராணிகளால் விரும்பக்கூடியவனும், தயவுள்ளவனுமாகிய அந்தப் புருஷன் தம்மிடம் ஆத்மாவை ஸமர்ப்பிப்பதும், விவேகமற்றதுமான லோகத்தை வஞ்சிக்கலாமா? இந்த அஜாமிளன் புத்ரனைக் கூப்பிடும் வ்யாஜமாகவாவது பகவானுடைய திவ்ய நாமத்தை உச்சரித்தான். இது கோடி ஜன்மத்தில் செய்த பாபங்களை நிவர்த்திக்கக்கூடிய பிராயச்சித்தம். நாராயண என்ற நான்கு அக்ஷரத்தை எவன் உச்சரிக்கிறானோ, அவன் எவ்வளவு பாபஞ் செய்தவனானாலும் அவன் பாபியல்ல. எல்லா பாபத்திற்கும் இது பிராயச்சித்தமாக ஆகிவிடுகிறது. திருடுவது, கள் குடிப்பது, மித்ரனுக்கு த்ரோகஞ்செய்வது, பிராம்மணனைக் கொல்வது, ஆசாரியர் பத்னியைக் கூடுவது, ஸ்திரீ, அரசன், பிதா ஆகிய இவர்களைக் கொல்வது முதலிய எந்த பாபஞ் செய்திருந்தாலும் அந்த பாபிகளுக்கு ஸ்ரீ மகாவிஷ்ணுவின் நாமத்தை உச்சரிப்பதும் அதனால் பகவானிடத்தில் புத்தியைச் செலுத்துவதுமே மேலான பிராயச்சித்தம். பாபியானவன் மநு முதலியவர்களால் சொல்லப்பட்ட பிராயச்சித்தங்களை அநுஷ்டித்தாலும், ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் நாமங்களை உச்சரிப்பதாகிய பிராயச்சித்தத்தால் சுத்தியடைவது போல் ஆகிறதில்லை. அது உத்தம ச்லோகனாகிய பகவானுடைய குணங்களை ஞாபகப்படுத்துகிறது. சாந்திராயணம் முதலிய பிராயச்சித்தத்தை அநுஷ்டித்தாலும் திரும்பவும் மனதானது கெட்ட மார்க்கத்தில் பிரவிர்த்திக்கிறது. ஆகலால் பகவானுடைய நாமங்களை உச்சரிப்பதே மேலான பிராயச்சித்தம். அதுவே சித்தத்தைச் சுத்தி செய்கிறது. அதனால் இந்தப் பிராம்மணன் சாகுந் தருணத்தில் பகவானுடைய நாமத்தை உச்சரித்ததால் ஸகல பாபங்களுக்கும் பிராயச்சித்தத்தை அனுஷ்டித்தவனாக ஆகிறான். ஆகையால் இவனை நீங்கள் கொண்டுபோகவேண்டாம்.

[illegible], 'ஸங்கேதத்தாலாவது, பரிகாஸமாகவாவது, பேசின வார்த்தையைப் பூர்த்திசெய்வதற்காகவாவது பகவானுடைய நாமத்தை உச்சரித்தால் அது ஸகல பாபத்தையும் நிவர்த்திக்கிறது' என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். மேலும், உயரமான இடத்திலிருந்து கீழே விழும்போதும், வழியில் தடுக்கும்பொழுதும், சரீரத்தில் உபத்ரவத்தை அடைந்தபொழுதும், ஸர்ப்பம் முதலியவை கடித்தபொழுதும், ஜ்வரம் முதலிய தாபத்தை அடைந்தபொழுதும், தடி முதலியவைகளாலடிக்கப்பட்டபொழுதும், தெய்வச்செயலாக ஹரியென்று எவன் சொல்லுகிறானோ, அவன் யாதனையை அடையத் தகுந்தவனல்ல. புத்திசாலியான மநு முதலியவர்கள் மேலான பாபங்களுக்குக் கடினமான பிராயச்சித்தங்களையும், அற்பமான பாபங்களுக்கு லகுவான பிராயச்சித்தங்களையும் யோஜித்து விதித்திருக்கிறார்கள். அந்தப் பாபங்கள் தபஸினாலும், தானத்தாலும், விரதம் முதலியவைகளாலும் நசித்தாலும் அதன் வாஸனை நசிக்காததால் அதர்மத்திற்கு விதையாயிருக்கும் ஹ்ருதயம் சுத்தமாகிறதில்லை. அது பகவானுடைய பாத ஸேவையால்தான் சுத்தமாகிறது. மேலான வீரியமுள்ள மருந்தை தெய்வச் செயலாய் உபயோகிக்க ரோகிக்கு ரோகம் எப்படி நிவர்த்தியாகிறதோ, அதுபோலவே தெரிந்தாவது, தெரியாமலாவது பகவானுடைய நாமத்தை எவன் உச்சரிக்கிறானோ, அவனுடைய ஸகல பாபங்களாகிய கட்டைகளை நாமமாகிய அக்னி எரிக்கிறது. மந்திரத்தின் குணத்தை அறியாதவனானாலும் மனிதன் அதனை உச்சரிப்பதனால் அதன் பலனை அடைகிறானல்லவா? ஓ தூதர்களே! இந்த விஷயத்தில் உங்களுக்குச் சந்தேகமிருக்குமானால் உங்களுடைய யஜமானனாகிய யமனைக் கேளுங்கள். அவருக்குத் தர்மத்தின் ரகசியம் தெரியும்" என்று சொன்னார்கள்.

21—50. இப்படி அந்த விஷ்ணு தூதர்கள் பாகவத தர்மத்தை நிச்சயித்துச் சொல்லி அந்தப் பிராம்மணனை யம பாசத்திலிருந்து விடுவித்தார்கள். விஷ்ணு தூதர்களுடைய வார்த்தையைக் கேட்டு யமதூதர்கள் யமனுடைய அருகில் சென்று நடந்த செய்தியைத் தெரிவித்தார்கள். யம பாசத்திலிருந்து விடுபட்ட பிராம்மணன் பயமில்லாதவனாகி விஷ்ணு தூதர்களை நமஸ்கரித்து ஏதனையோ சொல்ல ஆரம்பித்தான். அப்பொழுது அவர்கள் அவன் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே மறைந்தார்கள். பிறகு அஜாமிளன் இரண்டு தூதர்களுடைய பேச்சு வார்த்தையையும், சுத்தமான பாகவத தர்மத்தையும், மூன்று குணங்களை ஆசிரயித்த யமதூதர்களால் சொல்லப்பட்ட தர்மத்தையும் கேட்டு பகவானுடைய சிறப்புக்களைச் சிரவணஞ் செய்ததால் பகவானிடத்தில் பக்தியை அடைந்தான். மேலும், தான் செய்த பாபங்களை நினைத்து மிகவும் துக்கித்தான். "நான் அறியாத்தன்மையால் தாஸியினிடத்தில் ஆசை வைத்து அவளிடத்தில் புதாரூபியாக அவதரித்து மிகுந்த கஷ்டத்தை அடைந்தேன். பதிவிரதையான மனைவியை விட்டு கள் குடிக்கும் வேசியான இழிகுல மாதை அடைந்தேன். நான் பெரியோர்களால் நிந்திக்கப்பட்டவன்: மிகுந்த பாபத்தைச் செய்தவன்; குலத்தைக் கெடுத்தவன்; என்னை நிந்திக்கவேண்டும். தாய் தகப்பனார்கள் செய்த உபகாரத்தை நினையாமலும் வயது சென்றவர்களும், என்னைத் தவிர நாதனில்லாதவர்களும், பந்துக்களற்றவர்களும், துக்கிக்கக் கூடியவர்களுமான அவர்களைக் காப்பாற்றாமலிருந்தேன். ஆனதால் தர்மத்தைக் கெடுத்து, தனதிஷ்டப்படி சஞ்சரிப்பவன் எந்த நரகத்தை அடைவானோ, அந்த மிகக் கடுமையான நரகத்தை அடையப் போகிறேன். இப்பொழுது பாசத்தால் கட்டி என்னை இழுத்தவர்கள் எங்கே சென்றார்

கள்? அவர்களிடமிருந்து என்னை காப்பாற்றின நான்கு ஸித்தர்கள் எங்கே போனார்கள்? இது சொப்பனமா? அல்லது நேரில் பார்க்கப்பட்ட அற்புதமா? நான் இந்த ஜன்மத்தில் பாபியானாலும் சிறந்த தேவர்களைத் தரிசிக்கக்கூடிய புண்யத்தை முன்ஜன்மத்தில் செய்திருக்கிறேனென்று நினைக்கிறேன். இல்லாவிடில் தாஸியினிடம் ஆசைகொண்ட மிக்க பாபியான என்னுடைய நாக்கு ஸ்ரீ பகவானுடைய நாமத்தை உச்சரிக்குமா? பிராம்மண்யத்தை இழந்தவனும், வெட்கமில்லாவனும், பாபியுமாகிய எனக்கும் மங்களகரமாகிய நாராயண என்ற திவ்ய நாமத்திற்கும் எவ்வளவு தாரதம்யமிருக்கிறது. ஆனதால் திரும்பவும் ஸம்ஸாரத்தை அடையாமலிருக்கும்படி சித்தம், இந்திரியம், பிராணன் இவைகளை அடக்கிக்கொண்டு முயற்சிக்கிறேன். அவித்யை, காமம், கர்மம் இவைகளால் ஏற்பட்ட பந்தத்தை நிவர்த்தித்துக்கொள்ளுகிறேன். ஸகல பிராணிகளிடத்திலும் பிரியம், சிநேகம், கருணை இவைகளை அடைகிறேன். எந்த மாயையினால் கிரீடாமிருகம்போல ஸ்திரீயுடன் கிரீடித்தது அதமனானேனோ, அதிலிருந்து நிவர்த்தி அடைகிறேன். தேகம் முதலியவைகளில் என்னுடையதென்கிற அகங்காரத்தைவிட்டு, பகவானுடைய நாமபஜனம் முதலியவற்றால் சுத்தமான மனத்தை அவரிடம் ஸமர்ப்பிக்கிறேன்'' என்று நிர்வேதத்தை அடைந்து கங்காத்துவாரம் சென்றார். "ஓ மஹாராஜ! கொடிப்பொழுது ஸாதுக்களுடன் சேர்ந்ததால் அஜாமிளருக்கு இம்மாதிரியான புத்தியுண்டாயிற்று. பின்னுமவர் அங்கிருக்கும் தேவாலயத்தில் உட்கார்ந்து யோகத்தை அடைந்து, இந்திரியங்களிலிருந்து மனத்தை விலக்கி அநுபவ ரூபியான பரமாத்மாவிடத்தில் சேர்த்தார். அப்பொழுது, முந்தி பார்க்கப்பட்ட விஷ்ணு தூதர்களைத் தரிசித்து அவர்களுக்கு நமஸ்காரஞ் செய்தார். உடனே

கங்கையின் தீர்த்தத்தில் சரீரத்தைவிட்டு பார்ஷதர்களுடைய ஸ்வரூபத்தை அடைந்தார். பின்னுமவர் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் தூதர்களுடன் பொன் விமானத்தின் மீதேறிக்கொண்டு ஸ்ரீ நாராயணனிருக்குமிடஞ் சென்றார். அவர் ஸகல தர்மங்களைவிட்டுத் தாஸிக்குப் புருஷனாயிருந்து நிந்திக்கக்கூடிய கர்மத்தைச்செய்து பதிதனாகவிருந்தும், பகவானுடைய நாமத்தை உச்சரித்தபடியால் சுத்தரானார். பகவானுடைய நாமத்தைச் சொல்லுவதைவிடக் கர்ம பந்தத்தை நிவர்த்திக்கக்கூடிய மார்க்கம் வேறில்லை. அவர்களுடைய மனதானது ரஜோகுணத்தாலும், தமோ குணத்தாலும் கலங்கி, திரும்பவும் கர்மத்தில் பிரவர்த்திக்கிறதில்லை. எவன் மிகவும் இரகசியமும், பாபத்தைப் போக்கக்கூடியதுமான இந்த இதிஹாஸத்தைச் சிரத்தையுடனும், பக்தியுடனும் கேட்கிறானோ, சொல்லுகிறானோ அவன் நரகத்தை அடைகிறதில்லை. யமபடர்களால் பார்க்கப்படுகிறதும் இல்லை. அவன் பாபியானாலும் விஷ்ணு லோகத்தில் வசிக்கிறான். பிள்ளையினுடைய பெயராகிய நாராயணனென்ற சப்தத்தைச் சாகுந் தருணத்தில் உச்சரித்த அஜாமிளரும் முக்தியடைந்தார். சிரத்தையுடன் பகவானுடைய நாமத்தை உச்சரித்தவர்கள் முக்தியடைவார்களென்பதில் என்ன சந்தேகம்?"

---

## அத்தியாயம் 3

### யமனுக்கும் தூதர்களுக்கும் ஸம்வாதம்

1—2. அதனைக் கேட்ட அரசர் மகரிஷியை நோக்கி, "இந்த தூதர்கள் யமனுக்கு அடங்கினவர்களாகவிருப்பதால் எல்லாருக்கும் அதிபதியான தர்மராஜன், விஷ்ணு தூதர்களால் தம்முடைய கட்டளை நிறைவேறாததை அவர்கள் முகமாய்க் கேட்டு எதனைச் செய்தார்? யமனுடைய ஆஞ்ஞை

யானது ஓரிடத்திலும் அவமானம் அடைந்ததாகக் கேள்விப் பட்டதில்லை. இந்தச் சந்தேகத்தை நிவர்த்திக்க உம்மைத் தவிர வேறொருவராலும் முடியாது என்று நினைக்கிறேன்" என்று கூறினர்.

3—10. அதனைக் கேட்ட மகரிஷி அரசனை நோக்கி, "ஓ மஹாராஜ! விஷ்ணு தூதர்களால் யமபடர்களுடைய முயற்சி தடைப்பட்டு அவர்கள் ஸம்யமனீபட்டணஞ்சென்று யமனிடம் பின்வருமாறு தெரிவிக்கலானார்கள்: ஓ பிரபுவே! மூவகையான கர்மத்தைச் செய்யும் ஜனங்களுக்கு அதன் பலனைக் கொடுப்பவர்களான அதிபதிகளாக (சாக்ஷாகவாக விருப்பவர்கள்) எவ்வளவு தேவர்களிருக்கிறார்கள்: ஜனங்களைச் சிட்சிப்பவர்கள் வெகு பேர்களிருப்பார்களானால் யாருக்கு துக்கமும், சுகமும் உண்டாகும்? யாருக்கு அவைகள் கிடைக்கா? கர்மத்தைச் செய்யும் அநேக ஜனங்களைச் சிட்சிப்பவர்கள் அநேகர்களானால் சக்கரவர்த்திக்குட்பட்ட அதிகாரிகளுக்கு அந்த அதிகாரம் எப்படி உபசாரமாத்திரமோ, சுதந்திரமில்லையோ, அப்படி உபசாரமாத்திரமாகிறது. ஆனதால் ஸகல லோகங்களுக்கும் சாக்ஷாகவாக விருப்பவர் நீர் ஒருவரே. மேலும், நீர் மனிதர்களால் செய்யப்படும் புண்ய பாபங்களைச் சொல்பவர்; அப்படிப் பட்ட உம்முடைய ஆஞ்ஞைக்கு அற்புதமான சரீரமுள்ள நான்கு சித்தர்கள் அவமானஞ் செய்தார்கள். உம்முடைய உத்தரவின்படி மிக்க பாபியான ஒருவனை நாங்கள் இவ்விடம் அழைத்துவரும்பொழுது அவர்கள் எங்களுடைய பாசங்களை அறுத்து அவனைப் பலாத்காரமாக விடுவித்தார்கள். அந்தப் பாபியானவன் மரணகாலத்தில் நாராயணா என்று சொன்னான்; உடனே 'பயப்படாதே' என்று சொல்லிக்கொண்டு அவர்கள் வந்தார்கள், அவர்கள் எவர்கள்? சொல்லக்கூடுமானால் சொல்லவேண்டும்" என்று கேட்டார்கள்.

11—30. அதனைக் கேட்ட யமன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய பாதாரவிந்தத்தைத் தியானஞ் செய்துகொண்டு தூதர்களை நோக்கி, 'ஸ்தாவர ஜங்கம ரூபமான ஜகத்திற்கு அதிபதியாக எனக்கும் மேலானவர் ஒருவரிருக்கிறார். இந்த ஜகத்தானது வஸ்திரத்தில் நூல்கள்போல் அவரிடத்தில் ஓதமாகவும், ப்ரோதமாகவு மிருக்கிறது; அவருடைய அம்சத்தாலேயே இந்த ஜகத் உண்டாகிறது; காப்பாற்றப்படுகிறது; நாசமடைகிறது; மூக்குக் கயிற்றினால் கட்டப்பட்ட விருஷபம்போல் உலகமானது அவருக்குச் சுவாதீனமாக இருக்கிறது. அவர் பக்ஷிகளைத் தும்பினால் கட்டுவதுபோல் ஜனங்களைப் பிராம்மணன் முதலிய பெயர்களால் கட்டுகிறார். அவைகளால் கட்டப்பட்ட எல்லா ஜனங்களும் அவருக்கு வசப்பட்டு கர்மங்களைச் செய்கிறார்கள். நான், மஹேந்த்ரன், நிருதி, வருணன், ஸோமன், அக்னி, ஈசானன், வாயு, சூரியன், பிர்ம்மதேவர், ஆதித்யன், விச்வேதேவர்கள், வசுக்கள், ஸாத்தியர்கள், மருத் கணங்கள் ஸித்தர்கள், பிருகு முதலிய மற்ற பிரஜாபதிகள் ஆகிய எல்லோரும் ரஜோ குணம், தமோ குணம் ஆகிய இவைகளுடைய சம்பந்தமற்றவர்கள்; ஸத்வ குணத்தையே முக்கியமாயுடையவர்கள்; அவர்களாலேயே அந்தப் பகவானுடைய அபிப்பிராயம், நடை ஆகிய இவைகள் அறிய முடியாதவை. மற்றவர்களால் அறியப்படுமா? அவர் இந்திரியங்களுக்கும், ஹிருதயத்திற்கும், பிராணனுக்கும், வாக்குக்கும் புலப்படுகிறதில்லை. மேலுமவர் ஜீவர்களைப் பார்த்துக்கொண்டிருப்பவர்; ரூபங்களால் சக்ஷுஸைப் பார்க்கமுடியுமா? (பிரமாணத்திற்குப் பரமாத்மா விஷயமாகிறதில்லையென்று கருத்து). அந்தப் பகவான் ஸ்வதந்திரர்; எல்லாவற்றிற்கும் அதிபதி; மாயைக்கு அதிபதி; மஹாத்மா; பரன்; அவருடைய தூதர்கள் அழகான சுவ

ரூபங்களுள்ளவர்களாகி அவருடைய சுரூபம், குணம், சுபாவம் ஆகிய இவைகளை அடைந்து சஞ்சரிக்கிறார்கள். அந்த விஷ்ணு தூதர்கள் தேவர்களால் பூஜிக்கப்பட்டவர்கள்; அவர்களுடைய சுரூபம் பார்க்கமுடியாதது; அவர்கள் விஷ்ணு பக்தர்களைச் சத்ருக்களிடமிருந்தும், என்னிடமிருந்தும், அக்னி முதலியவைகளிடமிருந்தும் காப்பாற்றுகிறார்கள். பகவானால் ஏற்படுத்தப்பட்ட தர்மத்தை ரிஷிகளும், தேவர்களும் அறியார்கள். அசுரர்களுக்கும், மனிதர்களுக்கும், வித்யாதரர்களுக்கும், சாரணர்களுக்கும் எப்படித் தெரியும்? பிர்ம்மதேவர், நாரதர், பரமசிவன், ஸநத் குமாரர்கள், கபிலர், மநு, பிரகலாதர், ஜனகர், பீஷ்மர், பலி, வியாஸர், நான் ஆகிய இவர்களுக்கு பாகவத தர்மம் தெரியும். அது ரகசியமானது; சுத்தமானது; அதனைத் தெரிந்துகொள்வது மிகவும் கஷ்டம். அதனைத் தெரிந்துகொண்டால் மோட்சத்தை அடைவான். ஸ்ரீ பகவானுடைய திவ்ய நாமங்களை உச்சரிப்பது முதலியவைகளால் பகவானிடத்தில் பக்தி செய்வதே மேலான தர்மமெனப்படுகிறது. "ஓ தூதர்களே! பகவானுடைய நாமத்தின் மகிமையைப் பாருங்கள். அதனை உச்சரித்த மாத்திரத்தில் அஜாமிளனும் யமபாசத்திலிருந்து விடுபட்டான். ஆனதால் பகவானுடைய குணங்களையும், சரிதங்களையும் சொல்வது மனிதர்களுடைய பாபத்தை நிவர்த்திக்கப் போதுமானதாகிறது. மிக்க பாபியான அஜாமிளர் சாகுந் தருணத்தில் நாராயணா என்று புத்திரனை அழைத்ததால் முக்தி அடைந்தார். ஜனங்கள் மாயையால் மோஹமடைந்தவர்களாகிப் பெரும்பாலும் இந்த தர்மத்தைத் தெரிந்துகொள்ளுகிறதில்லை. மதுபோலவும், புஷ்பம் போலவும் அழகான வேதத்தில் சொல்லிய யாகத்தில் சிரத்தையுள்ளவர்களாக இருக்கிறார்கள். புத்திசாலிகள் இதனை

நன்றாக யோசித்து அனந்தனாகிய பகவானிடத்தில் மூன்று கரணங்களையும் ஸமர்ப்பிக்கிறார்கள். அவர்கள் என்னுடைய சிட்சையை அடையமாட்டார்கள். அவர்களுக்குப் பாபமிருக்குமானாலும் பகவானுடைய நாமத்தை யுச்சரிப்பதினாலேயே அது நசிக்கிறது. மேலும் எவர்கள் பகவானையே சரணமடைந்தவர்களோ, ஸாதுக்களோ, எல்லாவற்றையும் ஸமமாகப் பார்ப்பவர்களோ அவர்களைத் தேவர்களும், ஸித்தர்களும் தோத்திரஞ் செய்கிறார்கள். ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் கதாயுதத்தால் காப்பாற்றப்பட்ட அவர்களிடம் நீங்கள் போகவேண்டாம்; அவர்களுக்கு நாம் அதிபதியல்ல; காலமும் அதிபதியல்ல. மேலும் எவர்கள், ஆசைகளையொழித்த பரமஹம்ஸர்களால் அநுபவிக்கப்பட்ட பகவானுடைய பாதாரவிந்த மது ரஸத்தில் ஆசைப்படாமல் நரகத்திற்குக் காரணமான ஸம்ஸாரத்தில் ஆசைப்படுகிறார்களோ, அந்த அஸத்துக்களை நீங்கள் என்னிடம் அழைத்து வாருங்கள்; எவர்களுடைய நாக்கு பகவானுடைய திவ்ய நாமங்களைச் சொல்லவில்லையோ, எவர்களுடைய மனதானது பகவானுடைய பாதாரவிந்தத்தைத் தியானிக்கவில்லையோ, எவர்களுடைய தலையானது ஒரு தடவையாவது பகவானை நமஸ்கரிக்கவில்லையோ, அந்த அஸத்துக்களான ஜனங்களைக் கொண்டுவாருங்கள். அந்த மஹா புருஷனுக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். அறியாத்தன்மையுள்ளவர்களான தூதர்களால் செய்யப்பட்ட அபராதத்தைப் புராண புருஷராகிய பகவான் சகித்துக்கொள்ளட்டும்; அஞ்சலி செய்கிறோம்" என்றார்.

31—35. ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! மஹான்களுக்கும் ஜகத்திற்கும் மங்களகரமான ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் திவ்ய நாமங்களை யுச்சரிப்பதே மேலான பிராயச்சித்தமென்று தெரிந்துகொள்ளும். மஹாவிஷ்ணுவின் மேலான சரிதங்களைச் சொல்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும்

அவரிடத்தில் பக்தியுண்டாகிறது. அதனால் புருஷன் சுத்தியை அடைவதுபோல் விரதம் முதலியவைகளால் சுத்தனாகிறதில்லை. ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தின் மதுவைப் பானஞ்செய்தவன், திரும்பவும் ஸம்ஸாரத்தை விரும்பமாட்டான். அதன் ரஸத்தை அறியாதவன் பாப நிவர்த்திக்காகப் பிராயச்சித்தத்தைச் செய்கிறான் (அது யானையின் ஸ்நானம் போலாகிறது). இம்மாதிரி யமபடர்கள் தங்களுடைய யஜமானனாகிய யமனுடைய வார்த்தையைக் கேட்டு பகவானுடைய மகாத்மியத்தை நினைத்து ஆச்சரியப் பட்டு அதுமுதல் பகவத் பக்தர்களைப் பார்ப்பதற்கும் பய முள்ளவர்களாக இருந்தார்கள். இந்த ரகசியமான இதிஹாஸத்தை அகஸ்திய பகவான் மலய பர்வதத்திலிருந்து பகவானைப் பூஜித்துக்கொண்டே சொன்னார்.

# அத்தியாயம் 4

## தட்சருடைய வம்சம்

1—2. அதனைக்கேட்ட அரசன் மஹரிஷியை நோக்கி, "தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள், நாகங்கள், மிருகங்கள், பறவைகள் ஆகிய இவைகளுடைய (ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் நடந்த) வரலாற்றைச் சுருக்கமாகச் சொன்னீர். பகவான் எந்தச் சக்தியால், எந்தப் பிரகாரமாக சிருஷ்டித்தாரோ, அதை விரிவாகச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக்கொண்டான்.

3—16. ஓ சௌனகாதி மகரிஷிகளே! அதனைக் கேட்ட வியாஸ புத்திரரும், மகா யோகியுமான சுகர் கேள்வியைப்பற்றிச் சிலாகித்துப் பின்வருமாறு விடை கூறினார்: "எப்பொழுது பிரசேதஸ்ஸின் புத்திரர்களான பிராசீன

பர்ஹிஸ்ஸுக்கள் சமுத்திரத்திலிருந்து கிளம்பி பூமியில் மரங்கள் நெருக்கமாக முளைத்திருப்பதைக் கண்டார்களோ, அப்பொழுது அவர்கள் மரங்களிடத்தில் கோபங்கொண்டார்கள். மேலுமவர்கள் மரங்களை எரிப்பதற்காக முகத்திலிருந்து வாயுவையும், அக்னியையும் உண்டுபண்ணினார்கள். அவைகளால் மரங்கள் எரிக்கப்பட்டன. அதனைப் பார்த்த ஸோம ராஜன் அவர்களுடைய கோபத்தைத் தணிப்பதற்காகப் பிராசீனபர்ஹிஸ்ஸுக்களை நோக்கி, "ஓ மிகுந்த பாக்யமுள்ளவர்களே! நீங்கள் உலகத்தை விருத்தி செய்யும் பிரஜாபதிகள்; தீனங்களான மரங்களை எரிக்க வேண்டாம். பிம்மதேவருக்குப் பதியும், நாசமில்லாதவருமான ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் மரங்களையும், ஓஷதிகளையும், பக்ஷ்யத்தையும், அன்னத்தையும் முன்பு உண்டு பண்ணினார். சஞ்சரிக்கும் பிராணிகளுக்கு அசையாப் பொருள்களும், காலால் நடப்பவைகளுக்குக் காலில்லாதவைகளும், கையில்லாதவைகள் கையுள்ளவைகளுக்கும், இரண்டு கால பிராணிகளுக்கு நாற்கால் பிராணிகளும் ஆகாரங்களாக இருக்கின்றன. தேவதேவராகிய உங்களுடைய தகப்பனார் பிரஜைகளை ஸ்ருஷ்டிக்கும்படி உங்களுக்கு உத்தரவு செய்திருக்கிறார். அப்படியிருக்க மரங்களை எரிக்க விரும்புவது உசிதமா? உங்களுடைய முன்னோர்களால் அநுஷ்டிக்கப்பட்ட மார்க்கத்தை அநுசரியுங்கள். கோபத்தை அடக்கிக்கொள்ளுங்கள். குழந்தைகளுக்குத் தாய் தகப்பனார்களே பந்துக்கள். கண்களுக்கு இமைகளே பந்து. ஸ்திரீகளுக்கு பர்த்தாவே பந்து. பிரஜைகளுக்கு அரசனே பந்து. பிம்மச்சாரி முதலியவர்களுக்கு கிருகஸ்தாச்ரமத்திலிருப்பவன் பந்து. அஞ்ஞர்களுக்கு வித்வான் பந்து. ஸகல பிராணிகளிடத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு அந்தர்யாமியாக இருக்கிறார். ஆனதால்

எல்லாவற்றையும் அந்தப் பகவானுக்கே பார்க்கவேண்டும். அப்படிச் செய்வதால் உங்களிடத்தில் பகவான் சந்தோஷிப்பார். எவன் சரீரத்தில் உண்டான கோபத்தை ஆத்ம விசாரத்தால் அடக்கிக்கொள்கிறானோ, அவன் முக்குணங்களைத் தாண்டுகிறான். மரங்களை எரித்தது போதும்; மற்றவைகளுக்கு க்ஷேமமுண்டாகட்டும். விருக்ஷங்களின் பெண்ணாகிய இந்தக் கன்னிகையை விவாகஞ் செய்துகொள்ளுங்கள்" என்று சொல்லி அந்தப் பெண்ணை அவர்களுக்குக் கல்யாணஞ் செய்வித்து, தமதிஷ்டப்படி சென்றார். அவர்களும் அந்தப் பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொண்டார்கள்.

17—22. அந்த பெண்ணினிடத்தில் அவர்களுக்கு தட்சர் பிறந்தார். அவருடைய சிருஷ்டியால் உலகம் பூர்ணமாயிற்று. பெண்களிடத்தில் பிரீதியுள்ளவரான தட்சர் மேதஸ்ஸாலும், மனத்தாலும் பிராணிகளைச் சிருஷ்டித்தார். அதனைச் சொல்லுகிறேன்; கவனமாகக் கேளும். அந்த தட்சர் தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள், ஆகாயம், பூமி, ஜலம் இவைகளில் வாழும் பிராணிகள் ஆகிய இவைகளை மனத்தாலேயே சிருஷ்டித்தார். அதனாலும் பிரஜைகள் அதிகமாக விருத்தியாகவில்லை. அப்பொழுது விந்திய பர்வதஞ் சென்று கடுமையான தவம் செய்தார். அவ்விடத்தில் அகமர்ஷணம் என்ற சிறந்த தீர்த்தமொன்றிருக்கிறது. அதில் ஒவ்வொரு காலங்களிலும் ஸ்நானஞ்செய்து, தபஸ் செய்து அதனால் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை சந்தோஷப்படுத்தினார். மேலுமவர், ஹம்ஸ குஹ்யம் என்ற ஸ்தோத்திரத்தால் பகவானைத் துதித்தார். அதனால் தட்சரிடம் பகவான் சந்தோஷமடைந்தார். அந்த ஸ்தோத்திரத்தை உமக்குச் சொல்லுகிறேன்.

## ஹம்ஸ குஹ்யம்

23—34. எல்லாருக்கும் மேலானவரும், அமோகமான சித்சக்தியுள்ளவரும், ஜீவனுக்கும், மாயைக்கும் பந்துவும், குணங்களையே தத்வமாக நினைத்தவர்களால் பார்க்கமுடியாத சுரூபமுள்ளவரும், அகங்காரமற்றவரும், தாமாகப் பிரகாசிப்பவருமான புருஷனுக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். மேலும் குணமானது குணமுள்ளதை எப்படித் தெரிந்துகொள்கிறதில்லையோ, அப்படி ஜீவன் தன்னுடைய சரீரத்திலேயே வசித்து இந்திரியங்களைப் பிரவர்த்திக்கச் செய்வது முதலிய உதவி செய்துகொண்டிருக்கும் தோழனாகிய பரமாத்மாவைத் தெரிந்துகொள்ளுகிறதில்லை. (திருஷ்டாவானவர் திருச்யமாக ஆகிறதில்லை என்று கருத்து.) அப்படிப்பட்ட பரமேச்வரனுக்கு நமஸ்காரம். (குணமானது ஜடமானகையால் அது குணியைத் தெரிந்து கொள்ளாமலிருப்பது நியாயம். ஜீவன் சேதனனானகையால் அவனால் பரமாத்மா என அறியப்படவில்லை என்றால்) தேகம், பிராணன்கள், இந்திரியங்கள், அந்தக்கரணம், பூதங்கள், தன்மாத்ரைகள் ஆகிய இவைகள் தங்களுடைய சுரூபத்தையும், இந்திரியங்களையும், அபிமானி தேவதைகளையும் தெரிந்துகொள்ளச் சக்தியற்றவைகள். ஜீவன் அவைகளையும், அவைகளுக்குக் காரணங்களாகிய குணங்களையும் அறியக்கூடிய சக்தியுள்ளவன். ஆனாலும் எந்த ஸர்வஞ்ஞராகிய புருஷனை அறியமாட்டானோ, அந்த அனந்தரைத் துதிக்கிறேன். நாமங்களையும், ரூபங்களையும் பிரகாசப்படுத்தும் மனமானது எப்பொழுது வியவகாரமற்றிருக்குமோ, திருச்யத்தின் நினைவானது எப்பொழுது நாசமடையுமோ, அப்பொழுது சுத்தமான மனத்தில் எவர் நிஜரூபத்துடன் பிரகாசிக்கிறாரோ, அந்த ஹம்ஸருக்கு

நமஸ்காரம். இருபத்தேழு தத்வங்களால் மறைக்கப்பட்டவரும, ஹிருதயத்தில் தியானத்தால் நிலைக்கச் செய்யப்பட்டவருமான எந்தப் பகவானை, வித்வான்கள் பதினைந்து ஸாமிதேனிமந்திரங்களால் பிரகாசிக்கக்கூடியதும், கட்டையில் மறைந்திருப்பதுமான அக்னியைக் கடைந்து எடுப்பது போலத் தெரிந்துகொள்கிறார்களோ, நிரூபிக்கமுடியாத மாயா சக்தியுள்ளவரும், ஜகத் சுரூபியும் சகல நாமங்களுள்ளவரும் சகல விசேஷங்களுள்ள மாயை அற்றவராகையால் கேவல சுகானுபவ சுரூபியுமான அந்தப் பகவான் என்னிடம் தயைசெய்யட்டும். எது வாக்கினால் சொல்லப்பட்டதோ, எது புத்தியால் நிரூபிக்கப்பட்டதோ, எது இந்திரியங்களாலும், மனத்தாலும் நிரூபிக்கப்பட்டதோ அது பகவானுடைய சுயப்பிரகாச ரூபமாக ஆகிறதில்லை. ஏனென்றால், அது குணங்களுடைய உற்பத்தி, நாசம் ஆகிய இவைகளால் ஏற்பட்டது. மேலும் புருஷன் எதில், எதனிடமிருந்து, எதைக்கொண்டு, எதற்கு, எதற்காக, எதைச் செய்கிறானோ, செய்விக்கிறானோ அதற்குக் காரணமும், பிர்மமா முதலிய மேலானவர்களுக்கும் காரணமும், எல்லாவற்றிற்கும் முந்தியதும, ஸஜாதீயமற்றதும், ஒன்றாயும் இருப்பதே பிர்மம். அந்த பிர்மமத்தினுடைய சக்திகளே வாதிகளுடைய விவாதத்திற்குக் காரணங்களாக இருக்கின்றன. அவைகளே அடிக்கடி வித்வான்களுக்கும் மோஹத்தை உண்டுபண்ணுகின்றன. அளவற்ற குணங்களுள்ள அந்த மஹாபுருஷனுக்கு நமஸ்காரம். மேலும் யோக சாஸ்திரம் பரமாத்மாவிற்கு அவயவங்களுண்டென்றும், ஞான சாஸ்திரம பரமாத்மா அவயவங்களற்றவரென்றும விருத்தமாகச் சொல்லுகின்றன. ஆனாலும் இவ்விரண்டு சாஸ்திரங்களுக்கு ஸமமும், மேலானதும், அநுகூலமும், பூர்ணமுமானதே பிர்மம். அவருக்கு நமஸ்காரம். பகவான் நாமரூபங்களற்ற

வாளுலும் தம்மைச் சரணமடைந்தவர்களைக் காப்பாற்று வதற்காக அவதாரங்களைச் செய்து நாமங்களையும் அடை கிறார். அந்தப் பகவான் என்னிடம் ஸந்தோஷமடையட்டும். வாயுவானது பூமியின் குணமாகிய கந்தத்தை அடைந்து பல வகையாகத் தோன்றுவதுபோல எந்தப் பகவான் பிர க்ருதி சம்பந்தத்தாலேற்பட்ட உபாஸனு மார்க்கங்களால் அந்த அந்த வாஸனைக்குத் தக்கபடி அந்தர்யாமியாகவிருந்து அவரவர்கள் விரும்பிய பலனைக் கொடுக்கிறாரோ, அப்படிப் பட்ட ஈச்வரன் என்னுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்யட்டும்.

35—41. அந்த அகமர்ஷணமென்ற தீர்த்தத்தில் மேற்சொல்லிய மந்திரங்களால் பகவான் துதிக்கப்பட்டு அவ் விடத்தில் தட்சருக்குத் தரிசனங்கொடுத்தார். அப்பொழுது பகவான் கருடன்மீது பிரகாசித்திருந்தார். அவர் எட்டுக் கைகளுடையவர்; சங்கம், சக்ரம், கத்தி, கேடகம், பாணம், வில், பாசம், கதாயுதம் ஆகிய இவைகளைத் தரித்திருந்தார்; மேலுமவர் பீதாம்பரத்தைத் தரித்தவர்; மேகம்போல் கருத்த திருமேனியுள்ளவர்; பிரஸன்ன முகமுள்ளவர்; வனமாலையைத் தரித்தவர்; ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம் இவை களுள்ளவர்; உத்தமமான கிரீடம், வளை, மகரகுண்டலம் ஆகிய இவைகளால் பிரகாசிப்பவர்; காஞ்சி, தோள்வளை, மோதிரம், வளை, பாதஸரம் இவைகளால் அலங்கரிக்கப் பட்டவர்; அவருடைய ரூபமானது மூவுலகத்தையும் மோகிக்கச்செய்யக்கூடியதாக இருந்தது. மேலும் நாரதர், நந்தர் முதலிய பார்ஷதர்களும் அவருடனிருந்தார்கள்; ஸித்தர்களும், கந்தர்வர்களும், சாரணர்களும் அவரைத் துதித்தார்கள்; மிகவும் அற்புதமான அந்த சுரூபத்தைக் கண்ட தட்சர் பயப்படாமல் தண்டம்போல் நமஸ்கரித்தார்.

ஆனாலும் அவர் மலையாறுகளால் நிறைந்த நதிகள்போல் ஆனந்தத்தால் பூரணராகிப் பேச முடியாதவராகவிருந்தார்.

42—54. ஸகல பிராணிகளுடைய அபிப்பிராயத்தை யறிந்தவராகிய பகவான் பக்தராகிய பிரஜாபதியை நோக்கி, "பிரசேதஸ்ஸின் குலத்தில் பிறந்த ஓ மிகுந்த பாக்ய முள்ளவரே! தபஸின் ஸித்தியை அடைந்தீர்; சிரத்தை யுடன் என்னிடத்தில் மனத்தைச் செலுத்தினீர்; பிராணி கள் விருத்தியடைய வேண்டுமென்பதே என்னுடைய அபிப் பிராயம். உம்முடைய தபஸானது லோகத்தை விருத்தி செய்யக்கூடியதாகையால் உம்மிடத்தில் நான் ஸந்தோஷ மடைந்தேன். ஜனங்களை ஸிருஷ்டிக்கக்கூடிய பிர்ம்மதேவர், பரமசிவன், நீர், மநுக்கள், தேவ சிரேஷ்டர்கள் ஆகிய எல்லாரும் என்னுடைய விபூதிகளேயாம். யமம், நியமம் முதலியவைகளுடன் கூடிய ஸந்தியாவந்தனமாகிய தபமே ஹிருதயம். வித்யையே தேஹம். தியானம் முதலிய கிரியைகளே ஸ்வரூபம். யாகங்களே அங்கங்கள். தர்மமே ஆத்மா. தேவர்களே பிராணன்கள். இந்த ஜகத் உண்டா கிறதற்கு முந்தி நான் மாத்திரம் இருந்தேன். கிராஹ்ய மாவது, கிராஹகமாவது ஒன்றுமில்லை. இந்திரிய வியாபாரங் கள் சைதன்னிய மாத்திரமாக இருந்தபடியால் தூங்கினவை போலிருந்தன. அளவற்ற குணமுள்ள என்னிடத்திலிருந்து மாயையும், அதனிடமிருந்து பிர்ம்மாண்டமும், அப்படியே பிர்ம்ம தேவரும் உண்டானார்கள். அந்த பிர்ம்மதேவர் மேலான வீரியத்துடன் ஸகல லோகத்தையும் ஸிருஷ்டிக்கும் விஷயத்தில் முயற்சிகொண்டு தம்மை ஸமர்த்தனாக நினைத்தார். அப்பொழுது நான் அவரைக் கடுமையான தபஸைச் செய்யும்படி ஆஞ்ஞாபித்தேன். அவர் தபஸ் செய்து பிரஜாபதிகளான உங்களை முதலில் ஸிருஷ்டித்தார். பஞ்சஜனர் என்ற பிரஜாபதியினுடைய புத்ரியான அஸிக்நீ

என்பவளை நீர் கலியாணம் செய்துகொள்ளும். அவளிடத்தில் நீர் பல பிரஜைகளை உண்டுபண்ணுவீர். உமக்குப் பிறப்பட்ட பிரஜைகளும் என்னுடைய மாயையின் மகிமையால் மகளிருடன் சேர்ந்து க்ரீடித்து, பிரஜைகளை உண்டுபண்ணுவதுடன் என்னுடைய ஆஞ்ஞையைப் பரிபாலிப்பார்கள்'' என்று சொல்லிவிட்டு, தட்சர் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே பகவான் மறைந்தார். அது அவருக்குக் கனவு போலிருந்தது.

## அத்தியாயம் 5

### தட்சர் நாரதரைச் சபித்தது

**1—9.** விஷ்ணுமாயையால் மோஹித்த அந்தத் தட்சர் அஸிக்நி என்பவளிடத்தில் ஹர்யச்வ என்ற பெயருள்ள பதினாயிரம் புத்திரர்களை உண்டுபண்ணினார். அந்தப் புத்திரர்கள் எல்லோரும் ஒரே மாதிரியான சுபாவமுள்ளவர்கள். அவர்களைப் பார்த்துத் தட்சர் பிரஜைகளை ஸிருஷ்டிக்கும்படி ஏவினார். அதனைக் கேட்ட அவர்கள் மேற்குத் திக்கை நோக்கிச் சென்று ஸிந்து, சமுத்திரம் இவைகளுடைய சங்கமத்தில் இருக்கும் நாராயண தீர்த்தத்தை அடைந்தார்கள். அதில் ஸ்நானஞ் செய்ததால் அவர்களுடைய மனமானது சுத்தமாயிற்று; முக்தி மார்க்கத்தில் ஆசை உண்டாயிற்று; ஆனாலும் அவர்கள் பிரஜைகளை விருத்திசெய்யும்படி பிதாவினால் ஆக்ஞாபிக்கப்பட்டபடியால் மிகவும் கடுமையாகத் தபஸ் செய்தார்கள். தேவரிஷியாகிய நாரதர் அவர்களை நோக்கி, ''ஓ ஹர்யச்வர்களே! நீங்கள் அஞ்ஞானிகள்; பூமியின் எல்லையைத் தெரிந்துகொள்ளாமல் ஜனங்களை எப்படி ஸிருஷ்டிக்கப் போகிறீர்கள். மேலும், நீங்கள் ஒரே மனிதனுள்ள ராஜ்ஜியத்தையும், உட்பிரவேசித்தவன் வெளி

வரமுடியாத பிலத்தையும், பலவகையான மாதர்களையும், விபசாரியின் பர்த்தாவாகிய புருஷனையும், இரண்டு பக்கமும் பிரவகிக்கும் நதியையும், இருபத்தைந்து பிராணிகளுடைய கிரகத்தையும், பலவகையான வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கும் ஹம்ஸத்தையும், கத்தியினாலும், வஜ்ஜிரத்தாலும் செய்யப்பட்டதுபோல கூர்மையும், கெட்டியுமான சுத்திக்கொண்டிருக்கும் சக்கரத்தையும் தெரிந்து கொள்ளாமலும், பிதாவினுடைய ஆஞ்ஞையை தங்களுக்குத் தகுதியானதாகத் தெரிந்துகொள்ளாமலும் நீங்கள் பிரஜைகளை எப்படி சிருஷ்டிக்கப்போகிறீர்கள்" என்று வினவினார்.

10—21. அதனைச் செவியுற்ற ஹர்யச்வர்கள் நாரதருடைய மறைவான வார்த்தையை இயற்கையான தங்களுடைய புத்தியினால் யோஜிக்கலானார்கள். எப்படியென்றால், "பூமியென்பது ஜீவன் என்ற லிங்க சரீரம். அதனால் ஆத்மாவுக்குப் பந்தமுண்டாகிறது. அதனுடைய நாசத்தைத் தெரிந்துகொள்ளாமல் மோட்சத்திற்கு உபயோகமில்லாத கர்மங்களை அனுஷ்டிப்பதாலென்ன பிரயோஜனம்? மேலும் ஈசுவரன் ஒருவனே; எல்லாவற்றிற்கும் சாட்சியாயிருப்பவர்; அவர் தம்மையே ஆதாரமாகக்கொண்டவர்; பரன்; நித்யமுக்தர்; அவரைத் தெரிந்து கொள்ளாமல் அவரிடத்தில் ஸமர்ப்பிக்கப்படாத கர்மங்களால் என்ன பிரயோஜனம்? புருஷன் எதை அடைந்தால் திரும்பிவரமாட்டானோ, அந்த பிரம்மஜோதிஸ்ஸை அறியாதவனுக்கு மற்ற கர்மங்களாலென்ன பிரயோஜனம்? தன்னுடைய புத்தியானது விபசாரியான ஸ்திரீபோலப் பலவகையாகவும் ரஜஸ், தமஸ் முதலிய குணங்களுள்ளதாகவும் இருக்கிறது. அம்மாதிரியான புத்தியைவிட்டு விவேகத்தை அடையாதவனுக்கு அநித்யமான கர்மங்களாலென்ன பிர

யோஜனம்? மேலும், அந்தக் கெட்ட புத்தியின் சப்பந்தத்தால் சுதந்திரமற்று, சுக துக்கங்களை யடைந்து விபசாரியான மனைவியுள்ள புருஷன்போல ஜீவனிருப்பதைத் தெரிந்துகொள்ளாதவனுக்கு அவிவேகத்தாலேற்படும் கர்மங்களாலென்ன பிரயோஜனம்? சிருஷ்டி, நாசம் இவைகளைச்செய்யக்கூடியதும், அகங்காரம் முதலியவைகளைக் கொண்டு வெளிவரமுடியாமல் தடுப்பதுமான மாயையைத் தெரிந்துகொள்ளாமல் அதனால் மோகித்திருப்பவனுக்கு மாயையால் ஏற்படுங் கர்மங்களாலென்ன பிரயோஜனம்? இருபத்தைந்து தத்துவங்களுக்கும் புருஷன் அற்புதமான கண்ணாடியாயிருக்கிறான். அந்த ஆத்ம தத்வத்தை அறியாதவனுக்கு மித்யையான சுதந்தரத்தைக்கொண்டு செய்யப்படுங் கர்மங்களாலென்ன பிரயோஜனம்? ஈச்வரனை நிரூபிப்பதும், பந்தம் மோட்சம் இவைகளைக் காண்பிப்பதுமான சாஸ்திரத்தைவிட்டு ஏகாந்தமான பதத்தைத் தெரிந்துகொள்ளாமல் செய்யப்படும் பகிர்முகங்களான கர்மங்களால் என்ன பிரயோசனம்? மிகக் கடுமையான காலசக்கரமானது ஜகத்தை இழுத்துக்கொண்டு ஸ்வதந்திரமாகச் சுற்றுகிறது. அதனைத் தெரிந்துகொள்ளாதவனுக்குக் கிராம்ய கர்மங்களாலென்ன பிரயோஜனம்? (சாஸ்திரத்தினுடைய) பிதாவினுடைய ஆஜ்ஞையின் உண்மையான கருத்தையறியாமல் பிரவிருத்தி மார்க்கத்தில் விசுவாசமுள்ள புருஷன் சிருஷ்டி முதலியவைகளை எப்படி ஆரம்பிப்பான்?'' என்று ஹர்யச்வர்கள் எல்லோரும் ஒரே புத்தியுள்ளவர்களாக நாரதருடைய உபதேச வார்த்தைகளுக்கு உண்மையான அர்த்தம் இதுதானென்று தெரிந்துகொண்டு நாரதரைப் பிரதட்சணஞ்செய்து எந்த மார்க்கத்தை அடைந்தால் திரும்பவும் ஜன்மத்தை அடையாமலிருக்கலாமோ, அந்த மார்க்கத்தை அடைந்தார்கள்.

22—33. நாரதரும் நாதப்பிரியழத்தில் நேரில் பார்க்கப்பட்ட ஸ்ரீ பகவானுடைய பாதாரவிந்தத்தில தம்முடைய மனத்தை வைதது லோக சஞ்சாரஞ்செய்தார். பிறகு தட்சப்பிரஜாபதி நாரதரால் தமமுடைய புத்திரர்கள் மோட்சத்தை அடைந்தார்களென்பதைக் கேள்விப்பட்டு புத்திரர்களுடைய நாசத்தால மிகவும் வருத்தப்பட்டார் புத்திரர்கள் நல்ல சுபாவமுள்ளவர்களாகையால் அவர்களுடைய நாசம் மிருந்த துக்கத்தை உண்டுபண்ணிற்று. அப்பொழுது பிரம்மதேவர் தட்சரை ஸமாதானம்செய்ய அவர் அஸிக்னி என்னும் தம்முடைய பத்னியினிடத்தில சபளாச்வர்கள் என்ற ஆயிரம் புத்திரர்களைப் பெற்றார். அவர்களும் பிதாவின் ஆஞ்ஞையின்படி தபசுக்காக முனிவர்கள் ஸித்தியடைந்த நாராயண தீர்த்தம் சென்றார்கள். பின்னுமவர்கள் அந்தத் தீர்த்தத்தில் நீராடி அதனால் சுத்த சித்தர்களாகி, பிரணவத்தை ஜபித்துக்கொண்டு கடுந்தபஸ் செய்தார்கள். பின்னுமவர்கள் சில மாதங்கள் ஜலத்தைப் புஜித்துக்கொண்டும, சில காலம் காற்றைப் புஜித்துக்கொண்டும், 'மஹாத்மாவும், சுத்தமான ஸத்வ குணத்திற்கு ஆச்ரயரும், பரம ஹம்ஸரும், பூர்ணருமாகிய நாராயணருக்கு நமஸ்காரம்' என்ற மந்திரத்தை ஜபஞ்செய்துகொண்டு விஷ்ணுவை ஆராதித்தார்கள். அந்தத் தருணத்திலும் நாரத மகரிஷி அவ்விடம் வந்து பிரஜைகளைச் சிருஷ்டிக்க முயன்றுகொண்டிருக்கும சபளாச்வர்களை நோக்கி முன்போலவே கூடமான வார்த்தைகளைச் சொல்லி, 'ஓ தட்ச புத்திரர்களே! நான் சொல்லுவதைக் கேளுங்கள். உங்களுடைய மூத்த சகோதரர்கள் சென்ற மார்க்கத்தை நீங்களும அடையவேண்டும். நீங்கள் சகோதரர்களிடத்தில் பிரீதியுள்ளவர்கள்; எவன் ஜேஷ்டனுடைய மார்க்கத்தை அனுஷ்டிக்கிறானோ, அந்தப் புண்ணிய பந்துவாகிய

புருஷன் மருத்துக்களுடன் சந்தோஷப்படுகிறான்' என்று சொல்லி நன்மையளிக்கும் தரிசனமுள்ள நாரதர் தமது இஷ்டப்படி சென்றார். அந்த சபளாச்வர்களும் நாரதருடைய உபதேசத்தால் ஹர்யச்வர்களுடைய மார்க்கத்தை அடைந்தார்கள். க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய ஆத்ம மார்க்கத்தை அடைந்த அவர்கள், சென்ற இராத்திரிபோல இன்னமும் திரும்பி வரவில்லை.

34—43. இப்படி இருக்கும்போது தட்சருக்குச் சில அபசகுனங்கள் நேர்ந்தன. அவற்றைக் கண்ட தட்சர் புத்ரர்களைப்பற்றி விசாரிக்க, ஹர்யச்வர்களைப்போல் இவர்களையும் நாரதரே மரிக்கச் செய்தாரென்பதைக் கேள்விப்பட்டு, புத்திர சோகத்தால் மோஹமடைந்து நாரதரிடம் கோபித்துக்கொண்டு உதடுகள் துடிக்க, "ஓ அஸாதுவே! ஸாதுப் போல் வேஷங்கொண்டு என்னுடைய குழந்தைகளுக்கு சந்நியாசிகளுடைய மார்க்கத்தைக் காண்பித்துக் கெடுதலைச் செய்தீர். அவர்கள் மூன்று வகையான கடன்களை நிவர்த்தித்துக்கொள்ளாதவர்கள்; கர்மங்களை விசாரிக்காதவர்கள்; அப்படிப்பட்ட குழந்தைகளுக்கு இந்த லோகத்திலும், பரலோகத்திலும் க்ஷேமத்திற்கு இடையூற்றைச் செய்தீர். நீர் இம்மாதிரி குழந்தைகளுடைய புத்தியை மாற்றி வெட்கமில்லாமல் பார்ஷதர்களுக்குள் ஒருவராகச் சஞ்சரிக்கிறீர்; நீர் குற்றமற்றவர்களிடத்தில் விரோதத்தைச் செய்பவர்; விசுவாஸத்தைக் கெடுப்பவர்; உம்மைத் தவிர மற்ற பாகவதர்கள் பிராணிகளுக்கு அனுக்கிரகத்தையே செய்வார்கள். இம்மாதிரியான உபதேசத்தால் புருஷனுக்கு வைராக்கியம் உண்டாகிறதில்லை. புருஷன் விஷயங்களை அனுபவித்து அவைகளைத் துச்சங்களென்று வைராக்கியத்தை அடைவது போலஇம்மாதிரி புத்தியை மாற்றிவிடுவதால் வைராக்கியம் உண்டாகிறதில்லை. ஸாதுக்களும், கிரகஸ்தர்களுமான

எங்களுக்கு உம்மால் செய்யப்பட்ட அபராதமானது சகிக்க முடியாததாயினும் நான் பொறுத்துக்கொண்டேன். ஓ புத்திரர்களை நாசஞ்செய்தவரே! என்னுடைய புத்திரர்களுக்கு இரண்டு லோகத்திலும் இடமில்லாமல் நீர் செய்ததனால் உமக்கும் ஓரிடத்திலும் நிலையான இருப்பிடமில்லாமல் நீர் எப்பொழுதும் சுற்றிக்கொண்டே இருக்கக்கடவீர்" என்று சொன்னார்.

44. அதனைக்கேட்ட ஸாதுக்களில் சிறந்தவராகிய நாரதர் அந்தச் சாபத்தை அங்கீகரித்தார். பதில் சாபங் கொடுக்கத் திறமையுள்ளவராயினும் நாரதர் அதனைப் பொறுத்துக்கொண்டாரென்பதே அவருடைய ஸாதுக் குணத்தைக் காட்டியது.

# அத்தியாயம் 6

## தட்ச கன்னிகைகளின் வம்சம்

1—22. பிறகு தட்சர் பிர்ம்மதேவரால் ஸமாதானப் படுத்தப்பட்டு அஸிக்னியினிடத்தில் அறுபது பெண்களைப் பெற்றார். அவர்கள் தகப்பனாரிடத்தில் பிரீதியுள்ளவர்கள். அந்தப் பெண்களில் பத்துப் பெண்களைத் தர்மனுக்கும், பதின்மூன்று பெண்களைக் காச்யபருக்கும், இருபத்தேழு பெண்களைச் சந்திரனுக்கும், பூதம், அங்கிரஸ், கிருசாச்வர் இவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனி இரண்டு பெண்களையும், தார்ட்சியரென்ற பெயருடைய காச்யபருக்கே நாலு பெண்களையும் கொடுத்தார். அந்தப் பெண்களுடைய புத்திரன், பௌத்திரன் முதலியவர்களால் மூவுலகமும் பூர்ணமாயிற்று. அந்தப் பெண்கள், அவர்களுடைய குழந்தைகள் ஆகிய இவர்களுடைய நாமதேயங்களைச் சொல்லு

கிறேன், கேளும். பானு, லம்பா, ககுப், ஜாமி, விச்வா, ஸந்தியா, மருத்வதீ, வஸு, முகூர்த்தா, ஸங்கல்பா என்ற பத்துப் பெண்களும் தர்மனுடைய பத்தினிகள். பானுவி னுடைய புத்திரன் வேத ரிஷபன். அவனுடைய புத்திரன் இந்திரஸேனன். லம்பையினுடைய புத்திரன் வித்யோதன். அவனுடைய புத்திரர்கள் மேகங்கள். ககுப் என்பவளுடைய புத்திரன் ஸங்குடன். அவனுடைய புத்திரன் கீகடன். அவனிடத்திலிருந்து பூமியிலிருக்கும் துர்க்கங்களுக்கு அபிமானிகளான தேவதைகள் உண்டாயின. ஜாமியி னுடைய புத்திரன் ஸ்வர்கன். அவனுடைய புத்திரன் நந்தி. விச்வையினுடைய புத்திரர்கள் விச்வேதேவர்கள். அவர்கள் அபுத்திரர்கள். ஸாத்யையினுடைய புத்திரர்கள் ஸாத்யர்கள். அவர்களுடைய புத்திரன் அர்த்தஸித்தி. மருத்வான், ஜயந்தனென்ற இருவர்களும் மருத்வதியின் புத்திரர்கள். ஜயந்தனென்பவன் பகவானுடைய அம்சம். அவனையே உபேந்திரனென்றும் சொல்லுகிறார்கள். முகூர்த்தத்திற்கு அபிமானிகளான தேவகணங்கள் முகூர்த்தை என்பவளின் புத்திரர்கள். அவர்கள் பிராணிகளுக்கு அந்த அந்தக் காலத்திற்குத் தக்கபடி பலத்தைக் கொடுக்கிறார்கள். ஸங்கல்பை என்பவளின் புத்திரன் ஸங்கல்பன். அவனுடைய புத்திரன் காமன். வஸு என்பவளின் புத்திரர்கள் துரோ ணன், பிராணன், துருவன், அர்க்கன், அக்னி, தோஷன், விபாவஸு என்ற எட்டு வஸுக்கள். துரோணனுக்கு அபிமதி என்ற மனைவியிடத்தில் ஹர்ஷம், சோகம், பயம் முதலிய புத்திரர்கள் பிறந்தார்கள். பிராணனுக்கு ஊர்ஜஸ்வதி என்பவளிடத்தில் ஆயுஸ், புரோஜவன் என்ற இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். துருவனுடைய பத்னி யாகிய தரணி என்பவளிடத்தில் பலவகையான பட்டணங்கள் (பட்டணத்துக்கு அபிமானியான தேவதைகள்) பிறந்தன

அர்க்கனுக்கு வாஸனை என்பவளிடத்தில் தர்ஷம் முதலிய புத்திரர்கள் பிறந்தார்கள். அக்னிக்கு வஸோர்தாரை என்பவளிடத்தில் திரவிணகன் முதலியவர்களும், கிருத்திகா நட்சத்திரங்களுக்குப் புத்திரரான ஸ்கந்தரும் புத்திரர்கள். தோஷனுக்கு சர்வரி என்பவளிடத்தில் சிம்சுமாரனென்று ஒரு புத்திரனுண்டானார். அவர் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அம்சம். வஸ்து என்பவருக்கு அங்கிரஸ் என்பவளிடத்தில் விசுவகர்மா என்ற புத்திரர் பிறந்தார். அவர் சில்பங்களுக்கு ஆசாரியர். அந்த விசுவகர்மாவுக்கு சாட்சுஷமனு புத்திரர். மனுவிற்கு ஸாத்யர்கள் புத்திரர்கள். விபாவஸுவிற்கு உஷை என்பவளிடத்தில் வியுஷ்டி, ரோசிஸ், ஆதபன் இவர்கள் உண்டானார்கள். ஆதபனிடத்திலிருந்து ஐந்து யாமங்களுள்ள பகல் உண்டாயிற்று. அந்தப் பகலில பிராணிகள் தங்கள் தங்கள் காரியத்தைச் செய்கிறார்கள். பூதனுடைய பத்னியாகிய சுரூபை என்பவள் கோடிக்கணக்கான ருத்ரர்களை உண்டுபண்ணினாள். ரைவதன், அஜன், பவன், பீமன், வாமன், உக்ரன், விருஷாகபி, அஜைகபாத், அஹிர்புத்நயன், பஹுரூபன், மஹான் என்றவர்கள் ருத்ரருடைய பார்ஷதர்கள்; மற்றவர்கள் கோரசுவரூபமுள்ள பிரேதங்களும், விநாயகங்களுமாம். அங்கிரஸ் என்னும் பிரஜாபதியின் பத்னியான ஸ்வதா என்பவள் பிதிருக்களை உண்டுபண்ணினாள். அந்த அங்கிரஸின் இரண்டாவது பத்னியான ஸதியென்பவள் அதர்வாங்கிரஸ் என்ற வேதத்தைப் புத்திரனாக அடைந்தாள். கிருசாச்வர் அர்ச்சிஸ் என்பவளிடத்தில் தூம்ரகேசனையும், திஷணை என்பவளிடத்தில் வேதசிரஸ், தேவலன், வயுனன், மனு என்பவர்களையும் உண்டுபண்ணினார். தார்ட்சயன் விநதையிடத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின்

வாகனமாகிய கருடனையும், சூரியனுக்கு ஸாரதியாகிய அருணனையும், கத்ரு என்பவளிடத்தில் அநேக நாகங்களையும், பதங்கி என்பவளிடத்தில் பறவைகளையும், யாமினி என்பவளிடத்தில் சலபங்களையும் (வெட்டுக்கிளி முதலியவைகளை) உண்டுபண்ணினர்.

23—24. கிருத்திகை முதலிய நட்சத்திரங்கள் சந்திரனுடைய பத்தினிகள். அந்தச் சந்திரன் தட்சருடைய சாபத்தால் க்ஷயரோகத்தை அடைந்தான். அந்த ஸ்திரீகளிடத்தில் அவனுக்குப் புத்திரனும் பிறக்கவில்லை. திரும்பவும் அந்தச் சந்திரன் தட்சரைப் பிரார்த்தித்து அவருடைய அனுக்கிரகத்தால் கலைகளை அடைந்தான். காச்யபருடைய பத்தினிகளுடைய பெயர்களைச் சொல்லுகிறேன் கேளும். அந்தப் பெயர்கள் லோகத்திற்கு க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியவைகள். அவர்களாலேயே இந்த ஜகத் உண்டுபண்ணப் பட்டது. அவர்கள் அதிதி, திதி, தநு, காஷ்டா, அரிஷ்டா, ஸுரஸா, இளா, முனி, குரோதவசா, தாம்ரா, ஸுரபி, ஸரமா, திமி என்ற பெயருள்ளவர்களாம். ஜல ஜந்துக்கள் யாவும் திமியினிடத்திலிருந்து உண்டானவைகள். மிருகங்கள் ஸரமையின் புத்திரர்கள். எருமைகளும், பசுக்களும், இரட்டைக்குளப்புள்ள மற்றவைகளும் ஸுரபியின் புத்திரர்கள். பருந்து, கழுகு முதலியவைகள் தாம்ரையின் புத்திரர்கள். அப்ஸரஸுக்கள் முனியின் புத்திரர்கள். ஸர்ப்பங்கள் குரோதவசையின் புத்திரர்கள். விருக்ஷங்கள் யாவும் இளையென்பவளிடத்திலிருந்து உண்டானவைகள். யாதுதானர்கள் ஸுரஸையின் புத்திரர்கள். கந்தர்வர்கள் அரிஷ்டையின் புத்திரர்கள். இரட்டைக் குளப்பில்லாத பிராணிகள் காஷ்டையிடத்திலிருந்து உண்டானவைகள். தநுவிற்கு அறுபத்தோரு புத்திரர்களானாலும் அவர்களுக்

குள் முக்யமானவைகளைச் சொல்லுகிறேன். துவிமூர்த்தா, சம்பரன், அரிஷ்டன், ஹயக்ரீவன், விபாவஸு, அயோமுகன், சங்குசிரஸ், ஸ்வர்பானு, கபிலன், அருணி, புலோமா, விருஷபர்வா, ஏகசக்ரன், அனுதாபகன், தூம்ரகேசன், விரூபாக்ஷன், விப்ரசித்தி, துர்ஜயன் என்றவர்கள் முக்கியர்கள். ஸ்வர்பானுவின் புத்திரியாகிய ஸுப்ரபை என்பவளை நமுசி என்பவர் விவாகஞ் செய்துகொண்டார். விருஷபர்வாவின் புத்திரியான சர்மிஷ்டை என்பவளை நகுஷனுடைய புத்திரரான யயாதி விவாகம் பண்ணிக்கொண்டார். வைச்வானரனென்ற தனுவினுடைய புத்திரனுக்கு உபதானவி, ஹயசிரஸ், புலோமா, காலகா என்று நான்கு புத்திரிகள். அவர்களில் உபதானவி என்பவளை ஹிரண்யாட்சனும், ஹயசிரஸ் என்பவளைக் கிருது என்பவனும் கல்யாணஞ் செய்துகொண்டார்கள். புலோமா, காலகை என்ற இரண்டு பெண்களையும் பிரம்மதேவருடைய தூண்டுதலால் கச்யபர் கல்யாணஞ் செய்துகொண்டார். அந்தப் புலோமையினுடைய புத்திரர்களும், காலகையினுடைய புத்திரர்களுமான அறுபதினாயிரம் புத்திரர்களும் யாகம் முதலிய கர்மங்களைக் கெடுத்துக்கொண்டிருந்தார்கள். அவர்களை உம்முடைய பிதாவுக்குப் பிதாவும், இந்திரனுக்குப் பிரியத்தைச் செய்பவருமாகிய அர்ஜுனன் கொன்றார். விப்ரசித்தி என்பவன் ஸிம்ஹிகையினிடத்தில் நூற்றொரு புத்திரர்களைப் பெற்றான். அவர்களுக்குள் மூத்தவன் ராகு. மற்றவர்கள் கேது முதலியவர்கள். இவர் கிரகமாயிருக்குந்தன்மையை அடைந்தவர்கள். அதிதியின் வம்சத்தைக் கிரமமாகச் சொல்லுகிறேன். அந்த வம்சத்தில் ஸ்ரீமந் நாராயணன் தம்முடைய அம்சமாக அவதரித்தார். அதிதிக்கு விவஸ்வான், அர்யமா,

பூஷா, த்வஷ்டா, ஸவிதா, பகா, தாதா, விதாதா, வருணன், மித்ரன், சக்ரன், உருக்ரமன் என்ற புத்திரர்கள் பிறந்தார்கள். விவஸ்வானுடைய பத்னியாகிய ஸம்ஜ்ஞை யென்பவள் சிரார்த்ததேவன், மனு, யமன் என்ற புத்திரர்களேயும், யமீ என்ற பெண்ணையும் உண்டுபண்ணினாள். அவளே பூமியில் படபையாக ஆகி அச்வினி தேவர்களை உண்டுபண்ணினாள். சாயையென்ற மற்றொரு பத்தினியானவள் சனைச்சரன், ஸாவர்ணிமனு, தபதியென்ற பெண் ஆகிய இவர்களை உண்டு பண்ணினாள். அந்தப் பெண் ஸம்வரணனைக் கணவனாக அடைந்தவள். அர்யமா என்பவனுடைய பத்தினியாகிய மாதிருகா என்பவள் சர்ஷணிகள் என்ற புத்திரர்களைப் பெற்றாள். அவர்களிடத்திலிருந்து மனுஷ்ய ஜாதியானது பிரம்மதேவரால் ஏற்படுத்தப்பட்டது. பூஷா என்பவர் அபுத்ரர். மாவைப் புசிப்பவர்; அவருக்குப் பற்களில்லை; தக்ஷ யாகத்தில் தக்ஷனிடத்தில் கோபித்த பரமசிவனைப் பார்த்துப் பற்கள் வெளியில் தெரியும்படி சிரித்தபடியால் அவருடைய பற்கள் உதிர்ந்துபோயின. துவஷ்டாவின் பத்னியாகிய ரசனை யென்பவளுக்கு ஸந்நிவேசன் என்பவனும், பராக்ரமசாலியான விச்வரூபனும் புத்திரர்கள். ஒருக்கால் தேவர்கள் பிரகஸ்பதி பகவானை அலட்சியஞ் செய்ததால் அவர் அவர்களுக்கு புரோகிதராக இருக்கவில்லை; அந்தச் சமயத்தில் அவர்கள் சத்ருக்களின் சகோதரியின் புத்திரனுனுய விச்வரூபனைப் புரோகிதராக இருக்கும்படி கேட்டுக்கொண்டார்கள்.

# அத்தியாயம் 7

## விச்வரூபன் புரோகிதனாக இருந்தது

1. அதனைக் கேட்ட அரசர் மகரிஷியை நோக்கி, "தம்முடைய சிஷ்யர்களான தேவர்களைப் பிரகஸ்பதி பகவான் எதற்காகப் பரித்தியாகஞ் செய்தார்; தேவர்கள் என்ன அக்கிரமஞ் செய்தார்கள்; அதனைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

2—19. அதனைக் கேட்ட சுகர், இந்திரன் மூன்று உலகங்களுக்கும் அதிபதியாயிருப்பதினால் கர்வங்கொண்டு நன்மார்க்கத்திலிருந்து தவறி மருத்துக்கள், வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள், மகரிஷிகள், விச்வேதேவர்கள், ஸாத்யர்கள், அச்விநி தேவர்கள், ஸித்தர்கள், சாரணர்கள், கந்தர்வர்கள், பிரம்மவாதிகளான முனிகள், வித்யாதரர்கள், அப்ஸரஸுக்கள், கின்னரர்கள், பதகர்கள், உரகர்கள் ஆகிய இவர்களால் சேவிக்கப்பட்டு ஸபையில் இந்திராணியுடன் ஆசனத்திலிருந்தார். அப்பொழுது தேவர்கள் சந்திர மண்டலம்போன்ற குடையாலும், சாமரம் முதலியவைகளாலும் அவனை உபசரித்தார்கள். அந்தச் சமயத்தில் தேவர்களுக்கும், மகேந்திரனுக்கும் ஆசாரியராகிய பிரகஸ்பதி பகவான் அந்தச் சபைக்கு வந்தார். அவர் தேவர்களாலும், அசுரர்களாலும் வணங்கக்கூடியவர். அவரைப் பார்த்தும் மகேந்திரன் ஆசனத்திலிருந்து எழுந்திருக்காமலும், எதிர்கொண்டழைக்காமலும், ஆசனங் கொடுக்காமலும், உபசரிக்காமலும் இருந்தார். அப்பொழுது அந்தப் பிரகஸ்பதி பகவான் சிஷ்யனுடைய அக்கிரமத்தைப் பார்த்து மௌனமாகத் தம்முடைய கிருகஞ் சென்றார். பிறகு மகேந்திரன் ஆசார்யனை அவமதித்தோமென்பதைத்

தெரிந்துகொண்டு சபையில் பின்வருமாறு தன்னை நிந்தித்துக்கொண்டார். "அற்ப புத்தியுள்ள நான் கெட்ட காரியத்தைச் செய்துவிட்டேன். ஐசுவரிய மதத்தால் ஆசாரியனை அவமதித்தேன். நான் தேவர்களுக்கு அதிபதியாக இருந்தும் அந்த ஐசுவரிய மதத்தால் அசுர சுபாவத்தை அடைந்தேன். ஆனதால் வித்வானாக இருப்பவன் ஐசுவரியத்தை விரும்புவானோ? 'சிலர் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் அரசன், வந்தவர்களை உபசரிப்பதற்காக எழுந்திருக்கக்கூடாது' என்று சொல்லுகிறார்கள். அவர்கள் தர்மத்தை அறிந்தவர்களல்ல. அவர்கள் கெட்ட மார்க்கத்தை உபதேசிப்பவர்கள்; அவர்களுடைய வார்த்தையை எவர்கள் நம்புகிறார்களோ, அவர்கள் கற்களால் செய்யப்பட்ட ஓடத்தின்மீதேறியவர்கள்போலக் கெடுதியை அடைவார்கள். ஆனதால் கம்பீர புத்தியுள்ள ஆசாரியனாகிய பிரகஸ்பதி பகவானை நமஸ்கரித்து நல்ல வார்த்தை சொல்லுகிறேன்" என்று யோசித்துக்கொண்டு ஆசாரியனுடைய கிருகஞ் சென்றார். அவ்விடத்தில் பிரகஸ்பதி தம்முடைய மாயையால் மறைந்துவிட்டபடியால் மகேந்திரனுடைய கண்ணுக்குப் புலப்படவில்லை. அதனைப்பற்றிப் பலவகையாக யோசித்தும் அவருடைய மனத்திற்கு சுகம் உண்டாகவில்லை. அதனைத் தெரிந்துகொண்டு அசுரர்கள் எல்லோரும் சுக்ராசாரியருடைய அனுமதியின்பேரில் மிக்க கர்வத்துடன் தேவர்களுடன் யுத்தஞ்செய்ய முயன்று பாணங்களால் தேவர்களை அடித்தார்கள். அவைகளால் தேவர்களுடைய அவயவங்கள் வெட்டுப்பட்டு, தேவர்கள் தலைகுனிந்து மிகுந்த துக்கத்துடன் பிரம்மதேவரைச் சரணமடைந்தார்கள்.

20—26. அப்பொழுது பிரம்மதேவர் அசுரர்களால் பீடிக்கப்பட்ட தேவர்களை நோக்கி, "ஓ தேவ சிரேஷ்டர்

களை! நீங்கள் மிகவும் பாபமான காரியத்தைச் செய்தீர்கள். பிரம்மத்தை அறிந்தவரும், சாந்தருமான பிராம்மணனை ஐசுவரிய மதத்தால் லட்சியம் செய்யாமலிருந்தீர்கள். ஓ மகேந்திர! குருவை அலட்சியம் செய்ததால் நீங்கள் குறைந்துபோனீர்கள். குறைந்திருந்த அசுரர்கள் சுக்ராசாரியரை ஆராதித்து விருத்தியடைந்திருக்கிறார்கள். நீங்கள் குருவை அலட்சியம் செய்ததால் சத்துருக்களால் அபஜயப்பட்டீர்கள். சுக்ராசாரியரையே தெய்வமாகக் கொண்ட அசுரர்கள் என்னுடைய இடத்தையும் அபகரிப்பார்கள். பிறருக்குத் தெரியாத ஆலோசனையுள்ள சுக்ராசாரியருடைய சிஷ்யர்கள் சுவர்க்கத்தை லட்சியஞ் செய்வார்களா? பிராம்மணனையும், ஸ்ரீமந் நாராயணனையும், பசுக்களையும் தெய்வமாகக் கொண்டவர்களுக்கு ஒருபொழுதும் கெடுதி நேரிடாது. ஆனதால் நீங்கள் துவஷ்டாவின் புத்திரரும், இந்திரியங்களை ஜயித்தவருமான விச்வரூபரென்ற பிராம்மணரைப் புரோகிதராக வைத்துக்கொள்ளுங்கள். அவரைப் பூசித்தீர்களானால் உங்களுக்கு க்ஷேமத்தைச் செய்வார். ஆனால், அவருக்கு அசுரர்களிடத்தில் விசுவாசமுண்டு; அதனை நீங்கள் சகித்துக்கொள்ள வேண்டும்" என்று சொன்னார்.

27—34. அதனைக் கேட்ட தேவர்கள் கவலையற்று துவஷ்டாவின் புத்திரராகிய விச்வரூபரிடம் வந்து அவரை நோக்கி, "ஓ பிராம்மணோத்தம! உம்முடைய ஆசிரமத்திற்கு நாங்கள் அதிதிகளாக வந்திருக்கிறோம். அதிதிகள் பிதிருக்களுக்குச் சமானர்களாகையால் எங்களுடைய இஷ்டத்தை நிறைவேற்றும். புத்திரர்கள் தாங்கள் புத்திரனுள்ளவர்களாயிருந்தாலும் பிதிருக்களுக்குப் பணிவிடை செய்வதே அவர்களுக்கு மேலான தர்மம். அப்படியிருக்க

பிரம்மசாரிகள் விஷயத்தில் என்ன சந்தேகம்? ஆசாரியன் பிராம்மணனுக்கு ஸமானன். தகப்பன் பிரஜாபதிக்கு ஸமானன். சகோதரன் மகேந்திரனுக்கு ஸமானன். தாய் பூமிக்கு ஸமானமானவள். சகோதரியானவள் தயையின் ஸ்வரூபமானவள். அதிதியானவள் தர்மத்தின் ஸ்வரூபம். அப்யாகதன் (எதிர்பாராமல் வந்தவன்) அக்னியின் ஸ்வரூபம். ஸகல பிராணிகளும் நாராயணனுடைய ஸ்வரூபம். ஆனதால் சத்ருக்களால் அவமதிக்கப்பட்டு உபத்திரவத்தை அடைந்த பிதிருக்களாகிய எங்களுடைய துக்கத்தைத் தபஸினால் நிவர்த்திக்கவேண்டும். பிரம்மத்தை அறிந்தவரும், பிராம்மணருமாகிய நீர் எங்களுக்குப் புரோகிதராக இருக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறோம். உம்முடைய தேஜஸால் சத்ருக்களை ஜயிக்க விரும்புகிறோம். ஆனால், நீர் எங்களைவிட வயதில் சிறியவரானாலும் உம்மை ஆசாரியராக வரித்து நாங்கள் நமஸ்கரிப்பது நியாய விரோதமல்ல. ஏனென்றால் நீர் வேதத்தை அறிந்தவரானதாலும், மந்திரங்களை எங்களுக்கு உபதேசிப்பவரானதாலும் இந்த விஷயத்தில் வயதில் முதிர்ந்தவர்கள் முக்கியர்களல்ல" என்று பிரார்த்தித்தார்கள்.

35—41. இதனைக் கேட்ட விச்வரூபர் தேவர்களை நோக்கிச் சிரித்துக்கொண்டு, "தர்மசாஸ்த்ரமுள்ளவர்கள் புரோகிதராக இருப்பதை நிந்திக்கிறார்கள். புரோகிதராக இருப்பதால் பிரம்மதேஜஸ் குறைகிறது. ஆனாலும் லோகபாலர்களாகிய நீங்கள் யாசிக்கும்போது நான் அதனை எப்படிச் செய்யாமலிருப்பேன். உங்களுடைய வார்த்தையை அங்கீகரிப்பதே என்னுடைய வேலை. ஓ தேவர்களே! ஏழைகளுக்கு ஸிலம், உஞ்சம் (வயல் முதலியவைகளில் யஜமானன் தான்யங்களை எடுத்துப்போனபின்பு இறைந்

திருப்பதைப்பொறுக்கிக்கொள்வது ஸிலம். ஹட்டம் முதலிய இடங்களில் இறைந்து கிடக்கும் தான்யங்களை யெடுத்துக் கொள்வது உஞ்சம்) இவைகளே பணம். அவைகளைக் கொண்டு நற்காரியங்களை ஸாதுக்கள் செய்வார்கள். புரோகிதராக இருப்பது நிந்திக்கக்கூடியதாகையால் அதனால் அற்ப புத்தியுள்ளவன் சந்தோஷப்படுவான். அந்தக் கெட்ட காரியத்தை நான் எப்படிச் செய்வேன். ஆனாலும் பெரியோர்களான நீங்கள் கேட்டுக்கொள்வதால் அதனை எப்படித் தடுத்துச் சொல்வேன். உங்களுடைய காரியங்களைப் பிராணனைக் கொண்டும், அர்த்தத்தாலும் செய்கிறேன்" என்று சமாதானஞ்செய்து, மிகுந்த தபஸ்வியான விச்வரூபர் மிக்க முயற்சியுள்ளவராகித் தேவர்களுக்குப் புரோகிதராய் இருந்தார். மேலுமவர் சுக்ராசாரியருடைய ஸாமர்த்யத்தால் அசுரர்களிடத்திலிருந்த தேவராஜ்ஜியத்தை விஷ்ணு சம்பந்தமான வித்தையைக் கொண்டு (நாராயண கவசம்) இந்திரனிடம் திருப்பிக் கொடுத்தார். அந்த வித்தையினால் முன் ஒருக்கால் இந்திரன் காப்பாற்றப்பட்டு அசுர சைன்யங்களை ஜயித்தார். அதனை இப்பொழுது மிகுந்த புத்திசாலியாகிய விச்வரூபர் மகேந்திரனுக்கு உபதேசித்தார்.

## அத்தியாயம் 8

### நாராயண கவசம்

1—2. அதனைக் கேட்ட அரசர் மகரிஷியை நோக்கி, "ஓ பகவன்! எந்த நாராயண கவசத்தால் மகேந்திரன் எதிர்த்துவரும் சத்துரு சைந்யங்களை ஜயித்து மூவுலகத்தின் ராஜ்ஜியத்தை அனுபவித்தாரோ, அந்த நாராயண

கவசத்தைச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

3—42. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி "தேவர்களுக்கு புரோகிதராகிய விச்வரூபர் மகேந்திரனுக்கு உபதேசித்த நாராயண கவசத்தைச் சொல்லுகிறேன்: கவனமாகக் கேளும். கால் கைகளை அலம்பி, ஆசமனஞ் செய்து, சுத்தராக வடக்கு முகமாக உட்கார்ந்து அங்கந்யாஸ கரந்யாஸங்களைச் செய்துகொண்டு ஆபத்து வந்த காலத்தில் நாராயண கவசத்தை ஆரம்பிக்கவேண்டும். கால்களிலும், முழங்கால்களிலும், தொடைகளிலும், வயிற்றிலும், ஹிருதயத்திலும், உரஸிலும், முகத்திலும், சிரஸிலும் அஷ்டாட்சர மந்திரத்தால் கிரமமாகவாவது, மாறுதலாக வாவது அங்கந்யாஸஞ் செய்யவேண்டும். பின்பு, பிரணவம் முதல் யகாரம் வரையில் துவாதசாக்ஷர வித்தையால் விரல்களின் கணுக்களில் கரந்யாஸஞ் செய்யவேண்டும். ஹிருதயத்தில் ஓங்காரத்தையும், வி என்பதை சிரஸிலும், ஷகாரத்தை புருவங்களின் மத்யத்திலும், ணகாரத்தைச் சிகையிலும், வேகாரத்தை நேத்ரங்களிலும், நகாரத்தை ஸந்திகளிலும் (மணிக்கட்டு முதலியவை), மகாரத்தை அத்ஸ்ரமாகவும் தியானஞ் செய்துகொண்டவன் மந்திர சரீரமுள்ளவனாக ஆகிறான். விஸர்க்கத்துடன் பட் என்பதைக் கடைசியாக வைத்துக்கொண்டு ஸகல திக்குகளிலும் தியானிக்கவேண்டும். விஷ்ணுவிற்கு நமஸ்காரம் என்று சொல்லி, ஐசுவரியம் முதலிய ஆறு சக்திகளுடன் கூடினவரும், வித்தை, தேஜஸ், தபஸ் இவைகளின் சுரூபியுமான பகவானைத் தியானஞ் செய்யவேண்டும். மேலும், பின்வரும் மந்திரத்தையும் உச்சரிக்கவேண்டும். கருடன்மீது வீற்றிருப்பவரும், சங்கம், சக்கரம், கதாயுதம், கத்தி, பாணம்,

வில், பாசம் இவைகளை எட்டுக் கைகளால் தரிப்பவரும், அணிமா முதலிய அஷ்ட ஐசுவரியமுள்ளவருமான ஸ்ரீ நாராயணன் என்னை எப்பொழுதும், எவ்விடத்திலும் காப்பாற்றட்டும். மத்ஸ்ய சரீரமுள்ள பகவான் ஜல ஜந்துக்கள், வருண பாசம் ஆகிய இவைகளிலிருந்து என்னை ரட்சிக்கட்டும். வாமன சரீரமுள்ள பகவான் நிலத்தில் என்னை சம்ரட்சிக்கட்டும். திருவிக்ரம சரீரமுள்ள பகவான் ஆகாசத்தில் என்னை ரட்சிக்கட்டும். அசுர சிரேஷ்டர்களுக்குச் சத்துருவான நரஸிம்ம மூர்த்தியானவர் வனம், சண்டை முதலிய துர்க்கமான இடங்களில் என்னைக் காப்பாற்றட்டும். அவர் அட்டகாசம் செய்தபோது திக்குகளில் எதிரொலி உண்டாயின; கர்ப்பங்கள் கலங்கி விழுந்தன. யஞ்யவராகமாக அவதரித்துத் தம்முடைய சிங்கப் பற்களால் பூமியைப் பாதாளத்திலிருந்து கொண்டு வந்த பகவான், மார்க்கத்தில் என்னை சம்ரட்சிக்கட்டும். பரதனுக்குத் தமயனுகிய ராமன் லக்ஷ்மணனுடன் மலையின் சிகரங்களிலும், தேசாந்தரத்திலும் என்னைக் காப்பாற்றட்டும். நாராயணரூபியான பகவான் ஆபிசார கர்மத்திலிருந்து என்னை ரக்ஷிக்கட்டும். நராவதாரஞ் செய்த ஈச்வரன் கர்வத்திலிருந்து என்னை ரக்ஷிக்கட்டும். தத்தாத்ரேயராக அவதரித்த பகவான் யோகப்ரம்சத்திலிருந்து (யோகாப்யாஸத்திலிருந்து தவறுவது) காப்பாற்றட்டும். கபிலாவதாரஞ்செய்த பகவான் கர்மபந்தத்தை நிவர்த்திக்கட்டும். ஸனத்குமார ரூபியான பகவான் மன்மதனிடத்திலிருந்து ரட்சிக்கட்டும். ஹயக்ரீவர், மார்க்கத்தில் தேவர்களுக்குச் செய்த அபராதத்திலிருந்து (வழி நடப்பதற்கு முன் தேவர்களை நமஸ்கரிக்காமல் செல்வது தேவர்களை அவமதித்ததாகும்) காப்பாற்றட்டும். நாரதரூபியான

யில் மூர்த்தம், அமூர்த்தமாகிய இந்த ஜகத் முழுவதும் பகவத் சுரூபமாகையால் அந்த ஸத்யத்தால் எல்லா உபத்திரவங்களும் நசிக்கட்டும். எல்லாவற்றையும் பகவத் சுரூபமாகப் பாவிப்பவர்களுக்கு விகற்பமற்றவராகத் தோன்றும் பகவான் தம்முடைய மாயையால் ஆபரணம், ஆயுதம், அடையாளம் முதலிய சக்திகளைத் தரிக்கிறார். ஸகல சுரூபியும், எப்பொழுதும், எங்கும் இருப்பவரும், எல்லாவற்றையும் அறிந்தவருமாகிய மகாவிஷ்ணு உண்மையான அந்தப்பிரமாணத்தைக்கொண்டு என்னை ரக்ஷிக்கட்டும். நாஸிம்ம மூர்த்தியான பகவான் திக்குகளிலும், விதிக்குகளிலும், மேலும், கீழும், உள்ளும், வெளியிலும், நாலு பக்கத்திலும் தம்முடைய கர்ஜிதத்தால் பயத்தைப் போக்கடிக்கட்டும்.'' என்று விசுவரூபன் நாராயண கவசத்தை மகேந்திரனுக்கு உபதேசித்து, "ஓ மகேந்திர! இந்தக் கவசத்தை ஜபஞ்செய்வதால் அசுரர்களை ஜயிப்பாய். இந்தக் கவசத்தை ஜபித்துக்கொண்டு எவனைப் பார்க்கிறாயோ, எவனைக் காலால் தொடுகிறாயோ அவனுக்கும் பயம் நேரிடாது. இந்த வித்தையைத் தரிப்பவனுக்கு அசுரர்கள், திருடர்கள், வியாதி, கிரகங்கள் முதலிய ஓரிடத்திலும் பயமில்லை. முன்னொருகால் குசிக வம்சத்தில் பிறந்த ஒரு பிராம்மணர் ஜலமில்லாத காட்டில் இந்தக் கவசத்தை ஜபித்து யோக மகிமையால் சரீரத்தை விட்டார். பின்பு கந்தர்வர்களுக்கதிபதியான சித்ர ரதன் ஸ்திரீகளுடன் விமானத்தின் மீதேறி அந்தப் பிராம்மணன் மரணமடைந்த இடத்திற்கு மேலாகச் சென்றான். அப்பொழுது விமானத்துடன் தலைகீழாகப் பூமியில் விழுந்தான். பிறகு அவன் வாலகில்யர்களுடைய உபதேசத்தால் அந்தப் பிராமணருடைய எலும்புகளை ஸரஸ்வதி நதியில் போட்டு ஸ்நானஞ்செய்து தன்னு

டைய லோகஞ் சென்றான். எவன் இதனைக் கேட்கிறானோ, ஆதரவுடன் தரிக்கிறானோ, அவனை ஸகல பிராணிகளும் நமஸ்கரிக்கிறார்கள். அவன் ஸகல பயத்திலிருந்தும் நிவர்த்தி அடைகிறான்". ஓ மஹா ராஜ! விச்வரூபரால் உபதேசிக்கப் பட்ட இந்த வித்தையை மஹேந்திரன் அடைந்து, அசுரர்களை ஜயித்து, மூன்று லோகங்களையும் அநுபவித்தார்.

---

## நோட்டு.

முப்பத்திரண்டு— தேவாலயத்தில் பாதுகையைத் தரித்துக் கொண்டாவது வாகனத்தின்மீதேறியாவது செல்வது, பகவானு டைய உத்ஸவத்தை ஸேவியாமலிருப்பது, பகவானுடைய ஸன்னிதி யில் தவறுதல் செய்வது, அசுத்தனாக இருக்கும்போதும் ஆசௌச மிருக்கும்போதும் பகவானை நமஸ்கரிப்பது, ஒரு கையால் நமஸ் கரிப்பது, பின் பிரதக்ஷிணஞ் செய்வது, ஸன்னிதியில் கால் நீட்டு வது, கட்டில் முதலியவைகளைப் போட்டுக்கொள்வது, படுத்துக் கொள்வது, போஜனஞ்செய்வது, பொய் சொல்வது, உரக்கப் பேசுவது, ஒருவருக்கொருவர் சண்டை செய்வது, அழுவது, நிக்ர ஹிப்பது, அநுக்ரஹிப்பது, ஸ்திரீகளையும் மனிதர்களையும் நிஷ்டூர மாகப் பேசுவது, கம்பளம் போர்த்துக்கொள்வது, பிறரை நிந்திப் பது, பிறரைத் துதிப்பது, அமங்கள வார்த்தையைச் சொல்லுவது, அபான வாயுவை விடுவது, சக்தியிருக்கும்பொழுது சொற்ப உபசாரஞ்செய்வது, நிவேதனஞ் செய்யப்படாததைப் புசிப்பது, அந்த அந்தக் காலத்திலுண்டான பழங்கள் முதலியவைகளைப் பகவா னுக்கு நிவேதனஞ் செய்யாமலிருப்பது, நிவேதனம் பண்ணி பாக்கி யான வியஞ்சனத்தைப் பிறருக்குக் கொடுப்பது, பின்காட்டி உட்காருவது, தகாதவர்களை நமஸ்கரிப்பது, ஆசாரியனைத் துதிக்கா மல் தன்னைப் புகழ்ந்துகொள்வது, தேவதைகளை நிந்திப்பதுமாகிய வைகள், — நாரதர்.

# அத்தியாயம் 9

## விசுவரூப வதம்

1—10. அந்த விசுவரூபருக்கு ஸோமபீதம், ஸுராபீதம், அந்நாதமென்ற மூன்று தலைகளுண்டென்று கேள்விப் பட்டிருக்கிறோம். அவர் யக்ஞத்தில் 'இது இந்திரனுக்கு, இது அக்னிக்கு' என்று வணக்கத்துடன் ஹவிர்ப்பாகத்தைத் தேவர்களுக்குச் சொன்னார். ஏனென்றால், தேவர்கள் அவருக்குப் பிதிருக்கள். ஆனாலும் அவர் மாதிரு ஸிநேகத்தால் தேவர்களுக்குத் தெரியாமலேயே அசுரர்களுக்குப் பாகத்தைக் கொடுத்துவந்தார். தேவர்களை அவமதிப்பதாகிய அவருடைய அபராதத்தைக் கண்ட மகேந்திரன் அவருடைய தலையை வெட்டினார். ஸோமபீதமென்ற அவருடைய சிரஸானது கபிஞ்ஜலமாயிற்று. ஸுராபீதமென்றது கலவிங்கமாயிற்று. அந்நாதமானது தித்திரியாயிற்று. மகேந்திரன் விசுவரூபரைக் கொன்றதால் நேர்ந்த பிரம்மஹத்தியை நிவர்த்தித்துக்கொள்ளும் சாமர்த்தியமுள்ளவரானாலும் அதனை அஞ்ஜலியால் பெற்றுக்கொண்டார். ஒரு வருஷத்திற்குப் பிறகு உலக அபவாதத்தை நிவர்த்திப்பதற்காகப் பூமி, ஜலம், மரம், ஸ்திரீகள் ஆகிய இவர்களிடத்தில் நான்கு வகையாகப் பிரித்துக்கொடுத்தார். பூமியானவள் வெட்டின இடம் திரும்பவும் பூர்த்தியாகும்படி வரத்தைப் பெற்றுக்கொண்டாள். அந்த பிரம்மஹத்தியின் சுவரூபமானது க்ஷார பூமியாக இருக்கிறது (களர் நிலம்). மரங்களும் வெட்டின அவயவங்கள் திரும்பவும் முளைக்கவேண்டுமென்ற வரத்தைப் பெற்றுக்கொண்டு, தோஷத்தின் நாலில் ஒரு பாகத்தைப் பெற்றுக்கொண்டன. அவைகளில் இந்த தோஷமானது பிசினாகக் காணப்படுகிறது. ஸ்திரீகள்

பிரசவிக்கிறவரையில் புருஷனுடைய ஸம்போகம் இருக்க வேண்டும் என்ற வரத்தைக் கேட்டுக்கொண்டு, அந்தத் தோஷத்தின் நான்கிலொரு பாகத்தைப் பெற்றுக்கொண்டார்கள். அந்தத் தோஷமானது ஒவ்வொரு மாதத்திலும் ரஜஸ்ஸாகக் காணப்படுகிறது. ஜலமானது தான் பால் முதலிய திரவியங்களில் சேர்ந்து மிகுதியாக ஆகவேண்டுமென்ற வரத்தைப் பெற்றுக்கொண்டு அந்தத் தோஷத்தைக் கிரகித்துக்கொண்டது. அந்த ஜலத்தில் காணப்படும் குமிழ், நுரை ஆகிய இவைகளே அந்தத் தோஷத்தின் சுரூபங்களாம்.

11—19. பிறகு துவஷ்டாவானவர் புத்திரசோகம் உள்ளவராகிச் சத்துருவாகிய இந்திரனைக் கொல்ல விரும்பி, 'இந்திரனுக்குச் சத்துருவாக விருத்தியடை' என்ற அர்த்தமுள்ள வாக்கியத்தை உச்சரித்து ஹோமஞ்செய்தார். அப்பொழுது தக்ஷிணாக்னியிலிருந்து ஒருவன் உண்டானான். அவன் பயங்கரமான பார்வையுள்ளவன்; பிரளய காலத்திய யமன்போன்றவன்; ஒவ்வொரு நாளும் நான்கு பக்கத்திலும் ஒரு விற்கடை தூரம் விருத்தியடையும் சரீரமுள்ளவன். நெருப்பினால் எரிக்கப்பட்ட மலைபோன்றவன்; ஸந்தியாகால மேகம்போன்ற காந்தியுள்ளவன்; நெருப்பில் காய்ச்சப்பட்ட தாமிரம் போன்ற தலைமயிர், மீசை இவைகளுள்ளவன்; மேலும், அவனுடைய கண்கள் மத்யான்ன சூரியன்போல உக்கிரமாயிருக்கின்றன; அவனுடைய முச்சூலமானது ஆகாசம், பூமி இவைகளை வியாபித்திருக்கிறது; மேலுமவன் நர்த்தனம் பண்ணிக்கொண்டும், கர்ஜித்துக்கொண்டுமிருக்கிறான்; மேலும் அவனுடைய அடிவைப்பினால் பூமி அசைகின்றது; அவனுடைய மூகமானது மலையின் குகைபோல்

இருப்பதால் ஆகாசத்தை விழுங்குகிறவன்போலும், நாக்கினால் நட்சத்திரங்களை நக்குகிறவன்போலும், மூன்று லோகத்தையும் பட்சிக்கிறவன்போலும் பிரகாசித்தான். மேலுமவன் பயங்கரமாகிய சிங்கப்பற்களுள்ளவன்; அடிக்கடி கொட்டாவி விடுகிறவன்; அவனைக் கண்டு சகல ஜனங்களும் பயந்து பத்துத் திக்குகளிலும் ஓடினார்கள். அவனுக்கு விருத்ரன் என்று பெயர் விளங்கிற்று. அவனைக் கண்ட தேவர்கள் தங்கள் தங்களுடைய திவ்யமான அஸ்திரங்களாலும், ஆயுதங்களாலும் அவனை அடித்தார்கள். அவன் அவை யாவையும் விழுங்கினான். பிறகு அதனைக் கண்ட தேவர்கள் ஆச்சரியம், துக்கம் இவைகளை அடைந்து, அந்தர்யாமியும் ஆதிபுருஷனுமாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் பின்வருமாறு தோத்திரஞ் செய்தார்கள்.

20—41. "வாயு, ஆகாசம், அக்னி, ஜலம், பூமி ஆகிய ஐந்து பூதங்களும், மூன்று லோகங்களும் பிரம்மா முதலிய நாங்களும் எவருடைய ஆக்ஞையை அனுசரிக்கிறோமோ, இந்த யமனும் எவரிடத்தில் பயப்படுகிறானோ அவரைச் சரணமடைகிறோம். அந்தப் பகவான் அகங்காரமற்றவர்; சாந்தர்; ஆத்ம லாபத்தாலேயே பூர்ணர்; உற்பத்தியற்றவர்; அப்படிப்பட்ட பரமேசுவரனை விட்டு மற்றவர்களை எவன் சரணமடைகிறானோ, அவன் மூடன். நாயின் வாலைக் கொண்டு சமுத்திரத்தைத் தாண்ட விரும்பினவனுக்குச் சமமானவன். எவருடைய பெரியதான சிங்கத்தில் ஓடம் போன்ற பூமியைக் கட்டி மனுவானவர் சங்கடங்களை நிவர்த்தித்துக்கொண்டாரோ, அந்த மத்ஸ்யமூர்த்தியாகிய பகவான் அந்த விருத்ராசுரனிடத்தில் நேர்ந்த பயத்திலிருந்து நம்மைக் காப்பாற்றட்டும். கடுமையான காற்றுகளால் பயங்கரமான பிரளய ஜலத்தில் தொப்புளிலிருக்கும்

தாமரைப் புஷ்பத்திலிருந்து விழுந்த பிரம்மதேவர் எவ்ருடைய ஒத்தாசையால் அந்தப் பயத்திலிருந்து க்ஷேமத்தை அடைந்தாரோ, அவர் நம்மைக் காப்பாற்றட்டும். எந்தப் பகவான் ஒருவராயிருந்தும் தம்முடைய மாயையைக் கொண்டு எங்களைச் சிருஷ்டித்தாரோ, எவரால் அனுக்ரஹிக்கப்பட்ட நாங்கள் ஜகத்தைச் சிருஷ்டிக்கிறோமோ, அவர் எங்களுக்கு முந்தியே அந்தர்யாமியாக இருப்பதால் தனித் தனி ஈசுவரனென்ற அபிமானமுள்ள நாங்கள் அவருடைய சுரூபத்தைத் தெரிந்துகொள்ளவில்லை. மேலும், அவர் தேவர்கள், ரிஷிகள், திர்யக்ஜாதி, மனிதர் ஆகிய இவைகளில் தம்முடைய மாயையைக்கொண்டு அவதரித்து ஒவ்வொரு யுகத்திலும் சத்துருக்களால் பீடிக்கப்படும் எங்களைச் சம்ரட்சிக்கிறார். ஆனதால் ஆத்மாவும், தேவதையும், ஜகத்ரூபியும், ஜகத் காரணரும், மாயையின் சுரூபியும், சரணமடையக்கூடியவருமான அந்தப் புருஷனைச் சரணமடைகிறோம். அவர் பக்தர்களான நமக்கு க்ஷேமத்தைச் செய்வார்" என்று தேவர்கள் தோத்திரஞ் செய்தார்கள். அப்பொழுது தேவர்களுக்கு முன்பாக மேற்குத் திக்கில் சங்கம், சக்கரம், கதை முதலியவைகளைத் தரித்தவரும், ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம் தவிர மற்ற ஆபரணங்களால் தமக்குச் சமானர்களான ஸுநந்தர் முதலியவர்களால் சேவிக்கப்பட்டவருமான ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் பிரகாசித்தார். சரத்காலத்திய தாமரை மலர்போன்ற கண்கள் உள்ள அந்தப் பகவானைத் தரிசித்து மிகவும் சந்தோஷமடைந்த தேவர்கள் பூமியில் தண்டம்போல் விழுந்து எழுந்திருந்து அந்தப் பகவானை நோக்கி, "யக்ஞத்தை வீரியமாக உடையவரும், காலரூபியும், அசுரர்களிடத்தில் சக்கரத்தைப் பிரயோகிப்பவரும், அழகான அநேக திவ்ய

நாயகர்களுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். முக்குணங் களுக் கதிபதியான உம்முடைய நிர்க்குண சுரூபத்தை உம்மால் சிருஷ்டிக்கப்பட்டவன் அறியமாட்டான். அப்படிப் பட்ட உமக்கு நமஸ்காரம். ஓ பகவன்! நாராயண! வாஸு தேவ! எல்லாவற்றிற்கும் முந்தியவரே! மிகுந்த மாஹாத் மியமுள்ளவரே! மிகுந்த மங்களகரமுள்ளவரே! மிகுந்த தயவுள்ளவரே! பரமஹம்ஸர்களான சந்நியாசிகள் சித்தத்தை அடக்கி, பகவானை ஸேவிப்பதாகிய தர்மத்தை அநுஷ்டித்து, அதனால் தமோகுணமாகிய கதவைத் திறந்து சுத்தமாகிய சித்தத்தில் பிரத்யக் ரூபமாய்ப் பிரகாசிக்கும் எந்தச் சுகத்தை அநுபவிக்கிறார்களோ, அந்த அநுபவம் நீரே! உம்முடைய விளையாட்டானது ஒருவராலும் அறிய முடியாதது. நீர் எல்லாவற்றிற்கும் ஆதாரமேயொழிய உமக்கு ஆதாரமொன்றுமில்லை. மேலும் நீர் சரீரமற்றவர்; குணங்களற்றவர். அப்படியிருந்தும் எங்களுடைய உதவியை எதிர்பாராமல் ஸகுணமான ஜகத்தைத் தாமே சிருஷ்டிக்கிறீர்; காப்பாற்றுகிறீர்; நாசஞ்செய்கிறீர். ஜனங்கள் வீடு முதலானவைகளைக் கட்டி அதில் வசித்துக்கொண்டு தங்களுடைய புண்ணிய பாவத்தின் பலனை எப்படி அநுப விக்கிறார்களோ, அப்படி நீர் பிரம்ம ரூபியானாலும், ஜீவ ரூபியாக ஸம்ஸாரத்தை அடைந்து சுக துக்கங்களை அநுப விக்கிறீரா? அல்லது ஆத்மாராமராக இருந்து சாட்சியாக இருக்கிறீரா என்பது எங்களுக்குத் தெரியவில்லை. ஆனால் மேற்சொல்லிய இரண்டு வகையும் உம்மிடத்தில் பொருந் தும். நீர் அளவற்ற குணங்களுள்ளவர்; சுதந்திரர்; விகற்பம், விதர்க்கம், விசாரம் என்ற பிரமாண ஆபாஸங் கள், அவற்றிற்கு உதவியான குதர்க்கம் இவைகளின் சுரூபத்தை நிரூபிக்கும் சாஸ்திரங்களால் கலங்கிய அந்தக்

காரணமுள்ளவர்களும், துர் அபிமானமுள்ளவர்களுமான வாதிகளுடைய விவாதத்திற்கு எட்டாதவரும், ஸம்ஸார மற்றவரும், சித்ரூபியாயுமிருக்கிற சுரூபத்தில் மாயையைக் கொண்டு எதுதான் பொருந்தாது? இரண்டு வகையான சுரூபமில்லாததினால் சம புத்தியுள்ளவர்களும், விஷம புத்தியுள்ளவர்களுமான ஜனங்களுடைய அபிப்பிராயப்படி மாயையால் அநுக்கிரகமாவது, நிக்ரகமாவது உம்மிடத்தில் தோன்றுகிறது. கயிற்றைப் பார்த்து ஸர்ப்பமென்று நினைத்தவன் பயத்தை அடைகிறான்; அதனைக் கயிறென்றே நினைத்தவன் பயத்தை அடைகிறதில்லை. எல்லா வஸ்துக்களிலும் பலவகையாகத் தோன்றுகிறவரும், ஸத்ரூபியும், எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்கிறவருமான அவர் ஒருவரே என்று வேதத்தால் நிச்சயமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. ஓ மதுவென்ற அசுரனைக் கொன்றவரே! புருஷார்த்தத்தை அடைவதில் ஸமர்த்தர்களும், உம்மையே பிரியஸுஹிருதாகக் கொண்டவர்களுமான ஸாதுக்கள் உம்முடைய பாதாரவிந்த ஸேவையை விடுவார்களா? உம்முடைய பாதாரவிந்தத்தை ஸேவித்தவன் திரும்பவும் ஸம்ஸாரத்தை அடையமாட்டான். உம்முடைய மகிமையாகிற அமிருத ரஸத்தால் நிறைந்த ஸமுத்திரத்தின் ஜலத்துளியை ஒரு தடவை பானஞ்செய்து அதனால் தங்களுடைய மனதில் விசேஷ சுகமுண்டாகி, அதனால் விஷய சுகங்களை மறந்த பரம பாகவதர்கள் ஸகல பிராணிகளுக்கு ஸுஹிர்த்தும், ஸகல சுரூபியுமான உம்மையே தியானஞ்செய்து ஆனந்தத்தை அடைகிறார்கள். மேலும் நீர், மூன்று உலகங்களையும் சுரூபமாகவும், வீடாகவும் வைத்துக்கொண்டிருக்கிறீர். மூன்று பாதங்களுள்ளவர்; மூன்று உலகங்களையும் காப்பாற்றுகிறவர். மூன்று உலகங்களாலும் கொண்டாடப்

கூடிய மகிமையுள்ளவர்; தேவர்களும், அசுரர்களும், மனிதர்களும் உம்முடைய விபூதிகளேயாம். அவர்கள் முயற்சிக்கக்கூடிய காலம் இது அல்லவென்று நினைத்துத் தம்முடைய மாயையால் தேவனாகவும், மனிதனாகவும், நரஸிம்ஹமாகவும், ஜலஜந்துவாகவும் அவதரித்து அவரவர்களுடைய அபராதத்திற்குத் தக்கபடி சிக்ஷையைச் செய்தீர். அப்படியே இந்த விருத்திராசுரனையும் கொல்லும். ஓ பகவன்! உமக்கு இஷ்டமிருக்குமானால் உம்மைச் சார்ந்தவர்களும், உம்முடைய பாதாரவிந்தத்தைத் தியானஞ்செய்துகொண்டிருப்பவர்களுமான எங்களுக்கு உம்முடைய சுரூபத்தைப் பிரகாசப்படுத்தித் தயையுள்ளதும், அநுராகத்தால் நிறைந்ததும், அழகானதும், குளிர்ந்ததுமான பார்வையாலும், இனிமையான அமிர்தம்போன்ற வார்த்தையாலும் தாபத்தைப் போக்கடிக்கவேண்டும். ஓ பகவன்! ஸகல ஜகத்தைப் படைப்பது, ஸம்ரக்ஷிப்பது, நாசஞ்செய்வது ஆகிய இவைகளில் உம்முடைய மாயை காரணமாயிருக்கிறது. மேலும் நீர் ஸகல பிராணிகளுடைய ஹிருதய குகையில் பிரம்மரூபியாயும், அந்தர்யாமியாகவும், வெளியில் பிரதான ரூபத்தாலும், தேசம் காலம், தேகத்தின் இருப்பு இதற்குத் தக்கபடி அவைகளுக்கு உபாதான காரணமாகவும், உபலம்பகமாகவும் இருக்கிறீர். சகல புத்திக்கும் சாட்சியாகவும், ஆகாசம் போன்ற சரீரமுள்ளவருமாய், ஸாக்ஷாத் பரப்பிரம்மமாகவும் இருக்கிறீர். அப்படிப்பட்ட பரமாத்மாவாகிய உம்மிடத்தில் எங்களால் சொல்லிக்கொள்ளக்கூடியது என்ன இருக்கிறது? எல்லாம் தங்களுக்குத் தெரிந்த விஷயமே. அக்கினிக்கு அதன் பொரிகள் பிரகாசத்தை உண்டுபண்ணுமா? ஆனதால் பகவானும், பரம குருவுமான உம்முடைய பாதச் சாயையை நாங்கள் எதற்காக ஆசிரயித்திருக்கிறோமோ,

அதனைப் பூர்த்திசெய்யும். அந்தப் பாதச் சாயையானது பலவகையான துக்கத்தைத் கொடுக்கும் சம்ஸார சிரமத்தை நிவர்த்திக்கக்கூடியது. ஓ ஈசுவர! இந்த விருத்திரனால் எங்களுடைய தேஜஸும், அஸ்திரங்களும், ஆயுதங்களும் விழுங்கப்பட்டன. அந்த விருத்திரனைக் கொல்லும் ஹம்ஸரும், சகல பிராணிகளுடைய ஹிருதயத்தில் வசிப்பவரும், சாட்சியும், கீர்த்தியுள்ளவரும், சுத்தரும், ஆதியற்றவரும், ஆனந்த ரூபியும், சாதுக்களால் சேவிக்கப்பட்டவரும், ஸம்சாரமாகிய மார்க்கத்தில் கஷ்டப்படுவோர்களைக் காப்பாற்றுபவருமான உமக்கு நமஸ்காரம்."

42—51. இப்படி தேவர்களால் துதிக்கப்பட்ட ஸ்ரீ மகாவிஷ்ணு அவர்களை நோக்கி, "ஓ தேவ சிரேஷ்டர்களே! உங்களுடைய ஸ்தோத்திரத்தால் நான் பிரீதி அடைந்தேன். உங்களால் செய்யப்பட்ட ஸ்தோத்திரத்தால் ஸம்ஸார நிவர்த்தி, பகவானுடைய ஸ்மரணம், பக்தி இவைகள் உண்டாகின்றன. ஏ தேவர்களே! நான் சந்தோஷமடைந்தால் எதுதான் கிடைக்காது? ஆனாலும் என்னிடத்திலேயே மனத்தைச் செலுத்தியவன் வேறு ஒன்றையும் யாசிக்கமாட்டான். விஷயங்களைத் தத்துவங்களாக நினைத்த மூடன் தனக்கு க்ஷேமகரமான விஷயம் இன்னதென்று அறியமாட்டான். அந்த விஷயங்களை விரும்பும் அவனுக்கு அவனைப்போலிருப்பவன் அவைகளைக் கொடுப்பான். வித்துவானாக இருப்பவன் மூடனுக்குக் கர்மதலைத க்ஷேமகரமென்று சொல்லமாட்டான். ரோகமுள்ளவன் அபத்தியமான வஸ்துவை விரும்பினாலும் சிறந்த வைத்தியன் அதனைக் கொடுக்கமாட்டான். ஓ மகேந்திர! நீங்கள் தத்யக் என்ற மகரிஷி (ததீசி) யினிடம் சென்று வித்தை

யாலும், விரதத்தாலும், தவத்தினாலும் கெட்டியான அவரு டைய சரீரத்தைக் கொடுக்கும்படி பிரார்த்தியுங்கள். அந்த மகரிஷி சுத்தமான பிரம்மத்தை அறிந்தவர். அசுவசிரஸ் என்ற பெயருள்ள நாராயண கவசத்தை அசுவினி தேவர் களுக்கு உபதேசஞ் செய்து அவர்களைத் தேவர்களாகச் செய்தார். பின்னும் அவர் துவஷ்டாவுக்கு அதனை உபதே சித்தார். துவஷ்டா விசுவரூபனுக்குச் சொன்னார். விசுவ ரூபனிடமிருந்து நீ பெற்றுக்கொண்டாய். அந்த மகரிஷியை அசுவனி தேவர்களும், நீங்களும் யாசித்தீர்களானால் உங்க ளுக்குத் தமது சரீரத்தைக் கொடுப்பார். அவருடைய எலும்புகளால் விசுவகர்மா ஆயுதத்தைச் செய்வான். அந்த ஆயுதங்கொண்டு என்னுடைய தேஜஸால் நிறைந்தவனாகி விருத்திரனைக் கொல்வாய். அவன் அடிபட்ட பிறகு நீங்கள் தேஜஸ், அஸ்திரம், ஆயுதம், சம்பத்து முதலியவைகளைத் திரும்பவும் அடைவீர்கள். என்னைச் சார்ந்தவர்கள் ஒரு பொழுதும் துக்கத்தை அடையமாட்டார்கள். உங்களுக்கு க்ஷேமம் உண்டாகும்'' என்று அனுக்கிரகித்தார்.

## நோட்டு

ஹோமஞ் செய்தார்:— மந்திரத்தை அக்ஷரப் பிழையுடனாவது ஸ்வரப் பிழையுடனாவது உச்சரித்தால் அதன் பயனைக் கொடுக்கிற தில்லை. ‘ இந்திர சத்ரோவர்த்தச்வ ' என்று ஹோமஞ் செய்தார். ஆனாலும் ஸ்வரப்பிழை உண்டானதால் இந்திரனால் கொல்லக்கூடிய புத்திரன் பிறந்தான். அசுவினி தேவர்களுக்கு:— முன்னொருகால் அசுவினி தேவர்கள் ததீச் என்ற மகரிஷியினிடஞ் சென்று தங்களுக்கு நாராயண கவசத்தை உபதேசிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அவர் அப்பொழுது கர்மகாலமாகையால் ‘பிறகு உபதேசிக்கிறேன்' என்றார். பின்பு மகேந்திரன் மகரிஷியினிடம்

வந்து, 'ஓ மகரிஷியே' அசுவினி தேவர்களுக்கு வித்தை உபதேசிக்கக்கூடாது. என்னுடைய வார்த்தையை மீறி உபதேசித்தால் உம்முடைய தலையை வெட்டுவேன்' என்றான். பின்பு அசுவினி தேவர்கள் வந்து கேட்டார்கள். அப்பொழுது மகேந்திரன் சொன்னதை மகரிஷி சொன்னார். அதனைக் கேட்டு அவர்கள், 'ஓ மகரிஷியே! உம்முடைய தலையை நாங்கள் வெட்டி, குதிரையின் தலையை உடலில் ஒட்டிவிடுகிறோம். அந்த முகத்தைக்கொண்டு வித்தையை எங்களுக்கு உபதேசியும். இந்திரன் அத்தலையை வெட்டின பின்பு உம்முடைய தலையை ஒட்டிவிடுகிறோம்.' அதனைக் கேட்ட மகரிஷி அசுவமுகத்தால் அவர்களுக்கு வித்தையை உபதேசித்தார். அதனால் அதற்கு அசுவசிரசு என்னும் பெயர் உண்டாயிற்று.

# அத்தியாயம் 10

## விருத்திராசுர யுத்தம்

1—4. ஸ்ரீ மகாவிஷ்ணு இம்மாதிரி மகேந்திரனுக்குக் கட்டளையிட்டு, தேவர்கள் பார்த்திருக்கும்போது மறைந்தார். தேவர்களும் பகவானுடைய கட்டளையின்படி ததீசி மகரிஷியைக் கேட்டார்கள். அதைக் கேட்டு மகரிஷி சிரித்துக் கொண்டு தேவர்களை நோக்கி, "ஓ தேவர்களே! பிராணிகளுக்கு மரணத்தில் நேரிடும் துக்கமானது மிகவும் சகிக்கக் கூடாதது. அதனை நீங்கள் அறியமாட்டீர்கள். உயிரை வைத்திருக்கவேண்டுமென்ற விருப்பமுள்ளவர்களுக்கு ஆத்மாவானது மிகவும் பிரியமான வஸ்து. அதனை யாசிப்பவர் விஷ்ணுவேயானாலும் யார்தான் கொடுப்பான்?" என்றார்.

5—6. அதனைக் கேட்ட தேவர்கள் மகரிஷியை நோக்கி, "ஓ பிராம்மணோத்தம! பிராணிகளிடத்தில் தயவுள்ளவர்களும், புண்ணியசுலோகர்களால் சிலாகிக்கக்கூடிய சரித

முள்ளவரும், உம்மைப் போன்றவர்களுமான மகான்கள் எதனைத்தான் கொடுக்கமாட்டார்கள்? யாசகர்கள் தம் காரியத்தையே முக்கியமாகக்கொண்டவர்கள். பிறருடைய உபத்திரவத்தை அறியாதவர்கள். அப்படிப் பிறருடைய உபத்திரவத்தை அறிவார்களேயானால் சரீரத்தைக் கொடுக்கும்படி யாசிப்பார்களா? பிரபுவானவன் யாசகர்களுடைய உபத்ரவத்தை அறிவானேயானால் அவன் கொடுக்கமாட்டேனென்று சொல்லமாட்டான்' என்றார்கள்.

7—12. அதனைக் கேட்ட மகரிஷி அவர்களை நோக்கி, "உங்கள் முகமாகத் தர்மத்தைக் கேட்க விரும்பிக் கொடுக்கமாட்டேனென்று சொன்னேன். என்னை விட்டுப் பிரிந்து போகக்கூடிய சரீரத்தை நானே விடுவிடுகிறேன். எந்தப் புருஷன் நிலையற்ற சரீரத்தில் அபிமானம் வைத்துத் தர்மத்தையும், கீர்த்தியையும் கெடுத்துக்கொள்ளுகிறானே, அவன் தாவரங்களாலும் துக்கிக்கத்தகுந்தவனாக ஆகிறான். பிராணிகள் துக்கிப்பதனால் எவனுடைய ஆத்மா துக்கிக்கிறதோ, பிராணிகள் சந்தோஷிப்பதனால் எவனுடைய ஆத்மா சந்தோஷிக்கிறதோ இதுவே பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட சாசுவதமான தர்மம். நாய், நரி முதலியவைகளால்பட்சிக்கக்கூடியதும், தனக்கு உபயோகப்படாததுமான மனது, புத்திரன் முதலிய பந்துக்கள், சரீரம் இவைகளால் பிறருக்கு உபகாரஞ் செய்யாமலிருப்பது மிகவும் கஷ்டமான காரியம்" என்று சொல்லி, சித்தத்தைப் பரப்பிரம்மத்தினிடம் செலுத்திச்சரீரத்தை விட்டார். இந்திரியம், மனது, புத்தி, பிராணன் இவைகளை அடக்கிக் கொண்டும் ஆத்ம தத்துவத்தைத் தரிசித்துக்கொண்டும் மேலான யோக்கியதை அடைந்திருந்த அந்த மகரிஷிக்குச் சரீர நாசமும் தெரியவில்லை.

13—33. பிறகு அந்த மகரிஷியின் எலும்புகளைக் கொண்டு விசுவகர்மாவானவர் வஜ்ராயுதத்தைச் செய்தார். மகேந்திரன் அதனை எடுத்துக்கொண்டு பகவானுடைய தேஜஸை அடைந்து, தேவகணங்களுடன் ஐராவதத்தின் மீதேறி மகரிஷிகளால் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டு மூன்று லோகத்தையும் சந்தோஷப்படுத்திக்கொண்டு விருத்திரனை எதிர்த்தார். அந்த விருத்திரனை அசுர சைனியங்கள் சுற்றிக்கொண்டிருக்கின்றன. மேலும், பிரளயகால ருத்ரன் போலக் கோபித்துக்கொண்டிருந்தான். திரேதா யுகத்தின் முன்பாகமாகிய அந்தக் காலத்தில் நர்மதையின் கரையில் முதல் மகா யுகத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நேர்ந்தது. அப்பொழுது ருத்திரர்களும், வசுக்களும், ஆதித்யர்களும், அசுவினி தேவர்களும், பிதிருக்களும், அக்னிகளும், மருத்துக்களும், ரிபுக்களும், சாத்தியர்களும், விசுவேதேவர்களும் இந்திரனைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அதனைக் கண்ட அசுரர்கள் பொறுமைகொண்டு நமுசி, சம்பரன், அநர்வா, துவிமூர்த்தா, விருஷபன், சம்பரன், ஹயக்ரீவன், சங்குசிரஸ், விப்ரசித்தி, அயோமுகன், புலோமா, விருஷபர்வா, பிரஹேதி, ஹேதி, தூம்ரகேசன், விரூபாக்ஷன், கபிலன், விபாவசு, இல்வலன், பல்வலன், தந்தசூகன், விருஷத்துவஜன், கலாநாபன், மகாநாபன், பூதசந்தபனன், விருகன், சுமாலி, மாலி முதலியவர்கள் விருத்திரனை முன்னிட்டுக்கொண்டு மகேந்திரனை எதிர்த்தார்கள். மேலுமவர்கள் கதாயுதம், பரிகம், பாணம், பிராஸம், முத்கரம், தோமரம், சூலம், பரச்வதம், கட்கம், சதக்நி, முசண்டி முதலிய ஆயுதங்களையும், அஸ்திரங்களையும் தேவர்களின் மீது பிரயோகித்தார்கள். அவைகளால் தேவ சைனியம் மறைக்கப்பட்டுப் பிரகாசிக்கவில்லை. பின்பு தேவர்கள் சஸ்தி

ரங்களாலும், அஸ்திரங்களாலும் அசுர சைனியங்களை அடித்தார்கள். அப்பொழுது அசுர சைனியத்திற்கு அஸ்திரங்களும், சஸ்திரங்களும் குறைந்தன. பின்பு அவர்கள் கற்களையும், மலைகளையும், மரங்களையும் தேவர்களின்மீது வருஷித்தார்கள். தேவர்கள் அதனையும் நாசஞ்செய்தார்கள். இப்படி அஸ்திரங்களாலும், சஸ்திரங்களாலும், மரங்களாலும், கற்களாலும், மலைகளாலும் அடிக்கப்பட்டும் தேவர்கள் க்ஷேமமாய் இருப்பதைப் பார்த்த அசுரர்கள் பயந்தார்கள். அசுரர்களால் தேவர்கள் விஷயமாய்ச் செய்யப்பட்ட எல்லா முயற்சிகளும் ஸ்ரீ கிருஷ்ண பக்தர்களான மகான்களிடத்தில் அற்பர்களால் பிரயோகிக்கப்பட்ட கடுஞ் சொற்கள் போல வியர்த்தமாயின. அப்பொழுது அவர்கள் தங்களுடைய முயற்சி பயனற்றதாக இருப்பதைப் பார்த்து யுத்தத்தை விட்டு ஓடுவதற்கு யத்தனித்தார்கள். இப்படிப் பயந்து ஓடுகிற அசுரர்களைக் கண்டு விருத்திரன் சிரித்துக்கொண்டு, "ஓ விப்ரசித்தியே, நமுசியே, புலோமாவே, ஓ மய, ஓ அநர்வாவே, ஹே சம்பா! நான் சொல்வதைக் கேளுங்கள். ஜனித்தவனுக்கு மரணம் நேரிடுவது நிச்சயமே. அது நிவர்த்திக்க முடியாதது. ஆனால் அந்த மரணத்தால் சுவர்க்கமும், கீர்த்தியும் கிடைக்குமானால் எவன்தான் அதனை விரும்பமாட்டான்? பிரம்மத் தியானத்தால் சரீரத்தைவிட்டு மரணமடைவதும், யுத்தத்தில் பயப்படாமல் யுத்தஞ்செய்து மரணத்தை அடைவதும் சாஸ்திர சம்மதமே" என்றான்.

# அத்தியாயம் 11

[முன் அத்தியாயத் தொடர்ச்சி]

1—27. அசுரர்கள் விருத்திரனுடைய தர்மமான வார்த்தையைக் கேட்டும், பயத்தால் விவேகமற்றவர்களாகித் திரும்பாமலே ஓடினார்கள். தேவர்களுக்கு நல்ல காலமானகை யால் அவர்களிடமிருந்து பயந்து ஓடும் அசுர சைனி யத்தைப் பார்த்து இந்திரனுக்குச் சத்துருவாகிய விருத் திரன் தேவர்களை யதட்டி, "ஓ தேவர்களே! யுத்தத்தில் பயந்து ஓடுகிறவர்களைத் துரத்துகிறவர்களாகிய உங்களால் என்ன பிரயோசனம்? பயந்து ஓடுகிறவர்களைச் சூரர்கள் கொல்லுவார்களா? அதனால் அவர்களுக்குச் சுவர்க்கம் கிடைக்குமா? ஓ அற்பர்களான தேவர்களே! உங்களுக்கு யுத்தஞ் செய்யவேண்டுமென்று விருப்பமும், மனத்தில் தைரியமும் இருக்குமானால் கிராம்மிய சுகத்தில் ஆசையில் லாமலுமிருந்தால் என் முன்பாகக் கணநேரம் நில்லுங்கள்" என்று கர்ஜித்தான். அந்தப் பேரொலியைக் கேட்டு உலகங் கள் மூர்ச்சை அடைந்தன. தேவர்களும் வஜ்ஜிரத்தால் அடிபட்டவர்கள் போல மூர்ச்சையடைந்து விழுந்தார்கள். அப்பொழுது அசுரன் சூலாயுதத்தை உயரத் தூக்கிக் கொண்டு மதங்கொண்ட யானையானது தாமரையை நாசஞ் செய்வதுபோலக் கண்களை மூடிக்கொண்டு, துன்பங்களைச் சகித்துக்கொண்டிருக்கும் தேவ சைனியத்தைக் காலால் உதைத்துப் பிடித்தான். அதனைப் பார்த்த மகேந்திரன் மிகவும் பொறுமைகொண்டு பெரிதான கதாயுதத்தை அந்த அசுரன் மீது பிரயோகித்தார். சகிக்க முடியாத அந்த ஆயுதத்தை அந்த அசுரன் இடது கையால் கிரகித்துக் கொண்டான். பின்பு அந்த அசுரன் மிகுந்த கோபத்துடன்

கதாயுதத்தால் இந்திரனுடைய வாகனமாகிய ஐராவதத்தின் தலையிலடித்தான். அதனை எல்லோரும் கொண்டாடினார்கள். வஜ்ஜிரத்தால் அடிபட்ட மலைபோல விருத்திரனுடைய கதையாலடிபட்ட ஐராவதமானது ரத்தத்தைக் கக்கிக்கொண்டு ஏழு விற்கடை தூரம் பின் சென்றது. அப்பொழுது அசுரன் ஐராவதம் அடிபட்டதால் வருத்தமடைந்திருக்கும் இந்திரனிடத்தில் ஆயுதத்தைப் பிரயோகிக்கவில்லை. மகேந்திரன் அமிருதப் பெருக்குள்ள தம்முடைய கையால் ஐராவதத்தைத் தொட்டு, அதனால் அதைச் சுகப்படுத்தினார். பிறகு யுத்தத்திற்காக எதிரில் நிற்பவனும், விசுவரூபனைக் கொன்றவருமான மகேந்திரனைப் பார்த்து அசுரன் அவர் செய்த காரியங்களை நினைத்து, சோகம், மோகம் இவைகளையடைந்து சிரித்துக்கொண்டு, "சத்துருவாகிய நீ தெய்வச் செயலாய் என் முன் வந்தாய். நீ பிராம்மணனைக் கொன்றவன்; ஆசாரியனைக் கொன்றவன்; பிரகோதரனைக் கொன்றவன்; ஓ அசத்துக்களுக்குட் சிறந்தவனே! சூலத்தால் உன்னுடைய கல்போன்ற ஹிருதயத்தைப் பிளந்து கடனில்லாதவனாக ஆகிறேன். (விசுவரூபனைக் கொன்றதற்குப் பதில் செய்கிறேன் என்று தாத்பரியம்.) பிரம்மத்தை அறிந்தவரும், பிராம்மணரும், உனக்கு ஆசாரியரும், பாபமற்றவருமான என் சகோதரனுடைய தலையைக் கத்தியால் நீ சுவர்க்கத்தை அடையவேண்டி வெட்டினவனல்லவா? நீ தயை, வெட்கம், சம்பத்து இவைகளற்றவன்; ராட்சதர்களாலும் நிந்திக்கக்கூடிய கர்மத்தைச் செய்பவன்; அப்படிப்பட்ட உன்னுடைய சரீரத்தைச் சூலத்தால் பிளக்கிறேன். அதனைக் கழுகுகள் சீக்கிரத்தில் புசிக்கப்போகின்றன. மேலும் உன்னைச் சார்ந்த மூடர்களான எவர்கள் அஸ்திரங்களால் அடிக்கிறார்களோ அவர்

களுடைய கழுத்தைச் சூலத்தால் பிளந்து பூதகணங்களைத் திருப்தி செய்துவைக்கிறேன்; அல்லது நீ வஜ்ஜிராயுதத்தால் என்னுடைய தலையை வெட்டுவாயானால் நான் கர்மபந்தத்தை விட்டு என்னுடைய உடலால் பூதங்களைத் திருப்தி செய்து பெரியோர்களால் அடையக்கூடிய உத்தம கதியை அடைவேன். ஓ இந்திரா! கிருபணனை யாசித்தால் அது எப்படிப் பயனைக் கொடுக்காதோ அதுபோல் உன்னுடைய வஜ்ஜிரமானது வியர்த்தமாகப் போய்விடுமென்று நீ சந்தேகப்படவேண்டாம். அது அமோகமான சஸ்திரம். எதிரில் நிற்கும் சத்துருவாகிய என் மீதில் ஏன் அதைப் பிரயோகிக்கவில்லை? மேலும் இந்த வஜ்ரமானது மகாவிஷ்ணுவின் தேஜஸினாலும், ததீசி மகரிஷியின் தவத்தினாலும் கூர்மையாக இருக்கிறது. அதைக்கொண்டு சத்துருவை அடிக்கும்படி மகாவிஷ்ணு உனக்கு ஆக்ஞை செய்தாரல்லவா? மகாவிஷ்ணு ஜயம், சம்பத்து, குணங்கள் இவைகளைக் கொடுக்கக்கூடியவர்; நான் சங்கர்ஷணர் சொன்னபடி அவருடைய பாதாரவிந்தத்தில் மனத்தைச் செலுத்தி உன்னுடைய வஜ்ரத்தின் வேகத்தால் கிராம்பியமான ஆசைகளை ஒழித்துச் சரீரத்தை விட்டு யோகிகளாலடையக்கூடிய உத்தம கதியை அடைகிறேன். பகவான் தம்மிடத்தில் ஏகாந்த பக்திசெய்த பக்தர்களுக்குச் சுவர்க்கம், பூமி, பாதாளம் இவைகளிலுள்ள ஐசுவரியத்தைக் கொடுக்கிறதில்லை. ஏனென்றால் அவைகளால் விரோதம், பயம், மனோவிசாரம், மதம், யுத்தம், துக்கம், சிரமம் இவைகள் உண்டாகின்றன. ஓ மகேந்திர! என்னுடைய நாதனாகிய பகவான் தர்மம், அர்த்தம், காமம் இவைகளில் ஆசைப்படாமலிருக்கும்படி செய்வார். அதனால் பகவானுடைய பிரசாதமேற்பட்டதென்று ஊகிக்கவேண்டும். அது மற்றவர்களால் அடையமுடியாதது.

(உனக்கு பகவானுடைய பிரசாதம் நன்றாக உண்டாகாததனால் சம்பத்துக்கள் கிடைத்திருக்கின்றன என்று தாத்பரியம்) ஓ பகவன் நாராயண! உம்முடைய பாதாரவிந்தத்தையே சரணமடைந்த தாஸர்களுக்கு நான் மிகவும் தாஸனாக இருக்கிறேன். பிராணநாதனாகிய உம்முடைய குணங்களை என்னுடைய மன்மானது நினைக்கட்டும். வாக்கானது அவைகளையே உச்சரிக்கட்டும். சரீரமானது உம்மையே பூஜிக்கட்டும். ஓ பகவன்! உம்மைவிட்டுப் பிரிந்து துருவ பதத்தையாவது, பிரம்மலோகத்தையாவது, எல்லாப் பூமிக்கும் அரசனாயிருப்பதையாவது, யோக சித்திகளையாவது, மோட்சத்தையாவது நான் விரும்பேன். தாமரை மலர் போன்ற கண்களுள்ளவரே! இறக்கை முளையாத பறவைகள் தாயை அபேட்சிப்பது போலவும், தும்பினால் கட்டப்பட்ட இளங்கன்றுகள் பாலை அபேட்சிப்பது போலவும், மன்மதனால் பிடிக்கப்பட்ட ஸ்திரீயானவள் தேசாந்திரம் போன புருஷனை எதிர்பார்ப்பது போலவும் என்னுடைய மனமானது உம்மைப் பார்க்க விரும்புகிறது. ஓ நாத! உம்முடைய மாயையால் ஸம்ஸார சக்கரத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் எனக்கு உத்தம சுலோகர்களாகிய மகான்களிடத்தில் சிநேகம் உண்டாகவேண்டும். புத்திரன், ஸ்திரீ, பணம், வீடு இவைகளிலும், இவைகளில் ஆசைகொண்டவர்களிடத்திலும் எனக்குப் பிரியம் திரும்பவும் உண்டாகவேண்டாம்" என்றான்.

# அத்தியாயம் 12

## விருத்திர வதம்

ஓ பரீக்ஷித் மகாராஜரே! விருத்திராசுரன், சத்ருஜயிப் பதைக் காட்டிலும் மரணமே மேலானது என்று நினைத்து சரீரத்தைவிட விரும்பி, சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு மகேந்திரனை எதிர்த்தான். அது பிரளய ஜலத்தில் கைடபன் என்ற அசுரன் ஸ்ரீ மகாவிஷ்ணுவை எதிர்த்தது போல இருந்தது. பின்பு அசுரன் பிரளயகால அக்னி போல் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் சூலத்தைச் சுழற்றி மகேந்திரன் மீது பிரயோகித்தான். 'அட பாபியே! இதனால் நீ அடிக்கப் பட்டாய்' என்றும் கோபத்துடன் உரக்கச் சொன்னான். பிறகு மகேந்திரன் கிரகம்போலவும், கொள்ளிபோலவும் ஆகாசத்தில் வரும் அந்தச் சூலத்தைப் பார்த்துப் பயப் படாமல் நூறு முனைகளுள்ள வஜ்ராயுதத்தால் அந்த சூலத்தையும், வாசுகியினுடைய உடல் போன்ற அவனுடைய கையையும் வெட்டினார். பின்பு அசுரன் ஒரு கையினால் பரிகம் என்ற ஆயுதத்தை எடுத்து, பரபரப்புடன் தேவேந்திரனுடைய கன்னத்தில் அடித்ததுமன்றி ஐராவதத்தையும் அடித்தான். அதனால் மகேந்திரனின் கையிலிருந்த வஜ்ராயுதம் கீழே விழுந்தது. அந்த அற்புதமான அசுரனுடைய பராக்கிரமத்தை சித்தர்களும், சாரணர்களும், தேவர்களும், அசுரர்களும் கொண்டாடினார்கள். ஆனால் இந்திரனுக்கு நேர்ந்த சங்கடத்தைப் பார்த்து 'ஹா ஹா' என்று வருத்தத்தையும் அடைந்தார்கள். இந்திரன் வெட்கமடைந்து கீழே விழுந்த வஜ்ரத்தைத் திரும்பவும் எடுத்துக்கொள்ள வில்லை. அவனை நோக்கி அசுரன், "ஓ மகேந்திர! வஜ்ரத்தை எடுத்துக்கொள்ளும்; சத்ருவைக் கொல்லும்;

துக்கப்படுவதற்கு இது காலமல்ல; சத்துருக்களைக் கொல்ல விரும்பி யுத்தம் செய்பவர்களான தேகாபிமானமுள்ள பிராகிருத ஜனங்களுக்கு எப்பொழுதும் ஜயமே வருமென்ற நிச்சயமில்லை. ஆனால் உத்பத்தி, லயம், பரிபாலனம் ஆகிய இவைகளுக்கு அதிபதியும், எல்லாவற்றையும் அறிந்தவரும், எல்லாவற்றிற்கும் முந்தினவரும், புராண புருஷருமாகிய மகாவிஷ்ணு ஒருவரே எப்பொழுதும் ஜயத்தை அடைகிறார். லோகபாலர்கள் முதலிய எல்லோரும் அந்த பகவானுக்கு சுவாதீனர்களாகக் கர்மங்களைச் செய்கின்றார்கள். மேலும், பறவைகள் வலையால் கட்டப்படுவதுபோல் ஜனங்கள் காலத்திற்கு வசப்பட்டிருப்பதால் ஜயத்திற்கும் அபஜயத்திற்கும் அந்தக் காலரூபியான பகவானே காரணம். தேஜஸ், மனோபலம், தேகபலம், பிராணன், அமிருதம், மிருத்யு இவைகளுக்கு அந்தப் பகவானே காரணமென்பதை ஜனங்கள் தெரிந்துகொள்ளாமல் மூடர்களாகத் தங்களையே காரணமாக நினைக்கிறார்கள். கட்டையால் செய்யப்பட்ட பெண் பொம்மை போலவும், யந்திரத்தால் சுற்றப்பட்ட மிருகம்போலவும் பிராணிகள் பரமேசுவரனுக்கு சுவாதீனப்பட்டவர்களாக இருக்கிறார்கள் புருஷன், பிரகிருதி, மகத்தத்வம், அகங்காரம், மகாபூதங்கள், இந்திரியங்கள், மனது ஆகிய இவைகள் சிருஷ்டி முதலிய காரியங்களை அந்தப் பரமேசுவரனுடைய அனுக்ரகத்தாலேயே செய்கின்றன. இதனுடைய உண்மையை அறியாதவன் அசமர்த்தனாகிய தன்னை சுவதந்திரனாக நினைக்கிறான். உண்மையில் அந்தப் பகவானே பிராணிகளைக்கொண்டு பிராணிகளை சிருஷ்டிக்கிறார்; பிராணிகளைக்கொண்டு பிராணிகளைக் கொல்லுகிறார் மேலும் ஆயுள், சம்பத், கீர்த்தி, ஐசுவரியம் இவைகள் எந்தக் காலத்தில் எவனுக்கு, எவைகள் கிடைக்க

வேண்டுமோ அவன் அவைகளை விரும்பாவிடினும் அந்த அந்தக் காலத்தில் அவனுக்கு அவை கிடைக்கின்றன. அப்படியே அபகீர்த்தி முதலியவைகளும் அந்த அந்தக் காலத்தில் அவரவர்களை அடைகின்றன. ஆனதால் அபகீர்த்தி, கீர்த்தி, ஜயம், அபஜயம், சுகம், துக்கம், மரணம், பிழைத்திருப்பது இவைகளில் சம புத்தியுள்ளவனாக இருக்கவேண்டும். சத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் பிரகிருதியைச் சார்ந்தவைகள்; ஆத்மாவினுடையவைகளல்ல. ஆத்மா சாட்சியாக இருப்பவர் என்று எவன் தெரிந்துகொள்ளுகிறானோ அவனுக்குக் கர்மபந்தம் இல்லை. ஓ இந்திர! என்னுடைய ஆயுதங்களும், கையும் உன்னால் வெட்டப்பட்டன. அப்படியும் நான் சக்தியுள்ளவரையில் உன்னைக் கொல்வதற்கு முயற்சிக்கிறேனல்லவா! இந்த யுத்தமானது சொக்கட்டானாட்டத்திற்குச் சமானம். வாகனங்களே சொக்கட்டான் பலகை. பாணங்களே காய்கள். பிராணனே பந்தயத் திரவ்யம். இந்த விளையாட்டில் இன்னாருக்கு ஜயம், இன்னானுக்கு அபஜயம் என்று அறியமுடியாது" என்றான்.

18—35. அதனைக் கேட்ட மஹேந்திரன் அசுரன் கபடமற்றுப் பேசினதற்காக சந்தோஷித்து வஜ்ராயுதத்தை எடுத்துக்கொண்டு கர்வமற்றவனாகிப் புன்சிரிப்புடன், "அட அசுர! நீ சித்தனாய்விட்டாய். உனக்கு இம்மாதிரியான நல்ல எண்ணம் உண்டானது மிகவும் வியக்கத்தக்கது. எல்லாவற்றிற்கும் அதிபதியாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவை மூன்று கரணங்களாலும் சேவித்தாய். ஜனங்களை மோகிக்கச் செய்யும் விஷ்ணு சம்பந்தமான மாயையை நீ தாண்டினாய். அசுரத்தன்மையை விட்டு மகாபுருஷனாய்விட்டாய். ரஜோகுண சுபாவமுள்ள உனக்கு

பகவானும், சகல சுரு பியுமான ஸ்ரீ வாசுதேவரிடத்தில் திருடமான பக்தி உண்டானது மிகவும் ஆச்சரியப்படக் கூடியது. அமிருத சமுத்திரத்தில் விளையாடுகிறவனுக்கு அற்ப ஜலங்களால் எப்படிப் பிரயோசனமில்லையோ அப்படி மோட்சத்திற்கதிபதியான பகவானிடத்தில் பக்தி செய்பவனுக்கு சுவர்க்கம் முதலியவைகளால் என்ன பிரயோசனம்?" என்று சொல்லி பின்பு இந்திரன், விருத்ரன் இருவர்களும் யுத்தஞ் செய்ய ஆரம்பித்தார்கள். அப்பொழுது அசுரன் இரும்பினால் செய்யப்பட்ட பரிகம் என்ற ஆயுதத்தை இடது கையால் எடுத்து, அதனைச் சுழற்றி இந்திரன்மீது பிரயோகித்தான். மகேந்திரன் வஜ்ராயுதத்தால் அந்தப் பரிகத்தை அடித்து ஒடித்ததுமன்றி அசுரனுடைய மற்றொரு கையையும் வெட்டினார். அப்பொழுது அசுரனுக்கு இரண்டு கையும் வெட்டப்பட்டதனால் ரத்தமானது பெருகியது. அப்படிப்பட்ட அசுரன் முன்காலத்தில் இந்திரனால் இறக்கைகள் வெட்டப்பட்டு ஆகாசத்திலிருந்து விழுந்த மலைபோல் பிரகாசித்தான். பின்பு அந்த அசுரன் கீழுதட்டைப் பூமியிலும், மேலுதட்டை ஆகாயத்திலும் வைத்துக்கொண்டு ஆகாயம்போல் கம்பீரமான முகமுள்ளவனாகி, மிருத்யுவினுடையவை போன்ற சிங்கப்பற்களால் மூன்று லோகத்தையும் விழுங்குகிறவன்போலப் பருத்த சரீரத்துடன் காலால் சஞ்சரிக்கும் மலைபோலப் பூமியை அசைத்துக்கொண்டு மகேந்திரனிடம் வந்து ஐராவதத்துடன் அவரை விழுங்கினான். அது பெரிதாகிய சர்ப்பம் பறவையை விழுங்கினதுபோலிருந்தது. அதனைக் கண்டு பிரஜாபதிகள், தேவர்கள், மகரிஷிகள் முதலிய எல்லோரும் 'கஷ்டம், கஷ்டம்' என்று கதறினார்கள். அசுரனால் விழுங்கப்பட்ட மகேந்திரன் ஸ்ரீ நாராயணனுடைய கவசத்தைத் தரித்

திருந்தபடியாலும், யோக பலத்தாலும், மாயா பலத்தாலும் மரணத்தை அடையவில்லை. ஆனால் அவர் வஜ்ராயுதத்தால் அவனுடைய வயிற்றைப் பிளந்து வெளியில் வந்து மலையின் சிகரம்போன்ற அவனுடைய தலையை வெட்டினார். மிகுந்த வேகமுள்ள வஜ்ரமானது அவனுடைய தலையை நான்கு பக்கமும் வெட்டி, முன்னூற்று அறுபது தினங்களுள்ளதும், இரண்டு அயனங்களுள்ளதுமான ஸம்வத்ஸர சக்ரத்தில் விருத்திரனைக் கொல்லக்கூடிய தினத்தில் அவனுடைய தலையை வெட்டித் தள்ளியது. அப்பொழுது ஆகாயத்தில் தேவ துந்துபிகள் முழங்கின. கந்தர்வர்களும், மகரிஷிகளும் விருத்திரனைக் கொன்ற மகேந்திரனை அவருடைய பராக்கிரமங்களைக் குறிப்பிடும் மந்திரங்களைக்கொண்டு ஸ்தோத்திரம் செய்ததுமன்றிப் புஷ்பங்களையும் வர்ஷித்தார்கள். அப்பொழுது சகல லோகங்களும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது அசுரனுடைய தேகத்திலிருந்து கிளம்பிய தேஜஸ்ஸானது பகவானை அடைந்தது.

---

## அத்தியாயம் 13

### பிரம்மஹத்யா தோஷமுள்ள இந்திரன் விஷ்ணுவினால் காப்பாற்றப்பட்டது

விருத்திரன் அடிபட்டபிறகு சகல லோகத்தினரும் சந்தோஷித்தார்கள். தேவர்கள், மகரிஷிகள், பித்ருக்கள், பூதங்கள், தேவர்களைச் சார்ந்த தைத்யர்கள், பிரம்மா, பரமசிவன் முதலியவர்கள் இந்திரனுக்குச் சொல்லிக் கொள்ளாமலேயே தங்கள் தங்கள் லோகம் சென்றார்கள். ஆனால் இந்திரன் மாத்திரம் சந்தோஷப்படவில்லை என்று சுகர் சொல்லக் கேட்ட அரசர், 'ஓ மகரிஷியே! தேவர்கள்

முதலிய எல்லோருக்கும் சந்தோஷத்தை உண்டுபண்ணிய விருத்திரவதமானது மகேந்திரனுக்கு ஏன் சந்தோஷத்தை உண்டுபண்ணவில்லை? அதனைச் சொல்லவேண்டு'மென்று கேட்டார்.

4—15. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "விருத்திரனுடைய பராக்கிரமத்தால் பயந்த தேவர்களும், மகரிஷிகளும் அவனைக் கொல்லவேண்டுமென்று மகேந்திரனைக் கேட்டுக்கொண்டார்கள். மகேந்திரன் பிராம்மணனைக் கொல்வதில் இஷ்டமில்லாதவராக அவர்களை நோக்கி, "விசுவரூபனைக் கொன்றதாலுண்டாகிய தோஷத்தை ஸ்திரீ, பூமி, ஜலம், மரம் ஆகிய இவர்கள் பிரித்து எடுத்துக்கொண்டார்கள். விருத்திரனைக் கொன்றதாலுண்டாகிய தோஷத்தை எவ்விடத்தில் நிவர்த்திப்பேன்" என்று சொன்னார். அதனைக் கேட்ட மகரிஷிகள், 'ஓ மகேந்திர! நீர் பயப்படவேண்டாம். உமக்கு அசுவமேத யாகம் செய்துவைக்கிறோம். எவன் அசுவமேதம் செய்து பரமாத்மாவைப் பூஜிக்கிறானோ அவன் ஜகத்தை நாசஞ்செய்தவனானாலும் சுத்தனாவான். மேலும் பிராம்மணனைக் கொன்றவன், பிதாவைக் கொன்றவன், பசுவைக் கொன்றவன், மாதாவைக் கொன்றவன், ஆசாரியனைக் கொன்றவன், நாய் மாம்சத்தைப் புசிப்பவன், சண்டாளன் ஆகிய யாரானாலும் எந்தப் பகவானுடைய நாமத்தையுச்சரித்தால் சுத்தர்களாவார்களோ அந்தப் பகவானை நீர் சிரத்தையுடன் எங்களால் செய்யப்படும் அசுவமேதமென்னும் பெரிதான யாகத்தால் பூஜித்தீராயாகில் பிராம்மணர்களுடன் கூடிய இந்த ஜகத்தைக் கொன்றாலும் நீர் சுத்தராகிவிடுவீர். துஷ்டனைச் சிட்சிப்பதால் உமக்கு தோஷம் ஏற்படுமா'என்று சமாதானஞ் சொன்னார்கள். மகேந்திரன் விருத்திரனைக் கொன்றார். பின்பு அவருக்கு பிரம்மஹத்யா தோஷம்

நேர்ந்தது. அதனல் இந்திரன் சத்துருவை ஜயித்தும் சந்தோஷத்தை அடையவில்லை. புருஷன் குணசாலியானு லும், ஐசுவரியமுள்ளவனுனலும் பிறரால் நிந்திக்கக்கூடிய தோஷம் உள்ளவனுனல் அந்த ஐசுவரியங்கள் அவனுக்கு சுகத்தைக் கொடுக்கிறதில்லை. அப்பொழுது அந்தப் பிரம்ம ஹத்தியானது இந்திரனைப் பின் தொடர்ந்தது. அது சண் டாள ஸ்திரீபோல் இருந்தது; கிழத்தனத்தால் நடுக்கமுள்ள சரீரமுள்ளது; க்ஷயரோகமுள்ளது; சிவந்த வஸ்திரமுள் ளது; நரைத்த மயிர்களை விரித்துக்கொண்டிருக்கிறது; நில் நில் என்று சொல்லிக்கொண்டிருக்கிறது; அது மத்ஸ்ய கந்தமுள்ளதாயிருப்பதால் மார்க்கமெல்லாம் துர்நாற்றம் உண்டாகிறது. மகேந்திரன் அதனல் துரத்தப்பட்டு எல்லா திக்குகளிலும் அலைந்து ஈசான திக்கை நோக்கிச் சென்று மானஸ ஸரஸில் தாமரைத் தண்டின் நூலில் வசித்தார். அவர் அக்கினியைத் தூதராகக் கொண்டவராகையால் ஜலத் தில் வசிக்கும் வரையில் யக்ஞபாகம் அவருக்குக் கிடைக்க வில்லை. இப்படி, பிரும்மஹத்தியா தோஷத்திலிருந்து எப்பொழுது சுத்தனுவேன் என்று யோசித்துக்கொண்டே ஆயிர வருஷங்களைக் கழித்தார்.

16—23. அந்தக் காலத்தில் வித்தை, தபசு, யோக பலம் இவைகளுடைய மகிமையுள்ள நகுஷனென்ற அரசன் மகேந்திரனுக இருந்து சுவர்க்கத்தைப் பரிபாலித்தார். அவர் ஐசுவரிய மதங்கொண்டு இந்திராணியிடம் ஆசை கொண்டதால் மலைப் பாம்பாக ஆனர். பிறகு இந்திரன் வேதவாக்கியத்தால் அழைக்கப்பட்டு, பகவானைத் தியானஞ் செய்ததால் பாபமற்றவராகி சுவர்க்கத்திற்கு வந்தார். விஷ்ணுவின் சக்தியாலும் ஈசான திக்கிற்கு அதிபதியான

ருத்திரனாலும் காப்பாற்றப்பட்ட அந்த மகேந்திரனை ஆயிரம் வருஷங்களிலும் அந்தத் தோஷமானது உபத்திரவிக்கவில்லை. பின்பு பிரம்மரிஷிகள் மகேந்திரனுக்குத் தீட்சைசெய்வித்து அசுவமேதத்தை ஆரம்பித்தார்கள். அதனால் சகல தேவ சுரூபியாகியாகிய பகவான் பூஜிக்கப்பட்டு, சந்தோஷமடைந்தார். உடனே விருத்திரனுடைய வதத்தால் ஏற்பட்ட பாபமானது மிருந்தாலும் அந்தப் பகவதாராதனத்தால் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கியது. மரீசி முதலிய மகரிஷிகள் விதிப்படி அசுவமேதத்தைச் செய்து, புராண புருஷனைப் பூஜித்து, மகேந்திரனுடைய தோஷத்தை விலக்கினார்கள். இந்த யாகமானது சகல பாபங்களையும் போக்கடிக்கக்கூடியது; பகவானிடத்தில் பக்தியை உண்டு பண்ணக்கூடியது; பக்த ஜனங்களுடைய மகிமையுள்ளதும், இந்திரன் சத்தனுகியதுமான இதனை எல்லோரும், எப்பொழுதும் படிக்கவேண்டும். ஒவ்வொரு பர்வத்திலும் இந்த இதிகாசத்தைக் கேட்கவேண்டும். இதனால் பணம், கீர்த்தி, பாப நிவர்த்தி, சத்ரு ஜயம், க்ஷேமம், தீர்க்கமான ஆயுள் இவைகள் விருத்தியடையும்.

## அத்தியாயம் 14

### விருத்திரனுடைய வரலாறு

அதனைக் கேட்ட அரசன் மகரிஷியை நோக்கி, "ஓ பிராம்மண! ரஜோ குணம், தமோ குணம் ஆகிய இவைகளின் சுபாவமுள்ள மிக்க பாபியான விருத்திரனுக்குப் பகவானாகிய ஸ்ரீமந் நாராயணரிடத்தில் திருடமான பக்தி உண்டாவதற்கு என்ன காரணம்? சத்துவ குண சுரூபி

களான தேவர்களுக்கும், சுத்த சித்தமுள்ள மகரிஷிகளுக்கும் ஸ்ரீ பகவானுடைய பாதத்தில் பெரும்பாலும் பக்தி உண்டாகிறதில்லையே. பூமியின் தூள்கள் எப்படிக் கணக்கிடக்கூடாதவைகளோ, அப்படியே ஜனங்கள் அநேகர்; அவர்களில் க்ஷேம மார்க்கத்தை விரும்புவோர் மிகவும் சொற்பமானவர்கள்; ஓ பிராம்மணோத்தம! சில ஜனங்களே மோட்சத்தை அடையவேண்டுமென்று விரும்புகிறார்கள்; அப்படி விரும்பிய அநேகர்களுக்குட் சிலருக்கே வைராக்கியம் உண்டாகிறது; அப்படி வைராக்கியமடைந்த அநேகர்களுக்குட் சிலரே ஆத்ம தத்துவத்தைத் தெரிந்துகொள்ளுகிறார்கள். முக்தர்களான கோடி ஜனங்களுக்குள் ஸ்ரீ நாராயணனையே தியானஞ்செய்துகொண்டு அவரிடத்திலேயே ஆசக்தியுள்ளவனாக இருப்பவன் மிகவும் அரிது. அப்படியிருக்க, சகல உலகங்களையும் உபத்திரவிப்பவனாகிய விருத்திரனுக்கு யுத்தகாலத்தில் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் திடமான பக்தி உண்டான விஷயத்தில் எனக்கு மிகுந்த சந்தேகமிருக்கிறது. அதனைச் சொல்லவேண்டும். அந்த அசுரனுடைய பராக்கிரமத்தால் மகேந்திரனும் சந்தோஷித்தாரோ'' என்று கேட்டார்.

8—13. அதனைக் கேட்ட வியாஸ புத்திரராகிய சுகர் கேள்வியைப் பற்றிச் சிலாகித்து, சிரத்தையுள்ள அரசனை நோக்கி, "ஓ மகாராஜ! ஒரு இதிகாசத்தைச் சொல்லுகிறேன். அதனைச் சாவதானராகக் கேளும். நான் வியாசரிடமிருந்தும், நாரதரிடமிருந்தும், தேவலரிடமிருந்தும் தெரிந்துகொண்டேன். சூரசேனமென்ற தேசத்தில் சித்ரகேது என்ற ஓர் அரசனிருந்தார். அவருக்குப் பூமிதேவி சகல வஸ்துக்களையும் உண்டுபண்ணிக்கொண்டிருந்தாள்.

அவருக்குக் கோடி பாரிகைகள் இருந்தார்கள். அரசன் யுவாவாக இருந்தும் அவர்களிடத்தில் அரசனுக்குப் புத்திரன் உண்டாகவில்லை. அரசன் அழகு, ஔதாரியம், வயது, குலம், வித்தை, ஐசுவரியம், காந்தி ஆகிய இவைகளுள்ளவரானாலும் புத்திரனில்லாததனால் மிக்க கவலை அடைந்தார். அவர் சகல சம்பத்துக்களிலும் அநேக பாரிகைகளிடத்திலும், ராஜ்ஜியத்திலும் பிரியப்படவில்லை. இப்படியிருக்கையில் ஒரு நாள் அங்கிரஸ் என்ற மகரிஷி லோகசஞ்சாரம் செய்துகொண்டு தெய்வச் செயலாக அந்த அரசனுடைய அரண்மனைக்கு வந்தார். அரசன் மகரிஷியை சாஸ்திர முறைப்படி பூஜித்து ஆதித்தியஞ்செய்து மகரிஷி ஆசனத்தில் உட்கார்ந்த பிறகு வணக்கத்துடன் தலை குனிந்து தாம் பூமியில் உட்கார்ந்தார். அப்பொழுது மகரிஷி சித்ரகேதுவை நோக்கி, 'க்ஷேமமா? பிரகிருதிகள் க்ஷேமமாய் இருக்கிறார்களா? (யஜமானன், மந்திரி, தேசம், கோட்டை, பொக்கிஷம், தண்டம், மித்திரம் ஆகிய ஏழும் பிரகிருதி எனப்படுகின்றன.) மேலும், ஜீவன் மகத் தத்துவம் முதலிய ஏழு பிரகிருதிகளால் காப்பாற்றப் படுவதுபோல் அரசனும் மேற்காட்டிய பிரகிருதிகளால் காப்பாற்றப்படுகிறான். ஆனதால் அவைகளை அனுசரித்திருக்கும் அரசன் க்ஷேமத்தை அடைவான். பிரகிருதிகளும் அரசனை அநுவர்த்தித்தால்தான் சம்பத்தை அடைவார்கள். ஓ மகாராஜ! பிரஜைகளும், மந்திரிகளும், மித்திரர்களும், பிரதானர்களும், பட்டணத்திலிருப்பவர்களும், தேசவாசிகளும், அரசர்களும், புத்திரர்களும் உம்முடைய உத்தரவின்படி நடக்கிறார்களா? எவனுக்கு மனது வசப்பட்டிருக்கிறதோ அவனுக்கு மேற்சொல்லியவர்களும் சுவாதீனப்படுவார்கள். சகல உலகத்தினரும் அவனைப் பூஜிப்பார்கள். நீர் இப்பொழுது மனத்தால் பிரீதியில்லாமலிருக்

கிறீரா? அல்லது பிறரால் பிரியமில்லாமலிருக்கிறீரா? சுபாவத்தில் இப்படி இருக்கிறீரா? உம்முடைய முகத்தைப் பார்க்கும்பொழுது கவலையுள்ளவராக இருக்கிறீர் என்று நினைக்கிறேன். அதனைச் சொல்லும்" என்றார்.

24—27. அதனைக் கேட்ட சித்திரகேது, "ஓ பகவன்! தவம், ஞானம், சமாதி இவைகளால் சுத்தர்களான யோகிகளுக்குப் பிராணிகளுடைய மனத்திலும் வெளியிலுமிருக்கிற விஷயங்கள் நன்றாகத் தெரியும். ஆனதால் என்னுடைய அபிப்பிராயத்தை முற்றிலும் அறிந்தவரான நீர் கேட்பதால் அதனைச் சொல்லுகிறேன். லோகபாலர்களாலும் பிரார்த்திக்கக்கூடிய ராஜ்ய சம்பத்தானது எனக்கு இருந்தும் அபுத்திரனாக இருப்பதால் அவைகள் எனக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணவில்லை. பசி தாகத்தால் வருத்தப்பட்டவனுக்குச் சந்தனம், புஷ்பம் இவைகளால் சந்தோஷமுண்டாகுமா? ஆனதால் பிதிருக்களுடன் நான் நரகத்தை அடையாமலிருப்பதற்காகப் புத்திரன் உண்டாகும்படி அனுக்கிரகியும்" என்று கேட்டுக்கொண்டார்.

28—30. இதனைக் கேட்ட பிரம்ம புத்திரரான அந்த அங்கிரஸ் மகரிஷி துவஷ்டாவைத் தேவதையாகக்கொண்ட சருவைப் பாகஞ்செய்து துவஷ்டாவைப் பூஜித்தார். மேலும், அவர் அரசனுடைய பத்தினிகளுக்குள் மூத்தவளும், சிறந்தவளுமான கிருதத்யுதி என்பவளுக்கு யக்ஞ சேஷத்தைக் கொடுத்தார். பிறகு அரசனை நோக்கி, "ஓ மகாராஜ! சந்தோஷத்தையும் துக்கத்தையும் கொடுக்கக்கூடிய ஒரு புத்திரன் உண்டாவான்" என்று சொல்லித் தமது இஷ்டப்படி சென்றார்.

31—62 அந்தக் கிருதத்யுதி என்பவள் அந்த யக்ஞ சேஷத்தைப் புசித்ததால் கர்ப்பிணியானாள். அது கிருத்திகா

தேவி அக்நியிடமிருந்து கர்ப்பத்தைத் தரித்ததுபோலிருந்தது. மேலும், அவளுடைய கர்ப்பமானது ஒவ்வொரு நாளும் சுக்லபக்ஷ சந்திரன்போல விருத்தியடைந்தது. பின்பு பிரசவகாலம் நேர்ந்தபொழுது அந்த கிருதத்யுதி குமாரனைப் பெற்றாள். அப்பொழுது சூரசேன தேசத்தில் வசிக்கும் ஜனங்கள் அதனைக் கேட்டு மிகவும் சந்தோஷம் அடைந்தார்கள். அரசன் மிகுந்த சந்தோஷத்துடன் ஸ்நானஞ் செய்து சுத்தனாக அலங்காரங்கள் செய்துகொண்டு பிராம்மணர்களைக்கொண்டு ஸ்வஸ்திவாசனம் செய்வித்து ஜாத கர்மம் செய்தார். மேலுமவர் பிராம்மணர்களுக்குத் தங்கம், வெள்ளி, வஸ்திரம், ஆபரணம், கிராமங்கள், யானைகள், குதிரைகள், ஆறு அற்புதம், பசுக்கள் ஆகிய இவைகளைக் கொடுத்ததுமன்றி அவர்களுக்கு இஷ்டமான வஸ்துக்களை வருணன் மழை பெய்வதுபோல் வருஷித்தார். பின்னும் அவர் குமாரனுக்குக் கீர்த்தி, தீர்க்கமான ஆயுள், சம்பத்து இவைகளை உண்டுபண்ணக்கூடியவைகளையே செய்துவந்தார். தரித்திரனுக்கு மிக்க சிரமப்பட்டுக் கிடைத்த பணத்தில் எப்படிப் பிரீதியிருக்குமோ, அப்படி சிரமப்பட்டுப் பிறந்த அந்தப் புத்திரனிடத்தில் அந்த அரசனுக்கு ஒவ்வொரு நாளும் பிரீதி விருத்தியடைந்தது. மாதாவான கிருதத்யுதிக்கு இரண்டு மடங்கு அதிகப் பிரீதியுண்டாயிற்று. மற்ற ஸபத்னிகளுக்கு தங்களுக்குப் புத்திரனில்லாததனால் விசேஷ வருத்தமுண்டாயிற்று. அரசரும், புத்திரனுள்ளவளான கிருதத்யுதியினிடத்தில் மிகவும் பிரியமுள்ளவராக இருந்தார்; மற்ற பத்னிகளிடத்தில் பிரியப்படவில்லை. அப்பொழுது மற்ற ஸ்திரீகள் தங்களுக்குப் புத்திரனில்லாதிருப்பதாலும், அரசன் தங்களிடத்தில் பிரியப்படாதிருப்பதாலும் மிகவும் வருத்தப்பட்டுத் தங்களுக்குள் பின்வருமாறு

யோசிக்கலானார்கள்: "புத்திரனில்லாதவளும், அதனால் மிக்க பாபியும், பர்த்தாவினுடைய மனத்திற்குப் பிடிக்காதவளும், நல்ல பிரஜைகளுள்ள ஸபத்னிகளால் வேலைக்காரியைப்போல் அவமதிக்கப்பட்டவளுமான ஸ்திரீயை நிந்திக்க வேண்டும். ஆனால் தாசிகள் யசமானியான ஸ்திரீயைச் சேவிக்கவேண்டியதே யொழிய அவர்களுக்கு வருத்தமேது? வேலைக்காரியின் வேலைக்காரி எப்படியோ அதுபோல நாங்கள் எல்லோரும் அதிருஷ்டமில்லாதவர்கள்" என்று விசேஷமாகத் துக்கித்து கிருதத்யுதியின் புத்திரனிடத்தில் மிக்க விரோதத்தை அடைந்தார்கள். அந்த விரோதத்தால் விவேகமில்லாதவர்களாகி அந்தக் குழந்தைக்கு விஷத்தைக் கொடுத்தார்கள். கிருதத்யுதியானவள் ஸபத்னிகளால் செய்யப்பட்டதை அறியாதவளாகி, குழந்தை தூங்குகிறான் என்றே நினைத்திருந்தாள். பிறகு சிறிது நேரம் கழித்துக் குழந்தையை எடுத்துவரும்படி தன்னுடைய வேலைக்காரியை ஆக்ஞாபித்தாள். அவள் குழந்தையின் சமீபம் சென்று பார்க்கும்பொழுது அக்குழந்தையின் கண்கள் வெளியில் வந்திருந்தன. மேலும் அந்தப் பாலன் பிராணன், இந்திரியம், ஜீவன் இவைகளால் விடப்பட்டவனாயிருந்தான். அதனைக் கண்ட அவள் பூமியில் விழுந்து புரண்டு அழுதாள். அதனைக் கேட்டு கிருதத்யுதியானவள் இரு கைகளால மார்பில் அடித்துக்கொண்டு குழந்தையின் சமீபம் சென்று பூமியில் விழுந்து மூர்ச்சை அடைந்தாள். இப்படித் தலைமயிரை விரித்துக்கொண்டு துக்கப்படும் ராஜ பத்னியைப் பார்த்து அரசனுடைய அந்தப்புரத்தில் வசிக்கும் புருஷர்களும, ஸ்திரீகளும் சம துக்கமுள்ளவர்களாக அழுதார்கள். அந்த ஸபத்னிகளும் ஒன்றையும் அறியாதவர்கள்போலத் துக்கித்தார்கள். அரசர் தன்னுடைய புத்திரனுக்கு

நேர்ந்த மரணத்தைக் கேட்டுக் கண் தெரியாதவராகி வழியில் விழுந்துகொண்டு மூர்ச்சையடைந்து பிரகிருதிகளாலும், பிராம்மணர்களாலும் சூழப்பட்டு, வஸ்திரம் அவிழ்ந்தவராகித் தலைமயிரை விரித்துக்கொண்டு அந்தப் பாலனுக்குச் சமீபத்தில் வந்து விழுந்தார். பின்னுமவர் தீர்க்கமாயும் உஷ்ணமாயும் பெருமூச்சுவிட்டுக் கண்ணீரால் கண்டம் அடைத்துப் பேசமுடியாதவராக இருந்தார். அப்பொழுது கிருதத்யுதியானவள் தன்னுடைய புருஷன் துக்கிப்பதையும் குலத்திற்கு ஒரே சந்ததியான புத்திரன் மரணமடைந்ததையும் ஜனங்கள் துக்கிப்பதையும் பார்த்துக் கண்ணீரால் இரண்டு ஸ்தனங்களையும் நனைத்துக்கொண்டு விரித்த தலைமயிர்களுடன் குரரியென்ற பட்சியைப்போலப் பலவகையாகப் பிரலாபித்தாள். எப்படியென்றால், "ஓ பிரம்மதேவரே! நீர் மிகவும் மூடர்! உம்முடைய சிருஷ்டிக்கு விரோதமானதைச் செய்கிறீர். வயது சென்றவர்கள் ஜீவித்திருக்கும்போது சிறுவன் மரணத்தை அடைகிறான். இம்மாதிரியான விபரீதத்தை நீர் செய்வதால் உலகத்திற்கு நீர் சத்துருவேயாம். 'நான் ஜீவர்களுடைய கர்மத்தை அனுசரித்து அவர்களை உண்டுபண்ணுகிறேன். சுயமாக ஒன்றும் செய்கிறதில்லை. பிராணிகளுக்கு மரணம், ஜனனம் இவைகள் கிரமமாக உண்டாகிறதென்பது இல்லை' என்று சொல்வீரானால் அவரவர்களுடைய கர்மங்களாலேயே அவரவர்களுக்கு ஜனன மரணங்கள் உண்டாகின்றன. உம்மால் என்ன பிரயோசனம்? உம்முடைய சிருஷ்டியின் விருத்திக்காக உம்மால் உண்டுபண்ணப்பட்ட சிநேக பாசத்தை நீரே கெடுக்கலாமா? ஓ குழந்தாய்! அநாதையான என்னையும், துக்கிக்கும் பிதாவையும்விட்டுத் தயவில்லாத யமனுடன் நீ செல்லுவது நியாயமல்ல. அபுத்திரர்களுக்கு ஏற்படும்

நரகத்தை உன்னால் நாங்கள் தாண்டவேண்டும். ஓ ராஜ புத்திர! உன்னுடைய தோழர்கள் விளையாடுவதற்கு உன்னைத் தேடுகிறார்கள். நீ தூங்கி வெகு நாழியாகிவிட்டது. எழுந்திரு; என்னுடைய ஸ்தன்யத்தைப் பானஞ்செய். பந்துக்களுடைய துக்கத்தைப் போக்கடி; நான் உன்னுடைய சமீபம் வந்தபொழுது புன்சிரிப்புள்ள உன் முகத்தைப் பார்க்கவில்லை. இப்பொழுது இனிமையான உன்னுடைய வார்த்தைகளையும் கேட்கவில்லை; திரும்பி வாராமல் சென்றாயே" என்று அழுதாள். அப்பொழுது சித்திரகேதுவும் மிகுந்த துக்கத்துடன் வாய்விட்டு அழுதார். அவ்விருவர்களும் அழுகிறபொழுது அங்கிருக்கும் ஜனங்கள் எல்லோரும் அழுதார்கள். இதனைத் தெரிந்துகொண்ட அங்கிரஸ் என்னும் மகரிஷி நாரதருடன் அவ்விடம் வந்தார்.

## அத்தியாயம் 15

### சித்திரகேதுவுக்கு ஞானோபதேசம் செய்தது

அந்த இரண்டு மகரிஷிகளும் மரணமடைந்த பாலகனுடைய சமீபத்தில் விழுந்து, இறந்தவனுக்குச் சமமாயிருக்கும் அரசனை நோக்கி, 'ஓ சிறந்த அரசனே! இப்பொழுது யாரைப்பற்றி நீர் துக்கிக்கிறீரோ அவனுக்கும் உமக்கும் என்ன சம்பந்தம்? முந்திய சிருஷ்டியில் இவனுக்கு நீர் யார்? இனி உமக்கும், அவனுக்கும் என்ன சம்பந்தம்? ஜலத்தின் வேகத்தால் மணல்கள் ஒன்றோடொன்று சேருவதுபோலவும், பிரிவது போலவும் ஜனங்கள் காலத்தால் சேருவதும், பிரிவதுமாக இருக்கிறார்கள். விதைகளில் வேறு விதைகள் எப்படி சில காலஞ் சேர்ந்தும், சில

காலஞ் சேராமலும் இருக்கின்றனவோ அப்படி பிராணிகள் ஈசுவரனுடைய மாயையால் தூண்டப்படுகிறார்கள். ஓ மகாராஜ! நான், நீர், இன்னும் இங்கிருப்பவர்கள் ஆகிய எல்லோரும் ஜனனத்திற்கு முந்தியும், மரணத்திற்குப் பிறகும் எப்படி சேர்ந்திருப்பதில்லையோ அப்படியே இப்பொழுதும் என்று தெரிந்துகொள்ளும். ஈசுவரன் ஒன்றிலும் பற்றுதலில்லாதவரானாலும் குழந்தைபோல விளையாட்டாகப் பிராணிகளைக்கொண்டு பிராணிகளைச் சிருஷ்டிக்கிறார்; காப்பாற்றுகிறார்; நாசஞ் செய்கிறார்; பிதாவினுடைய தேகத்தால் மாதாவினுடைய தேகத்திலிருந்து புத்திரனுடைய தேகம் உண்டாகிறது. விதையிலிருந்து விதை உண்டாகவில்லையா? ஆனால் ஜீவன் நித்தியன், சாமானியம் விசேஷமென்று வஸ்துவினிடத்தில் விபாகம் ஏற்படுத்தியதுபோல தேகமுள்ளவன், தேகம் என்பது அவிவேகத்தால் ஏற்பட்டதேயாம். கட்டையினுடைய விகாரங்கள் அக்னியில் தோற்றுவதுபோலப் பலவகையாக இருப்பது, ஜன்ம நாசம், குறைவு, விருத்தி, கர்ம பலம் ஆகிய இவைகள் தேகத்தின் சேர்க்கையால் தேகியான ஆத்மாவினிடத்தில் தோன்றுகின்றன. தூங்குகிறவனுக்கு அந்தச் சமயத்தில் அகங்காரமில்லாததனால் கோரமான சம்ஸாரம் அவனுக்குத் தோன்றவில்லை. அதுபோலவே முக்தனுக்கும் அகங்காரம் இல்லாததனால் ஜாக்ரத அவஸ்தையில் ஸம்ஸாரம் தோன்றுகிறதில்லை. ஆனதால் அகங்காரமாகிற தமோ குணத்தைப் போக்கடித்துக்கொள்ளும். பகவானாகிய வாசுதேவரும், ஈசுவரனும், எல்லோருக்கும் ஆத்மாவுமான மகாபுருஷனிடத்தில் மனத்தைச் செலுத்தும்" என்று சொன்னார்கள்.

13—20. அதனைக் கேட்ட சித்திரகேது முகத்தைத் துடைத்துக்கொண்டு கவலையற்றவனாகி, "நீங்கள் யார்?

பெரியோர்களுக்கும் பெரியோர்களாக இருக்கிறீர்கள். அவதூதவேஷத்துடன் இவ்விடம் வந்திருக்கிறீர்கள். பகவத் பக்தர்களான பிராமணர்கள் வைத்தியங்கொண்டவர்கள் போல என்னைப்போலொத்த மூடர்களைக் காப்பாற்றுவதற்காகப் பூமியில் சஞ்சரிப்பார்கள். ஸனத்குமாரர், நாரதர், ரிபு, அங்கிரஸ், தேவலர், அஸிதர், மார்க்கண்டேயர், கௌதமர், வசிஷ்டர், பலராமர், கபிலர், வியாசர், துர்வாஸர், யாக்ஞவல்கியர், ஜாதூகர்ணி, ஆருணி, ரோமசர், சியவனர், தத்தர், ஆசுரி, பதஞ்சலி, பராசரர், மைத்திரேயர், பரத்துவாஜர், வாருணி, தேவசிரஸ், போத்தியர், பஞ்சசிகர், இரணிய நாபர், கௌசல்லியர், சிருததேவர், ரிதத்துவஜர் ஆகிய இவர்களும் இன்னும் மற்ற சித்தர்களும் அஞ்ஞர்களுக்கு ஞானத்தை உபதேசிப்பதற்காகச் சஞ்சரிக்கிறார்கள். ஆனதால் கிராம்ய விஷயத்தில் ஆசைப்பட்டவனும், மூடனும், சம்சாரத்தில் முழுகியவனுமான எனக்கு ஞானத்தை உபதேசியுங்கள்" என்று கேட்டார்.

3—30. அதனைக் கேட்டு அங்கிரஸ் என்ற மகரிஷி, "ஓ மகாராஜ! நீர் அபுத்திரனாக இருந்த காலத்தில் உமக்குப் புத்திரனுண்டாகும்படி அனுக்கிரகித்த அங்கிரஸ் என்பவன் நான். இவர் பிரம்ம புத்திரராகிய நாரத மகரிஷி. இப்பொழுது புத்திர சோகத்தால் துக்கிக்கும் உமக்கு ஞானோபதேசஞ்செய்து, விஷ்ணுபக்தராகிய உம்மை அனுக்கிரகிப்பதற்காக நாங்கள் இவ்விடம் வந்தோம். பிராம்மணர்களைத் தெய்வமாகக்கொண்ட பகவத்பக்தன் துக்கிக்கத் தகுந்தவனல்ல. முந்தி உமக்குப் புத்திரனுண்டாகும்படி அனுக்கிரகித்ததுபோல இப்பொழுது மேலான ஞானத்தைக் கொடுக்கிறேன். இப்பொழுது புத்திரனில்லாதவர்கள்

வருத்தப்படுவதுபோலத் துக்கப்படுகிறீர். இந்த மாதிரியே ஸ்திரீகள், வீடு, பணம், பலவகையான சம்பத்து, சப்தம் முதலிய விஷயங்கள், ராஜ்யம், பூமி, சேனை, பொக்கிஷம், வேலைக்காரர்கள், மந்திரிகள், மித்திரர்கள் ஆகிய எல்லோரும் அநித்தியர்கள்; சோகம், மோகம், பயம் இவைகளைக் கொடுப்பவர்கள். இவைகள் சொப்பனம் போலவும், மாயை போலவும், மனோரதம்போலவும் மித்தியா பூதமான மாயைகளேயாம். மேலும், கந்தர்வ நகரம்போன்றவைகள்; மனத்தால் சங்கற்பிக்கப்பட்டவைகள்; உண்மையானவைகளில்லை. உண்மையாக இருந்தால் எப்பொழுதும் இருக்கவேண்டும்; அப்படி இல்லை. மேலும், கர்ம வாசனைகளைக்கொண்டு விஷயங்களைத் தியானிப்பதால் மனதாலேயே கர்மங்கள் ஏற்படுகின்றன. இந்தத் தேகமானது திரவியம், ஞானம் ஆகிய இவைகளின் சுரூபமானது. இதனாலேயே தேகியான ஜீவனுக்குப் பலவகையான சந்தாபம் உண்டாகிறது. ஆனதால ஸ்திரமான மனத்தால் ஆத்மாவின் உண்மையை அறிந்து, துவைதத்தை உண்மையென்று நம்பாமல் வைராக்கியத்தை அடையும்" என்றார்.

31—32. பிறகு நாரதர் அரசனை நோக்கி, "ஒரு மந்திரத்தை உமக்கு உபதேசிக்கிறேன்; அதனைப் பெற்றுக்கொள்ளும். அதனை ஏழு நாள் ஜபம் செய்தால் சங்கர்ஷண பகவானை நேரில் தரிசிக்கலாம். அந்தப் பகவானுடைய பாதத்தை உபாசித்த பரமசிவன் முதலியவர்கள் இந்தத் துவைதப் பிரம்மத்தை விட்டு மேலானதும், நிகரற்றதுமான மகிமையை அடைந்தார்கள். அதற்கும் மேலானது ஒன்றுமில்லை. சீருமு சீக்கிரத்தில் அம்மாதிரியான மகிமையை அடைவீர்" என்றார்.

# அத்தியாயம் 16

## சித்திரகேதுவுக்கு நாரதர் வித்தையை உபதேசித்தது

பிறகு தேவரிஷியாகிய நாரதர் மரணமடைந்த ராஜ புத்திரனைத் தம்முடைய யோக பலத்தால் பிழைக்கச்செய்து துக்கிக்கும் பந்துக்களுக்கு முன்பாக, 'ஓ ஜீவாத்மாவே! உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். உன்னுடைய தாயும், தகப்பனும், மித்திரர்களும், பந்துக்களும் உன்னுடைய மரணத்தால் துக்கிக்கிறார்கள். ஆனதால் இந்தச் சரீரத்தில் இன்னும் சில காலம் இருந்து போகங்களை அனுபவி. அரசனுடைய சிம்மாசனத்தை யடைந்து, ராஜ்ஜியத்தைக் காப்பாற்று" என்று சொன்னார்.

4—11. அதைக் கேட்ட அந்த ஜீவன் அவரை நோக்கி, "ஓ பிராம்மண! எந்த ஜன்மத்தில் எனக்கு இவர்கள் தாய்தகப்பனாக இருந்தார்கள்? கர்மங்களால் தேவ சரீரத்திலும், திர்யக் ஜாதிகளின் சரீரத்திலும், மனித சரீரத்திலும் சுற்றிக்கொண்டிருக்கும் ஜீவனுக்கு எல்லோரும் பந்துக்களாகவும், ஞாதிகளாகவும், சத்துருக்களாகவும், மத்தியஸ்தர்களாகவும், மித்திரர்களாகவும், உதாசீனர்களாகவும், துவேஷிகளாகவும் ஆகிறார்கள். விற்கக்கூடியதும், வாங்கக்கூடியதுமான தங்கம் முதலிய வஸ்துக்கள் வியாபாரிகளிடத்தில் சுற்றிக்கொண்டிருப்பதுபோல ஜீவனும் அநேக யோனிகளில் சுற்றிக்கொண்டிருக்கிறான். ஸ்திரமாக இருக்கும் பசு முதலிய வஸ்துக்களும் ஒருவனிடத்திலேயே நிலைத்திருக்கிறதில்லை. அதனால் வஸ்துக்களுக்கும், புருஷனுக்கும் சம்பந்தம் நித்தியமல்ல. எதுவரையில் சம்பந்தமிருக்கிறதோ அதுவரையில் அந்த வஸ்துவினிடத்தில் 'என்னுடையது' என்ற அபிமானம் இருக்கிறது. இப்

படியே ஜீவன் சரீரத்தை அடைந்து, பிதா முதலியவர்களுடைய சம்பந்தத்தை அடைந்தாலும் அவன் நித்தியனேயாம். உண்மையில் அபிமானமற்றவன்; எந்தச் சரீர சம்பந்தத்தை எது வரையில் அடைகிறானே, அது வரையில்தான் அந்தச் சரீரத்தில் அபிமானமே யொழிய மரணத்திற்குப் பின்னும் அதில் அபிமானம் இல்லை. இந்த ஜீவன் உண்மையில் நித்தியன்; குறைவற்றவன்; ஜனனம் முதலியவைகள் இல்லாதவன்; ஒருவன் தேகம் முதலியவைகளுக்கு ஆதாரமாக இருப்பவன்; தானாகப் பிரகாசிப்பவன்; தன்னுடைய மாயா குணங்களால் தன்னையே ஜகத்ரூபமாகச் சிருஷ்டிப்பவன்; இவனுக்கு மிகவும் பிரியனாவது, பிரியனில்லாதவனாவது, பந்துவாவது, அன்னியனாவது ஒருவனும் இல்லை. குண தோஷங்களை உண்டுபண்ணுகின்ற சகல பிராணிகளுடைய புத்திக்குச் சாட்சியாக இருப்பவன்; மேலும் அவன், சுகத்தையாவது துக்கத்தையாவது, கர்ம பலத்தையாவது அடைகிறதில்லை. காரிய காரணங்களுக்குச் சாட்சியாகவும், உதாசீனனாகவும், சுதந்திரனாகவும் இருக்கிறான்; ஆனதால் எனக்கும், உங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை'' என்று சொல்லி அந்த ஜீவன் சென்றான்.

12—26. அதனைக் கேட்ட அந்த பந்துக்கள் சிநேக பாசம் அற்றவர்களாகித் துக்கத்தை விட்டார்கள். பின்னும் அவர்கள் அந்த தேகத்திற்கு சம்ஸ்காரங்கள் செய்து சோகம், மோகம், பயம் ஆகிய இவைகளைக் கொடுக்கும் விடமுடியாத துக்கத்தை விட்டார்கள். அந்தக் குழந்தையை விஷங் கொடுத்துக் கொன்றவர்களான ஸபத்நினிகள் வெட்கம் அடைந்து, பாலஹத்தியால் ஏற்பட்ட தோஷத்தை நிவர்த்தித்துக்கொள்ளுவதற்காக அங்கிரஸ் சொன்னபடி யமுனா நதியில் விரதத்தை அனுஷ்டித்தார்கள். அந்தச் சித்திர

கேது என்ற அரசனும் அந்தப் பிராம்மணருடைய வார்த்தையைக் கேட்டு விவேகத்தை அடைந்து, சம்சாரமாகிய பாழுங் கிணத்தை விட்டு வெளியில் வந்தான். அது சேற்றில் அகப்பட்டிருந்த யானையானது அதிலிருந்து நிவர்த்தி அடைந்ததுபோலிருந்தது. பின்னும் அவன் யமுனையில் ஸ்நானம் செய்து, பிதிரு தர்ப்பணம் முதலியவைகளை முடித்து, மௌனமாக இந்திரியங்களை அடக்கிக்கொண்டு, பிரம்ம தேவரின் புத்திரர்களான அந்தப் பிராம்மணர்களை நமஸ்கரித்தார். பிறகு நாரதர் சுத்தரும், பக்தரும், சரணமடைந்தவருமாகிய அரசனுக்கு இந்த வித்தையை உபதேசித்தார்: "பகவானாகிய உமக்கு நமஸ்காரம், வாசுதேவராகிய உம்மைத் தியானம் செய்கிறோம். பிரத்யும்ன சுரூபியும், அனிருத்தரும், சங்கர்ஷணருமாகிய உமக்கு நமஸ்காரம். ஞான சுரூபியும், ஆனந்த மூர்த்தியும், ஆத்மாவிடத்திலேயே ரமிப்பவரும், சாந்தருமான உமக்கு நமஸ்காரம். மாயையால் உண்டான ராகத்துவேஷம் முதலியவைகளை ஆத்மானந்தானுபவத்தால் போக்கடித்தவரும், இந்திரியங்களுக்கு அதிபதியும், அளவற்ற சக்தியுள்ளவருமான மகா புருஷனுக்கு நமஸ்காரம். வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாதவரும், நாமரூபங்களற்றவரும், காரியகாரணங்களுக்கு மேலானவரும், சித்ரூபியுமாகிய பகவான் நம்மைக் காப்பாற்றட்டும். மண்ணால் செய்யப்பட்ட வஸ்துக்களில் அதன் ஜாதி (மண்) தொடர்ந்திருப்பதுபோல எந்தப் பகவானிடத்திலிருந்து இந்த ஜகத்தானது உண்டாகிறதோ, எவரிடத்தில் வசிக்கிறதோ, எவரிடத்தில் லயமடைகிறதோ அந்தப் பிரம்மத்திற்கு நமஸ்காரம். ஆகாசம்போல உள்ளிலும் வெளியிலும் வியாபித்திருக்கும் எவரை மனம், புத்தி,

இந்திரியங்கள், பிராணன் இவைகள் தொடுகிறதில்லையோ, தெரிந்துகொள்ளுகிறதுமில்லையோ அவருக்கு நமஸ்காரம் அக்கினியில் காய்ச்சப்பட்ட இரும்பானது திருணங்களை எரிப்பதுபோலத் தேகம், இந்திரியங்கள், பிராணன், மனது புத்தி ஆகிய இவைகள் எவருடைய சைதன்ய சம்பந்தத்தால் சேஷ்டிக்கின்றனவோ, எவருடைய சைதன்ய சம்பந்தமில்லாதபொழுது [சுஷுப்தி மூர்ச்சைகளில்] சேஷ்டிக்கிறதில்லையோ, ஜாக்ரத் முதலிய அவஸ்தைகளில் ஜீவன் திரஷ்டா என்ற பெயரை எவருடைய அநுக்கிரகத்தால் அடைகிறானோ அந்தப் பகவானுக்கு நமஸ்காரம். ஓ சிறந்த பக்தர்களுடைய அஞ்சலியினால் பூஜிக்கப்பட்ட பாதாரவிந்தமுள்ளவரே! எல்லோருக்கும் மேலானவரே! எல்லோருக்கும் அதிபதியே! மிகுந்த மகிமை உள்ளவரும், மகா விபூதிகளுள்ளவரும், மகா புருஷரும், பகவானுமாகிய உமக்கு நமஸ்காரம்'' என்று இம்மாதிரியான வித்தையை பக்தரான அரசனுக்கு நாரதர் உபதேசித்து, அங்கிரஸ் என்ற மகரிஷியுடன் தம்மிருப்பிடம் சென்றார்

27—48. சித்திரகேது நாரதரால் உபதேசிக்கப்பட்ட அந்த வித்தையை ஏழு நாள் ஜலத்தைப் புசித்து ஜபித்தார். கடைசியில் அந்த வித்தையின் மகிமையால் வித்தியாதரர்களுக்கு அதிபதியாயிருப்பதை அடைந்தார். பிறகு சில தினங்களில் ஆதிசேஷனுடைய பாதாரவிந்தத்தை அடைந்தார். [அவரைத் தரிசித்தாரென்று கருத்து] அந்தச் சேஷன் தாமரைத் தண்டுபோல் வெளுத்த சரீரமுள்ளவர்; கருத்த வஸ்திரமுள்ளவர்; கிரீடம், தோள் வளை, அரை நாண், வளை இவைகளால் பிரகாசிப்பவர்; பிரசன்னமான முகமுள்ளவர்; சிவந்த கண்களுள்ளவர்; சித்தர்களால் சுற்றப்பட்டவர்; அப்படிப்பட்ட பகவானைத் தரிசித்து, அரசன்

சகல பாபங்களற்றவராகி, சித்த சுத்தி அடைந்து, மிகுந்த பக்தியுடன் ஆனந்தத்தால் கண்ணீரைப் பெருக்கி மயிர்க் கூச்சலடைந்து, புராண புருஷரான அந்தப் பகவானைத் துதிக்கலானார். அந்த அரசன் உத்தம சுலோக ராகிய பகவானுடைய பாதாரவிந்தத்தை ஆனந்த ஜலத்தால் நனைத்து, பகவானிடத்திலிருக்கும் பிரீதி விசேஷத்தால் கண்டமடைத்துத் தோத்திரம் பண்ணுவதற்கும் முடியாத வராக வெகு காலம் இருந்தார். பிறகு மனத்தைச் சமா தானம் செய்துகொண்டு, வெளியிலிருக்கும் விஷயங்களில் செல்லும் இந்திரியங்களை அடக்கிக்கொண்டு, சாத்வத சாஸ் திரத்தில் சொல்லப்பட்ட சரீரமுள்ளவரும், ஜகத்குருவு மாகிய பகவானைத் துதிக்கலானார். 'ஓ பகவன்! நீர் ஒருவ ராலும் ஜயிக்கப்படாதவரானாலும், சமபுத்தியுள்ள பக்தர் களால் ஜயிக்கப்படுகிறீர். அந்தப் பக்தர்களும் உம்மால் ஜயிக்கப்படுகிறார்கள். ஒன்றையும் விரும்பாதவர்களானா லும், அவர்களுக்கு ஆத்மாவைக் கொடுக்கிறீர். ஓ பகவன்! ஜகத்தைப் படைப்பது, காப்பாற்றுவது, நாசஞ்செய்வது முதலியவை உம்முடைய மகிமையேயாம். பிரஜாபதிகள் எல்லோரும் உம்முடைய அம்சத்தின் அம்சமேயாம். ஆனால் அவர்கள் தாமே ஈசுவரனென்ற அபிமானத்தை அடைந்து, வீணுகச் சண்டை செய்கிறார்கள். பரமாணுவுக்கும், பரம மகத்தான காரியத்திற்கும் முதலிலும், கடைசியிலும், மத்தியிலும் இருப்பவர் நீரே. ஆதி, அந்தம், மத்தியம் என்ற மூன்றும் உமக்கு இல்லை காணப்படும் காரியங்களில் ஆதியிலும் கடைசியிலும் எது இருக்கிறதோ, அதுவே மத்தியிலும் இருக்கக்கூடியது. இந்த அண்டகோசமானது பூமி முதலிய ஏழு ஆவரணங்களால் சுற்றப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு ஆவரணங்களும் ஒன்றைவிட மற்றொன்று பத்து மடங்கு பெரிதானவை. அந்த அண்டகோசமானது மற்ற கோடி அண்டங்களுடன் உம்மிடத்தில் பரமாணுப்போல இருக்கிறது. அதனால் நீர் அனந்தரென்று சொல்லப்படுகிறீர். விஷயத்தில் ஆசைகொண்ட பசுக்கள் போன்ற மனிதர்கள் உம்முடைய விபூதிகளாகிய இந்திரன் முதலியவர்களை உபாசிக்கிறார்கள்; உம்மை உபாசிக்கிறதில்லை. அரசனுடைய அரண்மனை நாசம் அடைந்தபோது சேவகர்களுக்கும் எப்படிக் கெடுதி நேரிடுகிறதோ, அப்படி அந்த இந்திரன் முதலிய தேவர்களுடைய ஐசுவரியம் நசிக்கும்போது உபாசகனுக்கும் கெடுதி உண்டாகிறது. ஓ மேலானவரே! 'விஷய ஆசையினாலாவது உம்மை உபாசித்தால், அந்தக் காமமானது வறுக்கப்பட்ட விதைபோல முளைக்கிறதில்லை. [வேறு சரீரத்தை உண்டுபண்ணுகிறதில்லை.] உண்மையில் ஞான சுரூபியும் குண சம்பந்தமில்லாதவனுமான ஜீவனுக்கு குணத்தாலேயே சுக துக்கங்கள் உண்டாகின்றன. ஓ பகவன்! நீர் தோஷமற்ற பாகவத தர்மத்தை எப்பொழுது சொன்னீரோ அப்படிப்பட்ட உம்மை ஆத்மாவிடத்திலேயே ரமிப்பவர்களான சனத்குமாரர் முதலியவர்கள் மோக்ஷத்திற்காக உபாசிக்கிறார்கள். அதனால் நீரே எல்லாருக்கும் மேலானவர். இந்த பாகவத தர்மத்தில் 'நான், நீ, உன்னுடையது, என்னுடையது' என்ற பேத புத்தி இல்லை. காம்ய தர்மமானது பேத புத்தியினாலேயே ஏற்பட்டது. அது சுத்தமானதல்ல; அநித்தியமானது; அதர்மமுள்ளது; தனக்கும் பிறருக்கும் துரோகத்தைச் செய்யும் தர்மத்தால் என்ன பிரயோசனம்? ஆத்மாவிற்குத் துரோகம் செய்வதால் உமக்குக் கோபம் உண்டாகிறது. பிறரை இம்சிப்பதால் அதர்மம் நேரிடுகிறது. பாகவததர்மத்தில் துரோகம் முதலிய

வைகள் இல்லை. தாவர ஜங்கம பிராணிகளிடத்தில் சம புத்தி உள்ளவர்களான பெரியோர்கள் அதனை உபாஸிக்கிறார்கள். உம்முடைய சங்கற்பமானது ஒருபொழுதும் உண்மையை விடுகிறதில்லை. ஓ பகவன்! உம்மைத் தரிசித்ததால் சகல பாபங்களும் நசிக்கின்றன என்பது ஆச்சரியம் அல்ல. உம்முடைய நாமதேயத்தை ஒருகால் சிரவணஞ் செய்ததால் சண்டாளனாலும் சம்சாரத்திலிருந்து நிவர்த்தி அடைகிறான். ஆனதால் உம்மைத் தரிசித்து சுத்த சித்தனாக ஆனேன். உம்முடைய பக்தராகிய நாரத மஹரிஷியால் சொல்லப்பட்டது மாறுதலை அடையுமா? சூரியனுக்கு மினுமினுப் பூச்சிகளால் எப்படிப் பிரயோசனம் இல்லையோ, அதுபோல சகல ஜகத்சுரூபியும் எல்லா ஜனங்களுடைய அபிப்பிராயத்தை அறிந்தவருமான உமக்கு நான் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. எல்லா ஜகத்தையும் படைத்துக் காப்பாற்றி நாசஞ்செய்பவரும், அற்பர்களான யோகிகளால் பேத புத்தியைக்கொண்டு அறியமுடியாதவரும், பரமஹம்ஸருமான உமக்கு நமஸ்காரம் செய்கிறேன். எந்தப் பகவான் சேஷ்டித்தால் பிரஜாபதிகளும் கர்மங்களைச் செய்கிறார்களோ, எவர் பார்த்தால் இந்திரியங்கள் அவைகளின் சாமர்த்தியத்தையடைகின்றனவோ, எவருடைய சிரசில் பூமண்டலமானது கடுகுபோல இருக்கிறதோ அந்த ஆயிரந்தலையுள்ள பகவானுக்கு நமஸ்காரஞ் செய்கிறேன்'.

49—65. இப்படித் துதிக்கப்பட்ட பகவான் அவரை நோக்கி, "நாரதர், அங்கிரஸ் இவ்விருவர்களும் எதனை உமக்கு உபதேசித்தார்களோ, அந்த வித்தையாலும், என்னைத் தரிசித்ததாலும் சித்தனாக ஆய்விட்டீர். நானே சகல பிராணிகளின் சுரூபமாகவும், பிராணிகளுக்குக் காரணமாகவும் இருக்கிறேன். மேலும்,

எனக்கு சப்த பிரம்மம், பரப்பிரம்மம் என்ற இரண்டு சரீரங்கள் இருக்கின்றன. போக்கியமாகிய பிரபஞ்சத்தில் போக்தாவாக இருக்கும் ஆத்மாவையும், போக்கியமாயிருக்கும் லோகத்தை ஆத்மாவிடத்தில் வியாபித்திருப்பதாயும், அவ்விரண்டும் என்னால் வியாப்தமாக இருப்பதையும், என்னிடத்தில் அவ்விரண்டும் கற்பிதமென்றும் நினைக்கவேண்டும். தூங்கும் புருஷன் மலை, காடு முதலியவைகளைத் தன்னிடத்தில் இருப்பதாக எப்படிப் பார்க்கிறானோ, தூங்கி எழுந்திருக்கும்போது தான் ஒரே இடத்திலிருப்பதாக எப்படிப் பார்க்கிறானோ, அதுபோல ஜீவனுக்கு ஜாக்கிரத், அவஸ்தை முதலியவைகள் மாயையால் ஏற்பட்டவைகள் 'என்று தெரிந்துகொண்டு, அவைகளுக்குச் சாட்சியும் உபாதியற்றவருமாக ஆத்மாவை நினைக்கவேண்டும். தூங்கும் சமயத்தில் புருஷன் இந்திரியங்களுக்குப் புலப்படாத சுகத்தையும், துக்கத்தையும் எந்த சுரூபத்தால் அறிகிறானோ, அதனையே பிரம்மம் என்று தெரிந்துகொள். [தூங்கி விழித்தவன் சுகமாகத் தூங்கினேன் என்று சொல்லுகிறான். ஆனால் அந்த சுகம் இம்மாதிரியென்று சொல்லமுடியவில்லை] தூக்கம், ஜாக்ரதவஸ்தை ஆகிய இரண்டையும் அனுபவிக்கும் புருஷனுக்கு இரண்டு காலத்திலும் எது தொடர்ந்து இருக்கிறதோ அந்த ஞானமே பரப்பிரம்மம். அதுவே நான். இந்த என்னுடைய சுரூபத்தை எவன் மறந்துவிடுகிறானோ அவனுக்கு ஆத்மாவை விடப் பிரம்மம் வேறாகத் தோன்றும். அதனால் ஜனன மரண ரூபமான சம்சாரம் உண்டாகும். சாஸ்திரத்தைப் படிப்பதால் உண்டாகும் ஞானம், அபரோட்ச ஞானம் ஆகிய இவைகளை உண்டு பண்ணக்கூடிய மனித சரீரத்தை அடைந்தும் எவன் ஆத்தும தத்துவத்தைத் தெரிந்துகொள்ளவில்லையோ,

அவன் ஒருபொழுதும் க்ஷேமத்தை அடையமாட்டான். மேலும், புருஷன் ஆசையால் உண்டாகும் கஷ்டத்தையும் ஆசைப்படாமலிருப்பதால் மோட்சம் கிடைப்பதையும் நினைத்து, ஒன்றையும் சங்கற்பிக்காமல் இருக்கவேண்டும். மேலும், தம்பதிகள் சுகத்தை அடைவதற்கும், துக்கத்தை நிவர்த்தித்துக்கொள்வதற்கும் கர்மங்களைச் செய்கிறார்கள். அதனால் துக்கமும் நிவர்த்தியாகிறதில்லை; சுகமும் கிடைக்கிறதில்லை. தங்களை ஞானமுள்ளவர்களென்று நினைத்திருக்கும் மனிதர்களுக்கு மேற்சொல்லியபடி பலத்தில் மாறுதல் உண்டாவதையும், ஆத்மாவினுடைய நான்காவது அவஸ்தையையும் அறிந்து இகலோகம், பரலோகம் ஆகிய இவைகளில் அடையக்கூடிய விஷயங்களில் ஆசைப்படாமல் ஞானத்தாலும், விஞ்ஞானத்தாலும் சந்தோஷமடைந்து, புருஷன் என்னிடத்தில் பக்தனாய் இருக்கவேண்டும். மந்திரத்தை அறிந்தவர்களும், யோகத்தில் சாமர்த்தியமுள்ள புத்தியுள்ளவர்களுமான புருஷர்கள் பரமாத்மாவைத் தெரிந்து கொள்வதையே புருஷார்த்தமென்று நினைக்கவேண்டும். ஓ அரசனே! நீயும் என்னுடைய வார்த்தையைச் சிரத்தையுடன் புத்தியில் தரித்து ஞானம், விஞ்ஞானம் இவைகளை அடைந்து சீக்கிரத்தில் சித்தியடைவீர்" என்று ஜகத்குருவாகிய பகவான் சித்திரகேதுவைச் சமாதானஞ் செய்து, அவர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மறைந்தார்.

# அத்தியாயம் 17

## சித்திரகேது சாபத்தால் அசுர ஜன்மத்தை அடைந்தது

எந்த இடத்தில் பகவான் மறைந்தாரோ, அந்த திக்குக்கு நமஸ்காரஞ் செய்து சித்திரகேதுவானவர் ஆகாசத்தில் சஞ்சரித்தார். அவர் யோகைசுவரியத்தை அடைந்தவராகையால் சித்தர்களாலும், சாரணர்களாலும், மகரிஷிகளாலும் தோத்திரம் பண்ணப்பட்டவராகி பலம், இந்திரிய சாமர்த்தியம் இவைகள் குறையாமல் லட்ச வருஷகாலம் குல பர்வதங்களின் குகைகளில் ஸ்திரீகளுடன் பகவானுடைய சரித்திரத்தைக் கானஞ் செய்துகொண்டு ரமித்தார். ஒரு நாள் அந்த சித்திரகேது விஷ்ணுவினால் கொடுக்கப்பட்ட விமானத்தின் மீதேறி சஞ்சரிக்கும்போது பரமசிவனைக் கண்டார். அந்தப் பரமசிவன் பார்வதியை ஆலிங்கனஞ்செய்துகொண்டு மகரிஷிகளுடைய கூட்டத்தில் சித்தர்களாலும், சாரணர்களாலும் தோத்திரம் செய்யப்பட்டிருந்தார். அப்பொழுது சித்திரகேது சிரித்து, பார்வதி கேட்டுக்கொண்டிருக்கும்போது, "இவர் லோகத்திற்கு குரு; சகல பிராணிகளுக்கும் தர்மத்தைச் சொல்பவர்; ஜடையைத் தரித்துக்கொண்டு கடுமையாகத் தபசு செய்பவர்; சாதுக்களுக்கு அதிபதி; அப்படியிருந்தும் பிராகிருத புருஷன்போல சபையில் ஸ்திரீயை ஆலிங்கனஞ் செய்துகொண்டு வெட்கமில்லாமல் உட்கார்ந்திருக்கிறார். பிராகிருத ஜனங்கள்கூட பெரும்பாலும் ஸ்திரீயை ரகசியத்தில் ஆலிங்கனஞ்செய்துகொள்கிறார்கள். மேலான விரதத்தைத் தரிக்கும் இவர் சபையில் பாரியையை வைத்துக்கொண்டிருக்கிறார்" என்று பரிகசித்தார். அதனைக் கேட்ட கம்பீர புத்தியுள்ள பகவான் சிரித்துக்கொண்டு மௌனமாக இருந்தார். சபையிலிருப்பவர்களும் பகவானு

டைய அபிப்பிராயத்தை அனுசரித்து மௌனமாக இருந்தார்கள். இம்மாதிரி பகவானுடைய மகிமையை அறியாமல் சித்திரகேது பரிகாசம் செய்ய, அதனைக் கேட்ட பார்வதி கோபங்கொண்டு பின்வருமாறு சொன்னாள்: 'இவன் வெட்கமில்லாத நம்மைப்போலொத்த துஷ்டர்களைச் சிட்சிக்கும் பிரபுவா? பிரம்மதேவரும் அவருடைய புத்திரர்களான பிருகு, நாரதர் முதலியவர்களும், சனத்குமாரரும் கபில மகரிஷியும் சாஸ்திரத்தை மீறி நடக்கும் பரமசிவனைத் தடுக்கவில்லையாதலால் அவர்கள் தர்மத்தை அறியாதவர்களா? மேற்சொல்லியவர்களால் தியானம் பண்ணக்கூடிய பாதாரவிந்தமுள்ளவரும், ஜகத்துக்கு குருவும், மேலான மங்களமூர்த்தியுமான பரமசிவனை இந்த க்ஷத்திரியன் [வித்வான்களை அவமதித்துப்] பரிகசிப்பதால் இவன் சிட்சிக்கக்கூடியவன். சாதுக்களால் சேவிக்கப்பட்ட ஸ்ரீ நாராயணனுடைய பாதாரவிந்தத்தை அகங்காரமுள்ளவனும், வணக்கமில்லாதவனுமாகிய இவன் அடையத் தகுந்தவனல்ல. ஆனதால் நீ அசுர ஜன்மத்தை அடையக்கடவாய். இப்படி சிட்சிக்கப்பட்டால்தான் இனியாவது இம்மாதிரியான கெட்ட செய்கையைச் செய்யாமலிருப்பாய்" என்று சபித்தாள்.

16—25. இந்தச் சாபத்தைக் கேட்ட சித்திரகேது விமானத்திலிருந்து இறங்கிப் பார்வதியை நமஸ்கரித்து நல் வார்த்தை சொன்னார். 'ஓ அம்பிகே! உம்முடைய சாபத்தை அங்கீகரிக்கிறேன். தேவர்கள் மனிதர்களுக்கு எதனைச் சொல்லுகிறார்களோ, அது முந்தியே ஏற்படுத்தப்பட்டதேயாம். இந்த சம்சாரத்தில் பிராணிகள் அஞ்ஞானத்தால்

மோகமடைந்து சுகத்தையும், துக்கத்தையும் எங்கும் எக் காலத்திலும் அனுபவிக்கிறார்கள். தன்னுடைய சுகதுக்கங் களுக்கும் பிறருடைய சுக துக்கங்களுக்கும் ஒருவனும் கர்த் தாவல்ல. வித்துவான்கள் பரமாத்மாவையே கர்த்தா வாக நினைக்கிறார்கள். மாயா குணங்களுடைய பிரவாக முள்ள இந்த சம்சாரத்தில் சாபமேது? அனுக்கிரகம் ஏது? சுவர்க்கம் ஏது? நரகம் ஏது? சுகதுக்கங்கள் எவை? பகவான் ஒருவரே சகல லோகத்தையும் தம்முடைய மாயை யைக்கொண்டு படைக்கிறார். இந்த பிராணிகளுக்கு பந்தத்தை யும், மோட்சத்தையும், சுகத்தையும், துக்கத்தையும், உண்டு பண்ணுகிறார். அவருக்கு வேண்டியவரொருவருவனுமில்லை, அவருக்கு விரோதியுமில்லை, ஞாதியுமில்லை, பந்துவுமில்லை, தம்மைச் சார்ந்தவனுமில்லை, அன்னியனுமில்லை, எல்லாரி டத்திலும் சமரும், உபாதியற்றவருமான அந்தப் பகவா னுக்கு ஆசையும் துவேஷமும் உண்டாகுமா? ஆனாலும் அவருடைய மாயா சக்தியால் பிராணிகளுக்கு சுக துக்கங் களும், ஹிதமும், அஹிதமும், பந்தமும், மோட்சமும், ஜனனம், மரணம் ஆகிய இவைகளும் உண்டாகின்றன, அதனால் சாபத்தை நிவர்த்திக்கவேண்டுமென்று நான் பிரார்த்திக்கவில்லை. நான் பரிகாசம் செய்ததாக நினைத்தா யல்லவா? அந்த என்னுடைய அபராதத்தை மன்னிக்க வேண்டுமாகப் பிரார்த்திக்கிறேன்" என்று சித்திரகேது பார் வதியையும் பரமசிவனையும் சமாதானஞ் செய்து, அவர்கள் சிரிப்புடன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது விமானத் தின் மீது ஏறிச் சென்றார்.

26—35. பின்பு பரமசிவன் பார்வதியை நோக்கி. தேவர்கள், ரிஷிகள், தைத்தியர்கள், சித்தர்கள், பார்ஷதர் கள் ஆகிய இவர்கள் கேட்டுக்கொண்டிருக்கும்போது "அற்

புதமான காரியங்களைச் செய்யும் ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய வேலைக்காரர்களை அனுசரித்தவர்களுடைய மகிமையைப் பார்த்தாயா? அவர்கள் ஆசையற்றவர்கள்; நாராயணனையே தெய்வமாகக்கொண்டவர்கள்; ஓரிடத்திலும் பயப்படாதவர்கள்; சுவர்க்கம்; மோட்சம்; நரகம் ஆகிய இவைகளையும் சமமாகப் பார்ப்பவர்கள்; பிராணிகளுக்கு சுக துக்கம், ஜனனம், மரணம், சாபானுக்கிரகமென்ற துவந்துவங்கள் பகவானுடைய மாயையால் ஏற்படுகின்றன. புஷ்பமாலையை சர்ப்பமென்று நினைப்பதுபோல ஆத்துமாவினிடத்தில் பேதபுத்தியும் குணதோஷங்களும், அவிவேகத்தால் ஏற்பட்டவைகளேயாம். பகவானாகிய வாசுதேவரிடத்தில் பக்தி செய்பவர்களும், ஞான பலமுள்ளவர்களும், வைராக்கிய பலமுள்ளவர்களுமான பக்தர்கள் ஒன்றையும் விரும்பார்கள். நான், பிரதமதேவர், சனத்குமாரர், நாரதர், பிரதம புத்திரர்களான மகரிஷிகள், தேவசிரேஷ்டர்கள் ஆகிய எல்லோரும் பகவானுடைய அம்சத்தின் அம்சமுள்ளவர்களானாலும் அவருடைய லீலையை அறியச் சக்தியற்றவர்களாக இருக்கிறோம். அப்படியிருக்க தாமே ஈசுவரனென்று நினைத்திருப்பவர்களால் அறியமுடியுமா? அவருக்கு மிகுந்த மித்திரனாவது, துவேஷியாவது, பந்துவாவது, அன்னியனாவது ஒருவருமில்லை. சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருப்பதால் ஸ்ரீ மகாவிஷ்ணு சகல பிராணிகளுக்கும் பிரியமானவர். இந்த சித்திரகேது அந்தப் பகவானுடைய பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவன்; எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பவன்; சாந்தன்; நானும் ஸ்ரீ மகாவிஷ்ணுவிடத்தில் பிரீதியுள்ளவன்; ஆனதால் மகாபுருஷனிடம் பக்தியுள்ளவர்களும், சாந்தர்களும், சமமாகப் பார்ப

பவர்களுமான புருஷர்களிடத்தில் கோபிக்கக்கூடாது” என்றார்.

36—41. அதனைக் கேட்ட பார்வதி தேவி கோபமற்றவளானாள். பகவத் பக்தனாகிய சித்திரகேது பார்வதிக்கு பதில் சாபம் கொடுக்கும் சக்தியுள்ளவனானாலும் அப்படிச் செய்யாமல் சாபத்தைப் பெற்றுக்கொண்டான். இதுவே சாதுவின் அடையாளம். அந்தச் சித்திரகேதுவே துவஷ்டாவினுடைய தட்சிணாக்கினியில் விருத்திரனென்ற பெயருடன் அசுரனாகப் பிறந்தான். அசுரனாகிய விருத்திரனுக்கு பகவானிடத்தில் பக்தியுண்டான காரணம் இதுதான். இந்த சித்திரகேதுவின் இதிகாசத்தைச் சிரவணஞ் செய்வதால் சகல பந்தங்களும் நிவர்த்தியாகின்றன. எவன் காலையில் எழுந்திருந்து பகவானை ஸ்மரித்து சிரத்தையுடன் இந்த இதிகாசத்தைப் படிக்கிறானோ அவன் உத்தம கதியை அடைவான்.

## அத்தியாயம் 18

### மருத்துக்களின் உற்பத்தி

[ஆறாவது அத்தியாயம் முதல் துவஷ்டாவின் வம்சம் சொல்லப்பட்டது. இனி சவிதாவின் வம்சம் நிரூபிக்கப்படும்.]

1. சவிதான் பத்னியாகிய பிரச்னி என்பவள் சாவித்திரியையும், மூன்று வியாகிருதிகளையும், ஸோம யாகத்தையும் சாதுர்மாஸ்யத்தையும், பஞ்சமகா யஜ்ஞத்தையும் உண்டுபண்ணினாள்.

2. பகருடைய பத்தினியாகிய சித்தியென்பவள் மகிமா, விபு, பிரபுவென்ற புத்திரர்களையும், ஆசிஸ் என்ற பெண்ணையும் பெற்றாள்.

3. தாதாவின் பத்தினியாகிய குஹூ: என்பவள் ஸாயனென்ற புத்திரனையும் (சாயங்காலம்), ஸினீவாலீ என்பவள் பிராதக்காலத்தையும் (விடியற்காலம்), அனுமதி என்பவள் பூர்ணிமையையும் பெற்றாள்.

4. விதாதா என்பவர் கிரியை என்பவளிடத்தில் புரீஷ்யர்களென்ற ஐந்து அக்கினிகளை உண்டுபண்ணினார்.

5—6. வருணருடைய பத்தினியாகிய சர்ஷணியி னிடத்தில் பிரமபுத்திரராகிய பிருகு திரும்பவும் பிறந்தார். மகாயோகியாகிய வால்மீகியும் வருணருடைய புத்திரர். வல்மீகத்திலிருந்து வெளிப்பட்டதால் வால்மீகியானார். [ஆனதால் பிருகுவும் வால்மீகியும் சகோதரர்கள்.] மித்திரன், வருணன் ஆகிய இருவர்களும் ஊர்வசியென்ற அப்ஸரஸ்திரீயைக் கண்டு மோகித்துத் தங்களுடைய ரேதஸ்ஸை ஒரு குடத்தில் விட்டார்கள். அதிலிருந்து அகஸ்தியரும் வசிஷ்டரும் உண்டானார்கள். அதனால் அவ்விருவர்களும் மித்திராவருணர்களுடைய புத்திரர்களானார்கள்.

7—9. மித்திரனென்பவர் ரேவதீ என்பவளிடத்தில் உத்ஸர்க்கனையும், அரிஷ்டனையும், பிப்பலனையும் உண்டு பண்ணினார். சக்கிரனென்பவர் [இந்திரன்] பௌலோமி என்பவளிடத்தில் ஜயந்தன், ரிஷபன், வித்வான் என்ற மூன்று புத்திரர்களை உண்டுபண்ணினாரென்று கேள்விப் பட்டிருக்கிறேன். மேலும், திருவிக்கிரமாவதாரஞ் செய்த மாயா வாமனருடைய பத்தினியாகிய கீர்த்தியினிடத்தில் சௌபகன் முதலிய சிறந்த புத்திரர்கள் உண்டானார்கள். அவர்களுடைய சரிதம், குணங்கள், பராக்கிரமம் ஆகிய

இவைகளையும் காசியபருடைய பத்தினியாகிய அதிதியி னிடத்தில் பகவான் அவதாரஞ் செய்ததையும் பின்பு சொல்லுகிறேன்.

10—11. பின்னர் காசியபருடைய புத்திரர்களான தைத்தியர்களைப்பற்றிச் சொல்லுகிறேன். அந்த வம்சத் தில் பிரகலாதர், பலி ஆகிய இரண்டு புத்திரர்களே பரம பாகவதர்கள். மேலும் ஹிரண்யகசிபு என்றும், ஹிரண் யாட்சன் என்றும் இரண்டு புத்திரர்கள் இருந்ததாகச் சொல்லியிருக்கிறோம். இவ்விருவர்களும் தைத்தியர்களா லும், தானவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவர்கள். ஹிரண்ய கசிபுவின் பத்தினி கயாது என்பவள். அவள் ஜம்பனுடைய பெண். அவளுக்குப் பிரகலாதன், அனுஹ்லாதன், ஸம் ஹ்லாதன், ஹ்லாதன் என்ற நான்கு புத்திரர்களுண்டானார் கள். அந்தக் கயாதுவின் சகோதரியான ஸிம்ஹிகை என்பவள் விப்ரசித் என்பவரை விவாகஞ் செய்துகொண்டு ராகு வென்ற புத்திரனைப் பெற்றாள். அவன் அமிருதபானம் செய்யும்பொழுது ஸ்ரீமந் நாராயணன் சக்கரத்தால் அவனு டைய தலையை வெட்டினார். ஸம்ஹ்லாதருடைய பத்தினி யாகிய கிருதி யென்பவள் பஞ்சஜனன் என்பவனைப் பெற் றாள். ஹ்லாதருடைய பத்தினியாகிய தமனீ யென்பவள் வாதாபி, இல்வலனென்ற இரண்டு புத்திரர்களை உண்டு பண்ணினாள். அந்த இல்வலன்தான் அதிதியான அகஸ் தியருக்காக வாதாபியைக் கொன்று சமைத்தான். அநுஹ் லாதனுடைய பத்னியாகிய சூர்மியை என்பவள் பாஷ் கலன், மஹிஷதன் என்ற புத்திரர்களை யுண்டுபண்ணி னாள். பிரகலாதருடைய புத்திரன் விரோசனன் என்ப வர். அவருடைய புத்திரன பலி யென்பவர். அவருக்கு அசனை என்பவளிடத்தில் நூறு புத்திரர்கள் பிறந்தார்கள்.

அவர்களுக்குள் மூத்தவர் பாணன் என்பவர். பலியின் மகிமை கானஞ் செய்யக்கூடியது. அது பிந்திச் சொல்லப் படும். பாணன் பரமசிவனை ஆராதித்து அவருடைய பார் ஷதராக ஆனர். அவனுடைய பட்டணத்தைக் காப்பாற்றிக் கொண்டு பகவான் இப்பொழுதும் இருக்கிறார். நாற்பத்து ஒன்பது மருத்துக்கள் திதியின் புத்திரர்களாம். அவர்கள் இந்திரனால் தேவர்களாகச் செய்யப்பட்டார்கள்" என்றார்.

20—21. அதனைக் கேட்ட அரசன், "ஓ குருவே! அவர்கள் இயற்கையான அசுர சுபாவத்தை விட்டு தேவத் தன்மையை எப்படி அடைந்தார்கள்? அவர்கள் செய்த நல்ல காரியம் என்ன? இதனைக் கேட்க நானும் இந்த மக ரிஷிகளும் சிரத்தைப்படுகிறோம்; சொல்லவேண்டும்". என்றார்.

22—27. ஓ சௌனகரே! சுக மகரிஷியானவர் இம் மாதிரியான பரீட்சித்தினுடைய சொற்ப அட்சரங்களுள் ளதும், மிக்க அர்த்தமுள்ளதுமான வார்த்தையைக் கேட்டு அதனை சிலாகித்துப் பதில் சொல்லலானார். ஸ்ரீ மகா விஷ்ணுவைச் சகாயமாகக்கொண்ட இந்திரனால் திதியின் புத்திரர்கள் கொல்லப்பட்டார்கள். அப்பொழுது திதி தேவி துக்கத்தையும், கோபத்தையுமடைந்து யோசித்தாள். 'சகோதரர்களைக் கொன்றவனும், இந்திரியங்களைத் திருப்தி செய்பவனும், குரூர சுபாவமுள்ளவனும், தயை இல்லாதவ னும், பாபியுமான மகேந்திரனைக் கொன்று கவலையில்லாமல் எப்பொழுது தூங்குவேன்? எந்தச் சரீரத்துக்குக் கடைசியில் கிருமி, விட், பஸ்மம் என்ற பெயருண்டாகிறதோ, அந்தத் தேகத்திற்காக பூதத் துரோகத்தைச் செய்பவன் தனக்கு ஹிதமானதை அறியான். பிராணிகளுக்குத் துரோகஞ் செய்வதால் நரகம் நேரிடுகிறது. இந்தத் தேகத்தை நித்திய

மென்று நினைத்தவனும், கெட்ட மார்க்கத்தில் பிரவர்த்தித்த மனமுள்ளவனுமான இந்திரனுடைய கர்வத்தைப் போக்கக் கூடிய புத்திரன் பிறக்கும் உபாயத்தைச் செய்யவேண்டும்" என்று யோசித்து, சிசுரூஷை செய்வது, பிரியமாகப் பேசுவது, வணக்கம், இந்திரியங்களை அடக்குவது, பக்தி, கடைக்கண் பார்வை முதலியவைகளால் பர்த்தாவை உபசரித்து அவரைச் சுவாதீனப்படுத்திக்கொண்டாள். அந்தக் கசியபர் வித்துவானானாலும் ஸ்திரீயினால் ஜயிக்கப்பட்டு அவளுடைய அபிப்பிராயத்திற்கு வசப்பட்டார். ஆனால் ஸ்திரீகள் பர்த்தாவை வசப்படுத்துவது ஆச்சரியமல்ல. பரமசிவன் முன் காலத்தில் பிராணிகள் தனித்திருப்பதைப் பார்த்து, சிருஷ்டி விருத்திக்காக ஸ்திரீயைப் பாதி சரீரத்தில் வைத்துக்கொண்டார். ஸ்திரீகள் புருஷர்களுடைய புத்தியை அபகரிப்பவர்கள்; இப்படி மிகவும் சிசுரூஷைசெய்யும் திதியை நோக்கிக் காசியபர் சிரித்துக்கொண்டு, "ஓ அழகான தொடையுள்ளவளே! உன்னிடத்தில் சந்தோஷமடைந்தேன். இஷ்டமான வரத்தைக் கேள். பர்த்தா ஸ்திரீகளிடத்தில் பிரியமடைந்தால் எதுதான் கிடைக்காது? பர்த்தாவே ஸ்திரீகளுக்கு முக்கியமான தெய்வம். எந்தப் பகவான் சகல ஜனங்களுடைய மனத்திலும் வசிக்கிறாரோ, ஸ்ரீதேவியின் பதியாகிய எவர் நாமரூபங்களுடன் பலவகையான தேவதைகளாக இருக்கிறாரோ, எவர் புருஷர்களாலும் ஸ்திரீகளாலும் பூஜிக்கப்படுகிறாரோ அவரே பர்த்தாவாக இருப்பதால் க்ஷேமத்தை விரும்பிய பதிவிரதைகளான ஸ்திரீகள் தங்கள் புருஷனைப் பகவானாக நினைத்துப் பூஜிக்கிறார்கள். இம்மாதிரியான எண்ணத்துடன் நீ என்னைப் பூஜித்தபடியால் கெட்ட ஸ்திரீகளுக்கு அரிதாகிய எதனை உனக்குச் செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

37. அதனைக் கேட்ட திதியானவள், 'ஓ பிராம்மணா! எனக்கு நீர் வரங்கொடுப்பவரானால் என்னுடைய புத்திரர்களை இந்திரன் கொன்றதால் அவனைக் கொல்லக்கூடிய சக்தியுள்ள புத்திரன் பிறக்கும்படி அனுக்கிரகிக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண்டாள்.

38—45. அதனைக் கேட்ட காசியபர் கவலையடைந்து, "மிகுந்த அனர்த்தம் நேர்ந்ததே, என்ன செய்கிறது ?" என்று துக்கித்தார். விஷயங்களிலும் இந்திரியங்களிலும் ஆசைப்பட்டு ஸ்திரீ ரூபமான மாயையால் பிடிக்கப்பட்டு நான் நரகத்தில் விழப்போகிறேன். ஸ்திரீயாகிய திதியின்மீது என்ன குற்றம் ? அவளுடைய இனிமையான வார்த்தையால் மோகித்து நான் என்னுடைய அனுகூலத்தில் தவறுதலடைந்தேன்; என்னை நிந்திக்கவேண்டும். ஸ்திரீகளுடைய முகமானது சரத்காலத்திய தாமரை மலர் போல் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது; வார்த்தையோ கேட்க இனிமையானது; இருதயமோ கத்தியின் முனை போன்றது; அவர்களுடைய சரித்தத்தை யாரால் அறிய முடியும் ? ஸ்திரீகள் தங்கள் காரியத்தையே முக்கியமாகக் கொண்டவர்கள்; அவர்கள் புருஷனையும் புத்திரனையும் சகோதரனையும் கொல்வார்கள்; கொல்லும்படி செய்வார்கள். ஆனால் கேட்டதைக் கொடுக்கிறேன் என்று பிரதிக்ஞை செய்ததும் வீணாகக்கூடியதல்ல. இந்திரனுக்கும் கெடுதி நேரிடக்கூடாது. அதற்கு ஒரு உபாயம் செய்கிறேன்" என்று யோசித்துக் காசியபர் கொஞ்சம் கோபங்கொண்டு திதியை நோக்கி, "ஒரு வருஷ காலம் நான் சொல்லும் விரதத்தை நீ அனுஷ்டிப்பாயானால் இந்திரனைக் கொல்பவனான புத்திரனுண்டாவான். விரதத்தில் குறைவு நேரிடுமானால் தேவர்களுக்குப் பந்து ஆவான்" என்றார்.

46. அதனைக் கேட்ட திதியானவள், "என்னால் செய்யக்கூடிய விரதத்தைச் சொல்லும். அதற்கு என்ன செய்ய வேண்டியது? எவைகளைத் தள்ளவேண்டியது? விரதத்தைக் கெடுக்கக்கூடியவைகள் எவை?" என்று கேட்டாள்.

47—51. அதனைக் கேட்ட காசியபர் திதியை நோக்கி, "இந்த விரதத்தை அனுஷ்டிப்பவர்கள் பிராணிகளை இம்சிக்கக்கூடாது; பிறரை நிந்திக்கக்கூடாது; பொய் சொல்லக் கூடாது. நகத்தைக் கிள்ளுவது, மயிர்களை வெட்டுவது, அசுத்தமான வஸ்துக்களைத் தொடுவது ஆகிய இவைகளைச் செய்யக்கூடாது; ஜலத்தில் ஸ்நானம் செய்யக்கூடாது; கோபிக்கக்கூடாது; துஷ்டர்களுடன் பேசக்கூடாது; சுத்தமில்லாத வஸ்திரத்தைத் தரிக்கலாகாது; நிர்மாலியமான புஷ்ப மாலை முதலியவைகளைத் திரும்பவும் தரிக்கக்கூடாது; எச்சில், பத்திரகாளிக்கு நிவேதனஞ்செய்யப்பட்ட அன்னம், கீழ்க்குலத்தார் கொண்டுவந்த மாமிசம், ரஜஸ்வலையினால் பார்க்கப்பட்ட அன்னம் ஆகிய இவைகளைப் புசிக்கலாகாது. அஞ்சலியால் ஜலத்தைக் குடிக்கக்கூடாது. சந்தியா காலங்களில் தலைமயிரை அவிழ்த்துக்கொண்டாவது, அலங்காரஞ் செய்துகொள்ளாமலாவது, போர்வை இல்லாமலாவது, வெளியில் போகக்கூடாது. கால்களை அலம்பாமலும், அசுத்தையாகவும், ஈரமான வஸ்திரத்துடனும், வடக்குத் திக்கில் தலை வைத்துக்கொண்டும், மேற்கில் தலைவைத்துக் கொண்டும், வஸ்திரமில்லாமலும் படுத்துக்கொள்ளக் கூடாது. மேலும், சந்தியா காலங்களில் படுக்கக்கூடாது. பிறருடன் சேர்ந்தும் படுக்கக்கூடாது. சுத்தமான வஸ்திரம் உடுத்திக்கொண்டு மங்களமான அலங்காரமுள்ளவளாகிக் காலையில் போஜனம் செய்வதற்கு முன் பசுக்களையும், பிராம்மணர்களையும், ஸ்ரீதேவியையும், ஸ்ரீ மகாவிஷ்ணுவையும்

பூஜிக்கவேண்டும். சுமங்கலிகளான ஸ்திரீகளைச் சந்தனத்தாலும், புஷ்பத்தாலும், உபசாரத்தாலும் பூஜித்துத் தன்னுடைய பர்த்தாவையும் பூஜித்து, மனத்திலும் வெளியிலும் தியானிக்கவேண்டும். இம்மாதிரியான பும்ஸவனமென்ற விரதத்தை ஒரு வருஷ காலம் பூரணமாக யாதொரு குறைவு அன்னியில் அனுஷ்டித்தால் சத்துருவைக் கொல்லும் புத்திரன் பிறப்பான்" என்றார்.

55—63. அதனைக் கேட்ட திதியானவள் அப்படியே அனுஷ்டிப்பதாக ஒப்புக்கொண்டு விரதத்தை அனுஷ்டித்தாள்; கர்ப்பத்தையும் அடைந்தாள். மகேந்திரன் திதியின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு திதியின் ஆசிரமஞ்சென்று அவளுக்குச் சிசுருஷை செய்தார். மேலுமவர் ஒவ்வொரு நாளும் புஷ்பம், பழம், கிழங்கு, சமித்து, தர்ப்பம், இலைகள், தளிர்கள், மண், ஜலம் ஆகிய இவைகளைக் கொண்டுவந்தார். மிருகத்தைக் கொல்வதற்காக வேடன் மிருக வேஷத்தைத் தரிப்பதுபோல் விரதத்திற்குக் குறைவு நேரிடும் சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு மகேந்திரன் கபடமாகச் சிசுருஷை செய்தார். அவளுடைய விரதத்தில் குறைவு நேரிடவேயில்லை. அப்பொழுது இந்திரன் தமக்கு க்ஷேமம் எப்படி உண்டாகுமென்று கவலை அடைந்தார். ஒரு நாள் மிகுந்த சிரமத்தால் திதியானவள் சந்தியாகாலத்தில் அசுத்தையாகக் காலை அலம்பாமல் படுத்துத்தூங்கினாள். அந்தச் சமயம் பார்த்து மகேந்திரன் யோக பலத்தால் அவளுடைய வயிற்றில் பிரவேசித்தார். பின்னும் அவர் சுவர்ணம் போலப் பிரகாசிக்கும் அந்தக் கர்ப்பத்தை ஏழு துண்டுகளாக வெட்டினார். பின்னும் ஒவ்வொரு துண்டையும் ஏழாக வெட்டினார். அப்பொழுது அந்தக் கர்ப்பம் அழுதது. அதனை 'அழாதே' என்றும் சொன்னார். அப்பொழுது அந்தத் துண்டுகள் எல்லாம் கை கூப்பி, "ஓ இந்திர! சகோதரர்களான மருத்துக்களை ஏன் கொல்லுகிறாய்?" என்றன.

64—67. அதனைக்கேட்ட இந்திரன், 'நீங்கள் எனக்குச் சகோதரர்கள்தான்; பயப்படாதீர்கள்' என்று சொல்லி

அந்த மருத்துக்களைத் தம்முடைய பார்ஷதர்களாக வைத்துக்கொண்டார். ஓ பரீட்சித்தே! அசுவத்தாமாவினுடைய அஸ்திரத்தால் அடிக்கப்பட்டும் பகவானுடைய கிருபையால் நீர் பிழைத்ததுபோல் அந்தக் கர்ப்பமானது வஜ்ஜிரத்தால் வெட்டப்பட்டும் ஸ்ரீ நாராயணனுடைய அனுக்கிரகத்தால் மரணம் அடையவில்லை. பகவானை ஒரு தடவை தரிசித்தாலும் அவருடைய சாரூப்பியத்தை அடைகிறார்கள். கொஞ்சம் குறைவாக ஒரு வருஷ காலம் திதியானவள் பகவானைப் பூஜித்தபடியால் அக் குழந்தைகள் மரணமடையவில்லை. அந்த நாற்பத்தொன்பது மருத்துக்களும் இந்திரனுடன் ஐம்பது மருத்துக்களானார்கள். திதியின் குற்றத்தை நினையாமல் மகேந்திரன் அவர்களைச் சோமபானமுள்ளவர்களாகச் செய்தார்.

68—70. திதியானவள் தூங்கி விழித்து அக்கினி போலப் பிரகாசிக்கும் புத்திரர்களை இந்திரனுடன் கண்டு களித்தாள். பிறகு இந்திரனை நோக்கி, "தேவர்களுக்கு பயத்தை உண்டுபண்ணக்கூடிய ஒரு புத்திரன் பிறக்க வேண்டி இந்த விரதத்தை அனுஷ்டித்தேன். அப்படியிருக்க நாற்பத்தொன்பது புத்திரர்கள் எப்படி உண்டானார்கள்? உனக்குத் தெரியுமானால் உண்மையைச் சொல்" என்றாள்.

71—78. அதனைக் கேட்ட மகேந்திரன் திதியை நோக்கி, 'உன்னுடைய அபிப்பிராயத்தைதெரிந்துகொண்டே நான் உனக்குச் சிசுருஷை செய்வதற்கு வந்தேன். அசுத்தையாகத் தூங்கும் சமயம் பார்த்து உன்னுடைய கர்ப்பத்தை வெட்டினேன். நான் தருமத்தை அறியாதவன்; தன் காரியத்திலேயே நோக்கமுள்ளவன்; உன்னுடைய கர்ப்பமானது ஏழு துண்டுகளாக வெட்டப்பட்டு ஏழு புத்திரர்களாக ஆயிற்று. பின்னும் அவைகளை ஏழாக வெட்டியும் அவைகள் மரணமடையவில்லை. அம்மா! அந்த ஆச்சரியத்தைப் பார்த்து, 'இது மகாபுருஷனுடைய பூஜையின் சித்தி' என்று நிச்சயித்தேன். பகவானைப் பலனை உத்தேசியாமல் ஆராதிப்பவர்களான எந்த மகான்கள் மோட்சத்தையும் விரும்புகிற

தில்லையோ, அவர்கள்தான் தங்களுடைய அனுக்கிரகத்தைத் தேடியவர்கள். ஜகத்திற்கு அதிபதியான தேவ தேவராகிய பகவானை ஆராதித்தும் எவன் விஷய போகத்தை விரும்பு வான்? [ஒருவனும் விரும்பமாட்டான் என்று கருத்து.] அந்த விஷய பாகமானது நரகத்திலும் கிடைக்கிறது. ஓ அம்ம! தெய்வச் செயலாகக் குழந்தைகள் மரணமடைய வில்லை. ஆனதால் மூடனாகிய என்னால் செய்யப்பட்ட குற்றத்தை மன்னிக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண் டார். அப்பொழுது திதியானவள் கபடமற்றுச் சந்தோஷ மாக இந்திரனுக்கு விடையளித்தாள். பின்பு மகேந்திரன் அவளை நமஸ்கரித்து மருத்துக்களுடன் சுவர்க்கஞ் சென்றார். ஓ மகாராஜ! உம்மால் கேட்கப்பட்ட மங்களமாகிய மருத் துக்களின் உற்பத்தியைச் சொன்னேன். இனி எதனைச் சொல்லவேண்டும்?'' என்று கேட்டார்.

# அத்தியாயம் 19

## பும்ஸவன விரதத்தின் சுரூபம்

அதனைக் கேட்ட அரசன் மகரிஷியை நோக்கி, "ஓ பிராமணோத்தம! பும்ஸவனம் என்ற விரதத்தைச் சொன்னீ ரல்லவா? ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்குப் பிரியமான அந்த விரதத் தின் சுரூபத்தைச் சொல்லவேண்டும்'' என்று கேட்டார்.

2—33. அதனைக் கேட்ட மகரிஷி அரசனை நோக்கி, "மார்க்கசீரிஷ மாதத்தில் சுக்லபட்சத்தில் இந்த விரதத்தைப் பர்த்தாவினுடைய அனுமதி பெற்றுக்கொண்டு ஸ்திரீகள் அனுஷ்டிக்கவேண்டும். இது சகல இஷ்டத்தையும் கொடுக் கக்கூடியது; ஸ்நானஞ் செய்து சுத்தையாக, சுத்தமான வஸ்திரத்தை உடுத்திக்கொண்டும், அலங்காரஞ் செய்து கொண்டும், முதலில் மருத்துக்களின் உற்பத்தியைக் கேட்டு பிராம்மணர்களிடம் உத்தரவு பெற்றுப் போசனஞ் செய்வ தற்கு முந்தியே லக்ஷ்மீதேவியுடன் ஸ்ரீ பகவானைப் பூஜிக்க வேண்டும். 'ஓ பகவன்! நீர் பூரணர். உமக்குப் பிறரால்

காரியமில்லை. ஒன்றிலும் உமக்கு அபேட்சையில்லை; நீர் மகா விபூதிகளுக்கு அதிபதி; அணிமா முதலிய சகல சித்திகளுள்ளவர்; மேலும் நீர் விபூதியையும், தேஜஸையும், தேக பலத்தையும், காந்தியையும் அடைந்திருப்பதுபோல சகல குணங்களாலும் பூர்ணராக இருக்கிறீர்; அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். விஷ்ணுவின் பத்தினியாகிய ஓ மாயையே! மகா புருஷனுடைய குணங்களுள்ளவளே! ஓ பிரியையே! மகா பாக்கியமுள்ளவளே! லோக மாதாவாகிய உமக்கு நமஸ்காரஞ் செய்கிறேன்' என்று நமஸ்காரஞ் செய்யவேண்டும். 'பகவானும், மகா புருஷனும், மகானுபாவருமாகிய ஸ்ரீ மகா விஷ்ணுவை மகா விபூதிகளுடன் பூஜை செய்கிறேன்' என்ற மந்திரத்தால் பிரதிதினமும் ஸ்ரீ விஷ்ணுவிற்கு ஆவாகனம், ஆசனம், அர்க்கியம், பாத்தியம், ஆசமனீயம், ஸ்நானம், உபவீதம், பூஷணம், சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், அன்னம் முதலிய நிவேதனம் ஆகிய உபசாரங்களைச் சாவதானமாகச் செய்யவேண்டும். மீதியான ஹவிஸ்ஸைப் 'பகவானும், மகா புருஷனும், மகா விபூதிகளுள்ளவருமாகிய பகவானுக்கு' என்ற மந்திரத்தால் அக்கினியில் பன்னிரண்டு தடவை ஹோமஞ்செய்யவேண்டும். ஸ்ரீ தேவியும், மகா விஷ்ணுவும் சகல காமங்களையும் கொடுக்கக்கூடியவர்கள். ஆனதால் சம்பத்தை விரும்பியவர்கள் பக்தியுடன் அவர்களைப் பூஜிக்க வேண்டும். பக்தியால் வணங்கிய மனத்துடன் நமஸ்கரிக்க வேண்டும். மந்திரத்தைப் பத்துத் தடவை ஜபிக்கவேண்டும். பின்பு தோத்திரஞ் செய்யவேண்டும். எப்படியெனில்— 'நீங்கள் இருவர்களும் உலகத்தில் எங்கும் இருப்பவர்கள்; உலகத்திற்குக் காரணர்கள்; இந்தப் பிரகிருதியானவள் சூட்சுமமான மாயா சக்தி. அதற்கு அதிபதியான ஈசுவரன் நீர் ஒருவரே. நீர் சகல யஜ்ஞ சுரூபி; இவள் யாகத்தைச் செய்யவேண்டுமென்று புத்தியை உண்டுபண்ணும் பாவனை என்ற சம்ஸ்கார சுரூபி, கிரியாசுரூபி; நீர் அதன் பலனை அனுபவிப்பவர்; இவள் குணங்களின் பிரகாச ரூபியாய் இருப்பவள்; நீர் அவைகளைப் பிரகாசப்படுத்துகிறவர்; நீர்

அதன் பலனை அனுபவிக்கிறவர்; நீர் சகல சுரூபியான ஆத்மா வாக இருப்பவர்; லக்ஷ்மியானவள் தேஹம்; இந்திரியங்கள் ஆகிய இவைகளை ஆச்சிரயித்தவள்; நாமரூபங்களாக இருப் பவள்; லட்சுமீதேவி; நீர் அவைகளைப் பிரகாசிக்கச்செய்பவர்; அவைகளுக்கு ஆதாரமாயிருப்பவர்; நீங்கள் இருவரும் எல்லா ஜனங்களுக்கும் வரத்தைக் கொடுப்பவர்களாகவும், அதிபதி களாகவும் இருப்பது போல என்னுடைய காமங்கள் பலிக் கும்படி அனுக்கிரகிக்கவேண்டும்' என்று லட்சுமீதேவி யுடன் பகவானைத் துதித்து, உபகாரம் முதலியவைகளைச் சமர்ப்பித்து ஆசமனியங்கொடுத்துப் பூஜிக்கவேண்டும். பின்பு சிஷ்டமான அன்னத்தை முகர்ந்து, மின்னும் பலவகையான தோத்திரஞ் செய்து ஸ்ரீ மகா விஷ்ணுவைப் பூஜிக்கவேண் டும். பர்த்தாவையும் மகா புருஷனைப் பாவித்து, பிரியமான வார்த்தை முதலானவைகளால் அவரையும் உபாசிக்கவேண் டும். பர்த்தாவும் மிகுந்த பிரியத்துடன் அந்த விரதத்தின் காரியங்களை நிர்வகிக்கவேண்டும். தம்பதிகளுக்குள் யாரால் செய்யப்பட்டாலும் அது இருவர்களாலும் செய்யப்பட்டதே யாம். பத்தினியால் செய்ய முடியாதபோனால் பர்த்தாவே செய்யலாம். இந்த விஷ்ணு விரதத்தை எப்படியாவது நடத்தவேண்டும்; கெடுக்கக்கூடாது. இப்படி பிராமமண ஸ்திரீகள் புஷ்பமாலைகளாலும், சந்தனத்தாலும், அன்னம் முதலியவைகளாலும், அலங்காரத்தாலும் நியமத்துடன் பகவானைப் பூசிக்கவேண்டும். பின்பு பகவானை உத்வாசனம் செய்து, அவருக்கு நிவேதனஞ்செய்து அன்னத்தை அவரு டைய முன்பாகப் புசிக்கவேண்டும். அதனால் சித்தசுத்தி யையும், சகல கர்மங்களையும் அடைவார்கள். இப்படி பன்னிரெண்டு மாதங்கள்கொண்ட ஒரு வருஷம் விரததை அனுஷ்டித்துக் கார்த்திகை மாதத்தின் கடைசியான நாளில் பகவானை உபாசிக்கவேண்டும். மறுநாள் காலையில் சுத்தை யாக முன்போல் ஸ்ரீகிருஷ்ணனைப் பூஜித்துப் பாலில் பக்குவ மான அன்னத்தை நெய்யுடன் ஹோமஞ் செய்யவேண்டும். இப்படி பர்வத்தில் செய்யப்படும் ஸ்தாலீபாக விதிப்படி பன்னிரண்டு ஹோமம் செய்யவேண்டும். பினபு பனனி

ரெண்டு பிராம்மணர்களுக்குப் போசனம் செய்விக்கவேண்டும். மேலும் அவர்களுக்கு உப பாத்திரம், எள்ளு, வெல்லம் ஆகிய இவைகளைக் கொடுத்து, பிராம்மணர்களுடைய ஆசீர்வாதத்தைப் பெற்று, அவர்களை நமஸ்கரித்து அவர்களுடைய உத்தரவின்பேரில் ஆசாரியனை முன்னிட்டுப் பந்துக்களுடன் புசிக்கவேண்டும். ஹோமஞ்செய்து எஞ்சிய சருவைப் பத்தினிக்குக் கொடுத்துப் புசிக்கச் செய்யவும். அது நல்ல புத்திரனைக் கொடுக்கக்கூடியது; இந்த விரதத்தை முறைப்படி அனுஷ்டித்த புருஷன் சகல இஷ்டத்தை அடைவான். ஸ்திரீ அனுஷ்டித்தால் சம்பத்து, பிரஜை, நீண்ட ஆயுள் உள்ள புருஷன், கீர்த்தி, நற்குணங்கள் ஆகிய இவைகளை அடைவாள். கன்னிகையாக இருப்பவள் அனுஷ்டித்தால் அழகான புருஷனை யடைவாள். விதவை அனுஷ்டித்தால் உத்தம கதியை அடைவாள். எவளுக்குக் குழந்தைகள் சிறு வயதிலேயே மரணமடைகின்றனவோ, அவள் இந்த விரதத்தை அனுஷ்டித்தால் தீர்க்க ஆயுசுள்ள புத்திரனை அடைவாள். பணமுள்ளவளானாலும் எவள் அழகில்லாதவளோ, அவள் அழகை அடைவாள். எவள் அழகுள்ளவளோ, அவள் மேலான ரூபத்தை அடைவாள். எவள் வியாதியுள்ளவளோ அவள் ரோகமற்றவளாக ஆவாள். அவளுடைய தேகமானது திருடமான இந்திரியங்கள் உள்ளதாகும். இதனைப் பிதிரு காரியங்களில் படித்தால் பிதிரு தேவர்கள் மிகவும் திருப்தி அடைவார்கள். ஹோமஞ் செய்த பின்பு அக்கினியும் ஸ்ரீமந் நாராயணனும் சந்தோஷத்தை அடைந்து சகல காமங்களையும் கொடுப்பார்கள். ஓ மகாராஜ! மருத்துக்களுடைய பிறப்பையும் புண்ணியகரமான திதியின் விரதத்தையும் சொன்னேன்" என்றார்.

சுபம்!

உ

ஸ்ரீ கிருஷ்ணாய பரமாத்மனே நம:

# ஸ்ரீமத் பாகவதம்

## ஏழாவது ஸ்கந்தம்



மொழிபெயர்த்தவர் :

இஞ்சிக்கொல்லை

பிரும்மஸ்ரீ ஆர். சிவராம சாஸ்திரிகள்

ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ்

ஸ்ரீ வேதவிநாயகர் தெரு

கும்பகோணம்

பதிப்புரிமை ] 1949 [ விலை ரு. 1—8—0

# பொருளடக்கம்

உ

ஸ்ரீ வேதவிநாயகர் துணை

# ஸ்ரீமத் பாகவதம்

---

## ஏழாவது ஸ்கந்தம்

### அத்தியாயம் 1

#### பார்ஷதர்களுடைய சாபம்

அதனைக் கேட்ட அரசன் மகரிஷியை நோக்கி, "ஓ பிராம்மணா! ஸ்ரீபகவான் எல்லாப் பிராணிகளையும் சமமாகப் பார்ப்பவர்; ஸுஹ்ருத்தாக இருப்பவர்; அப்படிப்பட்ட பகவான் இந்திரனுக்காகப் பிராகிருத புருஷன்போல் அசுரர்களைக் கொல்வது நியாயமா? பரமானந்த ஸ்வரூபியான பகவானுக்குத் தேவர்களால் ஆகவேண்டிய காரியம் ஒன்றுமில்லையே. அசுரர்களிடத்தில் அவருக்குத் துவேஷமும் இல்லையே. மேலும், குணங்களற்றவராகிய அந்தப் பகவானுக்குப் பயமுமில்லையே. ஓ மகா பாக்கியமுள்ளவரே! ஸ்ரீமந் நாராயணனுடைய குணங்களைப்பற்றி மிகுந்த சமுசயமாயிருக்கிறது. அதனை நிவர்த்திக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

4—22. அதைக் கேட்டுச் சுகர் அரசனை நோக்கி, "ஓ மகா பாக்கியமுள்ளவரே! ஸ்ரீ மகாவிஷ்ணுவின் சரிதம் மிகவும் அற்புதமானது; பாகவதரான பிரகலாதருடைய மகிமை பகவானிடத்தில் பக்தியை விருத்தி செய்யக்கூடியது என்று நாரதர் முதலிய மகரிஷிகளால் கானஞ்செய்யப்படுகிறது. மேலானதும், புண்யகரமானதுமான அந்த ஹரிகதையை ஸ்ரீ கிருஷ்ண பகவானை நமஸ்

கரித்துச் சொல்லுகிறேன். பிரகிருதிக்கும் மேலானவரும், சகல ஜகத்திற்கும் காரணரும், உற்பத்தியற்றவருமாகிய பகவானுக்கு ஒருவரிடத்தில் பிரீதி, மற்றொருவரிடத்தில் துவேஷமென்ற பேதபுத்தி இல்லை. ஆனாலும், அவர் தம்முடைய மாயையின் குணத்தால் சிலருக்கு க்ஷேமத்தைச் செய்பவரும், சிலருக்குக் கெடுதியைச் செய்பவருமாக ஆகிறார். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் பிரகிருதியின் குணங்கள். அவைகள் ஆத்மாவின் குணங்களல்ல. அவைகள் ஒரே சமயத்தில் விருத்தியடைகிறதும் இல்லை; குறைகிறதுமில்லை. ஸத்வகுணம் விருத்தியாகும்பொழுது தேவதைகளையும், மகரிஷிகளையும் பகவான் அந்தக் காலத்திற்குத்தக்கபடி அடைகிறார். ரஜோகுணத்திற்கு ஜயகாலமேற்படும்பொழுது அந்தக் குணத்தைப் பிரதானமாகக்கொண்ட அசுரர்களையும், தமோகுணத்தின் ஜயகாலத்தில் அதனைப் பிரதானமாகக் கொண்ட யக்ஷர்களையும், ராக்ஷஸர்களையும் அநுக்கிரகிக்கிறார். அக்னியானது ஒன்றானாலும் எப்படிக் கட்டை முதலியவைகளை ஆச்ரயித்து அநேகவிதமாகத் தோற்றுகிறதோ, எப்படி ஜலமானது ஒன்றானாலும் பாத்திரபேதத்தால் பலவகையாகத் தோன்றுகிறதோ, எப்படி ஆகாயம் முதலியவை ஒன்றானாலும் உபாதி சம்பந்தத்தால் அநேகமாகத் தோன்றுகின்றனவோ அப்படி ஆத்மா ஒருவரானாலும் பலவகையாகத் தோன்றுகிறார். தேகம் முதலியவைகளைக் காட்டிலும் விலட்சணரென்று தனியே தோன்றவில்லை. ஆனாலும் வித்துவான்கள் காரியம், காரணம் இவைகளை நன்றாக விசாரித்து விவேகத்தால் தெரிந்துகொள்ளுகிறார்கள். எப்பொழுது ஜீவனுடைய உபயோகத்திற்காகத் தேகத்தைச் சிருஷ்டிக்கவேண்டுமென்ற இச்சை உண்டாகிறதோ, அப்பொழுது ரஜஸ்ஸைத் தனியே சிருஷ்டிக்கிறார். விசித்திரங்களான அந்தக்

தேகங்களில் கிரீடிக்க விரும்பும்பொழுது ஸத்துவத்தை சிருஷ்டிக்கிருர். சங்கரிக்க விரும்பியபோது தமஸ்ஸைத் தனியாகப் பிரிக்கிருர். ஓ அரசனே! பிரகிருதி, புருஷன் ஆகிய இவர்களை நிமித்தமாக வைத்துக்கொண்டு அமோக மான காரியத்தைச் செய்யும் ஈச்வரன் அவைகளுக்குச் சகாயமாகச் சஞ்சரிக்கும் காலத்தைச் சிருஷ்டிக்கிருர். அந்தக் காலமும் ஸத்துவத்தை விருத்தி செய்கிறது. பகவான் தேவர்களை விருத்திசெய்கிருர். மேலும் விசேஷ கீர்த்தியுள்ள பகவான் அவர்களுக்கு விரோதிகளும், ரஜஸ், தமஸ் இவைகளின் சுபாவமுள்ளவர்களுமான அசுரர்களை நாசஞ்செய்கிருர். மேலும், தம்மால் சிருஷ்டிக்கப் பட்ட ஜகத்தைப் பரிபாலிப்பதற்காக விஷ்ணுவாகிய நீர் தேவகணங்களை விருத்திசெய்கிறீர். (காலத்தின் மகிமை யால் கலங்கிய குணங்களால் மாறுதல் ஏற்படுகிறதே யொழியப் பகவானுக்கு வைஷம்யமில்லை. சன்னிதி மாத்திரத்தால் தோன்றுகிறதென்று தாத்பரியம்.) தர்ம புத்திரருடைய ராஜசூய யாகத்தில் நாரதரால் சொல்லப் பட்ட ஒரு இதிகாசத்தை இந்த விஷயத்தில் உதாரண மாகச் சொல்லுகிறேன். அது மிகவும் புண்யகரமானது. தர்மபுத்திரர் தம்முடைய ராஜசூய யாகத்தில் சிசுபாலன் பகவானிடத்தில் ஸாயுஜ்யமடைந்ததான ஆச்சரியத்தைக் கண்ணுற்று மற்ற மகரிஷிகள் கேட்டிருக்கும்பொழுது அவ்விடத்திலிருக்கும் நாரத மகரிஷியை நோக்கி, "பகவா ணுகிய வாசுதேவரிடத்தில் சிசுபாலன் ஸாயுஜ்யமடைந்தது அற்புதமாக இருக்கிறதே. இது ஏகாந்த யோகிகளுக்கும் கிடைப்பதரிது. பகவானை நிந்தித்ததால் வேனனைப் பிராம்மணர்கள் சபித்தார்கள். தமகோஷனுடைய புத்திர ணுகிய சிசுபாலனும், துர்ப்புத்தியுள்ள தந்தவக்திரனும் பாலியம் முதல் இதுவரையில் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் விரோத புத்தியுடன் நிந்தித்துக்கொண்டிருந்தார்கள்.

பரப்பிரம்மமாகிய ஸ்ரீகோவிந்தனை எப்பொழுதும் நிந்தித்த அவர்களுடைய நாக்கில் குஷ்டமுண்டாகவில்லை; மிகுந்த கஷ்டமும் நேரிடவில்லை. அறியமுடியாத தேஜசுள்ள பகவானிடத்தில் அப்படிப்பட்ட அவர்கள் எல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது எப்படி லயத்தை அடைந்தார்கள்? இந்த சமுசயத்தால் பெருங்காற்றில் அகப்பட்ட தீபஜ்வாலைபோல் என்னுடைய புத்தி அலை கிறது. இதனைச் சொல்லவேண்டும்" என்றார்.

23—35. அதனைக் கேட்டு நாரதர் தர்மபுத்திரரை நோக்கி, "நிந்திப்பது, ஸ்தோத்திரஞ் செய்வது, பூஜிப் பது, அவமதிப்பது ஆகிய இவைகள் ஜீவன், தேகம் இவைகளுடைய உண்மையை அறியாததனால்(அபிமானத் தால்) ஏற்பட்டவை. பிராணிகளுக்கு, 'நான், என்னுடை யது' என்ற அபிமானத்தால் இம்சை, தண்டம், நிஷ்டூர மாகப் பேசுவது ஆகிய இவைகள் உண்டாகின்றன. எந்தச் சரீர சம்பந்தத்தால் அபிமானமுண்டாகிறதோ, அந்தச் சரீரத்தின் வதத்தால் பிராணிகளுக்கு வதம் நேரிடு கிறது. சகல சுருபியும், தாமொருவருமாகிய பகவானுக்கு மேற்சொல்லிய வைஷம்யமுண்டாகிறதில்லை. அநுகூலத் திற்காகவே சிட்சிப்பவரான பகவானுக்கு இம்சை யாரால் செய்யமுடியும்? ஆனதால் விரோதத்தினாலாவது, விரோதமில்லாதிருப்பதினாலாவது, பயத்தினாலாவது, ஸ்நேகத்தாலாவது, காமத்தாலாவது மனத்தைப் பகவா னிடத்தில் சமர்ப்பிக்கவேண்டும்; பேதபுத்தி வைக்கக் கூடாது. மேலும், பகவானிடத்தில் விரோத புத்தியை வைத்துத் தன்மயமாக ஆவதுபோல் பக்தியோகத்தால் சித்தியடைகிறதில்லை. சுவரில் புழுவை வைத்து, அதன்மீது குளவியானது கூடு கட்டி எப்பொழுதும் சப்தித்துக்கொண்டு அதனைச் சுற்றிக்கொண்டிருக்கிறது. உள்ளிருக்கும் புழுவானது துவேஷத்தாலும் பயத்தாலும்

அதனையே நினைத்துக்கொண்டு தானும் அதுவாக ஆகிறதுபோல மாயா மனிதனும், உண்மையில் ஈசுவரனு மாகிய ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் விரோதத்தால் புத்தியைச் செலுத்தி, பாபமில்லாதவர்களாகச் சுத்தர்களாகி அந்தப் பகவானைச் சிலர் அடைகிறார்கள். அநேகர்கள் காமத் தாலும், துவேஷத்தாலும், பயத்தாலும், ஸ்நேகத்தாலும், பக்தியாலும் பகவானிடத்தில் மனத்தைச் செலுத்தி, சுத்தர்களாகி அவருடைய கதியை அடைந்தார்கள். காமத்தால் கோபிகைகள் நல்ல கதி யடைந்தார்கள். கம்ஸன் பயத்தால் பகவானையே நினைத்து நல்ல கதியை அடைந்தான். சிசுபாலன் முதலியவர்கள் துவேஷத் தாலும், விருஷ்ணிகள் சம்பந்தத்தாலும், நீங்கள் ஸ்நேகத் தாலும், நாங்கள் பக்தியாலும் நல்ல லோகத்தை(பகவானை) அடைந்தோம். மேற்சொல்லிய பக்தியில் ஒருவித பக்தி யும் வேனனால் செய்யப்படவில்லை. அதனால் அவனுடைய பாபம் பலித்தது. ஆனதால் எந்த உபாயஞ்செய்தாவது மனத்தை ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் சமர்ப்பிக்கவேண்டும். மேலும், உமக்குச் சிறிய தாயாருடைய புத்திரர்களாகிய சிசுபாலன், தந்தவக்திரன் ஆகிய இவர்கள் ஸ்ரீ மகா விஷ்ணுவின் பார்ஷதர்களாக இருந்தவர்கள்; பிராம்மண சாபத்தால் அந்தப் பதத்தை விட்டுப் பூமிக்கு வந்தவர் கள்" என்று சொன்னார்.

36—37. அதனைக் கேட்ட தர்மபுத்திரர் நாரதரை நோக்கி, "ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பக்தர்களுக்குச் சாபம் எப்படி ஏற்பட்டது? பகவானிடத்தில் ஏகாந்தமாகப் பக்தி செய்யும் பக்தர்களுக்குத் திரும்பவும் ஜனனமேற் பட்டதென்பது நம்பக்கூடியதாகத் தோன்றவில்லை. பிராகிருதமான தேகம், இந்திரியங்கள், பிராணன் ஆகிய இவைகளற்றவர்களான வைகுண்ட லோகத்தில் வசிப் பவர்களுக்குப் பிராகிருத தேகத்தின் சம்பந்தம் எப்படி

உண்டாயிற்று? அதனைச் சொல்லவேண்டும்'' என்று கேட்டார்.

38—50. அதனைக் கேட்ட நாரதர் தர்மபுத்திரனை நோக்கி, "ஒருகால் பிரம்மதேவருடைய புத்திரர்களான சநந்தர் முதலியவர்கள் மூவுலகமும் சஞ்சரிக்கும்போது தெய்வச்செயலாக விஷ்ணுலோகம் சென்றார்கள். அவர்கள் ஐந்தாறு வயதுள்ள சிறுவர்கள் போன்றவர்கள்; மூன்றோர்க்கும் முந்தியவர்கள்; திக்குகளையே வஸ்திரமாகக் கொண்டவர்கள்; அவர்களைக் கண்ட விஷ்ணுவின் துவாரபாலகர்கள் சிறுவர்களென்று நினைத்து உள்ளே போகக்கூடாதென்று தடுத்தார்கள். அப்பொழுது அந்தக் குமாரர்கள் துவாரபாலகர்களை நோக்கி, "ரஜோ குணம், தமோ குணம் இவைகளில்லாத ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பாத மூலத்திலிருக்கும் உங்களுக்கு இந்த ஸ்தானம் தகுதியில்லை. ஆனதால் மூர்க்கர்களான நீங்கள் சீக்கிரம் அசுர ஜன்மத்தை அடைவீர்கள்'' என்று சபித்து, மூன்று ஜன்மத்திற்குப் பிறகு பார்ஷதர்களாக வருவீர்களென்றும் கிருபையுடன் அனுக்கிரகித்தார்கள். அவர்கள் ஹிரண்யகசிபு, ஹிரண்யாட்சன் என்ற பெயருடன் திதிக்குப் புத்திரர்களாகப் பிறந்தார்கள். அவர்களில் ஹிரண்யகசிபு என்பவன் நரசிம்ம ரூபியான பகவானால் கொல்லப்பட்டான். ஹிரண்யாட்சன் என்பவன் பூமியைப் பாதாளத்திலிருந்து கொண்டுவந்த வராக ரூபியான பகவானால் கொல்லப்பட்டான். ஹிரண்யகசிபு என்பவன் பகவானிடத்தில் பக்தனும், தன்னுடைய புத்திரனுமாகிய பிரகலாதனைக் கொல்ல விரும்பி, பல வகையாக உபத்திரவித்தான். அந்தப் பிரகலாதன் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருந்ததாலும், சாந்தராக இருந்தபடியாலும், எல்லாரையும் சமமாகப் பார்ப்பவரானதாலும், பகவானுடைய தேஜஸால் காப்பாற்றப்பட்டிருந்த

தானும் அவரைக் கொல்ல முடியவில்லை. பிறகு அவர்கள் கேகசியினிடத்தில் விச்ரவசு என்பவருக்கு ராவணன், கும்பகர்ணன் என்ற பெயருள்ள புத்திரர்களாகப் பிறந்தார்கள். அவர்கள் சகல லோகங்களுக்கும் உபத்திரவத்தைச் செய்தபடியால் பகவான் ஸ்ரீ ராமனாக அவதரித்து அவர்களைக் கொன்றார். அந்த ஸ்ரீ ராமனுடைய சரித்திரத்தை மார்க்கண்டேயர் உமக்குச் சொல்வார். அவர்களே இப்பொழுது உம்முடைய சிறிய தாயாருக்குப் புத்திரர்களாகப் பிறந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனுடைய சக்கரத்தால் அடிக்கப்பட்டுச் சுத்தர்களானார்கள். பகவானிடத்தில் இடைவிடாமல் விரோதத்தைச் செலுத்தி, அதனால் எப்பொழுதும் அவரைத் தியானஞ்செய்து ஸ்ரீ மகா விஷ்ணுவின் பார்ஷத பதத்தை அடைந்தார்கள்" என்றார். அதைக் கேட்டு தர்மபுத்திரர் நாரதரை நோக்கி, "ஓ பகவன்! புத்திரனிடத்தில் பிதாவுக்குத் துவேஷமுண்டாவதற்கு என்ன காரணம்? மேலும், அசுரனாகிய பிரகலாதன் ஸ்ரீ கிருஷ்ண பக்தராக இருந்த காரணம் என்ன?" என்று வினவினார்.

## நோட்டு

**அடைகிறார்:-** அவர்களுடைய தேகத்தில் பிரவேசித்து விருத்தி செய்கிறார். அவரவர்களுடைய கர்மத்திற்குத் தக்கபடி சத்துவ குணம் விருத்தியாகும்பொழுது தேவர்களையும் மகரிஷிகளையும் பகவான் அனுக்கிரகிக்கிறார். குணம் எப்பொழுது விருத்தி அடையுமோ அப்பொழுது சத்துவ குணம் விருத்தியடைந்திருப்பதாகத் தெரிந்துகொள்ள வேண்டும். ரஜோ குணம் விருத்தியாகும்பொழுது அதிக ஆசையும், கர்மங்களை ஆரம்பிப்பதும், சாந்தி அடையாமலிருப்பதும் இவைகள் உண்டாகின்றன. தமோ குண காலத்தில் ஒன்றும் தோன்றாமலிருப்பது, ஒரு காரியத்திலும் பிரவர்த்தியில்லாமலிருப்பது. **பகவத் கீதை:—** எல்லாப் பிராணிகளுக்கும் அந்தர்யாமியாக இருக்கும் பகவான் ஒருகால் தேவர்

களுக்கு ஜயத்தையும், மற்றொரு காலத்தில் அசுரர்களுக்கு ஜயத்தையும் கொடுக்கிறார் என்பதில்லை. ஆனால் அவரவர்களுடைய கர்ம பரிபாகத்திற்குத் தக்கபடி சத்துவம் முதலிய குணங்கள் விருத்தியாகின்றன. அப்பொழுது அவரவர்களுக்கு ஜயமாவது அபஜயமாவது உண்டாகிறது. ஆனதால் பகவானுக்கு ராகமாவது த்வேஷமாவது இல்லை. **ஆட்சேபம்:—** சத்துவ குணம் விருத்தியாகும்பொழுது சத்துவ குண ஸ்வபாவமுள்ள தேவர்களைப் பகவான் அடைந்து அனுக்கிரகிக்கிறார் என்பது யுக்தம். ரஜோ குணம், தமோ குணம் ஆகிய இவைகளின் விருத்தி காலத்தில் அசுரர்களை அனுக்கிரகிக்கிறாரென்பது நியாயமாகுமா? அந்தக் குணங்களின் விருத்தியானது துக்கத்தையும், மோகத்தையும் உண்டுபண்ணக்கூடியதல்லவா? **சமாதானம்:—** தேவர்களுக்குப் பெரும்பாலும் சத்துவ குணமே இருக்குமாகையால் பெரும்பாலும் ஜயமுண்டாகிறது. அசுரர்கள் பெரும்பாலும் ரஜோ குணம், தமோ குணமுள்ளவர்களாகையால் பெரும்பாலும் அபஜயம், ஒருகால் ஜயமும் உண்டாகிறதென்று கண்டுகொள்க.

## அத்தியாயம் 2

### ஹிரண்யகசிபு தன் மாதாவைச் சமாதானஞ் செய்தது

அதனைக் கேட்ட நாரதர் தர்மபுத்திரரை நோக்கி, "ஹிரண்யாட்சனை வராகமூர்த்தியான பகவான் கொன்ற பிறகு அவனுடைய பிராதாவாகிய ஹிரண்யகசிபுவானவன் மிகுந்த கோபத்தாலும், துக்கத்தாலும் தாபமடைந்தான். மேலுமவன் கோபத்தால் உதடுகளைக் கடித்து, ஜ்வலிக்கும் கண்களால் ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு சிங்கப் பற்களால் பயங்கரமாகிய பார்வை உள்ளவனாகி, புருவ நெரித்தலுடன் சூலத்தை உயரத் தூக்கி, சபையில் தானவர்களை நோக்கி, "ஓ தானவர்களே! தைத்தியர்களே! த்ரிமூர்த்தாவே! ஓ த்ரியட்ச! ஓ சம்பர! ஓ சதபாகுவே! ஓ ஹயக்ரீவா! ஓ நமுசியே! ஓ பாக! ஓ இல்வல! ஓ விப்ரசித்தியே! ஓ புலோமன்!

ஓ சகுனன் முதலியவர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். தாமதியாமல் அப்படிச் செய்யுங்கள். ஸ்ரீ மகாவிஷ்ணு எல்லாரிடத்திலும் சமமாக இருப்பவரானு லும் நமக்குச் சத்துருக்களும், அற்பர்களுமான தேவர் கள் அவரை உபாசித்து அவருடைய சகாயத்தால் என்னுடைய பிரியனுகிய சகோதரனைக் கொன்றார்கள். அந்த மகாவிஷ்ணு தம்முடைய சுபாவத்தை விட்டவர்; [எல்லாரையும் சமமாகப் பார்ப்பதென்ற சுபாவத்தை] தேஜோரூபியானாலும் மாயையால் வராகரூபத்தைத் தரித் தவர்; சிறுவன் போல் தம்மை உபாசிப்பவன் இஷ்டப்படி நடக்கக்கூடியவர்; இம்மாதிரி சஞ்சல சுபாவமுள்ள அந்த விஷ்ணுவினுடைய கழுத்தைச் சூலத்தால் வெட்டி, அதி லிருந்து பெருகிவரும் ரத்தத்தால் பிரியமுள்ள என்னு டைய பிராதாவைத் திருப்தி செய்கிறேன்; கவலையை நிவர்த்தித்துக்கொள்ளுகிறேன். அந்த மகாவிஷ்ணு தேவர்களுக்குப் பிராணன் போலிருப்பவர்; அவரைக் கொன்றால் வேரற்ற மரத்தின் கிளைகள் உலர்ந்துபோவது போலத் தேவர்கள் சக்தியற்றவர்களாவார்கள். ஆன தால் நீங்கள் எல்லோரும் பிராம்மணர்களாலும, க்ஷத்திரி யர்களாலும் நிறைந்த பூமிக்குச் சென்று தவம், யாகம், அத்தியயனம், விரதம், தானம் ஆகிய இவைகளைச் செய் பவர்களைக் கொல்லுங்கள். பிராம்மணர்களால் செய்யப் படும் அனுஷ்டானமே ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்குக் காரணமா யிருக்கிறது. மேலும், அவர் யக்ஞம், தர்மம் ஆகிய இவை களின் சுரூபம்; தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பிதிருக் களுக்கும், பூதங்களுக்கும, தர்மத்திற்கும் முக்கியமாகச் சகாயஞ் செய்பவர்; ஆனதால் எந்த எந்தத் தேசத்தில் பிராமணர்களும், பசுக்களும் நிறைந்திருக்கின்றனவோ, எந்தத் தேசத்தில் வேதாத்தியயனம் செய்கிறார்களோ,

மேலும் எந்தத் தேசத்தில் வர்ணத்திற்கும், ஆச்சிரமங்களுக்கும் உரிய கர்மங்கள் அனுஷ்டிக்கப்படுகின்றனவோ அந்தத் தேசத்திற்குச் சென்று அக்கினியை வைத்துக் கொளுத்துங்கள்; நாசஞ் செய்யுங்கள்" என்று ஆஞ்ஞாபித்தான். அதனைக் கேட்ட அசுரர்கள் அவனுடைய உத்தரவைச் சிரஸால் வகித்துப் பிரஜைகளை உபத்திரவித்தார்கள். இயற்கையிலேயே அவர்கள் பிறரை உபத்திரவிப்பதில் பிரியமுள்ளவர்கள்; பட்டணங்கள், கிராமங்கள், பசுக்கள் இருக்குமிடம், உத்தியானங்கள், க்ஷேத்திரங்கள், தோட்டங்கள், ஆசிரமங்கள், ரத்தினம் விளையும் பூமி, பயிரிடுவோர்கள் வசிக்கும் பூமி, மலையின் குகை, இடைச்சேரிகள் ஆகிய இவைகளில் அக்னியை வைத்துக் கொளுத்தினார்கள். சிலர் மண்வெட்டியை எடுத்து அணைகளையும் பிராகாரங்களையும், கோபுரங்களையும் பிளந்தார்கள். சிலர் கோடரியால் ஜீவிகைக்குச் சாதனமாகிய விருட்சங்களை வெட்டினார்கள். மற்றுஞ் சிலர் ஜ்வலிக்கும் கொள்ளிகளைக்கொண்டு ஜனங்களுடைய வீடுகளை எரித்தார்கள். இப்படி ஹிரண்யகசிபுவின் வேலைக்காரர்கள் உலகத்திற்கு உபத்திரவத்தைச் செய்யும்பொழுது தேவர்கள் சுவர்க்கத்தை விட்டுப் பூமியில் மறைந்து சஞ்சரித்தார்கள்.

17—35. ஹிரண்யகசிபுவானவன் தன்னுடைய பிராதாவிறகுத் திலோதகம் (தர்ப்பணம்) முதலியவைகளைச்செய்து, அவனுடைய புத்திரர்களுக்குச் சமாதானஞ் சொன்னான். பின்னும், காலத்தை அறிந்த ஹிரண்யகசிபு சகுனி, சம்பரன், தார்ஷ்டி, பூதசந்தாபனன், விருகன், காலநாபன், மகாநாபன், ஹரிச்மச்ரு, மடுதாக்கசன் என்ற ஹிரண்யாட்சனுடைய புத்திரர்களையும், அவர்களுடைய மாதாவான விருஷத்பானு என்பவளையும், தன்னுடைய மாதாவாகிய திதியையும் நோக்கி, "ஓ அம்ம !

ஓ நாட்டுப் பெண்களே! ஓ சூரர்களான புத்திரர்களே! நீங்கள் துக்கிப்பது உசிதமல்ல. யுத்தத்தில் சத்துருவைக் கண்டு பயப்படாமல் யுத்தஞ்செய்து மரணமடைவதே சூரர்களுக்கு மேலானது. மேலும், கர்மத்தால் ஜனங்கள் சில சமயம் ஒரேவிடத்தில் சேர்ந்திருக்கிறார்கள்; கர்மத்தாலேயே பிரிக்கப்படுகிறார்கள். இது தண்ணீர்ப் பந்தலில் ஜனங்கள் சேர்ந்து பிரிவதுபோலிருக்கிறது. ஆத்மா நித்தியன்; நாசமற்றவன்; சுத்தன்; எங்குமிருப்பவன்; எல்லாவற்றையும் அறிந்தவன்; மேலானவன்; ஆனாலும் தன்னுடைய மாயையால் குணங்களைச் சிருஷ்டித்துச் சரீரத்தை அடைகிறான். ஜலம் அசையும்பொழுது அதில் பிரதிபிம்பித்த மரங்கள் அசைவதுபோலத் தோன்றுகின்றன அல்லவா? [இதனால் உபாதியின் தர்மம் உபசிதத்தில் காணப்படுகின்றது என்று காட்டப்பட்டது.] கண்கள் சுற்றும்பொழுது பூமி சுற்றுகிறது போல் தோற்றுகிறது. (இதனால் கிரகிக்கிறவனுடைய தர்மமானது கிரகிக்கப்படுவதினுடைய தர்மமல்லவென்று காட்டப்பட்டது.) ஆனதால் ஆத்மாவானவன் லிங்கமில்லாதவனானாலும், பூர்ணனானாலும், குணங்களால் சுற்றப்படும் மனத்தின் சாம்யத்தை அடைந்து, சரீரமுள்ளவன் போல் பிரகாசிக்கிறான். சரீரமற்றவனாகிய ஆத்மா தேகாபிமானத்தை அடைந்திருப்பதே ஆத்மாவின் மாறுதல். இப்படியே பிரியமான வஸ்துக்களை அடையாமலிருப்பது, அப்பிரியத்தை அடைகிறது, கர்மம், சம்சாரம் இவைகளும் ஆத்மாவிற்கு அபிமானத்திலேயே ஏற்படுகின்றன. மேலும் உற்பத்தி, விநாசம், பலவகையான துக்கம், அவிவேகம், சிந்தை, ஆப்தனால் போதிக்கப்பட்டும் விவேகத்தை மறந்துவிடுவது ஆகிய இவைகளே சம்சாரம். இந்த விஷயத்தில் யமனுக்கும், பிரே

தத்தின் பந்துக்களுக்கும் நேர்ந்த சம்வாத ரூபமாகிய இதிகாசத்தைச் சொல்லுகிறேன். உசீனர தேசத்தில் சுயக்ஞரென்று ஓர் அரசனிருந்தார்; அவர் யுத்தத்தில் சத்துருக்களால் கொல்லப்பட்டார். அவருடைய ரத்நமயமாகிய கவசம் உடைந்தது; ஆபரணங்களும் மாலைகளும் சிதறின; பாணத்தால் அடிக்கப்பட்டு ரத்தத்தால் பூசப்பட்டு யுத்தஸ்தலத்தில் விழுந்தார்; அவருடைய தலை மயிர் அலங்கோலமாயிருந்தது; அவர் உதடுகளைக் கடித்துக் கொண்டிருந்தார். அவருடைய முகமானது தூளிகளால் வியாபிக்கப்பட்டிருந்தது; ஆயுதங்களும், கைகளும் வெட்டப்பட்டிருந்தன; இப்படி தெய்வச்செயலால் அடிப்பட்டுப் பூமியிற் கிடக்கும் அந்த சுயக்ஞரைச் சுற்றி அவருடைய பந்துக்கள் உட்கார்ந்து துக்கித்தார்கள். மேலும் அவருடைய பத்நிகள், 'ஓ நாத! அடிக்கப்பட்டோம்' என்று சொல்லி மார்பில் இரு கைகளால் அடித்துக்கொண்டு அவருடைய காலில் விழுந்தார்கள். அவர்களுடைய கண்களிலிருந்து பெருகிவரும் தண்ணீர் ஸ்தனத்தில் விழுந்து அங்கிருக்கும் குங்குமத்தைக் கரைத்துக்கொண்டு அரசனுடைய காலில் விழுந்தது. மேலுமவர்கள் ஆபரணங்களைக் கழற்றியும், தலைமயிரை அவிழ்த்துக்கொண்டும் பின்வருமாறு பிரலாபித்தார்கள். அவர்களைப் பார்க்கும் ஜனங்கள் வருத்தப்படும்படி இருந்தது. "ஓ மகாராஜ! எந்தப் பிரம்மதேவர் உம்மை உசீனர தேசத்திற்கு அதிபதியாகச் செய்தாரோ, அவர் தயவில்லாமல் உம்மை எங்களுடைய கண்களுக்குப் புலப்படாமலிருக்கும்படி செய்தார். இந்தத் தேசத்திய ஜனங்கள் மிகவும் துக்கிக்கிறார்கள். செய்த உபகாரத்தை அறிந்தவரும், மிகவும் சுகிருத்துமான உம்மைவிட்டுப் பிரிந்து நாங்கள் எப்படி வசிப்போம்? ஓ சூரராகிய மகாராஜ! நீர் எவ்விடத்திற்குப் போகிறீரோ, அவ்விடத்திற்கு எங்களையும்

அழைத்துக்கொண்டு போகவேண்டும்'' இம்மாதிரி அவர்கள் பிரலாபித்து மரணமடைந்த அரசனுடைய சரீரத்தை ஸம்ஸ்காரம் செய்ய மனமில்லாதவர்களாக இருக்கும்போது சூரியன் அஸ்தமயத்தை அடைந்தார்.

36–62. அந்தச் சமயத்தில் யமன் ஒரு சிறுவனுடைய உருவத்தைத்தரித்து சுயக்ஞருடைய பந்துக்களை நோக்கி, "வயதில் முதிர்ந்தவர்களான நீங்கள் இப்படித் துக்கிப்பது மிகவும் ஆச்சரியம். ஜனங்கள் பிறப்பதையும், மரணமடைவதையும் அடிக்கடி பார்த்திருக்கிறீர்கள். இந்த அரசன் எதனிடமிருந்து உண்டானாரோ அதனிடத்திற்குச் சென்றார். மரணமடையக்கூடியவர்களான நீங்கள் அவரைப்பற்றி வீணாகத் துக்கிக்கிறீர்கள். நான் தாய் தகப்பனில்லாதவனானாலும் அவர்களை நினைக்கிறதில்லை. மிகவும தன்யனாக இருக்கிறேன். நான் பலமற்றவனானாலும் செந்நாய் முதலியவைகளால் பட்சிக்கப்படாமல் க்ஷேமமாகச் சஞ்சரிக்கிறேன். எந்தப் பகவான் என்னைக் கர்ப்பத்தில் காப்பாற்றினாரோ, அவர் இப்பொழுதும் சம்ரட்சிக்கிறார். மேலும் எந்தப் பகவான் இந்த ஜகத்தை சங்கற்பத்தால் படைக்கிறாரோ, காப்பாற்றுகிறாரோ, நாசஞ்செய்கிறாரோ அவருக்குத் தாவர ஜங்கமங்களடங்கிய ஜகத்தானது கிரீடாகிருகமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். நிக்ரகிப்பதிலும், சம்ரட்சிப்பதிலும் அவரே பிரபுவாக இருக்கிறார். வழியில் நழுவி விழுந்ததானாலும் தெய்வத்தால் காப்பாற்றப்பட்டிருக்கிறது; வீட்டிலிருப்பதானாலும் தெய்வத்தால் உபேட்சிக்கப்பட்டால் கெட்டுப்போகிறது. காட்டில் அனாதனாக இருப்பவனும் பகவானால் அநுக்ரகிக்கப்பட்டால் க்ஷேமமாக வசிக்கிறான். தெய்வத்தினுடைய அநுக்கிரகமில்லாதவன் வீட்டில் சம்ரட்சிக்கப்பட்டிருந்தாலும் நாசமடைகிறான்.

(ஆத்மாவிற்கு ஜனன மரணங்களிருப்பதாக ஒப்புக் கொண்டு சமாதானஞ் சொல்லப்பட்டது. இனி, உண்மையில் ஆத்மாவிற்கு ஜனன மரணங்களில்லையென்பது சொல்லப்படுகிறது.) லிங்க சரீரத்திற்குக் காரணமாகிய கர்மங்களால் தேவாதி சரீரம் உண்டாகிறது. அந்தப் பிராகிருத தேகத்தை ஆத்மா அடைந்தவனானாலும் அதன் தர்மங்களாகிய ஜனன மரணங்களை அடைகிற தில்லை. ஏனென்றால், சரீரத்திற்கும் ஆத்மாவிற்கும் மிக்க பேதமிருக்கிறது. இந்தச் சரீரமானது புருஷனுக்கு அவிவேகத்தால் ஏற்பட்டது. கிருகம் முதலியவைகளில் 'தான' என்ற அபிமானமுள்ளவனாகிலும் உண்மையில் பார்ப்பவனைவிடப் பார்க்கக்கூடிய வஸ்துக்களான அவை கள் எப்படி வேறானவைகளோ அப்படி திரஷ்டாவாகிய ஆத்மாவைவிடத் திருச்யம் வேறானதேயாம். மேலும், ஜல பரமாணுக்களால் உண்டாகும் குமிழி முதலியவை களும், பிருதிவியின் பரமாணுக்களாலுண்டான குடம் முதலியவைகளும், தேஜஸின் பரமாணுக்களாலுண்டான குண்டலம் (கடுக்கன்) முதலியவைகளும் எப்படி நசிக்கின் றனவோ, அப்படி அந்த மூன்று பரமாணுக்களால் ஏற் பட்ட சரீரமானது நசிக்கிறதேயொழிய ஆத்மா நாசமடை கிறதில்லை. அக்னியானது கட்டையை அடைந்து, பல வகையாக எப்படித் தோன்றுகிறதோ, தேகத்தை அடைந்த வாயுவானது மூக்கு முதலியவைகளில் தனியாக இருப்பதுபோல எப்படித் தோன்றுகிறதோ, ஆகாச மானது எங்குமிருந்தாலும் ஒன்றிலும் எப்படி சம்பந்திக் கிறதில்லையோ, அப்படி சகல குணங்களுக்கு ஆசிரயனாகிய புருஷன் அதன் குணங்களில் சம்பந்திக்கிறதில்லை. ஓ மூடைகளான ஸ்திரீகளே! இந்த சுயக்ஞன் தூங்குகிறானே என்ன? அவனைப்பற்றித் துக்கிக்கிறீர்களே! அதனை அவன் காதினால் கேட்கப்போகிறானா? பதில் சொல்லப்

போகிறது? இவனுடைய ஜனனத்திற்கு முன் இவனைப் பார்த்திருப்பீர்களா? இந்தச் சரீரத்தில் இருக்கும் முக்கியனான பிராணன் கேட்கிறவனாகவாவது, பதில் கூறுகிறவனாகவாவது இல்லை. பிராணன், தேகம் ஆகிய இவைகளைவிட வேறானதும், இந்திரியங்களுள்ளதுமான ஆத்மாவே திரஷ்டாவாக இருக்கிறார். மேலும் பூதங்கள், இந்திரியங்கள், மனது ஆகிய இவைகளால் காணப்படும் பலவகையான சரீரங்களை அவைகளைக்காட்டிலும் விலட்சணனாக இருக்கும் ஆத்மா அடைகிறான். பிறகு தனனுடைய விவேகத்தால் அபிமானத்தை யொழித்து முக்தனாக ஆகிறான். மேலும், ஆத்மா லிங்க தேகத்தில் எதுவரையில் அபிமானம் வைத்திருக்கிறானோ அதுவரையில் அவனுக்குக் கர்மங்கள் பந்தங்களாகின்றன. அதுவரையில் மாயையின் சம்பந்தமும் கஷ்டமும் அநுசரிக்கும். ஸ்வப்னமானது எப்படி மித்யையோ அப்படி சுகம் முதலியவைகளைச் சத்தியங்களென்று நினைப்பதும், சொல்லுவதும் விஷனை அவிவேகத்தால் ஏற்பட்டன. நித்யாநித்யத்தை அறிந்த வித்வான்கள் ஆத்மாவைப்பற்றியாவது சரீரத்தைப்பற்றியாவது துக்கிக்கமாட்டார்கள். வித்வான்களாக இருந்தும் துக்கித்தார்களேயாகில் அவர்களுக்கு ஞானம் திருடமில்லை. ஒரு காட்டில் பறவைகளுக்கு யமனாகிய ஒரு வேடன் வலையை விரித்திருந்தான். அப்பொழுது குலிங்க பட்சிகள் ஆணும் பெண்ணுமாக அவ்விடம் வந்தன. அவைகளில் பெண் பட்சியானது வேடனுடைய காலத்தால் வலையில் அகப்பட்டுக் கொண்டது. அதனைப் பார்த்த ஆண் பட்சியானது மிகவும் துக்கப்பட்டு ஒன்றையும் செய்யமுடியாமல் பின் வருமாறு அழுதது: 'கிருபையற்ற தெய்வமானது தீனையும், துக்கிப்பவளுமான என்னுடைய ஸ்திரீயை அப

கரித்து என்ன செய்யப்போகிறது? பாதி சரீரத்தாலென்ன பிரயோசனம்? என்னையும் தெய்வம் அழைத்துப் போகட்டும்; பார்யையில்லாமல் தீனனாக ஜீவிப்பதைவிட மரிப்பது மேலானது; இறக்கை முளைக்காத குஞ்சுகளைத் தாய் இல்லாமல் நான் எப்படி வளர்ப்பேன்? என்னுடைய குழந்தைகள் அதிருஷ்டமில்லாதவைகள்; அவைகள் கூட்டிலிருந்துகொண்டு மாதாவின் வரவை எதிர்பார்த்திருக்குமே' என்று அழுதுகொண்டிருக்கும் அந்த ஆண் பட்சியையும் வேடன் மறைந்திருந்து பாணத்தால் அடித்தான். அதுபோல் உங்களுக்கு வரும் அபாயத்தைக் கவனியாமல் பர்த்தாவைப்பற்றித் துக்கிக்கிறீர்கள். நூறு வருஷங்கள் சென்றாலும் இவனை நீங்கள் அடையப் போகிறதில்லை" என்று சொன்னான். அந்தச் சிறுவனுடைய வார்த்தையைக் கேட்ட அவர்களெல்லோரும் ஆச்சரியமடைந்து, எல்லாவற்றையும் அநித்யமென்று நினைத்தார்கள். அந்தச் சிறுவனும் இம்மாதிரி சொல்லி அவ்விடத்திலேயே மறைந்தான். சுயக்ஞனுடைய பந்துக்களும் அவனுக்கு உத்தரக்கிரியை செய்தார்கள். ஆனதால் நீங்கள் தன்னைப்பற்றியாவது, பிறரைப்பற்றியாவது துக்கப்படவேண்டாம். 'தான் என்பது யார்? பிறர் என்பது யார்? தன்னைச் சார்ந்தவன் யார்? பிறரைச் சார்ந்தவன் யார்? இவைகள் அவிவேகத்தால் உண்டாகும் அபிமானத்தால் ஏற்பட்டவையாம்' என்ற ஹிரண்யகசிபுவின் வார்த்தையைக் கேட்டுத் திதியானவள் நாட்டுப் பெண்களுடன் புத்திரசோகத்தை விட்டதுமல்லாமல் தத்துவத்தில் சித்தத்தைச் செலுத்தினாள்.

# அத்தியாயம் 3

## ஹிரண்யகசிபு வரம் பெற்றது

பின்பு ஹிரண்யகசிபு, தான் பிறரால் ஜயிக்க முடியாதவனும், கிழத்தனம், மரணம் இவைகளற்றவனும், நிகரற்றவனும், ஒரே அரசனுமாக ஆகவேண்டும் என்று விரும்பி, அதற்காக மந்தர பர்வதத்தின் குகையில் இரு கைகளையும் உயரத் தூக்கி ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு, கால் கட்டைவிரலால் பூமியில் நின்று கடுந் தவம் புரிந்தான். அப்பொழுது அவன் தன்னுடைய ஜடைகளின் காந்தியால் பிரளய காலத்திய சூரியன்போலப் பிரகாசித்தான். அந்தக் காலத்தில் தேவர்கள் அவரவர்களுடைய அதிகாரத்தை அடைந்திருந்தார்கள். அப்பொழுது அவனுடைய தலையிலிருந்து தபோக்கினியானது புகையுடன் கிளம்பியது. மேலும் அது மேலுலகத்திலும், கீழும், நாற்புறங்களிலும் பரவியது. நதிகளும், சமுத்திரங்களும் கலங்கின; பூமியானது மலைகளுடனும் துவீபங்களுடனும் அசைந்தது; கிருகங்களும், நட்சத்திரங்களும் ஆகாயத்திலிருந்து விழுந்தன; பத்துத் திக்குகளும் ஜ்வலித்தன; அந்தத் தாபத்தைச் சகியாமல் தேவர்கள் சுவர்க்கத்தை விட்டுப் பிரம்மலோகஞ் சென்று பிரம்மதேவரை நோக்கி, "ஓ தேவர்களுக்குத் தேவரே! ஹிரண்யகசிபுவின் தவத்தினால் தகிக்கப்பட்டு, சுவர்க்கத்தில் வசிக்க முடியவில்லை. உமக்கு இஷ்டம் இருக்குமானால் அதற்குச் சாந்தியைச் செய்யும். உம்மைப் பூஜிக்கும் உலகங்கள் நாசமடைவதற்கு முன்னமேயே அதனைச் செய்யவேண்டும். ஓ எல்லாவற்றிற்கும் அதிபதியாக இருப்பவரே! அந்த ஹிரண்யகசிபு எதற்காகத் தவஞ்செய்கிறானென்றால் அவனு

டைய எண்ணம் உமக்கே நன்ருகத் தெரியும். ஆனுலும் நாங்கள் தெரிவிக்கிருேம். 'பிரம்மதேவர் தாவர ஜங்கம சுரூபமான ஜகத்தைத் தவத்தினுலும் யோக சமாதியாலும் படைத்து, எல்லாவற்றிற்கும் மேலான சத்தியலோகத்தை அடைந்திருக்கிருர். நானும் தவஞ் செய்து யோக சமாதியால் அந்தப் பதத்தை அடைகிறேன். ஜன்மத்தில் அது கிடைக்காவிடினும் காலம், ஆத்மா ஆகிய இவைகள் நித்தியங்களாகையால் அநேக ஜன்மங்கள் எடுத்தாவது அந்தப் பிரம்ம பதத்தை யடையாமல் இருக்கிறதில்லை. பின்னும், இந்த ஜகத்தை முன் போலில்லாமல் மாறுதலாகச் செய்துவிடுகிறேன். (புண்யஞ் செய்தவர்களுக்கு துக்கம், பாபம் செய்தவர்களுக்கு சுகம்) அனித்தியங்களான மற்ற பதங்களால் என்ன பிரயோசனம்' என்ற எண்ணத்துடன் அந்த அசுரன் கடுந்தவம் செய்வதாகக் கேள்விப்படுகிருேம். ஓ மூன்று லோகங்களுக்கும் அதிபதியாக இருப்பவரே! நீர் இந்தப் பதத்தை அடைந்திருப்பது பிராமமணர்களுக்கும், பசுக்களுக்கும், உற்பத்தி, சுகம், ஐசுவரியம், கிடைத்ததைக் காப்பாற்றுவது, ஜயம் ஆகிய இவைகளுக்குக் காரணமாயிருக்கிறது. ஆனதால் இந்த விஷயத்தில் எதனைச் செய்தால் யுக்தமோ அதனைச் செய்யும்" என்றுர்கள்.

14—40. அதனைக் கேட்ட பிரம்மதேவர் பிருகு, தக்ஷர் முதலியவர்களுடன் ஹிரண்யகசிபுவின் ஆச்சிரமஞ் சென்றுர். அவ்விடத்தில் ஹிரண்யகசிபுவின் சரீரமானது புற்றினுலும், திருணங்களாலும், மூங்கில்களாலும் மூடப்பட்டிருந்தது. எறும்புகள் அவன் மீது சஞ்சரித்து அவனுடைய மேதஸ், மாமிசம், தோல், இரத்தம் இவைகளைப் புசிக்கின்றன. மேலுமவன் தவத்தினுல் உலகங்களுக்குத் தாபத்தை உண்டுபண்ணிக்கொண்டு, மேகத்தால் மறைக்கப்பட்ட சூரியன்போல் இருந்தான்.

அவனைப் பார்த்துப் பிரம்மதேவர் மிகவும் ஆச்சரியம் அடைந்து அசுரனை நோக்கி, "ஓ காசியபருடைய புத்திரனே! எழுந்திரு, எழுந்திரு. நீ தவத்தில் சித்தியையடைந்தாய். உனக்கு வரங்கொடுப்பதற்காக வந்திருக்கிறேன்; வேண்டியதைக் கேட்கலாம். உன்னுடைய மனோதைரியத்தைத் தெரிந்துகொண்டேன். காட்டுக் கொசு முதலியவைகளால் உன்னுடை சரீரம் பட்சிக்கப்பட்டது; பிராணனும் எலும்புகளும் இருக்கின்றன. இம்மாதிரியான தவம் முந்தி மகரிஷிகளாலும் செய்யப்படவில்லை; இனியும் செய்யப்படப்போகிறதில்லை. எவன் ஜலத்தையும் புசியாமல் தேவமானத்தால் நூறு வருஷங்கள் பிராணனுடன் இருப்பான்? ஓ திதியின் புத்திரனே! தைரியமுள்ளவர்களாலும் செய்யமுடியாத தவத்தை நீ அனுஷ்டித்தபடியால் உன்னால் ஜயிக்கப்பட்டேன் (உன்னிடத்தில் சந்தோஷமடைந்தேன்). மனிதனாகிய நீ தேவனாகிய என்னைத் தரிசித்தது வீணாகாது. ஆனதால் உனக்கு இஷ்டமான எல்லா வரங்களையும் கொடுக்கிறேன்" என்று சொல்லிக் கமண்டலுவிலிருக்கும் திவ்யமான ஜலத்தைப் புரோட்சித்தார். பின்பு மூங்கிற் காட்டில் புற்றுகளால் மறைக்கப்பட்டிருந்த அந்த அசுரன் மிகுந்த தேஜஸ், பலம் ஆகிய இவைகளுள்ளவனாகி வெளியில் வந்தான். அவனுடைய குறைந்துபோன அவயவங்கள் பூர்ணங்களாயின. மேலும் அவன் வஜ்ஜிரம்போலக் கெட்டியான சரீரமுள்ளவனும், யௌவன வயதுள்ளவனும், புடம் போட்ட தங்கம்போன்ற காந்தியுள்ளவனுமாயிருந்தான். இப்படிக் கட்டையிலிருந்து அக்கினி பிரகாசிப்பதுபோலப் புற்றிலிருந்து வெளிப்பட்ட அசுரன் ஆகாயத்தில் ஹம்சத்தின்மீது வீற்றிருக்கும் பிரம்மதேவரைப் பார்த்து மிகுந்த சந்தோஷத்தை அடைந்து, நமஸ்கரித்து எழுந்திருந்து, வணக்கத்துடன் கைகூப்பி, ஆனந்தத்தால்

கண்ணீரைப் பெருக்கி, மயிர்க்கூச்சலுள்ளவனாகிக் கண்ட மடைத்து, பின்வருமாறு தோத்திரம் செய்யலானான்: "எவர் பிரளய காலத்தில் பிரகிருதி, குணம் இவைகளாகிய இருட்டால் சுற்றப்பட்ட இந்த உலகத்தைத் தம்முடைய தேஜஸால் பிரகாசிக்கச் செய்தாரோ, எவர் இந்த உலகத்தை முக்குண சுரூபமான மாயையைக்கொண்டு படைக்கிறாரோ, காப்பாற்றுகிறாரோ, நாசம் செய்கிறாரோ அந்தப் பரமேசுவரனை நமஸ்கரிக்கிறேன். அவர் ரஜோ குணம், சத்துவ குணம், தமோ குணம் ஆகிய இவைகளுக்கு ஆசிரயமாயிருப்பவர். மேலும் அவர் எல்லாவற்றிற்கும் முந்தினவர்; காரணமாக இருப்பவர்; ஞான சுரூபி; பிராணன், இந்திரியங்கள், மனது, புத்தி, ஐந்து பூதங்கள் ஆகிய இவைகளால் காரிய ரூபத்தை அடைந்தவர்; அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரம் செய்கிறேன். நீர் ஜங்கமங்களுக்கும் ஸ்தாவரங்களுக்கும் அதிபதி; முக்கிய பிராண சுரூபியாக இருப்பதால் எல்லாப் பிரஜைகளுக்கும் அதிபதியாக இருப்பவர்; பின்னும் மனத்திற்கும், சைதன்னியத்திற்கும், இந்திரியங்களுக்கும் அதிபதியாக இருப்பவர்; ஆனதால் ஆகாசம் முதலிய பூதங்களுக்கும் நீரே அதிபதி; நான்கு ஹோதாக்கள் செய்யவேண்டிய கர்மங்களைச் சொல்லுகின்ற வேதமாகிய சரீரத்தால் அக்னிஷ்டோமம் முதலிய யாகங்களை வெளிபபடுத்துகிறீர். நீர் ஒருவரே சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருப்பவர்; ஆதியற்றவர்; நாசமற்றவர்; கரையற்றவர்; எல்லாவற்றையும் அறிந்தவர்; அந்தர்யாமியாக இருப்பவர்; மேலும், நீர் காலசுரூபியாக இருந்து லவம், க்ஷணம், தினம் முதலிய அவயவங்களால் ஜனங்களுடைய ஆயுளை அபகரிக்கிறீர். ஆனதால் நீர் கூடஸ்தராகிய ஆத்மா; பரமேசுவரன்; உற்பத்தியில்லாதவர்; அளவிடக்கூடாதவர்; மேலும், நீர் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாகவும்,

ஜீவனாகவுமிருக்கிறீர்; (பிழைப்பதற்குக் காரணம்) காரிய காரணம், சுரூபமும், தாவர ஜங்கம ரூபமுமான ஜகத்தில் உம்மைத்தவிர வேறு பதார்த்தம் ஒன்றுமில்லை. சகல வேதங்களும், கலைகளும் உம்முடைய சரீரங்களாகும்; நீர் பிரதானத்தை விட மேலான இரண்ணியகர்ப்பராகவும், பரமாத்மாவாகவுமிருக்கிறீர். ஓ பிரபுவே! காரிய ரூபமாகிய ஜகத்தானது உம்முடைய ஸ்தூல சரீரமாக இருக்கிறது. நீர் அளவற்ற ஐசுவரியமுள்ள ஸ்தானத்தில் இருப்பவரானாலும், காரண சுரூபியானாலும், புராண புருஷரானாலும், மேற்காட்டிய சரீரத்தைக்கொண்டே பிராணன், இந்திரியம், மனது ஆகிய இவைகளுடைய குணங்களை அனுபவிக்கிறீர். ஓ நாசமற்றவரே! காரண ரூபத்தால் ஜகத் முழுவதையும் வியாபித்திருக்கிறீர். மேலும் வித்தை, மாயை இவைகளுக்கு ஆசிரயமாகவுமிருக்கிறீர். அப்படிப் பட்ட பகவானாகிய உமக்கு நமஸ்காரம். ஓ வரங்கொடுப் பவர்களுக்குட் சிறந்தவரே! எனக்கு இஷ்டமான வரத்தை நீர் கொடுக்கிறதானால் உம்மால் சிருஷ்டிக்கப் பட்ட ஜனங்களாலும், மற்றவர்களாலும் எனக்கு மரணம் நேரிடாமலிருக்கவேண்டும். பின்னும் வீட்டிற்கு வெளியிலும், உள்ளிலும், பகலிலும், இரவிலும், ஆயுதங்களாலும், பூமியிலும், ஆகாயத்திலும் எனக்கு மரணம் நேரிடக் கூடாது. பின்னும் மனிதர்கள், மிருகங்கள், உயிரில்லாதவைகள், உயிருள்ளவைகள், தேவர்கள், அசுரர்கள், உரகர்கள் ஆகிய இவர்களாலும் கொல்லமுடியாதனாக நான் இருக்கவேண்டும். மேலும், நான் நிகரில்லாதவனும் ஜனங்களுக்கு ஒரே அரசனாகவும் இருக்கவேண்டும். எந்த ஐசுவரியமானது ஒருபொழுதும் குறையாததோ, அப்படிப்பட்ட லோகபாலகர்களுடைய அணிமா முதலிய ஐசுவரியங்களை எனக்குக் கொடுக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டான்.

# அத்தியாயம் 4

## இரணியகசிபு உலகத்தை உபத்திரவித்தது

அதனைக் கேட்ட பிரம்மதேவர் இரணியகசிபுவின் தவத்தினால் பிரியமடைந்து அவனை நோக்கி, "ஓ இரண்ய கசிபுவே! உன்னால் கேட்கப்படும் வரங்கள் மிகவும் அரிதானவை. ஆனாலும், அவைகளை உனக்குக் கொடுக்கிறேன்" என்று சொல்லி அவனுடைய இஷ்டப்படி அநுக்ரகித்தார். வீண் போகாத அனுக்கிரகமுள்ள அந்தப் பிரம்மதேவரை இரண்யகசிபு பூஜித்தான்; பிரஜாபதிகள் துதித்தார்கள். அப்படிப்பட்ட பிரம்மதேவர் தமது உலகஞ் சென்றார்.

4–20. துர்லபங்களான வரங்களைப் பெற்றுக்கொண்டவனும், தங்கம்போன்ற சரீரமுள்ளவனுமாகிய அந்த அசுரன் ஸ்ரீ மகாவிஷ்ணுவினால் தன்னுடைய சகோதரன் கொல்லப்பட்டதை நினைத்துப் பகவானிடத்தில் விரோத புத்தியைச் செய்தான். பின்னும் அவன் எல்லா திக்குகளிலும் சென்று எல்லாரையும் ஜயித்து, சிறந்த தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள், கந்தர்வர்கள், கருடர்கள், உரகர்கள், சித்தர்கள், சாரணர்கள், வித்தியாதரர்கள், மகரிஷிகள், பிதிருபதிகள், முனிகள் சிறந்த யக்ஷர்கள், ராக்ஷதர்கள், பிசாசங்கள், பிரேதங்கள், பூதபதிகளாகிய இவர்களையும், சகல பிராணிகளுக்குச் சிறந்தவைகளையும் சுவாதீனப்படுத்திக்கொண்டான். பின்னும் அவன் லோக பாலகர்களுடைய தேஜஸையும், ஸ்தானத்தையும் அபகரித்தான். மேலும் அவன் மகேந்திரனைத் துரத்திவிட்டு, சுவர்க்கத்தில் வசித்தான். அந்த சுவர்க்கமானது தேவர்களுடைய உத்தியானங்களால் அலங்கரிக்கப்பட்டது. அதில் விசுவகர்மாவினால் உண்டுபண்ணப்பட்ட மகேந்திரனுடைய கிரகமிருக்கிறது. அது மூவுலகத்திய லட்சு

மிக்க இருப்பிடமானது: சகல ஐசுவரியமுமுள்ளது; அவ்விடத்திலிருக்கும் படிகள் பவழங்களால்செய்யப்பட்டவை; தரையானது மரகதக் கற்களால் தளவரிசை செய்யப்பட்டது; மேலும் சுவர்கள் படிகங்களால் நிருமிக்கப்பட்டன; தூண்கள் வைடூரியங்களாக இருக்கின்றன. அற்புதமான கொடுங்கைகளும், பத்மராக மயமான ஆசனங்களும் இருக்கின்றன. முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பட்டவைகளும், பால்போன்றவைகளும், நுரைபோன்றவைகளுமான படுக்கைகளும் இருக்கின்றன. தேவ ஸ்திரீகள் அணிந்திருக்கும் ஆபரணங்களுடைய சப்தங்களால் எங்கும் நிறைந்திருக்கிறது. அழகான பற்களுள்ள ஸ்திரீகள் அழகான தங்களுடைய முகத்தை ரத்தினத் தூண்களில் பார்த்துக்கொள்கிறார்கள். மிக்க பலமுள்ளவனும், கம்பீர மனதுள்ளவனும், சகல லோகத்தை ஜயித்தவனும், எல்லா லோகத்திற்கும் ஒரே அரசனும், உக்கிரமான ஆஞ்ஞையுள்ளவனும், தன்னால் ஜயிக்கப்பட்ட தேவர்கள் முதலியவர்களால் நமஸ்கரிக்கபபட்டவனுமாகிய அந்த அசுரன் மேற்சொல்லிய இந்திரனுடைய கிருகத்தில் சந்தோஷமாக வசித்தான். மத்தியத்தைக் குடித்துச் சிவந்த கண்களுள்ளவனும், மிகவும் மதித்தவனுமாகிய அந்த அசுரனுக்கு பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மூன்று தேவர்களைவிட மற்ற தேவர்களெல்லோரும் காணிக்கைகளைக் கொடுத்து அவனை உபாசிக்கிறார்கள். அசுரன் மிகவும் பலிஷ்டனும், பராக்கிரமம் உள்ளவனுமாக இருந்தபடியால் அவனை ஜயிக்க ஒருவராலும் முடியவில்லை. இப்படி மகேந்திரனுடைய சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் அந்த அசுரனை விசுவாவசு, தும்புரு, கந்தர்வர்கள், சித்தர்கள், ரிஷிகள், வித்தியாதரர்கள், அப்ஸரசுக்கள் முதலிய எல்லோரும் தோத்திரம் செய்தார்கள். மேலும், எல்லோரும் மிகுந்த தட்சிணை

களுள்ள யாகங்களைக்கொண்டு அவனையே பூசித்தார்கள். அவன் தன்னுடைய தேஜோ விசேஷத்தால் ஹவிர்ப் பாகத்தைத் தானே கிரகித்துவந்தான். அப்பொழுது ஏழு த்வீபங்களுள்ள பூமியானது உழாமலேயே விதை விதைத்துப் பலிக்கக்கூடியதாக இருந்தது. மேலும், த்யுலோகமானது இஷ்டத்தைக் கொடுத்தது; ஆகாச மானது பலவகையான ஆச்சரியத்தையுண்டுபண்ணிற்று; ரத்தினம் விளையும் பூமியும், உப்பு சமுத்திரம், நெய் சமுத் திரம், தயிர் சமுத்திரம், பால் சமுத்திரம், கருப்பஞ்சாறு சமுத்திரம், மத்திய சமுத்திரம், சுத்தோதகம் முதலிய சமுத்திரங்களும் மிகுந்த ரத்தினங்களை யுண்டுபண்ணின. அவைகளுடைய பத்தினிகளாகிய நதிகள் அந்த ரத்தி னங்களை அலைகளால் வகித்தன. பர்வத குகைகள் விளை யாடுகிற ஸ்தலங்களாக இருந்தன. மரங்களெல்லாம் எல்லா ருதுக்களிலும் பழங்களையும், புஷ்பங்களையும் உண்டு பண்ணிக்கொண்டிருந்தன. இப்படி அந்த அசுரன் தான் ஒருவனாகவே அநேக லோகபாலகர்களால் செய்யப்படும் காரியங்களை நடத்திவந்தான். பின்னும் அவன் சகல உல கங்களையும் ஜயித்து ஒரே அரசனாக இருந்து பிரியமான விஷயங்களை யனுபவித்தும் திருப்தியடையாதவனாக இருந் தான். இப்படி ஐசுவரியத்தால் மதித்தவனும், சாஸ்திர விரோதமாக நடப்பவனுமாகிய அந்த அசுரன் பிராம் மணர்களுடைய சாபத்தை அடைந்தவனாகி, வெகு காலத்தைக் கழித்தான்.

21—30. அவனுடைய உக்கிரமான தண்டத்திற்குப் பயந்து லோகபாலகர் முதலிய தேவர்கள் தங்களைக் காப் பாற்றுபவர்களைத் தேடி ஸ்ரீ மகாவிஷ்ணுவைச் சரணம் அடைந்தார்கள்; மேலும் பின்வருமாறு தோத்திரஞ் செய்தார்கள். எந்தத் திக்கில் சகல பிரஜைகளுக்கும் ஆத்மாவாகிய ஸ்ரீ மகாவிஷ்ணு வசிக்கிறாரோ, எதனை

அடைந்த சுத்தர்களான சன்னியாசிகள் திரும்புகிற தில்லையோ (முக்தர்களாகிறார்கள்), அந்தத் திக்குக்கு நமஸ்காரம் செய்கிறோமென்று அந்தத் தேவர்கள் இந்திரியங்களை ஜயித்தவர்களாகிப் பகவான் நம்மை சம்ரட்சிப்பார் என்ற நிச்சயமுள்ளவராகி, பிராணன், சரீரம் ஆகிய இவைகளை ஜயித்துச் சாவதானர்களாக, "ஆறுவகையான குணங்களால் நிறைந்தவரும், மிகுந்த மகிமையுள்ளவரும், சுத்தமான ஆத்மானுபவத்தாலுண்டாகும் ஆனந்த சுரூபியுமான வாசுதேவருக்கு நமஸ்காரம்" என்று தோத்திரம் செய்தார்கள். அப்பொழுது, "ஓ தேவ சிரேஷ்டர்களே! பயப்படவேண்டாம். உங்களெல்லோருக்கும் க்ஷேமமுண்டாகும். என்னைப் பஜிப்பது எல்லாருக்கும் சகல க்ஷேமத்தையும் கொடுக்கக்கூடியது. அந்த அசுரனுடைய துஷ்ட சரித்தை நான் ஏற்கனவே தெரிந்து கொண்டிருக்கிறேன். அதனை நான் போக்கடிக்கிறேன்; சொற்ப காலம் பொறுத்துக்கொள்ளுங்கள். எவனுக்கு வேதங்களிடத்திலும், தேவர்களிடத்திலும், பசுக்களிடத்திலும், பிராம்மணர்களிடத்திலும், சாதுக்களிடத்திலும், தர்மத்தினிடத்திலும், என்னிடத்திலும் விரோத புத்தி உண்டாகிறதோ அவன் சீக்கிரம் நாசமடைவான். மேலும் அந்த அசுரன் விரோத புத்தியற்றவனும், சாந்தனும், மகாத்மாவுமான பிரகலாதனென்ற புத்திரனுக்கு எப்பொழுது துரோகஞ்செய்வானோ அப்பொழுது பிரம்மதேவரிடம் வரம்பெற்றுப் பலிஷ்டனாயிருந்தாலும் அவனைக் கொல்வேன்" என்று மேக கர்ஜிதம்போல் ஒரு ஆகாசவாணி உண்டாயிற்று. அதனால் சகல திக்குகளிலும் எதிரொலி உண்டாயிற்று. மேலும் அந்த வார்த்தையானது சாதுக்களுக்கு அபயத்தைக் கொடுக்கக் கூடியதாக இருந்தது. அதனைக் கேட்ட தேவர்கள் லோக குருவாகிய பகவானை நமஸ்கரித்து, பயமற்றவர்களாகி,

அசுரனைக் கொன்றதாகவே நினைத்துத் தங்கள் தங்கள் இருப்பிடம் சென்றார்கள்.

31—43. அந்த அசுரனுக்கு அற்புதர்களான நான்கு குமாரர்களுண்டு. அவர்களுக்குள் பிரகலாதரென்பவர் சிறந்த குணங்களுள்ளவர்; பெரியோர்களைச் ஸேவிப்பவர்; பிராம்மண பக்தியுள்ளவர் ; நன்னடையுள்ளவர் ; சத்ய ப்ரதிக்ஞர் , இந்திரியங்களை ஜயித்தவர் ; சகல பிராணிகளுக்கும் ஆத்மாபோல மிக்க சுஹ்ருத் ; தாஸன்போல் பெரியோர்களை நமஸ்கரிப்பவர் ; தகப்பன்போல் தீனர்களிடத்தில் பிரீதியுள்ளவர் ; சகோதரன்போல் ஸ்நேகமுள்ளவர் ; ஆசாரியர்களை ஈசுவரனாக பாவிப்பவர் ; வித்தை, அர்த்தம், பந்து, அழகு முதலியவைகளுள்ளவரானாலும் அகங்காரமற்றவர் ; அவருடைய சித்தமானது துக்க காலத்தில் வருத்தப்படுகிறதில்லை. கேட்கப்பட்டவைகளும், பார்க்கப்பட்டவைகளுமான விஷயங்களில் ஆசையற்றவர்; விஷயங்களை வஸ்துவாக நினைக்காதவர்; அவர் அசுர வம்சத்தில் பிறந்தவரானாலும் அசுர சுபாவமற்றவர் ; அவருடைய இந்திரியங்கள், பிராணன், சரீரம், புத்தி ஆகிய இவைகள் அவருக்கு வசப்பட்டிருந்தன. அந்தப் பிரகலாதரிடத்தில் மேலான பல குணங்களிருந்தன. அவைகள் இக்காலத்திலும் கவிகளால் வர்ணிக்கப்படுகின்றன. பகவானுடைய குணங்கள்போல் எப்பொழுதும் அவைகள் லோகத்தில் பிரகாசிக்கின்றன. அசுரர்களுக்கு விரோதிகளான தேவர்களும் ஸத்கதை நடக்கும் சபையில் அவரைத் திருஷ்டாந்தமாகச் சொல்வது வழக்கம். அளவிடக்கூடாதவைகளான அவருடைய குணங்களால் அவருடைய மாகாத்மியம் காண்பிக்கப்படுகின்றது. அவர் இயற்கையில் பகவானாகிய வாசுதேவரிடத்தில் பக்தியுள்ளவராக இருந்தார். அவர் பால்ய வயதிலேயே விளையாட்டுச் சாமான்களை விட்டுப்

பகவானிடத்திலேயே மனத்தைச் செலுத்தி ஸ்ரீ கிருஷ்ண ஞகிய கிரகத்தால் பிடிக்கப்பட்டு ஜடன்போல் பிரபஞ் சத்தை யறியாதவராக இருந்தார். மேலுமவர் உட்கார்ந் திருக்கும்பொழுதும், சஞ்சரிக்கும்பொழுதும், ஆகாரத் தைப் புசிக்கும்பொழுதும், படுக்கும்பொழுதும், தீர்த்தம் முதலியவைகளைக் குடிக்கும்பொழுதும், பேசும்பொழுதும் ஸ்ரீ கோவிந்தனிடத்திலேயே மனத்தைச் செலுத்தியிருந்த படியால் இந்த ஜகத்தை மறந்திருந்தார். சில சமயத்தில் பகவானைத் தியானித்துக் கலங்கியிருக்கும் மனமுள்ள வராக அழுவார்; சில வேளை பகவானையே நினைத்து, அதனாலுண்டான ஆனந்தத்தால் சிரிப்பார்; கானஞ் செய்வார்; சில சமயத்தில் பகவானைத் தாமாகப் பாவித்து அந்த பகவத்சுரூபியாக இருந்து பகவானுடைய சேஷ்டை களைத் தாம் செய்வார்; சில சமயம் வாயை விட்டுக் கதறுவார்; வெட்கமில்லாமல் நர்த்தனஞ் செய்வார்; சில சமயத்தில் பகவத் சுரூபியாகத் தம்மைப் பாவித்து அதனால் மயிர்க்கூச்சலுள்ளவராகிப் பகவானிடத்தில் மிகுந்த பிரியம் வைத்ததனாலுண்டாகும் ஆனந்த பாஷ்பத்தால் கண்களை மூடிக்கொண்டு இருப்பார்; இப்படி அந்தப் பிரகலாதர் சாதுக்களுடைய சங்கத்தால் உத்தம சுலோகராகிய பகவானுடைய பாதாரவிந்தத்தைச் சேவித்து மிகுந்த சுகத்தை அடைந்து, துஷ்டர்களு டைய சேர்க்கையால் தீனர்களாயிருப்பவர்களுடைய மனத்திற்குச் சாந்தியை யுண்டுபண்ணிக்கொண்டிருந் தார். ஓ அரசனே! மிகுந்த பாக்கியமுள்ளவரும், மகா பாகவதரும், மகாத்மாவுமான புத்திரனுக்கு ஹிரண்யக சிபுவானவன் துரோகஞ் செய்தான்" என்றார்.

44—47. அதனைக் கேட்ட தர்மபுத்திரர் நாரதரை நோக்கி, "ஓ தேவரிஷியே! சுத்தனும் சாதுவுமான புத்திரனுக்குத் தகப்பன் துரோகஞ்செய்வதற்கென்ன

காரணம் ? புத்திரர்களிடத்தில் பிதாவுக்கு இயற்கையிலேயே பிரீதியிருக்குமாகையால் தமக்கு விரோதமாக நடக்கும் புத்திரர்களையும் நல்வழிக்குக் கொண்டுவருவதற்காகச் சிட்சிப்பார்களேயொழியச் சத்துருக்கள்போல் துரோகஞ் செய்யமாட்டார்களே. அப்படியிருக்க ஆசாரியனைத் தேவதையாகக் கொண்டவனும், சாதுவும், சுவாதீனப்பட்டவனுமான புத்திரனைக் கொல்லுவதற்கு முயற்சிப்பார்களா ? ஓ நல்ல விரதங்களை அநுஷ்டித்த பராம்மணோத்தம ! நான் இதனைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற விருப்பமுள்ளவனாக இருப்பதால் இந்த சந்தேகத்தை நிவர்த்திக்கவேண்டும்" என்று கேட்டார்.

## அத்தியாயம் 5

### பிரகலாதரைக் கொல்ல முயற்சித்தது

அசுரர்கள் தங்களுக்குப் புரோகிதராக இருக்க வேண்டுமென்று சுக்ரபகவானை வேண்டிக்கொண்டார்கள். அவரும் சம்மதித்து அவர்களுக்குப் புரோகிதராக இருந்தார். அதனால் அவருடைய புத்திரர்களான சண்டன், அமர்க்கன் என்ற இருவர்களும் ஹிரண்யகசிபுவின் அரண்மனையில் வசித்தார்கள். அப்பொழுது ஹிரண்யகசிபுவானவன் தன்னுடைய புத்திரனாகிய பிரகலாதரென்பவரை குரு புத்திரர்களிடம் ஒப்புவித்து, வித்தை கற்பிக்கும்படி வேண்டிக்கொண்டான். அந்தப் பிரகலாதர் சாஸ்திரங்களை அறிந்தவர். அப்பொழுது குரு புத்திரர்கள் பிரகலாதருக்கும், மற்ற அசுரக் குழந்தைகளுக்கும் வித்தையைக் கற்பித்துவந்தார்கள். அப்பொழுது ஆசாரியனால் சொல்லப்பட்டதைக் கேட்டும், படித்தும் பிரகலாதர் அதனை நல்லதென்று ஒப்புக்கொள்ளவில்லை.

ஏனென்றால், அவரால் உபதேசிக்கப்பட்டன யாவும் "தான், பிறர், பந்து, சத்ரு" என்ற அகங்கார புத்தியுள்ளதாக இருந்தது.

ஒருகால் அசுரர்களுக்கு அரசனாகிய ஹிரண்யகசிபுவானவன் தன்னுடைய புத்திரராகிய பிரகலாதரை மடியில் வைத்துக்கொண்டு, 'ஓ குழந்தாய்! நீ வித்தியாப்பியாசஞ் செய்துவருவதில் எதனை நல்லதென்று (க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியது) அறிந்திருக்கிறாய்? அதனைச் சொல்லவேண்டும்' என்று கேட்டான். அதைக் கேட்ட பிரகலாதர், "ஓ அசுரர்களுக்குச் சிறந்தவரே! பிராணிகள் அகங்காரமுள்ளவர்களாகிப் புத்திரன முதலியவற்றில் அபிநிவேசத்தை (ஆசையை) அடைந்து துக்கத்தை அநுபவிக்கிறார்கள். அப்படிப்பட்ட ஜனங்களுக்குக் கிருகம் முதலியவை பாழுங்கிணறுபோலக் கெடுதியை உண்டுபண்ணக்கூடியன. ஆகையால் அகங்காரத்திலிருந்து பயந்து, துக்கத்தை நிவர்த்தித்துக்கொள்ள விரும்பியவர்கள் கிருகத்தை விட்டு வனஞ்சென்று, ஸ்ரீமகாவிஷ்ணுவைச் சேவிப்பதே உசிதமென்று நினைக்கிறேன்" என்று சொன்னார்.

6—10. அதனைக் கேட்ட ஹிரண்யகசிபுவானவன் தனக்குச் சத்துருவாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவினிடத்தில் பிரகலாதனுக்கு ஏற்பட்டிருக்கும் பக்தியைப் பார்த்து, "குழந்தைகளுடைய புத்தியானது சத்துருக்களுடைய வார்த்தையால் கலைக்கப்படுகிறது" என்று சிரித்து, 'விஷ்ணுவைச் சார்ந்தவர்கள் ஆசாரியருடைய கிரகத்தில் மறைந்திருந்துகொண்டு இவனுடைய புத்தியைக் கலைக்கிறார்கள்; அதனை நன்றாக விசாரியுங்கள்' என்றும் சொன்னான். பின்பு அசுரனுடைய புரோகிதர்கள் பிரகலாதரைத் தங்கள் வீட்டிற்கு அழைத்துவந்து, அழகான வார்த்தைகளைச் சொல்லிச் சிலாகித்து, "ஓ குழந்தாய்,

பிரகலாத! உனக்கு க்ஷேமமுண்டாகட்டும்; உன்னுடைய உண்மையான அபிப்பிராயத்தைச் சொல். எங்களால் உபதேசிக்கப்படுவதை விட்டு வேறான தோற்றம் உனக்கு உண்டாவதற்கென்ன காரணம்? உன்னுடன் சேர்ந்து படிக்கும் பிள்ளைகளுக்குள் ஒருவனுக்காவது இம்மாதிரியான எண்ணம் உண்டாகவில்லையே? இது உனக்குப் பிறரால் உபதேசிக்கப்பட்டதா? அல்லது இயற்கையிலுண்டானதா? அதனைக் கேட்க விருப்பமுள்ளவர்களும், உனக்கு ஆசாரியர்களுமான எங்களுக்குச் சொல்ல வேண்டும்" என்று நல்ல வார்த்தையாகக் கேட்டார்கள்.

11—14. அதனைக் கேட்டுப் பிரகலாதர் அவர்களை நோக்கி, "தன்னைச் சார்ந்தவன், சத்துரு என்ற அபிமானமானது எவருடைய மாயையால் ஏற்பட்டதோ (உண்மையில்லை) அந்தப் பகவானுக்கு நமஸ்காரம். அப்படிப்பட்ட பேதபுத்தியானது மாயையால் மோகித்த உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறதேயொழிய எனக்கில்லை. பகவானுடைய அனுக்கிரகம் எப்பொழுது உண்டாகுமோ அப்பொழுது நான், நீ, பிறர் என்ற பேத புத்தியானது மாறிவிடும். (எல்லாம் பகவத்ரூபமென்ற எண்ணமுண்டாகும். பகவானுடைய அனுக்கிரகத்தால் அப்படிப்பட்ட புத்தி உண்டாயிற்று என்று தாத்பரியம்.) ஆத்மா ஒருவராலும் அவருடைய சுரூபத்தைத் தெரிந்துகொள்ளமுடியாமலிருப்பதால் மூட ஜனங்கள் நான், நீ என்ற பேத புத்தி அடைகிறார்கள். வேதங்களுடைய அர்த்தத்தை நன்றாய் அறிந்து, பிறருக்கு உபதேசிப்பவர்களான பிரம்மதேவர் முதலியவர்களும் பரமாத்மாவின் சுரூபத்தை நன்றாகத் தெரிந்துகொள்ளாமல் மோகிக்கிறார்கள். ஓ பிராம்மண! இரும்பானது அயகாந்தத்தைக் கண்டவுடன் தான் அதற்கெதிரில் செல்லுவதுபோல ஸ்ரீ மகாவிஷ்ணுவின்

சன்னிதியில் தெய்வச் செயலால் என்னுடைய மனமானது மாறுகிறது'' என்று சொன்னார்.

15—22. அதனைக் கேட்ட அரசனுடைய சேவகரான ஆசாரிய புத்திரன் கோபங்கொண்டு, தீனனாகி, "அட! பிரம்பைக் கொண்டுவா. குலத்தைக் கெடுப்பவனும், துர்ப்புத்தியுள்ளவனுமான இவனை நான்காவது உபாயத்தால் அடக்கவேண்டும். சந்தன மரக் காட்டில் முள்மரம் முளைத்ததுபோல் அசுர குலத்தில் இவன் பிறந்திருக்கிறான். மேலும் இவன் அசுரர்களான வனத்திற்குக் கோடரி போன்ற மகாவிஷ்ணுவிற்கு ஒத்தாசையாகவும் இருக்கிறான்"(கோடரிக் காம்பு என்று அர்த்தம்,) என்று பலவிதமாக அதட்டி, தர்மம், அர்த்தம், காமம் இவைகளைச் சொல்லும் சாஸ்திரத்தைப் படிப்பித்தார். பின்பு ஆசாரியர், "இவன் நான்கு உபாயத்தையும் அறிந்தவன்'' என்று தெரிந்துகொண்டு ஒரு நாள் பிரகலாதரை ஹிரண்யகசிபுவிடம் அழைத்து வந்தார். அவர் அப்பொழுது மாதாவினால் அப்யங்க ஸ்நானஞ் செய்விக்கப்பட்டும் அலங்கரிக்கப்பட்டும் இருந்தார். அப்பொழுது அந்தப் பிரகலாதர் பிதாவாகிய ஹிரண்யகசிபுவின் பாதங்களில் நமஸ்கரித்தார். ஹிரண்யகசிபு குழந்தைக்கு ஆசீர்வாதஞ் செய்து, தழுவி, மிகுந்த பிரியத்தை யடைந்தான். பின்னும் அவன் புத்திரனை மடியின்மீது வைத்துத் தலையில் ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி, குழந்தையை நோக்கி, 'பிரகலாத! இத்தனை நாள் உபாத்தியாயரிடமாக எதனைக் கற்றுக்கொண்டாய்? நீ தெரிந்துகொண்ட மேலான விஷயத்தைச் சொல்' என்று கேட்டான்.

23—24. அதனைக் கேட்ட பிரகலாதர் பிதாவை நோக்கி, " ஸ்ரீ மகாவிஷ்ணுவின் குணங்களைக் கேட்பது,

அவருடைய திவ்ய நாமங்களை உச்சரிப்பது, பகவானுடைய சுரூபத்தைத் தியானிப்பது, பாதங்களைச்சேவிப்பது, விக்கிரகம் முதலியவைகளைப் பூஜிப்பது, நமஸ்கரிப்பது, வேலைக்காரனாக இருப்பது, சிநேகம் வைப்பது, ஆத்ம சமர்ப்பணம் செய்வது ஆகிய ஒன்பது வகையாக ஸ்ரீ மகா விஷ்ணுவினிடம் பக்தி செய்வதே மேலானது என்று நான் படித்துத் தெரிந்துகொண்டேன்'' என்றார்.

25—27. புத்திரனுடைய வார்த்தையைக் கேட்ட ஹிரண்யகசிபு கோபங்கொண்டு உதடு துடிக்க, குருபுத்திரரை நோக்கி, "ஓ பிராம்மணாதம! துர்ப்புத்தியுள்ள என்னை லட்சியஞ்செய்யாமல் என்னுடைய சத்துரு பட்சத்திலிருந்து என் குழந்தைக்குக் கெட்ட மார்க்கத்தை உபதேசித்தாய். மித்திரர்கள் போல வெளிக்கு அபிநயஞ் செய்துகொண்டிருக்கும் கபட சுபாவமுள்ள துஷ்டர்கள் உலகத்தில் இருக்கிறார்கள். பாபிகளுக்கு அவர்கள் செய்த பாப பலனை அனுபவிக்கவேண்டிய காலத்தில் வியாதி உண்டாவதுபோல அந்தத் துஷ்டர்களுக்கு யஜமானனிடத்தில் விரோத புத்தி உண்டாகிறது'' என்றான்.

28—29. அதனைக் கேட்ட குரு புத்திரர், "ஓ மகேந்திரனுக்குச் சத்துருவாக இருப்பவரே! உம்முடைய புத்திரன் இயற்கையான புத்தியால் இப்படிச் சொல்லுகிறானே ஒழிய இது என்னால் சொல்லப்பட்டதுமல்ல; பிறரால் உபதேசிக்கப்பட்டதுமல்ல; ஆனதால் கோபிக்க வேண்டாம். எங்களை வருத்தப்படச் செய்யவேண்டாம்'' என்றார். அதனைக் கேட்ட ஹிரண்யகசிபுவானவர் புத்திரனை நோக்கி, "உனக்கு ஆசாரியன் இப்படி உபதேசிக்க வில்லை என்று சொல்லுகிறாரே; அப்படியானால் இந்தத் துர்ப்புத்தி உண்டான காரணம் யாது?'' என்று வினவினான்.

30—50. அதனைக் கேட்ட பிரகலாதர், "இந்திரியங்களை ஜயிக்காமல் சம்சாரத்தை அடைந்து, அனுபவித்த விஷயங்களையே திரும்பவும் அனுபவித்துக்கொண்டிருக்கும் கிருகஸ்தர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பிறருடைய உபதேசத்தாலாவது, இயற்கையிலாவது பக்தி உண்டாகிறதில்லை. விஷயங்களில் ஆசைகொண்ட அவர்கள் ஆத்மாவையே புருஷார்த்தமாகக்கொண்டவர்களால் அடையக்கூடிய பகவானை அறியார்கள். ஏன் என்றால், அவர்கள் அற்பமான பாஹ்ய விஷயங்களையே பெரியவைகளாக நினைப்பவர்கள். மேலும், அவர்கள் குருடர்களால் அழைத்துக்கொண்டுபோகப்படும் குருடர்கள் போல மார்க்கம் தெரியாமல் பள்ளத்தில் விழுகிறார்கள். பின்னும், பசுக்கள் தும்பினால் கட்டப்படுவதுபோல் பகவானுடைய ஆக்ஞையாகிய வேதத்தால் கட்டப்பட்டிருக்கிறார்கள். பகவானிடத்திலே மனத்தைச் செலுத்தி வேறு பிரயோசனத்தை அபேட்சிக்காமலிருக்கும் மகான்களுடைய பாதசேவை செய்யாமலிருந்தால் துக்கத்தைப் போக்கக்கூடிய ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பாதாரவிந்தம் கிடைப்பதரிது. (தாயாருடைய கர்ப்பத்தில் வசிக்கும்பொழுது நாரதருடைய உபதேசத்தால் எனக்கு இம்மாதிரி புத்தியுண்டாயிற்று என்று தாத்பரியம்.) என்று சொன்னார். அதனைக் கேட்ட ஹிரண்யகசிபு மிகுந்த கோபமுள்ளவனாகி, மடியிலிருக்கும் குழந்தையைப் பூமியில் கிடத்தினான். பின்னுமவன், "ஓ ராட்சதர்களே! மிகவும் குற்றஞ் செய்தவனாகிய இவனைக் கொல்லுங்கள்; துரத்திவிடுங்கள். இவன் சிறிய தகப்பனைக் கொன்றவரான ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பாதங்களைத் தாஸன்போல் பூஜிக்கிறான். ஆனதால் இவன் என்னுடைய சகோதரனைக் கொன்றவனாகிறான். ஐந்து வயதுச் சிறுவனாகிய

இவன் தாய் தகப்பனார்களிடத்தில்கூட ஸ்நேகிதத்தை ஒழித்திருக்கிறான். (இவனுடைய சித்தம் நிலையில்லாத தென்று கருத்து) இவன் ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்கு நல்ல லைதச் செய்வானா ? செய்யமாட்டான். (ஸ்ரீ மகாவிஷ்ணு இவனை அங்கீகரிப்பதும் உசிதமில்லை.) பிறரானாலும் நல்ல ஔஷதம் போல அனுகூலத்தைச் செய்தால் அவனே புத்திரனாவான். தன் பிள்ளையானாலும் வியாதி போல் கெடுதியைச் செய்வானானால் அவனைத் தள்ளிவிட வேண்டும். தன்னுடைய அவயவமானாலும், ஜாகம் முதலியவையால் கெடுதியை உண்டுபண்ணுவதானால் அதனை வெட்டிவிடலாம். அப்படிச் செய்வதால் மற்ற அவயவங்கள் சுகத்தை அடையும். மேலும், கெட்ட வழியில் செல்லும் இந்திரியமானது முனிக்கு எப்படி சத்துருவோ அப்படியே இவன் நமக்குச் சத்துரு; மித்ரன் போல் இருப்பவன். ஆனதுபற்றி ஆகாரம் கொடுப்பது, படுக்கை முதலியவைகளில் விஷம் முதலியவைகளைப் பிரயோகித்தும் பல உபாயங்களாலும் இவனைக் கொல்லுங்கள்" என்று ஆக்ஞாபித்தான். அதனைக் கேட்ட ராட்சதர்கள் 'வெட்டு, குத்து' என்று சொல்லிக்கொண்டு சூலங்களால் பிரகலாதரைக் குத்தினார்கள். அவர்களுடைய தலை மயிரும், மீசையும் செம்பு போன்றது. எல்லாவற்றிற்கும் மேலானதும், இம்மாதிரியென்று குறிப்பிட முடியாததும், சகல சுரூபியுமான பரமாத்மாவிடத்தில் பிரகலாதர் மனத்தைச் செலுத்தியிருந்தபடியால் ராட்சதர்களால் அவரிடம் செய்யப்பட்ட உபத்திரவங்கள் பயன் படவில்லை. அது நாஸ்திகன் செய்யும் நல்ல முயற்சிகள் போலாயின. அதனைக் கண்டு ஹிரண்யகசிபு மிகுந்த ஆலோசனை உள்ளவனாகி நிர்ப்பந்தமாக அவரைக் கொல்வதற்குப் பல உபாயங்களைச் செய்தான. எப்படி என்றால்,— திக் கஜங்களாலும், சர்ப்ப சிரேஷ்டங்களா

லும், அபிசாரப் பிரயோகத்தாலும், மலை முதலியவை களிலிருந்து கீழே தள்ளுவதாலும், மாயைகளாலும், சங்கட ஸ்தலங்களில் அடைத்து வைப்பதாலும், விஷத்தைக் கொடுப்பதாலும், ஆகாரமில்லாமல் செய்வதாலும், பனி, வாயு, அக்கினி, ஜலம் ஆகிய இவைகளாலும், மலையைப் புரட்டுவதாலும் பிரகலாதனைக் கொல்ல முயற்சித்தான். அப்படியும் பாபமற்றவனாகிய புத்திரனைக் கொல்ல முடியவில்லை. அப்பொழுது ஹிரண்யகசிபு மிகுந்த கவலை அடைந்து, "இவன் சிறுவனானாலும் விவேகமுள்ளவன்; இவனைக் கொல்வதற்காக வெகு உபாயங்களைச் செய்தோம்; கடுஞ்சொற்களையும் சொன்னோம்; அவைகள் யாவும் வீணாயின. இவன் தன்னுடைய தேஜஸால் காப்பாற்றப்பட்டிருக்கிறான். நம்மிடத்தில் கோபமில்லை. சுனச்சேபன் போல் விகாரமற்ற மனது உள்ளவனாக இந்திரியங்களை ஜயித்திருக்கிறான். ஆனதால் இவனுடைய மகிமை அளவிடக்கூடாதது; இவனுக்கு ஒருவரிடத்திலும் பயமே இல்லை; மரணமற்றவன்; இவனை விரோதித்தபடியால் எனக்கு மரணம் நேரிடுமே" என்று யோசித்துக்கொண்டு வாடின முகமுள்ளவனாகித் தலை குனிந்தான். அப்பொழுது சுக்கிராசாரியருடைய புத்திரர்களான சண்டன், அமர்க்கன் என்ற இருவர்களும் ஏகாந்தத்தில் அசுரனை நோக்கி, "ஓ பிரபுவே! உம்முடைய புருவ நெரித்தலைக் கண்டு லோகபாலகர்கள் நடுங்குகிறார்கள். நீர் ஒருவராக மூவுலகங்களையும் ஜயித்தீர். அப்படிப்பட்ட நீர் எதற்காகக் கவலைப்படுகிறீர்? புத்திரனுடைய சரித்தைப்பற்றித் துக்கிப்பது நியாயமல்ல. (சிறிது காலஞ் சென்றால் புத்திரனுக்கு நல்ல புத்தி உண்டாகுமென்று கருத்து.) இவன் வெளியில் ஓடிப் போகாமலிருக்கும்படி வருண பாசத்தால் கட்டி, சுக்கிராசாரியர் வருகிறவரையில் காப்பாற்றிவைக்கவேண்டும். சில காலஞ் சென்றால் பெரியோர்களைச் சேவித்து நல்ல புத்தியை அடைவான்" என்றார்கள்.

51—54. அதனைக் கேட்ட ஹிரண்யகசிபு அவர்களை நோக்கி, "கிருகஸ்தர்களான ராஜாக்களுடைய தர்மத்தைப் பிரகலாதனுக்கு உபதேசியுங்கள்" என்று சொன்னான். அவர்களும் தர்மம், அர்த்தம், காமம் ஆகிய இவைகளைப்பற்றிய சாஸ்திரத்தை வணக்கமுள்ளவரான பிரகலாதருக்கு உபதேசித்தார்கள். அப்பொழுது குருக்களால் உபதேசிக்கப்பட்ட தர்மம், அர்த்தம், காமம் ஆகிய இவைகளை க்ஷேமகரங்களாகப் பிரகலாதர் நினைக்கவில்லை. ஏனென்றால், அவைகள் ஆசை, துவேஷம் இவைகளை உண்டுபண்ணி விஷயங்களில் பிரவர்த்திக்கச் செய்கின்றன. மனிதர்கள் வியவகாரத்திற்காகப் பேதத்தை ஏற்படுத்தினார்கள்.

55—58. ஒரு நாள் ஆசாரியன் கிருக கிருத்யங்களைப் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது பிரகலாதருடன் சேர்ந்து படிக்கும் சிறுவர்கள் விளையாடுவதற்காகப் பிரகலாதரை அழைத்தார்கள். அப்பொழுது விவேகியான பிரகலாதர் அவர்களை நோக்கி மிகுந்த கிருபையுடன் ஜனனம், மரணம் இவைகளைப்பற்றிச் சொன்னார். அதைக் கேட்ட சிறுவர்கள் அவரிடத்தில் மிகுந்த கௌரவ புத்தி வைத்து விளையாட்டுச் சாமான்களை எறிந்துவிட்டுச் சுத்த சித்தர்களாகிப் பிரகலாதரையே பார்த்துக்கொண்டு, அவரை உபாசித்திருந்தார்கள். அவர்களை நோக்கி மகா பாகவதரும், மிகுந்த கிருபையுள்ளவருமான பிரகலாதர் பின்வருமாறு சொல்லலானார் :

இந்த அத்தியாயத்தில் 58 சுலோகங்களிருப்பதாக ஸ்ரீதரீய வியாக்கியானத்துடன் கிரந்தாட்சரத்தில் அச்சிடப்பட்டிருக்கும் புத்தகத்தில் காணப்படுகிறது. மற்ற புத்தகங்களிலும், ஓலைப் புத்தகங்களிலும் 54-வது சுலோகம் காணப்படவில்லை. ஆனதால் அதற்கு அர்த்தம் எழுதப்படவில்லை.

## நோட்டு

**வியாதி யுண்டாவது—** பிரம்மஹத்தியைச் செய்பவன் க்ஷய ரோகத்தை அடைவான். கள் குடிப்பவன் சொத்தைப் பற்கள் உள்ளவனாவான். தங்கத்தைத் திருடினவன் சொத்தை நகமுள்ளவனாவான். ஆசாரிய பத்னியைப் புணர்ந்தவன் சரும ரோகமுள்ளவனாவான்—**ஸ்மிருதி.** **சுனச்சேபன்**—அயோத்யா நகரத்தரசனாகிய அம்பரீஷனென்பவர் யாகஞ்செய்யும்பொழுது யாகப் பசு காணமற் போய்விட்டது. அப்பொழுது பிராம்மணர்கள், "பசு காணமற்போனதால், அதற்காக மனிதனைப் பசுவாக வைத்து யாகத்தை முடிக்கவேண்டும்; அப்படிச் செய்யாவிடில் யஜமானனுக்குக் கெடுதி நேரிடும்" என்றார்கள். அதனைக் கேட்டு அரசன் அநேக தனங்களை யெடுத்துக்கொண்டு நர பசுவைத் தேடி வெகு தேசங்களில் அலைந்தார். பிறகு துங்கத்தில் ரிசீகரென்று ஒரு மகரிஷி இருந்தார். அவருக்கு மூன்று குமாரர்கள் இருந்தார்கள். அரசன் அந்த மகரிஷியின் சமீபம் சென்று தம்முடைய காரியத்தைத் தெரிவித்து, ஒரு புத்திரனைக் கொடுக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். அதனைக் கேட்ட மகரிஷி அரசனை நோக்கி, "மூத்த குமாரனை விற்கமாட்டேன்" என்றார். அருகிலிருந்த அவருடைய பத்னியானவள், "இளைய குமாரனை விற்கமாட்டேன்" என்றாள். அவ்விருவருடைய வார்த்தையைக் கேட்ட நடுப்பிள்ளை சுனச்சேபன் தாயுந்தகப்பனும் தன்னை விற்றுவிட்டார்கள் என்று தெரிந்துகொண்டு அரசனை நோக்கி, "என்னை அழைத்துப் போகலாம். என் தாய் தந்தைகளுக்கு இஷ்டமான வஸ்துக்களைக் கொடும்; போவோம்" என்றான். அதனைக் கேட்டு அநேகம் பசுக்களைக் கொடுத்து அவனை விலைக்கு வாங்கிக்கொண்டு தமது நகரஞ் செல்லும் வழியில் புஷ்கர க்ஷேத்திரத்தில் தங்கினார். அவ்விடத்தில் விசுவாமித்திரர் தவஞ் செய்துகொண்டிருந்தார். சுனச்சேபன் அவரைச் சரணமடைந்து, அவரால் உபதேசிக்கப்பட்ட மந்திரங்களால் அரசனுடைய யாகத்தைப் பூர்த்தி செய்து, தன்னுடைய உயிரையும் காப்பாற்றிக்கொண்டான். தாய் தகப்பனார் செய்த அபகாரத்தை மனத்தில் வைக்கவில்லை.—**ஸ்ரீ வால்மீகி ராமாயணம், பால காண்டம்—61-வது அத்தியாயம்.**

## அத்தியாயம் 6

### பிரகலாதர் சிறுவர்களுக்குத் தத்துவத்தை உபதேசித்தது

1—5. 'ஓ சிறுவர்களே! பலவகையிலும் க்ஷேமகரமான வார்த்தையைச் சொல்லுகிறேன், கேளுங்கள். உங்களுடைய தோழர்களான சிறுவர்கள் மரணமடைந்ததைப் பாருங்கள். வீணாக விளையாட்டினால் காலத்தைக் கழித்து விடவேண்டாம். நாமெல்லோரும் முந்தி பாலர்களாக இருக்கவில்லை; ஆத்மாவிற்குப் பிரியத்தை விரும்பியவர்களே. ஆசாரியர் அனர்த்தத்தை அர்த்தம்போல் சொல்வதால் அதனைக் கேட்கவேண்டாம்; அஞ்ஞானமாகிய தூக்கம் பிடித்தவன் அதனைக் கேட்டு விழித்துக்கொள்ள மாட்டான். அவருடைய வார்த்தையை நம்பக்கூடாது. குருடன் குருடனுடைய வார்த்தையில் நம்பிக்கை வைப்பானா? ஆத்மாவிற்குச் சத்துருவாக இருப்பவன் யார்? உதாசீனனாக இருப்பவன் யார்? மித்திரன் யார்? எது பிரயோசனம்? (1 முதல் 5 சுலோகங்கள் பழைய புத்தகங்களில் காணப்படவில்லை).

6—37. ஜன்மங்களில் மனுஷ்ய ஜன்மம் கிடைப்பதரிது; அதுவும் நிலையற்றது; ஆனாலும் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியது. ஆனதால் பாலிய வயதிலேயே இந்த மனுஷ்யஜன்மத்திலேயே விவேகியாயிருப்பவன் பகவானை அடைவதற்குச் சாதனங்களான தர்மங்களை அநுஷ்டிக்க வேண்டும். ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பாதத்தைச் சேவிப்பதே மனிதனுக்கு முக்கியமான தர்மம். அந்தப் பகவான் சகல பிராணிகளுக்கும் பிரியராகவும், ஆத்மாவாகவும், ஈசுவரனாகவும், சுஹிருத்தாகவுமிருக்கிறார். ஓ சிறுவர்களே! இந்திரிய விஷயமான சுகம் முன் ஜன்மத்திய அதிருஷ்ட வசத்தால் பசு முதலிய திர்யக் ஜாதிகளுக்கும் பிரயத்னமின்றி கிடைக்கிறது. அதற்காக முயலுவது வீணதே.

யாம். விஷய சுகத்திற்காக முயலுவதால் ஆயுள் வீணுகச் செலவாகிறதேயொழிய க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய முகுந்தருடைய பாதாரவிந்தம் கிடைக்கிறதில்லை. ஆன தால் சம்சாரியாக இருப்பவன் இந்தச் சரீரம் நாசமடைவ தற்கு முன்னமேயே க்ஷேமத்தை அடைவதற்கு முயல வேண்டும். புருஷனுக்கு நூறு வருஷங்கள் பரம ஆயுசு என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் பாதி ஆயு ளைத் தூக்கத்தில் (ராத்திரியில்) கழித்துவிடுகிறுன். பால்யத்திலும், கிசோரனுக இருப்பதிலும், விளையாட்டினு லும் இருபது வருஷங்களைக் கழித்துவிடுகிறுன். அபர வயதில் கிழத்தனத்தை அடைந்து, ஒன்றையும் செய்ய முடியாதவனுகி இருபது வருஷங்களைப் போக்கிவிடுகிறுன். பாக்கியான சொற்ப ஆயுளானது பூர்த்திசெய்ய முடியாத காமத்தாலும், மோகத்தாலும் விஷயங்களில் ஆசை கொண்டு கழிக்கப்படுகிறது. மேலும், மிக்க சிரமப்பட்டு சம்சாரத்தை விரும்புகிறவர்களான நம்முடைய ஞாதி களுக்கு ஏற்பட்டிருக்கும் புத்தி வித்தியாசத்தைப் பாருங் கள். பலவகையான யோனிகளில் கர்ப்பத்தை யடைந்து சரீரத்தை அடைந்தவன் சக்கரவர்த்தியானுலும் என்ன சுகத்தை அடையப் போகிறுன்? காலத்தின் மகிமை யால் எல்லாம் நிலையில்லாமல் இருப்பதால் எந்தக் கர்மாவை நல்லதென்று சொல்லக்கூடும்? [எதனைக் கெட்டதென்று சொல்லக்கூடும்?] இந்திரியங்களை ஜயிக் காமல் புத்திரன், களத்திரம் முதலியவைகளில் ஆசை கொண்டவனும், திருடமான சிநேகபாசத்தால் கட்டப் பட்டவனுமான ஆத்மாவை அதிலிருந்து நிவர்த்தித்துக் கொள்ள எவன்தான் விரும்புகிறுன்? ஏனென்றுல் இந்திரி யங்களுக்கு வசப்பட்டிருக்கிறுன்; அர்த்தத்தில் ஆசையை யொழிப்பது மிகவும் அரிது. அந்த அர்த்தமானது பிராணனைக் காட்டிலும் மிக்க பிரியமான வஸ்துவாக

இருக்கிறது. திருடனும், சேவகனும், வியாபாரிகளும் பிராணனைக்கூட லட்சியம் செய்யாமல் பணத்தைச் சம்பாதிக்க முயற்சிக்கிறார்களல்லவா? மேலும், தன்னிடத்தில் பிரியமுள்ள களத்திரத்தையும், அவளால் செய்யப்படும் ஹிதோபதேசத்தையும் நினைத்துக்கொண்டும், சுகிருததுக்கள், புத்திரன் ஆகிய இவர்களிடத்திலுள்ள சிநேகத்தால் கட்டப்பட்டும், குழந்தைகளுடைய இனிமையான வார்த்தைகளைக் கேட்டும் சம்சாரத்தில் மூழ்கியிருப்பவன் அதனை விடுவதற்கு விரும்புவானா? பின்னும், புத்திரர்கள் பெண்கள், சகோதரர்கள், தங்கைகள், தாய் தகப்பனார்கள், அழகான படுக்கை முதலிய சாமக்கிரிகள் நிறைந்த வீடு, வம்ச பரம்பரையான விருத்திகள், பசுக்கள், வேலைக்காரர்கள் ஆகிய இவைகளிடத்தில் மிகுந்த அபிமானத்தை அடைந்து, அவைகளையே நினைத்துக்கொண்டிருக்கிறான். மேலும், புழுவானது தான் வெளியில் வருவதற்குக்கூட வழியில்லாமல் கூடு கட்டிக் கொள்வதுபோலக் காமத்தில் போதுமென்ற திருப்தியில்லாமல் கர்மங்களைச் செய்துகொண்டு, இனிமையான ஆகாரத்தையும், ஸ்திரீ சம்போகத்தையும் மேலானதென்று நினைத்திருக்கிறான். இப்படி விசேஷ மோகமுள்ளவனாக இருப்பதால் ஸம்ஸாரத்திலிருந்து எப்படி வைராக்யத்தை அடைவான்? குடும்பத்தைக் காப்பாற்றுவதே புருஷார்த்தமென்று நினைத்து, அதிலேயே ரமித்துக்கொண்டு அதனைக் காப்பாற்றுகிற விஷயத்தில் ஆயுளைச் செலவிடுகிறான்; புருஷார்த்தத்தை அடைகிறதில்லை; மூவகையான தாபத்தை அநுபவிக்கிறான். ஆனால் அதனைத் துக்கமாக நினைக்கிறதில்லை. பிறருடைய பணத்தைத் திருடினவர்களுக்கு இவ்வுலகத்தில் அரசனுடைய தண்டனையும், பரலோகத்தில் நரகமும் உண்டாகுமென்று தெரிந்துகொண்ட வித்வான்களும்

குடும்பத்தைக் காப்பாற்றவேண்டி திருடுகிறார்கள். எப்பொழுதும் பணத்திலேயே ஆசை கொண்டிருக்கிறார்கள்; வித்வானானாலும், 'தம்மைச் சார்ந்தவன்; பிறர்' என்ற பேதபுத்தியுள்ளவனாகையால் குடும்பத்தைப் போஷித்துக்கொண்டு மூடன் போல ஸம்ஸாரத்தை அடைகிறானேயொழிய ஆத்ம சுரூபத்தைப் பார்க்கிறதில்லை. மேலும், வித்வானானாலும் தன்னுடைய ஆத்மாவைக் காப்பாற்றிக்கொள்ளமுடியாமல் தீனனாக இருக்கிறான். ஸ்திரீகளுக்குக் கிரீடாமிருகம்போலிருக்கிறான்; புத்திரன் முதலியவர்கள் புருஷனுக்கு விலங்குபோலிருக்கிறார்கள். ஓ தைத்யர்களே! விஷயங்களிலே ஆசையுள்ளவர்களான அசுரர்களிடத்தில் ஆசையையொழித்து, ஆதிதேவராகிய ஸ்ரீமந் நாராயணனைச் சேவியுங்கள். வைராக்யமுள்ளவர்கள் விரும்பிய மோட்சபதம் அவரேயாம். ஓ அசுரக் குழந்தைகளே! ஸ்ரீ பகவானைச் சேவிப்பதில் வெகுதூரம் செல்லவேண்டியது முதலிய சிரமமில்லை. அந்த நாராயணன் சகல பிராணிகளுக்கும் ஆத்மா; சித்தமான வஸ்து; தாவரம் முதல் பிரம்மா வரையிலுள்ள மேலான பிராணிகளிடத்திலும், தாழ்ந்தவர்களிடத்திலும் குடம் முதலியவைகளிலும், ஆகாசம் முதலிய மகாபூதங்களிலும், மகத், அகங்காரம் முதலியவைகளிலும் இருப்பவர் பகவான் ஒருவரே. அவர் எல்லாவற்றிற்கும் அதிபதி; நாசமற்றவர்; பிரத்யகாத்ம சுரூபமாகப் பிரகாசிப்பவர்; பிரபஞ்ச சுரூபமாகவு மிருப்பவர்; வியாப்யர் (சொற்ப தேசத்திலிருப்பவர்); வியாபகர் (அநேக இடங்களிலிருப்பவர்) என்று சொல்லப்பட்டவர்; உண்மையில் குறிப்பிடமுடியாதவர்; அந்தப் பரமாத்மா அநுபவாத்மகமான ஆனந்தசுரூபி; ஆனால் அவர் தம்முடைய மாயையால் தம்முடைய ஐசுவரியங்களை மறைத்துக்கொண்டிருக்கிறார். ஆனதால் நீங்கள் அசுர சுபாவத்தை விட்டு

சகல பிராணிகளிடத்திலும் தயை, ஸ்நேகம் ஆகிய இவை களைச் செய்யுங்கள். இப்படிச் செய்வதால் ஸ்ரீமந் நாரா ணன் சந்தோஷத்தை அடைகிறான். நாசமற்றவரும் எல்லாவற்றிற்கும் முந்தியவருமான பகவான் சந்தோஷ மடைந்தால் எதுதான் கிடைக்காது? பகவானுடைய பாதாரவிந்தத்தைச் சேவித்து, அதன் அனுபவத்தை அடைந்து காலம் செய்பவர்களான நமக்குத் தர்மம்முதலி யவைகளால் என்ன பிரயோஜனம்? அவைகள் சத்துவம் முதலிய குணங்களால் ஏற்பட்டவை; முயற்சியில்லாம லேயே சித்தித்தவை. அப்படிப்பட்ட எங்களுக்கு மோட் சத்தாலும் பிரயோசனமில்லை. மேலும் தர்மம், அர்த்தம், காமம் என்ற மூன்று வர்க்கங்களும், ஆத்ம வித்தையும் கர்ம வித்தையும், நீதியும், தவமும் பலவகையாக வேதத் தால் சொல்லப்பட்டவைகளானாலும் அவையெல்லாம், "சகல உலகங்களுக்கும் சுகிருத்தாகிய பரமபுருஷனு டைய ஆத்மார்ப்பணத்தில் (ஆராதனத்தில்) உபயோகப் படுமானால் அவைகள் சத்தியங்கள்" (பிரயோஜனமுள் ளவை) என்று நினைக்கிறேன். இந்த அரிதான ஞானத் தைப் பதரிகாசிரமத்தில் நரனுடன் கூடிய நாராயணன் நாரதருக்கு உபதேசித்தார். ஆனால் பகவானையே பிர யோசனமாக நினைத்தவர்களும, பகவானுடைய பாதார விந்த தூளியால் ஸ்நானம் செய்தவர்களுமான (பாதங் களைச் சேவித்தவர்கள்) எல்லா பக்தர்களுக்கும் அந்த ஞானம் உண்டாகும். (நாராயணர் நாரதருக்கு உபதே சித்த ஞானத்தில் நமக்கு அதிகாரம் ஏற்படுமோவென்று சந்தேகப்படவேண்டாம். பக்தர்கள் எல்லாருக்கும் அதி காரம் உண்டென்று கருத்து.) ஞானம், விஞ்ஞானம் ஆகிய இவைகளுள்ள சுத்தமான இந்தப் பாகவத தர்மத்தை மிகவும் ஞானியாகிய நாரதரிடமாக உபதேசம் பெற் றேன்" என்றார்.

*38—39.* அதனைக் கேட்ட சிறுவர்கள் பிரகலாதரை நோக்கி, 'ஓ பிரகலாத! நீயும் நாங்களும் இந்த இரண்டு ஆசாரியர்களைத் தவிர வேறு குருவை அறியோம். மேலும், அந்தப்புரத்திலேயே வசிக்கிறோம். எங்களை விட்டு நீயும் பிரியவில்லை. அப்படியிருக்க நாரதரை நீ எப்பொழுது சந்தித்தாய்? இந்த விஷயத்தில் எங்களுக்கு இருக்கும் சந்தேகத்தைப் போக்கடிக்கவேண்டும்' என்று வேண்டிக்கொண்டார்கள்.

[இந்த அத்தியாயத்தில் 39-சுலோகங்கள் மூலத்தில் காணப்படுகின்றன. ஆனால் 1 முதல் 5-சுலோகங்களும், 36-வது சுலோகமும் பழைய புத்தகங்களில் இல்லை.]

## அத்தியாயம் 7

### நாரதருடைய உபதேசம்

*1—11.* அசுரக் குழந்தைகளுடைய வார்த்தையைக் கேட்டு மகா பாகவதராகிய பிரகலாதர் அவர்களை நோக்கி என்னுடைய வார்த்தையை நினைத்துக்கொண்டு சிரித்துப் பின்வருமாறு சொல்லலானார். எப்படியென்றால், "ஓ குழந்தைகளே! நம்முடைய பிதாவாகிய ஹிரண்ய கசிபுவானவர் முன்னொருகால் தவம் செய்வதற்காக மந்தர பர்வதம் சென்றார். அந்தச் சமயத்தில் தேவர்கள் அசுரர்களுடன் யுத்தம் செய்ய முயற்சித்தார்கள். பின்னும் இந்திரன் முதலிய தேவர்கள் 'லோகத்திற்கு உபத்திரவத்தைச் செய்பவனை இந்த அசுரன் எறும்புகளால் சர்ப்பமானது கொல்லப்படுவது போலத் தன்னுடைய பாபத்தால் நாசஞ் செய்யப்பட்டான்' என்றும் சொல்லிக்கொண்டார்கள். அப்பொழுது அசுரர்கள் தேவர்களால் அடிக்கப்பட்டுப் பயந்து அவர்கள் களத்

திரம், புத்திரன், பணம், இஷ்டர்கள், வீடு, பசுக்கள் முதலிய சாமக்கிரிகளைக்கூட அபேட்சியாமல் உயிர் தப்பிப் பிழைத்தால் போதுமென்று பல திக்குகளை நோக்கி ஓடினார்கள். மகேந்திரன் இரண்யகசிபுவின் பத்தினியும், என்னுடைய மாதாவுமான கயாது என்பவளைப் பிடித்துக்கொண்டு சென்றார். அப்பொழுது அவள் குரரி என்ற பறவைபோல் அழுதாள். அப்பொழுது தெய்வச்செயலாக நாரதர் மகேந்திரனை வழியில் சந்தித்து, "ஓ தேவசிரேஷ்ட! குற்றஞ் செய்யாதவளும், பதிவிரதையும், பரஸ்திரீயுமான இவளை அபகரிப்பது உசிதமில்லை. ஓ மிகுந்த அதிருஷ்டமுள்ளவரே! இவளை விட்டு விடும்!' என்று சொன்னார். அதனைக் கேட்ட மகேந்திரன் நாரதரை நோக்கி, "இவளுடைய வயிற்றில் இரண்யகசிபுவின் வீரியம் இருக்கிறது (கர்ப்பிணியாக இருக்கிறாள்). ஆனதால் பிரசவிக்கிற வரையில் என்னிடம் இருக்கட்டும். இவள் பிரசவித்த பிறகு குழந்தையைக் கொன்றுவிட்டு இவளை விட்டுவிடுகிறேன்" என்றார். அதனைக் கேட்ட நாரதர் மகேந்திரனை நோக்கி, "இவளுடைய வயிற்றிலிருப்பவர் பாகவதர்களுக்குட் சிறந்தவர்; பாபமற்றவர்; ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பக்தர்; அவரைக் கொல்வதற்கு உம்மால் முடியாது" என்றார். அதனைக் கேட்டு மகேந்திரன் நாரதருடைய வார்த்தையில் கௌரவ புத்தியை வைத்து, என் மாதாவை விட்டு அவளைப் பிரதட்சிணம் செய்து தம்முடைய லோகம் சென்றார்.

12—57 பின்பு நாரத மகரிஷி என்னுடைய மாதாவைச் சமாதானம் செய்து தம்முடைய ஆச்சிரமத்திற்கு அழைத்துப்போய், 'உன்னுடைய பர்த்தா வருகிறவரையில் இவ்விடத்திலிரு' என்றார். அவளும் அதனை ஒப்புக்கொண்டு பயமற்றதான அந்த ஆச்சிரமத்தில் வசித்ததுமன்றித் தன்னுடைய கர்ப்பம் க்ஷேமமாக இருக்கவேண்

டியதற்காகவும், தன்னுடைய பர்த்தா வந்த பிறகு பிரசவம் ஆகவேண்டுமென்பதற்காகவும் மிகுந்த பக்தியுடன் அந்த மகரிஷிக்குச் சிசுரூஷை செய்துவந்தாள். அப்பொழுது தயவுள்ளவராகிய அந்த மகரிஷி கர்ப்பத்திலிருக்கும் என்னை உத்தேசித்து தர்மத்தின் ரகசியத்தையும், நிர்மலமாகிய ஞானத்தையும் அவளுக்கு உபதேசித்தார். வெகு நாளைக்கு முந்தி நடந்ததானதாலும், ஸ்திரீயானதாலும் அந்த ஞானமானது என் மாதாவிற்கு மறைந்துவிட்டது. மகரிஷியின் அனுக்கிரக விசேஷத்தால் எனக்கு அது மறக்கவில்லை. என்னுடைய வார்த்தையில் உங்களுக்கு நம்பிக்கையும், கூர்மையான புத்தியும் இருக்குமானால் அந்தத் திவ்யமான ஞானம் உங்களுக்கும் உண்டாகும். அந்த மகரிஷியால் உபதேசிக்கப்பட்டது என்னவென்றால், மரங்கள் ஜீவித்திருக்கும்பொழுது அதன் பழங்களுக்கும பரிணமம்(பிஞ்சு, காய், பழம் முதலியவை) ஏற்படுவது போல வஸ்துக்களைப் பலவகையாக மாற்றும் சக்தியுள்ள காலத்தால் உற்பத்தி முதலிய ஆறு விகாரங்கள் ஜீவனிருக்கும்பொழுது சரீரத்திற்கு ஏற்பட்டிருக்கின்றன. ஆத்மாவுக்கு அவைகள் இல்லை. (ஆத்மா உண்டாகிறதுமில்லை; இளைக்கிறதுமில்லை; மரணமடைகிறதுமில்லை.) (ஆத்மா நித்தியர்; குறைவற்றவர்; தோஷமற்றவர்; ஒருவர்; க்ஷேத்திரக்ஞர்; எல்லாவற்றிற்கும் ஆசிரயமாக இருப்பவர்; விகாரமற்றவர்; தாமாகப் பிரகாசிப்பவர்; எல்லாவற்றிற்கும் காரணனாக இருப்பவர்; சகல உலகங்களையும் சிருஷ்டித்தவராகையால் வியாபகர்; ஒன்றிலும் சம்பந்தப்படாதவர்; என்றலும் மறைக்கப்படாதவர்; இம்மாதிரியான ஆத்மாவின் பன்னிரண்டு லட்சணங்களால் ஆத்மாவின் உண்மையைத் தெரிந்து கொண்டு தேகம் முதலிய அனாத்ம பதார்த்தங்களில் 'நான், என்னுடையது' என்ற அபிமானத்தை ஒழிக்க

வேண்டும். தட்டான் உரைகல்லில் ஒட்டியிருக்கும் சுவர்ணத்தைத் தகுந்த உபாயத்தால் எடுத்து எப்படி அடைகிறானோ, அப்படி காரியம், காரணம் ஆகிய இவைகளை அறிந்தவனாகிய புருஷன் சரீரத்திலிருக்கும் ஆத்மாவை ஆத்ம யோகத்தால் அடைந்து பிரம்மமாக ஆகிறான். மூலப் பிரகிருதி, மகத் தத்துவம், அகங்காரம், ஐந்து தன்மாத்திரைகள் ஆகிய எட்டும் பிரகிருதிகள். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்றும் அவைகளின் குணங்களேயாம். பதினொரு இந்திரியங்கள்; ஐந்து மகா பூதங்கள் ஆகிய பதினாறும் இந்திரியங்கள். இவைகளில் சாட்சியாக அனுவர்த்தித்திருப்பதால் புருஷன் ஒருவனேயாம். எல்லா விகாரங்களின் சமூகமே தேகமெனப்படுகிறது. அது ஜங்கமம், ஸ்தாவரம் என்று இருவகை உள்ளது. இந்தச் சரீரத்திலிருக்கும் வஸ்துக்களின் சுபாவத்தை விசாரித்து, ஒவ்வொன்றையும் அனாத்மா என்று நிச்சயித்து, 'இது ஆத்மாவில்லை; இது ஆத்மா இல்லை' என்று ஆத்மாவைத் தேடவேண்டும். அனாத்ம வஸ்துக்களுடைய கூட்டத்திலிருந்து ஆத்மாவை எப்படிப்பிரித்து எடுக்கிறதென்றால் ஜாக்கிரதவஸ்தை (விழித்துக் கொண்டிருப்பது), ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற அவஸ்தைகள் புத்தியின் விருத்திகள். அவைகள் எவனால் அனுபவிக்கப்படுகின்றனவோ அவனே சாட்சியாகிய புருஷன்; மேலானவன். மேற்சொல்லிய விருத்திகள் முக்குண சுரூபமாயுள்ளவை; கர்மங்களால் உண்டானவை. ஆனதால் அந்த புத்தி பேதங்கள் ஆத்மாவினுடைய தர்மங்களல்ல; அனாத்ம தர்மங்களேயாம். புஷ்பத்தின் குணமாகிய வாசனையைக்கொண்டு அதற்கு ஆசிரயமாகிய வாயுவைத் தெரிந்துகொள்வதுபோலப் புத்திக்கும் சாட்சியாக இருப்பது ஆத்மாவின் சுரூபமென்று தெரிந்துகொள்ளவேண்டும். மேலும், ஜகத்தைப் படைப்

பது, பரிபாலிப்பது, சங்கரிப்பது ஆகிய இவைகளுக்குப் பரமாத்மாவே காரணமென்று சுருதியில் சொல்லப்பட்டிருப்பதாலும், எல்லாவற்றிலும் ஆத்மா ஓதப்ரோதமாக இருப்பதாலும் அந்த ஆத்மாவைச் சுத்தமான மனத்தால் அனுத்மக் கூட்டத்திலிருந்து அவசரப்படாமல் பிரித்தெடுக்கவேண்டும். ஆனால் வாயுவிற்குப் புஷ்பத்தின் சம்பந்தம் உண்மையில் இருக்கிறது. ஆத்மாவிற்கு சம்சார பந்தம் உண்மையிலில்லை; புத்தியினுடைய குணங்களாலும், கர்மங்களாலும் ஏற்படுகிறது; அதற்கு அஞ்ஞானமே காரணம்; மித்தியா பூதம். (உண்மையானதல்ல.) சுவப்னம் போலப் புருஷனால் அடையப்படுகிறது. சுவப்னத்திலும் ஜாக்கிரதவஸ்தையிலும் அனுபவிக்கப்படும் சகல விஷயங்களும் மனோமயங்களாகையால் சப்மானவைகளே. அவைகள் பார்க்கப்பட்டாலும், மறைந்தாலும், தியானம் செய்பவனுக்குச் சோகத்தையும், மோகத்தையும், பயத்தையும் கொடுக்கின்றன. குணங்களற்றவரானாலும் பரமாத்மாவிற்குக் குணங்களின் சேர்க்கையால் சம்சாரமேயொழிய உண்மையிலில்லை. மேலும், சரீர தர்மமாகிய ஜனனமும், மரணமும் சரீர சம்பந்தத்தால் ஜீவனுக்கு இருப்பதாகத் தோன்றுகின்றனவேயொழிய இயற்கையில் இல்லை. ஆனதால் முக்குண சுரூபமான கர்மத்தின் பீஜத்தை (விதையை) நாசஞ் செய்யவேண்டும். அதுவே யோகம். அது புத்தியின் பிரவாகமான ஜாக்ரத் முதலிய அவஸ்தைகளை ஒழிப்பதேயாம். அதற்கு அநேக உபாயங்களிருக்கின்றன. ஆனாலும் எவைகளை அனுஷ்டித்தால் பகவானிடத்தில் பக்தி உண்டாகுமோ, அவைகளை அனுஷ்டிப்பதே மேலான உபாயம்'' என்று ஈசுவரனால் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகள் எவை என்றால், ஆசாரியனுக்குச் சிசுரூஷை செய்வது, எல்லாரிடத்திலும் சிநேகிப்பது, கிடைத்தவை எல்லாவற்றையும்

ஈசுவரனிடத்தில் சமர்ப்பிப்பது, பகவத் பக்தர்களுடைய சங்கத்தாலும், ஈசுவரனை ஆராதிப்பது, பகவானுடைய கதையில் சிரத்தை வைப்பது, அவருடைய குணங்களையும் சரிதங்களையும் சொல்வது, அவருடைய பாதாரவிந்தத்தைத் தியானிப்பது, பகவானுடைய விக்கிரகத்தைத் தரிசிப்பது முதலியவைகளாம். ஸ்ரீமந்நாராயணன் எல்லாருடைய இருதயத்திலும் வசிக்கிறார். ஆனதால் எல்லாரையும் மனத்தால் பூஜிக்கவேண்டும். இப்படி காமம் முதலிய ஆறுவகைச் சத்துருக்களை ஜயித்து ஸ்ரீ பகவானாகிய வாசுதேவரிடத்தில் பிரீதி செய்யவேண்டும். அதனால் பக்தி சித்திக்கும். பகவான் ராமனாகவும் ஸ்ரீ கிருஷ்ணனாகவும் அவதரித்துச் செய்த ஒப்பற்ற சரிதங்களைக் கேட்டும், தன் வாக்கினால் உச்சரித்தும் புருஷன் மிகுந்த சந்தோஷத்தை அடைகிறான்; மயிர்க்கூச்சலடைகிறான்; ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி அதனால் கண்டமடைத்துப் பேச முடியாதவனாகிறான்; பகவானிடத்தில் மிகுந்த ஆசையுடன் கெட்டியாகக் கானஞ்செய்கிறான்; நர்த்தனஞ் செய்கிறான்; பிசாசம் பிடித்தவன் போல் சில வேளை சிரிக்கிறான்; கதறுகிறான்; தியானஞ் செய்கிறான்; கண்டவர்களை நமஸ்கரிக்கிறான்; அடிக்கடி பெருமூச்சு விடுகிறான்; பரமாத்மாவினிடத்திலேயே புத்தியைச் செலுத்தியவனாகையால் வெட்கமில்லாமல், "ஓ ஜகத்திற்கு அதிபதியே! ஹரியே! நாராயணா" என்று சொல்லுகிறான். பின்னும் அந்த நிலைமையை அடைந்த புருஷன், பகவான் செய்த சேஷ்டைகளை மனத்தாலும் சரீரத்தாலும் பாவித்து, மிகுந்த பக்திப் பிரவாகத்தால் அஞ்ஞானம், வாசனை ஆகிய இவைகளைப் போக்கடித்துக்கொண்டு, சகல பந்தத்திலிருந்து நிவர்த்தியடைந்து ஸ்ரீமந்நாராயணனை அடைகிறான். மேலும், சரீரமுள்ளவர்களுக்கு ஸ்ரீ பகவானை அடைவதே சம்சார

சாகரத்தை நிவர்த்திக்கக்கூடியது'' என்று சொல்லுகிறார்கள். அதனையே பிரம்மானந்த சுகம் என்று சொல்லுகிறார்கள். ஆனதுபற்றி நீங்கள் ஈசுவரனை இருதயத்தில் தியானம் செய்யுங்கள். சத்திய சுரூபியும், சகல பிராணிகளுக்கும் மித்திரருமான பகவானை இருதயாகாசத்தில் தியானஞ் செய்வதில் அதிகப் பிரயாசம் ஏது? விஷயங்களைச் சம்பாதிப்பதால் என்ன பிரயோசனம்? மேலும், பணம், களத்திரம், பசுக்கள், புத்திரன் முதலிய ஐசுவரியங்கள், அர்த்தங்கள், காமங்கள் முதலியவை எல்லாம் நிலையில்லாதவை; அவைகள் மனிதனுக்கு எவ்விதப் பிரியத்தை உண்டுபண்ணப்போகின்றன? சுவர்க்கம் முதலிய லோகங்களும் யாகங்களால் கிடைக்கக்கூடியவைகள். அவைகள் புண்ணியத்தின் தாரதம்யத்தால் வித்தியாசமுள்ளவைகளாக இருக்கின்றன; ஆனாலும் நித்தியங்களல்ல. ஆனதால் அழிவற்றவராகிய பகவானைப் பக்தியினால் அடையுங்கள். அவர் தோஷமற்றவர்; (அவரிடத்தில் தோஷமிருப்பதாகப் பார்த்ததில்லை, கேட்டதுமில்லை.) மேலானவர்; அதனால் ஆத்ம லாபம் கிடைக்கும். அகங்காரமுள்ள வித்வானாகிய புருஷன் எந்தப் பலத்தை உத்தேசித்து அடிக்கடி கர்மங்களைச் செய்கிறானோ அதற்கு விரோதமான பலத்தை அவசியம் அடைகிறான். பின்னும் புருஷன் சுகத்தை அடைவதற்கும், துக்கத்தை நிவர்த்திதுக்கொள்வதற்கும சங்கற்பித்தே கர்மங்களைச் செய்கிறான். ஆசையில்லாமல் இருந்தபொழுது எவன் சுகமடைந்திருந்தானோ, அந்தப் புருஷனே ஆசையை அடைந்தபோது துக்கத்தையே அடைகிறான். பின்னும் இந்தப் புருஷன் எந்தச் சரீரத்தைப் போஷிப்பதற்காக விஷயங்களில் ஆசைப்படுகிறானோ, அந்தச் சரீரமானது பிறருடையது (நாய்க்குச்

சொந்தமானது); அநித்தியமானது; போகிறதும் வரு கிறதுமாக இருக்கிறது. மேலும், குழந்தைகள், களத் திரம், வீடு, பணம் முதலியவை, ராஜ்யம், பொக்கிஷம், சைனியம், மந்திரி, வேலைக்காரர்கள், ஆப்தர்கள் ஆகிய இவைகள் அகங்காரத்திற்குக் காரணங்களாக இருப்ப வைகள்; சரீரத்தைவிட வேருகக் காணப்படுகின்றவை கள். இவைகள் அற்பங்கள்; அநித்யங்கள்; அர்த்தம் போலத் தோன்றுறவைகள்; உண்மையில் அனர்த் தத்தைக் கொடுக்கக்கூடியவைகள்; நித்தியமான ஆனந்த சமுத்திரமாகிய ஆத்மாவிற்கு மேற்சொல்லிய வைகளால் என்ன பிரயோசனம்? ஓ அசுரக் குழந்தை களே! முன் செய்த கர்மங்களால் நிஷேகம் (ஸ்திரீயி னிடத்தில் புருஷனுல் செய்யப்படும் கர்ப்பாதானம்) முதலிய அவஸ்தைகளில் கஷ்டப்படும் ஜீவனுக்கு என்ன புருஷார்த்தம் கிடைக்கிறது? யோசித்துப் பாருங்கள். ஜீவனுள்ள தேகத்தால் கர்மங்களைச் செய்ய முயற்சிக் கிருன். கர்மங்களால் சரீரம் ஏற்படுகிறது. தேகம், கர்மம் ஆகிய இரண்டும் சுரூபத்தை அறியாததால் ஏற்படுகின்றன. ஆனதால் தர்மங்களும், அர்த்தங்களும், கர்மங்களும் எவரை ஆசிரயித்திருக்கின்றனவோ, ஆசை அற்றவரான அந்த ஈசுவரனுகிய ஸ்ரீமந்நாராயணனை ஒன்றையும் விரும்பாமல் (பலனை உத்தேசியாமல்) சேவி யுங்கள். ஹரியானவர் சகல பிராணிகளுக்கும் ஆத்மா வாகவும், ஈசுவரராகவும், பிரியராகவும் இருக்கிருர். மேலும் அவர் தம்மால் சிருஷ்டிக்கப்பட்ட மகா பூதங்க ளுடன் சம்பந்தப்பட்டபடியால் ஜீவனென்று பெயரை அடைந்திருக்கிருர். நீங்கள் அசுரர்களானுலும் பகவானை உபாசிப்பதில் உங்களுக்கும் அதிகாரமுண்டு; ஏனென் ருல், தேவனுனுலும், அசுரனுனுலும், மனிதனுனுலும், ராக்ஷஸனுனுலும், கந்தர்வனுனுலும் ஸ்ரீ முகுந்தருடைய

பாதாரவிந்தத்தைச் சேவித்தானுனல் மேன்மேலும் க்ஷேமத்தை அடைவான். ஓ அசுரக் குழந்தைகளே! பகவான் சுத்தமான பக்தியால் சந்தோஷப்படுவதுபோல, பிராம்மண ஜன்மத்தை அடைந்திருப்பதாலும், தேவனாக இருப்பதாலும், மகரிஷியாக இருப்பதாலும், தானத்தாலும், தவத்திஞலும், யாகத்தாலும், சௌசத்தாலும், விரதங்களாலும் பிரியமடைகிறதில்லை. மற்றவை அபிநயங்களேயாம். ஓ அசுரர்களே! தங்களை உபமானமாக வைத்துக்கொண்டு சகல சுரூபியாக இருக்கும் பகவானாகிய ஸ்ரீமந்நாராயணனிடத்தில் பக்தி செய்யுங்கள். அவர் சகல பிராணிகளுடைய சுரூபியாக இருப்பவர். மேலும், சில தைத்தியர்களும், யக்ஷர்களும், ராக்ஷஸர்களும், ஸ்திரீகளும், சூத்திரர்களும், கோபர்களும், பறவைகளும, மிருகங்களும், பாபஞ் செய்த ஜீவர்களும் பகவத் பக்தியினுல் ஆத்ம சுரூபத்தை அடைந்திருக்கிறுர்கள். ஆனதால் ஸ்ரீ கோவிந்தரிடத்தில் ஏகாந்தமாகப் பக்திசெய்து எல்லாவற்றையும் பகவத் சுரூபமாகப் பார்ப்பதே புருஷனுக்கு மேலான புருஷார்த்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

## நோட்டு

**ஜீவனுள்ள:—** உயிருள்ள சரீரத்தில். **தங்களை உபமானமாக—** பிறர் நமக்கு அபகாரஞ்செய்தால் நமக்கு எப்படி மன வருத்தம் உண்டாகிறதோ அப்படியே பிறருக்கு நாம் கெடுதி செய்தால் அவர்கள் மனம் வருத்தப்படுமேயென்று தங்களைத் திருஷ்டாந்தமாக நினைத்து.

# அத்தியாயம் 8

## ஹிரண்யகசிபுவின் வதம்

1—7. அதனைக் கேட்ட அசுரக் குழந்தைகள் எல்லோரும் பிரகலாதரால் சொல்லப்பட்ட விஷயம் தோஷமற்றதாக இருந்தபடியால் அதனைக் கிரகித்துக்கொண்டார்கள். ஆசாரியனால் சொல்லப்பட்டதை விட்டுவிட்டார்கள். பின்பு சுக்கிரனுடைய புத்திரர், குழந்தைகள் எல்லோருடைய புத்திகளும் பிரகலாதருடைய புத்தியை அனுசரித்து ஒருவகைப்பட்டிருப்பதைப் பார்த்துப்பயந்து சீக்கிரம் ஹிரண்யகசிபுவின் சமீபம் சென்று சமாசாரத்தைத் தெரிவித்தார். அப்பொழுது ஹிரண்யகசிபு, 'பிரகலாதரால் மற்ற குழந்தைகளின் புத்தி மாற்றப்பட்டது' என்பதைக் குருமுகமாகக் கேட்டு மிகுந்த கோபத்தால் நடுங்கிய சரீரமுள்ளவனாகி, புத்திரனைக் கொல்லவேண்டும் என்று நினைத்துப் பிரகலாதரை வரவழைத்தான். பின்னும், இயற்கையில் குரூர சுபாவமுள்ள அவன் காலால் மிதிக்கப்பட்ட சர்ப்பம்போல் பெருமூச்சுவிட்டு, குறுக்கான பார்வையுடன் பிரகலாதரைக் கடுமையாகப் பார்த்தான். அப்பொழுது பிரகலாதர் இரு கைகளையும் கூப்பி வணக்கமுள்ளவராக இருந்தார். அவரை நோக்கி இரண்யகசிபு, "மூட! கெட்டவனே! குலத்தைக் கெடுப்பவனாகிய ஓ அதம! நான் கோபமடைந்தால் மூவுலகங்களும் லோகபாலகர்களும் பயப்படுகிறார்கள். நீ பயமற்றவனாக என்னுடைய ஆஞ்ஞையை மீறி நடக்கிறாய். யாருடைய சகாயத்தை வைத்துக்கொண்டு இப்படிச் செய்கிறாய்? அப்படிப்பட்ட உன்னை நான் கொன்றுவிடுகிறேன்" என்றான்.

8—11. அதனைக் கேட்ட பிரகலாதர் ஹிரண்யகசிபுவை நோக்கி, "ஓ மகாராஜ! எவருக்குப் பிரம்மதேவர்

முதலிய எல்லாரும் சுவாதீனர்களாக இருக்கிறார்களோ அவரே உமக்கும், எனக்கும், மற்ற பலசாலிகளுக்கும் பலத்தைக் கொடுப்பவர்; அந்த ஈசுவரன் மிகுந்த பராக்கிரமமுள்ளவர்; இந்திரியங்களுக்கு சாமர்த்தியத்தைக் கொடுப்பவர்; மனத்திற்குச் சக்தியைக் கொடுப்பவர்; காந்தி, புத்தி, தைரியம் ஆகிய இவைகளைக் கொடுக்கும் ஆத்மாவாக இருப்பவர்; பரம புருஷனாகிய அவரே தம்முடைய சக்திகளைக்கொண்டு சிருஷ்டிப்பது, பரிபாலிப்பது, சங்கரிப்பது ஆகிய இவைகளைச் செய்கிறார்; அவர் முக்குணங்களுக்கும் அதிபதியானதால் அசுரத்தன்மையை விட்டுவிடும். மனத்தைச் சமாதானம் செய்துகொள்ளும். தனக்கு வசப்படாமல் கெட்ட மார்க்கத்தில் செல்லும் மனதே புருஷனுக்கு விரோதி; வேறு சத்துருக்களில்லை. மனத்தை வசப்படுத்திக்கொள்வதே பகவானைப் பூஜித்ததாகும். விவேகத்தை அபகரிப்பவைகளான காமம் முதலிய ஆறு திருடர்களை ஜயிக்காமல் உம்மைப்போன்ற சிலர் சகல திக்குகளையும் ஜயித்ததாகச் சொல்லிக்கொள்கிறார்கள். மனத்தை ஜயித்தவனும், சகல பிராணிகளிடத்திலும் சமபுத்தியுள்ளவனும், ஞானியுமாகிய சாதுவுக்குச் சத்துருக்களேது? சத்துருவென்பது மோகத்தாலல்லவா ஏற்படக்கூடியது?" என்றார்.

12—15. அதனைக் கேட்ட இரண்யகசிபு புத்திரனை நோக்கி, "அட மூடா! சாகுந்தருணத்தில் ஜனங்கள் பலவகையாகப் பேசுவார்கள். இப்பொழுது நீ மிகுந்த வித்வான்போல் எனக்கு உபதேசம் செய்கிறாய். உனக்கு மரணம் சமீபித்திருக்கிறது. என்னைவிட வேறொருவன் ஜகத்திற்கு அதிபதியிருப்பதாகச் சொன்னாயல்லவா? அவன் எவ்விடத்தில் இருக்கிறான்? எங்கும் இருப்பவனானால் இந்தத் தூணில் இருக்கிறானா? நான் இப்பொழுது உன் தலையை வெட்டுகிறேன்; நீ யாரைச் சரண

மடைகிருயோ அவன் உன்னைக் காப்பாற்றட்டும்'' என்று கடுஞ்சொற்களைச் சொல்லிக் கத்தியைக் கையிலெடுத்துச் சிம்மாசனத்திலிருந்து எழுந்திருந்து கையை முஷ்டி செய்துகொண்டு ஒரு தூணை அடித்தான்.

16—25. அப்பொழுது அந்தத் தூணிலிருந்து பயங்கரமாகிய ஒரு சத்தம் உண்டாயிற்று. அந்தச் சத்தத்தால் அண்டகடாஹம் வெடித்தது. பிரம்மதேவர் முதலியவர்கள் தங்கள் தங்கள் லோகத்தில் அந்தச் சத்தத்தைக் கேட்டுத் தங்களுடைய ஸ்தானத்திற்குக் கெடுதி நேர்ந்ததென்று நினைத்தார்கள். புத்திரனைக் கொல்ல விரும்பிய இரண்யகசிபுவானவன் அற்புதமான சத்தத்தைக் கேட்டுச் சபையின் மத்தியில் அதற்குக் காரணம் என்னவென்று தேடியும் அறியவில்லை. அசுர சேனாதிபதிகள் அதைக் கேட்டு நடுங்கினார்கள். அப்பொழுது பகவான் தம்முடைய பக்தனாகிய பிரகலாதருடைய வார்த்தையையும், எங்கும் தாமிருப்பவர் என்பதையும் காண்பித்துக்கொண்டு நரசிங்க சுரூபியாக அந்தக் கம்பத்திலிருந்து அவதரித்தார். [அந்த சுரூபம் மனிதனாகவும் இல்லை; சிங்கமாகவும் இல்லை] இப்படி கம்பத்திலிருந்து அவதரித்த சுரூபத்தைப் பார்த்து இரண்யகசிபுவானவன், ''இது மனிதனாகவும் இல்லை; மிருகமாகவு மில்லை. இதென்ன?'' என்று சந்தேகித்தான். அந்த நரசிம்மருடைய சுரூபமானது உருக்கிவிட்ட தங்கம் போன்ற கண்களுள்ளது; ஜடைகளாலும் பிடரி மயிர்களாலும் பிரகாசிக்கும் முகமுள்ளது; அசைவற்றவைகளும், உயரத் தூக்கினவைகளுமான காதுகளுள்ளது. மேலும், அவருடைய வாயானது மலையின் குகைபோல் அற்புதமானது; கன்னங்கள் பிளந்திருப்பதால் பயங்கரமானது; சரீரமோ ஆகாயம் வரையில் உயர்ந்திருக்கிறது; அதிக நீளமில்லாததும், பருத்ததுமான கழுத்துள்ளது; அகலமான மார்

புள்ளது; இளைத்த இடுப்புள்ளது: சந்திரனுடைய கிரணங்கள்போல வெண்மையான மயிர்களுள்ளது; நான்கு பக்கங்களிலும் பரவிய அநேகம் கைகளுள்ளது; நகத்தையே ஆயுதமாகக்கொண்டது; நெருங்கமுடியாதது; சக்கரம் முதலிய ஆயுதங்களால் தேவவிரோதிகளான அசுரர்களை நாசஞ்செய்தது; அதனைக்கண்ட ஹிரண்யகசிபுவானவன், "மிகுந்த மாயாவியாகிய ஸ்ரீமந்நாராயணன் என்னைக் கொல்வதற்காக இம்மாதிரியான பிராணியைச் சிருஷ்டித்திருக்கிறாரோ? இதனால் என்ன செய்யமுடியும்?" என்று தனக்குள் யோசித்துக்கொண்டே கர்ஜித்து, கதாயுதத்தை யெடுத்து நரசிங்கரை எதிர்த்தான். அப்பொழுது நரசிங்கருடைய தேஜஸில் விழுந்து அசுரன் தீபஜ்வாலையில் அகப்பட்ட சலபம் (விளக்கு விட்டில் பூச்சி) போல் காணப்படாதவனானான். அந்தப் பகவான் சிருஷ்டிக்கு முந்தி பிரளய காலத்திய இருட்டைப் பானஞ் செய்தார். ஆனதால் ஸத்வ குணத்திற்கு ஆசிரயமான பகவானிடத்தில் அசுரனுடைய பராக்கிரமம் வீணாகப் போனது ஆச்சரியமல்ல.

26—35. பின்பு அசுரன் மிகுந்த வேகமுள்ள கதையால் பகவானை எதிர்த்து அடித்தான். பகவான் அவனைப் பிடித்துக்கொண்டார். அது கருடன் மகா சர்ப்பத்தைப் பிடித்தாற்போலிருந்தது. அப்பொழுது அசுரன் அவருடைய கையிலிருந்து வெளிவந்தான். மேகத்தில் மறைந்து இதனைப் பார்த்துக்கொண்டிருக்கும் லோகபாலகர்கள் வருத்தப்பட்டார்கள். பின்பு அசுரன் தான் பகவானை ஏமாற்றிவிட்டோம் என்று நினைத்துக் கத்தி, கேடயம் இவைகளை எடுத்துக்கொண்டு சிரமமில்லாதவனாகித் திரும்பவும் அவருடன் எதிர்த்தான். பின்னும் ஆகாயத்திலும், பூமியிலும் பருந்துபோல் மிகுந்த வேகத்துடன் கத்தி நுழைய இடமில்லாமல் சுற்றிவந்தான்.

அப்பொழுது அந்த நரசிங்கர் பயங்கரமாக அட்டகாசஞ் செய்தார். அதனைக் கேட்டு அசுரன் இரு கண்களையும் மூடிக்கொண்டான். மிகுந்த வேகமுள்ள பகவான் அசுரனைப் பிடித்துக்கொண்டார். அந்த அசுரன் வஜ்ரத்தால் அடிக்கப்பட்டும் காயப்படாமல் மகேந்திரனை ஜயித்தவன் ; ஆனாலும் பிடிபட்டபடியால் துடித்துக்கொண்டிருந்தான். அப்படிப்பட்ட அசுரனை பகவான் பிடித்து வாசற்படியில் தம் தொடைமீது தள்ளிக்கொண்டு, கருடன் மிகுந்த விஷமுள்ள சர்ப்பத்தைப்போலவும், சர்ப்பமானது எலியைப் போலவும் சிரமமின்றிக் கிழித்தார். பின்னுமவர் யானையைக் கொன்ற சிங்கம்போலக் கோபத்தால் பயங்கரமாகிய கண்களுள்ளவராகி, வாயைத் திறந்துகொண்டும், நாக்கினால் கடைவாயை நக்கிக்கொண்டும், ரத்தத்தால் பூசப்பட்டுச் சிவந்த பிடரிமயிர்களுள்ள முகமுள்ளவராகித் தம்முடைய நகங்களால் ஹிரண்யகசிபுவின் மார்பைக் கிழித்து, அவனுடைய சைனியங்களையும் கொன்றார். அந்த நரசிங்க சுரூபத்தின் ஜடைகளால் மேகங்கள் அடிக்கப்பட்டன. அவருடைய கண்களின் தேஜஸால் கிருகங்களுடைய காந்தி குறைந்தது ; பெருமூச்சினால் சமுத்திரங்கள் கலங்கின ; அட்டகாசத்தைக் கேட்டுப் பயந்து திக்கஜங்கள் மதமற்றவைகளாயின ; த்யுலோகமானது அவருடைய ஜடையால் அடிக்கப்பட்டு அசைந்தது; பூமியானது அவருடைய பாதங்களால் அடிபட்டுச் சிரமத்தை அடைந்தது; அவருடைய வேகத்தால் மலைகள் அசைந்தன ; அவருடைய தேஜஸால் ஆகாயமும், திக்குகளும் பிரகாசிக்கவில்லை ; பின்பு அந்தப் பகவான் தம்முடைய உக்ரமான தேஜஸை அடக்கிக் கொண்டு, சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தார். அவரை எதிர்த்து யுத்தஞ்செய்யக்கூடியவர் ஒருவருமில்லை. அவருடைய முகமானது பயங்கரமாக இருந்தது. அதனைக் கண்டு அவரிடம் ஒருவருஞ் செல்லவில்லை.

. 36—41. மூவுலகத்திற்கும் ஜ்வரம்போலிருந்த அந்த அசுரன் பகவானால் கொல்லப்பட்டான் என்பதைக் கேட்டுத் தேவஸ்திரீகள் முகமலர்ச்சியுள்ளவர்களாகிப் புஷ்பமாரி பெய்தார்கள். பகவானைத் தரிசிப்பதற்காக வந்த தேவர்களுடைய விமானத்தால் ஆகாயம் நிறைந்திருந்தது; ஆனகம், துந்துபி முதலிய தேவவாத்தியங்கள் முழங்கின; சிறந்த கந்தர்வர்கள் கானஞ்செய்தார்கள்; அப்ஸர ஸ்திரீகள் நர்த்தனஞ் செய்தார்கள்; மேலும் பிரம்மதேவர், பரமசிவன், மகேந்திரன் முதலிய தேவர்கள், மகரிஷிகள், பிதிருக்கள், சித்தர்கள், வித்யாதரர்கள், உரகர்கள், மநுக்கள், பிரஜாபதிகள், கந்தர்வர்கள், அப்ஸரஸங்கள், சாரணர்கள், யக்ஷர்கள், கிம்புருஷர்கள், பூதங்கள், பேதாளங்கள், சுநந்தர் முதலிய விஷ்ணு பார்ஷதர்கள் ஆகிய எல்லோரும் சிரஸில் அஞ்சலி செய்துகொண்டு மிகவும் உக்ர தேஜசுள்ள பகவானுடைய சமீபஞ்சென்று தனித்துத் தோத்திரஞ்செய்ய ஆரம்பித்தார்கள்.

42. அனந்தரும், அற்புதமான மகிமையுள்ளவரும், பரிசுத்தியை யுண்டுபண்ணும் சரிதங்களுள்ளவரும், தம்முடைய விளையாட்டினால் ஜகத்தைப் படைப்பது, பரிபாலிப்பது, சங்கரிப்பது முதலியவைகளைச் செய்பவரும், நாசமற்ற சுரூபமுள்ளவருமான பகவானுக்கு நமஸ்காரஞ் செய்கிறேன் என்று பிரம்மதேவர் தோத்திரஞ்செய்தார்.

43. பரமசிவன் பகவானை நோக்கி, "ஓ பக்தர்களிடம் பிரீதியுள்ளவரே! உமக்குக் கோபம் வருஞ் சமயம் பிரளய காலமல்லவா? இந்த அற்பனாகிய அசுரன் கொல்லப்பட்டான்; அவனுடைய புத்திரனும், உம்முடைய பக்தனுமாகிய பிரகலாதனைக் காப்பாற்றும்" என்றார்.

44. மகேந்திரன், "ஓ நரசிங்கமூர்த்தியே! ஓ மேலானவரே! எங்களைச் சம்ரக்ஷிப்பவரே! எங்களுக்குக் கிடைக்

காமலிருந்த ஹவிர்ப்பாகங்கள் திரும்பவும் எங்களுக்குக் கிடைக்கும்படி செய்தீர். அவை எங்களுடைய பாகமென்று சொல்லப்பட்டாலும், நீர் சகல சுரூபியாக இருப்பதால் உம்முடையவைகளேயாம். உமக்கு வாசஸ்தலமான (அந்தர்யாமியாக இருப்பதால்) எங்களுடைய ஹிருதய கமலமானது ஹிரண்யகசிபுவினால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தது. அது இப்பொழுது மலர்ந்தது. (அசுரனிடத்தில் பயந்து அவனையே தியானித்துக் கவலைப்பட்டிருந்தோம். அந்தக் கவலை நீங்கியதென்று தாத்பரியம்) உம்மைச் சேவிப்பவர்கள் மோக்ஷத்தையும் மேலானதென்று நினைக்கமாட்டார்கள். (உமக்குச் சிசுரூஷை செய்வதே மேலானதென்று கருத்து.) அப்படியிருக்க, அழிவுள்ளதாகிய இந்திர பதத்தாலும், மற்ற ஐசுவரியங்களாலும் என்ன பிரயோசனம்?' என்றார். (ஹவிர்ப்பாகம், இந்திர பதம் ஆகிய இவைகள் கிடைத்தது புருஷார்த்தமல்ல. உமக்குச் சிசுரூஷை செய்வதே புருஷார்த்தம். அசுரனைக் கொன்றுவிட்டபடியால் கோபத்தைத் தணித்துக்கொள்ளும் என்று தாத்பரியம்.)

45. மகரிஷிகள் நரசிங்கமூர்த்தியை நோக்கி, "ஓ காப்பாற்றக்கூடியவர்களைக் காப்பாற்றுகிறவரே! நீர் தம்மிடத்தில் லயித்திருக்கிற ஜகத்தை எதனால் சிருஷ்டித்தீரோ, எது உம்முடைய மகிமையாக இருக்கிறதோ, அந்த மேலான தவத்தை (தியானத்தை) எங்களுக்கு உபதேசித்தீர். அதனை ஹிரண்யகசிபு கெடுத்துவிட்டான். இந்தச் சமயத்தில் நீர் அவதரித்து அந்தத் தவத்தை இடையூறின்றிச் செய்யும்படி அநுக்ரஹித்தீர். அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரஞ் செய்கிறோம்" என்றார்கள்.

46. பிதிருக்கள் பகவானை நோக்கி, "எங்களை உத்தேசித்துப் புத்திரர்களால் கொடுக்கப்படும் சிராத்தங்களையும்

(சிரத்தையுடன் கொடுக்கப்படும் பிண்டம் முதலியவை) திலோதகத்தையும் (எள்ளுருஞ் ஜலமும்) எந்த அசுரன் எங்களுக்குச் சேரவொட்டாமல் பலாத்காரமாகத் தான் புசித்தானே, அவனுடைய வயிற்றை நகங்களால் கிழித்து ஈரலைப் பிடுங்கினீரல்லவா? அப்படிப்பட்டவரும், சகல தர்மங்களைக் காப்பாற்றுகிறவரும், நரசிங்கமூர்த்தியுமான உமக்கு நமஸ்காரஞ் செய்கிறோம்" என்றார்கள்.

47. சித்தர்கள், "ஓ நரசிங்கமூர்த்தியே! எங்களுடைய அணிமா முதலிய ஐசுவரியத்தை எந்த அசுரன் யோக பலத்தாலும், தபோபலத்தாலும் அபகரித்தானே, அந்தப் பலவகை அகங்காரமுள்ள அசுரனை நகங்களால் கிழித்தீர். அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரம்" என்றார்கள்.

48. வித்யாதரர்கள் பகவானை நோக்கி, "எந்த அசுரன் பலத்தாலும், வீரியத்தாலும் கர்வமுள்ளவனுகி எங்களுடைய அந்தர்த்தான வித்தையைத் தடுத்தானே, அந்த அசுரனை யுத்தத்தில் பசுவைப்போலக் கொன்றீர். அப்படிப்பட்ட மாயாநரசிம்மராகிய உமக்கு எப்பொழுதும் நமஸ்காரஞ் செய்கிறோம்" என்றார்கள்.

49. நாகங்கள் அவரை நோக்கி, "எந்த அசுரன் எங்களுடைய படத்திலிருக்கும் ரத்னங்களையும், ஸ்திரீ ரத்னங்களையும் அபகரித்தானே அந்த அசுரனுடைய மார்பைப் பிளந்து அந்த ஸ்திரீகளுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணினீர் அல்லவா? அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரம்" என்றார்கள்.

50. மநுக்கள் பகவானை நோக்கி, "ஓ தேவ! நாங்கள் தர்மத்தைப் பரிபாலிப்பதற்காக உம்மால் ஏற்படுத்தப் பட்ட மநுக்கள். உம்முடைய உத்தரவின்படி நடப்பவர்கள்; எங்களால் ஏற்படுத்தப்பட்ட வர்ணாச்சிரம தர்மங்களை எந்த அசுரன் கெடுத்தானே, அவனை நாசஞ் செய்தீர்.

ஓ பிரபுவே! எங்களால் செய்யப்படவேண்டியதென்ன? ஆஞ்ஞாபிக்கவேண்டும்" என்றார்கள்.

51. பிரஜாபதிகள் அவரை நோக்கி, "ஓ ஸத்வ மூர்த்தியே! பிரஜாபதிகளாகிய நாங்கள் உம்முடைய ஆஞ்ஞையால் பிரஜைகளைச் சிருஷ்டிக்கிறோம். அதனை எந்த அசுரன் தடுத்தானோ, அவன் உம்மால் கொல்லப் பட்டான். உம்முடைய அவதாரமானது ஜகத்திற்கு மங்களத்தைக் கொடுக்கக்கூடியதாக இருக்கிறது" என்றார்கள்.

52. கந்தர்வர்கள் அந்தப் பிரபுவை நோக்கி, "ஓ பிரபுவே! நாங்கள் உமக்கு நடர்கள் (நர்த்தனஞ்செய்பவர் கள்); நாட்டியம், கானம் ஆகிய இவைகளைச் செய்பவர்கள்; அப்படிப்பட்ட எங்களை எந்த அசுரன் பராக்கிரமத்தால் சுவாதீனப்படுத்திக்கொண்டானோ, அவன் இம்மாதிரி யான அவஸ்தையை அடைவிக்கப்பட்டான். கெட்ட மார்க்கத்தை அடைந்தவன் க்ஷேமத்தை அடைவானோ?" என்றார்கள்.

53. சாரணர்கள் பகவானை நோக்கி, "ஓ ஹரியே! சாதுக்களுடைய இருதயத்திற்கு உபத்திரவத்தையுண்டு பண்ணின இந்த அசுரனை நீர் கொன்றபடியால் ஸம்ஸா ரத்தை நிவர்த்திக்கக்கூடியதும், மோக்ஷத்தைக்கொடுக்கக் கூடியதுமான உம்முடைய பாதாரவிந்தத்தை ஆசிரயிக் கிறோம்" என்றார்கள்.

54. யக்ஷர்கள் பகவானை நோக்கி, "இருபத்துநான்கு தத்துவங்களுக்கு அதிபதியான ஓ பிரபுவே! நரஹரியே! எந்த அசுரன் எங்களை வாகனமாகச் செய்துகொண் டானோ, எவன் ஜனங்களுக்கு உபத்திரவத்தை உண்டு பண்ணினானோ அவனை நீர் கொன்றீர். உம்முடைய மனோ கரமான காமங்களால் உமக்கு முக்கியமான சேவகர்களாக இருக்கிறோம்" என்றார்கள்.

55. கிம்புருஷர்கள் பகவானை நோக்கி, " நாங்கள் கிம்புருஷர்கள் (அற்பர்கள்); நீரோ மகாபுருஷன். (உம்மைத் தோத்திரஞ்செய்ய எங்களால் முடியுமாவென்று கருத்து.) சாதுக்களால் எப்பொழுதும் நிந்திக்கப்பட்ட இந்த புருஷாதமன் (புருஷர்களுக்குள் அதமன்) நாசமடைந்தான் ' என்றார்கள்.

56. வைதாளிகர்கள பகவானை நோக்கி, "சபைகளிலும் யாகங்களிலும் சுத்தமான உம்முடைய சரிதத்தை நாங்கள் கானஞ்செய்வதால் எல்லோரும் எங்களைப் பூஜிக்கிறார்கள். அப்படிப்பட்ட எங்களை உபத்திரவித்து எவன் சுவாதீனஞ் செய்து கொண்டானே, அந்த அசுரன் லோகங்களுக்கு வியாதிபோல உபத்திரவத்தைச் செய்து கொண்டிருந்தான். அந்தத் துஷ்டனைக் கொன்றீர்" என்றார்கள்.

57. கின்னரர்கள் பகவானை நோக்கி, "ஓ நரசிம்ம ! ஓ ஈச! நாங்கள் கின்னர கணங்கள். நாங்கள் அசுரனுக்குச் சம்பளம் வாங்காமல் வேலைசெய்தோம். அப்படிப்பட்ட பாபியான அசுரன் உம்மால் கொல்லப்பட்டான். எங்களுக்கு ஐசுவரியத்தைக் கொடும்" என்றார்கள்.

58. விஷ்ணுவின் பார்ஷதர்கள் அவரை நோக்கி, "பக்தர்களாகிய எங்களுக்கு ஆசிரயமாக இருப்பவரே ! ஓ ஈச ! அற்புதமான உம்முடைய இந்த நரசிம்மரூபத்தை இப்பொழுதுதான் பார்த்தோம். இது சகல லோகங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியது. ஆனால் இந்த அசுரன் உம்முடைய வேலைக்காரன்தான். பிராமண சாபத்தால் அசுர ஜன்மத்தை அடைந்தான். அவனைக் கொன்றது அவனுக்கு அநுக்ரகமென்றே நினைக்கிறோம்" என்றார்கள்.

# அத்தியாயம் 9

## பிரகலாத ஸ்துதி

1—7. பிரம்மதேவர், ருத்திரன் முதலிய தேவர்கள் அதிகக் கோபம், பரபரப்பு ஆகிய இவைகளுள்ள அந்த நரசிங்கமூர்த்தியின் சமீபஞ் செல்வதற்குப் பயந்து லக்ஷ்மீ தேவியை அனுப்பினார்கள். அவளும் இதற்கு முன் பார்க்கப்படாததும், கேட்கப்படாததும், ஆச்சரியமுமான அந்த சுருபத்தைப் பார்த்துப் பயந்து, நெருங்கவில்லை. அதனைக் கண்ட பிரம்மதேவர் சமீபத்திலிருக்கும் பிரகலாதரை நோக்கி, "ஓ குழந்தாய்! பிரகலாத! உன் பிதாவினிடம் கோபமுள்ளவரான பகவானுடைய சமீபஞ் சென்று சமாதானப்படுத்து" என்று சொன்னார். அதனைக் கேட்ட மகாபாகவதராகிய பிரகலாதர் மெள்ள மெள்ளப் பகவானிடஞ் சென்று இரு கைகளையுங் கூப்பி, பூமியில் விழுந்து நமஸ்கரித்தார். அதனைக் கண்ட பகவான் பக்த சிரோமணியான பிரகலாதரை இரு கைகளால் தூக்கித் தமது தாமரை மலர்போன்ற கைகளைப் பிரகலாதருடைய சிரசில் வைத்தார். அது காலமாகிய சர்ப்பத்தைக் கண்டு பயந்த புத்தியுள்ளவர்களுக்கு அபயத்தைக் கொடுக்கக் கூடியது. பகவானுடைய கையால் தொடப்பட்டபடியால் சகல அசுபங்களும் அவருக்கு நிவர்த்தியாயின. சீக்கிரம் பரமாத்மாவின் பிரகாசம் உண்டாயிற்று. அப்பொழுது பகவானுடைய பாதாரவிந்தத்தைத் தியானஞ்செய்து சுகத்தை அடைந்தார். அதனால் மயிர்க்கூச்சலுண்டாயிற்று; ஆனந்த பாஷ்பம் பெருகியது; இருதயம் தெளிந்தது; மேலும் அவர் சித்தத்தை ஒருவகைப்படுத்திச் சாவதானராகித் தம்முடைய இருதயம், பார்வை ஆகிய இவைகளைப் பகவானிடத்திலேயே செலுத்தி, அதிகப் பிரேமையால் தழுதழுத்த வாக்குடன் பின்வருமாறு தோத்திரஞ் செய்யலானார் :

*8—50.* "பிரம்மா முதலிய தேவ கணங்கள், மன்ன சீலர்களான ஞானிகள் ஆகிய ஸத்வகுணப் பிரதானர்களும், பலவகையான குணங்களால் எவரைத் தோத்திரஞ்செய்யச் சக்தியற்றவர்களாக இருக்கிறார்களோ, அப்படிப்பட்ட பகவானை அசுரஜாதியான என்னால் தோத்திரஞ் செய்யமுடியுமா? பணம், நல்ல குலத்தில் பிறந்திருப்பது, ரூபம், தவம், படித்திருப்பது, இந்திரிய சாமர்த்தியம், காந்தி, பிரதாபம், தேக பலம், புருஷப்பிரயத்னம், புத்தி, யோகம் ஆகிய இவைகளாலும் பரமபுருஷன் சந்தோஷப்படுகிறதில்லை. பக்தியால் மாத்திரம் சந்தோஷப்படுகிறார் என்று நினைக்கிறேன். சிறந்த யானையினிடம் அதன் பக்திக்காகவே சந்தோஷமடைந்தார். சண்டாளனாலும் மனம், வாக்கு, ஆசை, அர்த்தம், பிராணன் ஆகிய இவைகளை ஸ்ரீ பகவானிடத்தில் செலுத்தினவனால் அவனே மேலானவன்; அவன் குலத்தைப் பரிசுத்தப்படுத்துகிறான். ஸ்ரீ பகவானிடத்தில் பக்தியற்றவன் பிராமணனாலும் அவன் மேலானவனல்ல. அவன் தன்னைக்கூடச் சுத்திசெய்துகொள்ள முடியாதவன்; (நல்ல குலத்தில் பிறந்திருப்பது முதலிய குணங்கள் பகவத் பக்தியில்லாதவனுக்குக் கர்வத்தைக் கொடுக்கக் கூடியவைகளேயொழியச் சுத்தியைக்கொடுக்கக்கூடியவைகளல்லவென்று தாத்பரியம்.) பிரபுவாகிய ஈசுவரன் அற்பர்களான ஜனங்களிடமிருந்து தாம் பூஜையைப் பெறவேண்டுமென்று நினைக்கிறதில்லை. (ஆத்மலாபத்தால் பூரணர்) ஆனாலும் ஜனங்களிடத்தில் மிகுந்த கருணையால் ஜனங்களுடைய க்ஷேமத்திற்காக அவர்கள் செய்யும் பூஜையை அங்கீகரிக்கிறார். மேலும், முகத்தில் இருக்கும் திலகம் பிரதிபிம்பத்திலும் காணப்படுவதுபோலப் பகவானிடத்தில் சமர்ப்பிக்கப்படும் பூஜையானது தன்னிடத்தில் காணப்படுகிறது. அதுபற்றி நான் பயம்

இல்லாமல் என் புத்திக்குத் தக்கபடி பகவானுடைய மகிமையைச் சொல்லுகிறேன். பகவானுடைய மாயையால் ஸம்ஸாரத்தை யடைந்து, அற்பனாக இருக்கும் புருஷன் புருஷோத்தமனுடைய குணங்களை வர்ணிப்பதால் பரிசுத்தனாகிறான்." ஓ ஈச! உம்முடைய உக்கிரமான சுரூபத்தைப் பார்த்துப் பிரம்மதேவர் முதலியவர்கள் பயப்படுகிறார்கள். ஆனால் இவர்கள் உம்முடைய பக்தர்கள்; அசுரர்களான எங்களைப்போல் விரோத புத்தியுள்ளவர்களல்ல. மேலும், நீர் அழகான அவதாரங்களைச் செய்து விளையாடுவது இந்த ஜகத்திற்கு க்ஷேமத்தையும், ஐசுவர்யத்தையும், ஆத்ம சுகத்தையும் கொடுப்பதற்கேயொழியப் பயத்தை உண்டுபண்ணுவதற்கல்ல. ஆனதால் இந்த ரூபத்தை உபஸம்ஹாரஞ்செய்து கோபத்தைத் தணித்துக்கொள்ளவேண்டும். இந்த சுரூபத்தை எதற்காகத் தரித்தீரோ, அந்தக் காரியம் முடிந்துவிட்டது. (ஹிரண்யகசிபு கொல்லப்பட்டான்.) ஜனங்களெல்லோரும் அதனால் விசேஷ சந்தோஷத்தை அடைந்தார்கள். மிகுந்த சாதுவானாலும் தேள், சர்ப்பம் ஆகிய இவைகளுடைய நாசத்தைப் பார்த்துச் சந்தோஷப்படவேண்டும். அசுரனைக் கொன்று தங்களுக்கு க்ஷேமத்தைச் செய்தபடியால் இந்த நாஸிம்ஹ சுரூபம் தங்களுக்கு அபயத்தைக் கொடுத்தது" என்றே நினைக்கிறார்கள். ஓ ஒருவராலும் ஜயிக்கப்படாதவரே! இந்த உம்முடைய சுரூபமானது மிகவும் பயங்கரமான முகம், நாக்கு, சூரியன் போன்ற கண்கள், புருவ நெரித்தல், பயங்கரமான சிங்கப் பற்கள் ஆகிய இவைகளுள்ளது; நரம்பை மாலையாகக் கொண்டது; ரத்தத்தால் சிவந்த பிடரிமயிர்களுள்ளது; உயரத் தூக்கிய காதுகளுள்ளது; திக் கஜங்களும் கேட்டு நடுங்கக்கூடிய கர்ஜிதமுள்ளது; சத்ருவை நாசஞ் செய்தது. இப்படிப்பட்டதானாலும் இதைக் கண்டு நான்

பயப்படவில்லை. ஸம்ஸார சக்கரத்தில் நேரிடும் துக்கத்திற்குப் பயப்படுகிறேன். என்னுடைய முந்திய கர்மத்தால் கட்டுப்பட்டு மேற்சொல்லிய ஸம்ஸாரத்தில் தள்ளப்பட்டிருக்கிறேன். ஆபத்தை அடைந்தவர்களிடத்தில் பிரீதியுள்ளவரே ! நீர் என்னிடத்தில் சந்தோஷத்தை அடைந்து, எப்பொழுது மோக்ஷமாகிய கிருகத்திற்கு அழைத்துப்போவீர் ? உம்முடைய பாதாரவிந்தத்தைச் சரணமடைந்தேன். ஓ விசேஷ ஐசுவரியமுள்ளவரே ! அநேக ஜன்மங்களை அடைந்து பிரியத்தை அடையாமலும், அப்பிரியத்தை (கெடுதியை) அடைந்தும் துக்கமாகிய அக்னியால் எரிக்கப்பட்டு மிகவும் சிரமத்தை அடைந்திருக்கிறேன். துக்கத்தை நிவர்த்தித்துக்கொள்வதற்காகச் செய்யப்படும் முயற்சியும் துக்கமாகவே இருக்கிறது. அனாத்மாவாகிய சரீரம் முதலியவைகளில் அபிமானமுள்ளவனாகியிருப்பதால் மோட்சத்தை அடைந்திருக்கிறேன். ஆனதால் அதனை நிவர்த்தித்துக்கொள்ளும் உபாயத்தை நீர் உபதேசிக்கவேண்டும். (உமக்குத் தாசனாக இருந்தால் உமக்கு என்னிடம் பிரீதி யுண்டாகுமென்றால் அந்த ஞானமே எனக்கு உண்டாவதற்கு நியாயமில்லாமலிருப்பதால் நீரே அதனையும் உபதேசிக்கவேண்டுமென்று தாத்பரியம்.) அப்படிப்பட்ட நான் சகல லோகங்களுக்குப் பிரியரும், மேலான தெய்வமுமாகிய உம்முடைய சரிதங்களைக் கானஞ்செய்து என்னுடைய விக்னங்களைப் போக்கடித்துக்கொள்கிறேன். அந்தச் சரிதங்களைப் பிரம்மதேவரும் கானஞ்செய்கிறார். (சம்பிரதாயமாகக் கிடைத்ததென்று தாத்பரியம்.) மேலும், நான் குணங்களுடைய சம்பந்தமுள்ளவனானாலும் உம்முடைய பாதாரவிந்தங்களை ஆசிரயித்து, சாதுக்களுடைய சங்கத்தால் (சேர்க்கையால்) உம்முடைய குணங்களைக் கானஞ்செய்யத்

தருந்தவனாகிறேன். (பகவானுடைய அநுக்கிரகத்தால் சாதுக்களுடைய சேர்க்கையுண்டாகும். அதன் பிறகு வைராக்கியம், அதன் பிறகு பகவானுடைய குணங்களையே வர்ணிப்பது, அதன் பிறகு துக்கம் முதலியவைகளின் நிவர்த்தி ஆகிய இவைகள் உண்டாகின்றனவென்று தாத்பரியம்.) ஓ பிரபுவே! பிராணிகளுக்கு இவ்வுலகத்தில் துக்கத்தைப் போக்கடிக்கும் உபாயங்கள் ஏற்பட்டிருந்தாலும் அவை அந்த க்ஷணத்தில் துக்கத்தை நிவர்த்திக்குமே யல்லாமல் பாக்கியன்னியில் நிவர்த்திக்கிறதில்லை. எப்படியென்றால், சிறுவனைத் தாய் தகப்பன்கள் சம்ரட்சிப்பவர்களென்று சொல்லக்கூடாது. அவர்களே சில சமயம் அவனைக் கொல்லுகிறார்கள். காப்பாற்றினாலும் இவனுக்குத் துக்கம் நிவர்த்தியாகிறதில்லை. ரோகமுள்ளவனை ஔஷதம் காப்பாற்றுகிறதில்லை. கடலில் மூழ்கிறவனுக்கு ஓடம் சகாயமாக ஆகிறதில்லை. (ஓடத்துடனும் கடலில் முழுகுகிறதுண்டு.) மேற்சொல்லிய துக்கத்தை நிவர்த்திக்கும் சாதனங்களும் உம்முடைய கிருபை இல்லாதவர்களுக்கேயாம். ஆனதால் எல்லாருக்கும் துக்கத்தை அடியோடு நிவர்த்தித்துக் காப்பாற்றுகிறவர் நீர் ஒருவரேயாகும். மேலும், வெவ்வேறான சுபாவமுள்ள தகப்பன் முதலியவர்களும், பிரம்மதேவர் முதலியவர்களும், கர்த்தாக்கள் (செய்பவர்கள்) எந்த விடத்தில், எது நிமித்தம், எந்தக் காலத்தில், எந்தச் சாதனத்தைக்கொண்டு, எந்தக் காரணத்தால், எதனிடமிருந்து, எதற்காக, எந்த இஷ்டத்தை, எப்படிச் செய்கிறார்களோ, வேறாக மாற்றுகிறார்களோ, அவர்கள் எல்லோரும் பகவத் சுரூபமேயாம். (ரட்சிப்பவன் எவனானாலும் அந்த ரூபியாக இருந்து பகவான் காப்பாற்றுகிறாரென்று தாத்பரியம்.) உம்முடைய அனுக்கிரகத்தால் மாயையானது காலத்தால் தூண்டப்பட்டுக் கர்ம சுரூபமும்

ஜயிக்க முடியாததுமான மனத்தை உண்டுபண்ணுகிறது. அந்த மனமானது வேதத்தில் சொல்லிய காரியங்களைப் பிரதானமாகக்கொண்டது; ஜீவனுடைய போகத்திற்காக மாயையால் ஏற்படுத்தப்பட்ட பதினாறு விகாரங்களுள்ளது; சம்சார சக்கர சுரூபமாயுள்ளது. அதனை யாரால் ஜயிக்க முடியும்? உம்மைச் சேவித்து உம்முடைய அநுக்கிரகத்தை அடைந்தவன் அதனை ஜயிப்பான். மேலும் நீர், தம்முடைய சித் சக்தியால் புத்தியின் குணங்களை ஜயித்தவர்; காரியகாரண சக்தியை வசப்படுத்திக்கொண்டவர்; கால சுரூபியாக இருப்பவர்; நான் பதினாறு விகாரங்களுள்ள மனமாகிய சம்சார சக்கரத்தில் தள்ளப்பட்டுப் பீடிக்கப்பட்டிருக்கிறேன். ஓ பிரபுவே! சரணாகதனாகிய என்னை அந்தச் சக்கரத்திலிருந்து உம்முடைய சமீபஞ் சேர்த்துக்கொள்ளும். பின்னும், எந்த ஐசுவரியங்களைத் தாங்கள் அடையவேண்டுமென்று சகல ஜனங்களும் நினைக்கிறார்களோ, அந்த லோகபாலகர்களுடைய ஆயுள், ஐசுவரியம் முதலிய போகங்களைப் பார்த்தேன். அவைகள் என்னுடைய பிதாவாகிய ஹிரண்யகசிபுவின் கோப காலத்தில் உண்டாகும் சிரிப்பினாலும், புருவ நெரித்தலாலும் நாசமாயின. அப்படிப்பட்ட இரண்யகசிபு உம்மால் கொல்லப்பட்டான். ஆனதுபற்றிப் பிராணிகளால் விரும்பக்கூடிய ஆயுள், ஐசுவரியம், மகிமை முதலியவைகளையும், பிரம்மலோகம் வரையிலுள்ள லோகங்களையும் நான் விரும்பவில்லை. அவைகள் கால சுரூபியான உம்முடைய மகிமையால் நாசஞ் செய்யப்படக்கூடியவை. என்னை உம்முடைய பக்தர்களுக்குள் ஒருவனாக அங்கீகரிக்கவேண்டும். கேட்பதற்கு சுக கரங்களும், கானல் போன்ற விஷய சுகம் எங்கே? சகல வியாதிகளுக்கு இருப்பிடமான இந்தச் சரீரம் எங்கே? இவைகளை அறிந்த வித்துவானும் இதில் வைராக்கியத்தை அடைகிறதில்லை.

காமாக்கினியைச் சொற்ப சுகத்தால் அணைத்துக்கொண்டிருக்கிறான். என்னுடைய சிரசில் தாமரை மலர்போன்ற உம்முடைய கையை வைத்தீரல்லவா? அதுவே புருஷார்த்தம். அது பிரம்மதேவருக்குக் கிடைக்கவில்லை. பரமசிவனால் அடையப்படவில்லை; லக்ஷ்மீதேவிக்கும் கிடைக்கவில்லை. இம்மாதிரியான உம்முடைய அனுக்கிரகமே காரணம். இல்லாவிடில் ரஜோ குணத்தால் ஜன்மத்தை அடைந்தவனும், தமோ குண சுபாவமுள்ள அசுர குலத்தில் பிறந்தவனுமான எனக்கு உம்முடைய தயை எப்படிக் கிடைக்கும்? கற்பக விருட்சமானது எல்லாவற்றையும் கொடுக்கக்கூடியதானாலும் தன்னிடம் வந்த யாசகர்கள் நினைக்கும் வஸ்துவை மட்டில் கொடுப்பது போல் பகவானாகிய நீரும் பக்தர்களால் விரும்பப்படும் பலனைக் கொடுக்கிறீர்; நீர் எல்லா ஜகத்திற்கும் ஆத்மாவிற்கும் சுகிருத்தாக இருப்பவர்; ஆனது பற்றி பிரம்மதேவர் முதலிய தேவர்கள் மேலானவர்கள்; அசுரன் தாழ்ந்தவன் என்ற பேத புத்தி உமக்கு இல்லை. ஜன்மமாகிய சர்ப்பங்களுள்ள கிணற்றில் விழுந்து காமங்களையே விரும்பியவனுமான என்னை உம்முடைய பக்தரான நாரத மகரிஷி அனுக்கிரகித்தார். அதனால் உம்முடைய கிருபைக்குப் பாத்திரமானேன். அந்த மகரிஷியின் சேவையை விடமாட்டேன். என்னுடைய பிதாவாகிய இரண்யகசிபுவானவன் கையில் கத்தியை எடுத்துக்கொண்டு, "என்னைக் காட்டிலும் ஈசுவரன் வேறொருவன் இருப்பானானால் உன்னைக் காப்பாற்றட்டும்; உன்னுடைய தலையை வெட்டுகிறேன்" என்று கெட்ட வார்த்தைகளைச் சொல்லும்பொழுது அசுரனைக் கொல்லுவதற்கும், என்னுடைய பிராணனைக் காப்பாற்றுவதற்கும் நீர் அவதரித்தவரல்ல. ஆனால் உம்முடைய வேலைக்கார

ராகிய (பக்தர்) மகரிஷியின் வார்த்தையை உண்மையாகச் செய்யவேண்டியே நரசிங்க அவதாரஞ் செய்தீர் என்று நினைக்கிறேன். ஓ பகவன்! உலகம் உண்டாவதற்கு முன்னும், உலகம் நாசமடைந்த பிறகும் சத்தியராக இருப்பவர் நீர் ஒருவராகையால் மத்திய காலமாகிய உலகம் இருக்கும்பொழுதும் நீர் ஜகத் சுரூபியாகவும் இருக்கிறீர். ஆனாலும் தம்முடைய மாயையால் முக்குண சுரூபமான உலகத்தைப் படைத்து, அதில் அந்தர்யாமியாகப் பிரவேசித்துச் சிருஷ்டிப்பவர் போலும், காப்பாற்றுகிறவர் போலவும், நாசஞ்செய்கிறவர் போலவும், அநேகர் போலவுந் தோன்றுகிறீர். (பக்தர்களிடத்தில் பட்சபாதம் வைத்து அசுரனைக் கொல்லுவது, பக்தர்களைக் காப்பாற்றுவது ஆகிய இவைகள் மாயையால் ஏற்பட்டவைகளே யொழிய உமக்கு இயற்கையானவை அல்ல என்று தாத்பரியம்) மேலும் ஓ ஈச! காரிய காரண சுரூபமான இந்த உலகமானது உம்முடைய சுரூபமே யொழிய நீர் உலகத்தைக் காட்டிலும் வேறானவர். (உலகம் உண்டாவதற்கு முந்தியும், உலகத்திற்குப் பிறகும் பகவான் இருப்பதால்) பின்னும் தன்னைச் சார்ந்தவன், பிறர் என்ற பேதபுத்தியே மாயை. அது பிரயோசனமற்றது. எதனுடைய உற்பத்தியானது எவருடைய சங்கற்பம், பிரகாசம் ஆகிய இவைகளால் ஏற்பட்டதோ, எதனுடைய நாசம், ஸ்திதி ஆகிய இரண்டும் எவரிடத்தில் ஏற்பட்டிருக்கின்றனவோ, அந்த ஜகத் அவரேயாகும். மரம், அதன் விதை ஆகிய இவைகள் பிரகிருதி பீஜமாகிய பூத சூட்சும சுருபமாக இருக்கின்றது. (காரிய காரண சுரூபமாகிய உலகமானது பரமகாரணராகிய உம்முடைய சுருபம் என்று கருத்து.) மேலும் நீர் பிரளய காலத்தில் ஆத்ம சுகத்தையே அனுபவித்து, இந்த உலகத்தைத் தன்னிடத்தில் அடக்கிக்கொண்டு பிரளய ஜலத்தில் தூங்கு

கிறீர். ஆனால் யோகத்தால் கண்களை மூடிக்கொண்டு சுயம்பிரகாசமாக இருப்பதால் அந்த நித்திரை அஞ்ஞர்களுடைய நித்திரை போன்றதல்ல. நான்காவது அவஸ்தையாகிய சுரூபத்தில் இருப்பவராகையால் தமோ குணத்தின் சம்பந்தமில்லை. ஜாக்கிரத், ஸ்வப்னம் முதலிய அவஸ்தைகளில் விஷய சம்பந்தம் ஏற்படுவதுபோல் விஷயங்களை நீர் சேர்க்கிறதில்லை. மேலும் தம்முடைய கால சக்தியால் தூண்டப்பட்ட பிரகிருதியின் தர்மங்களை உடையவரும், ஆதிசேஷனாகிய படுக்கையிலிருந்து எழுந்திருப்பவருமான உமக்கு இந்த உலகமானது சரீரமாக இருக்கிறது. ஆலம் விதையிலிருந்து மரம் உண்டாவது போல உம்முடைய சுரூபத்தில் அடங்கியிருந்த ஜகத் சுரூபமான தாமரைமலர் முதலில் உண்டாயிற்று. அந்தத் தாமரைப் புஷ்பத்திலிருந்து பிரம்மதேவர் உண்டானார். அவர் அந்தத் தாமரை மலரைவிட வேறு யாதொன்றையும் காணாமல் அதன் காரணத்தைப் பார்க்க விரும்பி எங்கும் வியாபித்திருக்கும் உம்மை வெளியில் தேட ஆரம்பித்து நூறு வருஷ காலம் ஜலத்தில் மூழ்கியிருந்தார். எப்படியும் உம்மைக் காணவில்லை. மரம் முளைத்த பின் விதையைப் பார்க்க முடியுமா? பின்பு அந்தப் பிரம்ம தேவர் மிகுந்த ஆச்சரியமடைந்து, அந்தத் தாமரை மலரில் திரும்பவும் வந்து உட்கார்ந்தார். அப்பொழுது அவர் கடுந்தவம் செய்து, அதனால் சுத்த சித்தராகிப் பூதங்கள், இந்திரியங்கள், மனம் ஆகிய இவைகளின் சுரூபமாகிய தம்மிடத்தில் காரணரூபியான உம்மைத் தரிசித்தார். அது அநேகம் முகங்கள், கால்கள், தலைகள், கைகள், தொடைகள், மூக்குகள், வாய்கள், காதுகள், கண்கள் ஆகியவைகளுள்ளது; திவ்யமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டது; மாயாமயமானது. பிரபஞ்சத்திற்குத் தகுதியான கை கால் முதலிய அவய

வங்களுள்ளதுமான அந்த மகா புருஷனுடைய சரீரத்தைப் பார்த்து மிகுந்த சந்தோஷத்தையும் அடைந்தார். பின்னும் ஒருகால் ரஜோ குணம், தமோ குணமுள்ள மதுகைடபன் என்ற அசுரர்கள் வேதங்களை அபகரித்தார்கள். அந்தச் சமயத்தில் நீர் ஹயக்ரீவராக அவதரித்து, அசுரனால் கொண்டுபோகப்பட்ட வேதங்களைத் திருப்பிக்கொடுத்து, பிரம்மதேவரை அனுக்கிரகித்தீர். சத்துவமே உமக்குப் பிரியமான சரீரமென்று சொல்லுகிறார்கள். ஓ மகா புருஷ! மனிதனாகவும், திர்யக் ஜாதியாகவும், மகரிஷியாகவும், தேவனாகவும், மத்ஸ்யமாகவும் நீர் அவதரித்து. லோகங்களைக் காப்பாற்றுகிறீர். உலகத்திற்கு விரோதிகளான ஜந்துக்களை நாசஞ் செய்கிறீர். யுக தர்மத்தைச் சம்ரட்சிக்கிறீர். ஆனால் கலியுகத்தில் இம்மாதிரியான அவதாரங்கள் இல்லாததனால் மறைந்திருக்கிறீர். அதனால் திரியுகரென்று உமக்குப் பெயருண்டாயிற்று. ஓ வைகுண்டத்திற்கு அதிபதியாக இருப்பவரே! பலவகையான தோஷமுள்ளதும், வெளியிலிருக்கும் விஷயங்களில் பற்றுதலுள்ளதும், போஷிக்க முடியாததும், சந்தோஷம், துக்கம், பயம், மூவகையான ஆசை ஆகிய இவைகளால் பீடிக்கப்பட்டதுமான என் மனது உம்முடைய கதையைக் கேட்க விரும்பவில்லை. அப்படிப்பட்ட மனத்தால் உம்முடைய உண்மையை எப்படி விசாரிப்பேன்? ஓ நாசமற்றவரே! என்னுடைய நாக்கு, ஆண்குறி, தோல், வயிறு, காது, சபலமான மூக்கு, கர்மேந்திரியங்கள் ஆகிய இவைகள் தனித்தனி விஷயங்களில் என்னை இழுத்துக்கொண்டு செல்லுகின்றன. அது அநேக ஸ்திரீகளை விவாகஞ் செய்துகொண்ட மனிதனை அந்த ஸ்திரீகள் கஷ்டப்படுத்துவதுபோல் இருக்கிறது. இம்மாதிரி கர்மத்திற்கு வசப்பட்டு சம்சாரமாகிய வைதரணீ நதியில் விழுந்து ஜன்மம், மரணம்,

வியாதி ஆகிய இவைகளில் மிகவும் பயந்தவனும், தான் பிறர் என்ற பேதபுத்தியுள்ளவனும், விரோதம், சிநேகம் இவைகளுள்ளவனும், மூடனுமாகிய என்னைக் கிருபா திருஷ்டியால் அனுக்கிரகித்துக் காப்பாற்றவேண்டும். ஓ தீனபந்துவே! உம்முடைய பக்தர்களைச் சேவிப்பவர்களான எங்களைச் சம்சாரமாகிய வைதரணீ நதியைத் தாண்டச் செய்வதில் உமக்கென்ன பிரயாசம்? (உம்முடைய பக்தர்களை ஆசிரயிப்பதாலேயே சம்சாரம் நிவர்த்தியாகிறதென்று தாத்பரியம்.) மேலும், நான் உம்முடைய சரிதத்தைக் கானஞ் செய்வதாகிய அமிருதத்தில் மூழ்கிய சித்தமுள்ளவனாக இருப்பதால் இந்தச் சம்சாரத்திலிருந்து பயப்பட்டேன். ஆனால் உம்மிடத்தில் பக்தி செய்யாமல் இந்திரிய சுகத்திற்காகக் கஷ்டப்படும் மூடர்களைப்பற்றித் துக்கிக்கிறேன். (மூடர்களுக்கும் மோட்சம் கொடுக்கவேண்டுமென்று தாத்பரியம்.) ஓ தேவ! முனிவர்கள் ஏகாந்தமான இடத்திலிருந்து கர்மத்தை விடாதவர்களாகித் தவஞ் செய்கிறார்கள். அப்படிப்பட்ட முனிவர்களை விட்டு நான் ஒருவன் தனியே மோட்சத்தை அடைய இஷ்டப்படவில்லை. உம்மைக் காட்டிலும் சரணம் எனக்கு வேறொருவரும் இல்லை. (என்னை அனுக்கிரகிப்பது மாத்திரம் போதாது. உம்மைத் தவிர எனக்கு வேறு கதியும் இல்லை.) தினவினால் கைகளுக்குத் துக்கம் ஏற்படுவதுபோல் மிகவும் அற்பமான காம சுகமானது துக்கத்தைக் கொடுக்கக்கூடியதாக இருக்கிறது. அந்தக் காம சுகத்தைத் தைரியமுள்ள வித்வான் ஜயிப்பான். மேலும் மௌன விரதம், சாஸ்திரம், தவம், அத்தியயனம், தனக்குரிய தர்மம், ஏகாந்தத்தில் வசிப்பது, ஜபம், சமாதி ஆகிய இவைகள் பெரும்பாலும் மோட்சத்திற்குச் சாதனங்கள். இந்திரியங்களை ஜயித்தவர்களுக்கு மேற்காட்டியவைகள் ஜீவனோபாயங்களாகின்றன. தம்பமுள்ள

வர்களுக்கு அவைகள் ஜீவனத்திற்கு உபயோகப் படுமோ இல்லையோவென்று சந்தேகிக்கக்கூடியவைகள். (பக்தியால் தான் தத்துவஞானத்தை அடையவேண் டும்.) விதையும் முளையும்போல் பிரவாக நித்தியங்களான காரிய காரண ரூபங்களான சரீரங்கள் உமக்கு இருப்ப தாக வேதத்தால் சொல்லப்பட்டிருக்கிறது. வேறு சரீரம் உமக்கில்லை. கட்டையில் மறைந்திருக்கும் அக்னி யைக் கடைந்து எடுத்துக்கொள்வதுபோலப் பக்தர்கள் மேற்காட்டிய காரிய காரண சுரூபியாக உம்மைப் பார்க் கிருர்கள். பின்னும் வாயு, அக்னி, பூமி, ஆகாசம், ஜலம் தன்மாத்திரைகள், பிராணன், இந்திரியங்கள், இருதயம், சித்தம், அகங்காரம், ஸ்தூலம், சூட்சுமம் ஆகிய இவை கள் யாவும் உம்முடைய சுரூபமேயாகும். மனத்திற்கும், வாக்குக்கும் புலப்படுவது யாவும் உம்முடைய சுரூபத்தை விட வேறில்லை. ஓ தேவ! மனம் முதலிய குணுபி மானிகளான எல்லாத்தேவதைகளும் ஜனனமரணமுள்ள வர்கள். (ஜடோபாதிகளாகையால்) என்பதை வித்து வான்கள் தெரிந்துகொண்டு புத்திக்கு மோககரமான வேதாத்தியயனத்தை விட்டு உம்மையே உபாசிக்கிருர் கள். ஓ மேலானவரே! நமஸ்காரம், தோத்திரம், பூஜை, சிசுரூஷை, உம்முடைய பாதங்களை ஸ்மரிப்பது, கதை யைக் கேட்பது ஆகிய ஆறுவகையாக உம்மைச் சேவித் தால் பரமஹம்ஸர்களால் அடையக்கூடிய உம்மிடத்தில் பக்தி உண்டாகும். பக்தியால் மோட்சம் கிடைக்கும். ஆனதால் தாஸ்ய யோகம் கிடைக்கும்படி அனுக்கிரகிக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

51—53. அதனைக் கேட்ட நிர்க்குணராகிய பகவான் கோபமற்றவராகி, பக்தராகிய பிரகலாதரை நோக்கி, மிகுந்த பிரியத்துடன், "ஓ அசுர சிரேஷ்ட! பிரகலாத! உன்னிடம் மிகுந்த சந்தோஷத்தை அடைந்தேன்.

உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். நான் மனிதர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்பவன். உனக்கு இஷ்டமான வரத்தைக் கேட்கலாம். ஓ தீர்க்காயுளுள்ளவனே! என்னுடைய கிருபையை அடையாதவன் என்னைத் தரிசிக்க முடியாது. என்னைத் தரிசித்தவன் தன்னைப்பற்றித் துக்கிக்கமாட்டான். ஆனதால் வித்வான்களும் மிகுந்த அதிருஷ்டமுள்ளவர்களும் கீர்த்தியை விரும்பியவர்களுமான சாதுக்கள் சகல வரத்தை யளிப்பவனாகிய என்னை மூன்று கரணங்களாலும் உபாஸிக்கிறார்கள்" என்றார்.

54. இவ்வாறு பகவான் சாமானிய ஜனங்கள் விரும்பக்கூடிய வரங்களைக் கொடுப்பதாகச் சொல்லியும் *பிரகலாதர் அவைகளை விரும்பவில்லை.

---

# அத்தியாயம் 10

## பகவான் பிரகலாதரை அநுக்ரகித்தது

பக்தி யோகத்திற்கு விஷயங்களை விக்னங்கள் என்று பிரகலாதர் நினைத்துச் சிரித்துக்கொண்டு பகவானை நோக்கி, "இயற்கையில் காமங்களில் ஆசைகொண்டவனாகிய என்னை வரம் கொடுப்பதாகச் சொல்லி ஏமாற்ற வேண்டாம். நான் காமங்களில் பயந்து வைராக்யத்தை அடைந்து, மோட்சத்தை அடைய விரும்பி உம்மை ஆசிரயித்திருக்கிறேன். காமங்கள் ஸம்ஸாரத்திற்கு விதைகள். இருதயத்திற்குப் பந்தகங்கள் (உபத்திரவத்தைக் கொடுக்கக்கூடியவைகள்). என்னை நீர் அநுக்ரகித்தது என்னுடைய மனோபாவத்தைப் பரீட்சிப்பதற்காகவே யொழிய வேறில்லை. மேலும், அஞ்ஞானத்தில் மூழ்கினவனைக் காப்பாற்றுபவர் நீர் ஒருவரே. அப்படிப்பட்ட கருணையுள்ள நீர் பக்தனை அனர்த்தத்தில் ஆசைப்படும்படி செய்வீரா? நீர் சகல லோகங்களுக்கும் குரு

வல்லவா ? எந்த வேலைக்காரன் யஜமானனிடமிருந்து தான் செய்த வேலைக்காகப் பலனை விரும்புகிறானோ, அவன் வேலைக்காரனல்ல. எந்தப் பிரபு, தான் யஜமானனாக இருக்கவேண்டுமென்ற எண்ணத்தால் வேலைக்காரனுக்கு வேண்டியவைகளைக் கொடுக்கிறானோ, அவன் பிரபுவல்ல. விஷயத்தில் ஆசையில்லாமல் குணத்தில் ஆசைப்பட்ட வேலைக்காரனே மேலானவன்; அப்படிப்பட்ட யஜமானனே மேலானவன். உம்முடைய பக்தனாகிய எனக்கு ஒன்றிலும் விருப்பமில்லை. பிரபுவாகிய நீர் பற்றுதலில்லாதவர்; அரசனுக்கும் சேவகனுக்கும் உள்ள சேவிய சேவக பாவமானது எப்படி ஆசையால் ஏற்படுகிறதோ, அப்படி நம்மிருவர்களுடைய சம்பந்தம் காமத்தால் ஏற்பட்டதல்ல. ஓ ஈச! வரத்தை யளிப்பவரே! எனக்கு இஷ்டமான வரத்தை நீர் கொடுக்கிறதானால் என் மனத்தில் சங்கற்பம் (விஷய ஆசை) உண்டாகாமல் இருக்கும்படி அநுக்ரகிக்கவேண்டும். அதே மேலான வரம். காமம் எவனுடைய இருதயத்தில் முளைக்கிறதோ (உண்டாகிறதோ) அவனுடைய இந்திரியங்கள், மனது, பிராணன், தேகம், தர்மம், தைரியம், புத்தி, வெட்கம், காந்தி, தேஜஸ், நல்ல எண்ணம், சத்தியம் ஆகிய இவைகள் நாசமடைகின்றன. ஓ புண்டரீகாக்ஷ! (தாமரை மலர் போன்ற கண்களுள்ள) மனிதன் மனத்திலிருக்கும் சகல ஆசைகளையும் எப்பொழுது ஒழித்துவிடுகிறானோ அப்போது பகவானாக ஆகிறான். மகாத்மாவும், புருஷரும், ஹரியும், அற்புத சிமமசுரூபியும், பரப்பிரம்மமுமான உம்மை நமஸ்கரிக்கிறேன்" என்றார்.

**12—15.** அதனைக் கேட்ட பகவான் பிரகலாதரை நோக்கி, "என்னிடத்தில் அனன்யமாகப் பக்திசெய்யும் உன்னைப் போன்ற பக்தர்கள் காமங்களை விரும்பமாட்டார்கள். ஆனாலும் இந்த மன்வந்தரம் முழுமையும் அசுரர்

களுக்கு அதிபதியாக இருந்து என்னையே மனத்தில் தியானித்து, என்னுடைய கதைகளையே சொல்லிக் கொண்டு போகங்களை அநுபவி. சகல பூதங்களிடத்தி லும் வசிக்கும் ஒருவராகிய என்னைக் கர்மங்களைச் செய்து சந்தோஷப்படுத்து. கர்மங்களை என்னிடத்தில் சமர்ப்பிப் பதனால் அந்தக் கர்மமானது உனக்குக் கெடுதியைச் செய்கிறதில்லை. பிராரப்த கர்மத்தைப் பலனை அநுப விப்பதாலும், புண்ணியத்தைச் செய்வதால் பாபங்களை யும் நிவர்த்தித்துக்கொண்டு, தேவர்களால் கானஞ் செய்யப்படும் கீர்த்தியை லோகத்தில் பரவச்செய்து சகல பந்தங்களற்றவனாகிச் சரீரத்தை விட்டு என்னை அடையப் போகிறாய். எவன் உன்னால் செய்யப்பட்ட இந்த ஸ்தோத் திரத்தைப் படிக்கிறானோ, உன்னையும் என்னையும் ஸ்மரிக் கிறானோ அவன் கர்மத்தால் கட்டப்படமாட்டான்'' என்றார்.

16—18. அதனைக் கேட்ட பிரகலாதர் பகவானை நோக்கி, "வரத்தைக் கொடுப்பவர்களுக்குச் சிறந்தவரே! மகேசுவர! அவித்வானாகிய என்னுடைய பிதாவாகிய ஹிரண்யகசிபு சகல லோகங்களுக்குக் குருவும், பிரபுவும், ஈசுவரனும், தேஜோரூபியுமான உம்மைப் பொறாமையுள்ள வனாகி நிந்தித்தானல்லவா? தன்னுடைய சகோதரனைக் கொன்றவர் என்று உம்மிடத்திலும், அப்படிப்பட்ட உம்மை நான் சேவிப்பதால் என்னிடத்திலும் துவேஷ முள்ளவனாகியிருந்தான். ஆனாலும், தீனர்களிடத்தில் பிரீதியுள்ள நீர், கிருபையுள்ள பார்வையால் அவனை அநுக்ரகித்து அந்தப் பாபத்திலிருந்து சுத்தனாகும்படி செய்யவேண்டும். இந்த வரத்தைக் கொடுக்கவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

19—24. அதனைக் கேட்ட பகவான் பிரகலாதரை நோக்கி, "ஓ சாதுவே! குலத்தைப் பரிசுத்தப்படுத்து

கிறவனுன நீ இந்தக் குலத்தில் ஜனித்தபடியால் உன்னு டைய பிதா இருபத்தொரு தலைமுறைகளுடன் சுத்த னுனன். மேலும் சாந்தர்களும், சமமாகப் பார்ப்பவர்களும், பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட ஆசாரமுள்ளவர் களுமான என்னுடைய பக்தர்கள் எந்தத் தேசத்தில், எந்தக் குலத்தில் ஜனிக்கிறார்களோ அது மிகவும் நீச மானுலும் சுத்தமாகிவிடும். ஓ தைத்யர்களுக்குட் சிறந்த வனே! என்னிடத்தில் மனத்தைச் செலுத்தி, விஷயங் களில் ஆசைகளை யொழித்தவர்கள் பலவகையான பூதங் களில் ஒன்றையும் இம்சிக்கமாட்டார்கள். நீ என்னுடைய பக்தர்களுக்குட் சிறந்தவன். ஆனதால் உன்னை அநு சரித்தவர்களும் என்னுடைய பக்தர்களாவார்கள். என் னுடைய சரீர ஸ்பரிசத்தால் உன்னுடைய பிதா சுத்த னுனன்; அவனுக்குப் பாபமே இல்லை. அவனுக்கு உத்தரக்கிரியைகளைச் செய். தகப்பனுருடைய ராஜ் யத்தை அநுபவிக்கலாம். வைதிகர்களால் சொல்லப் பட்டபடி மனத்தை என்னிடம் செலுத்தி, சகல கரணங் களையும் என்னிடமாகச் சமர்ப்பித்து, கர்மங்களை யநுஷ் டித்தால் அந்தக் காரியங்கள் கெடுதியை யுண்டுபண்ணு கிறதில்லை" என்று அநுக்ரகித்தார்.

25—31. அதனைக் கேட்ட பிரகலாதரும பிதாவிற்கு உத்தரக்கிரியைகளைச் செய்து முடித்தார். பின்பு பிராம் மணர்கள் அவருக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்தார்கள். மகா பாகவதராகிய அந்தப் பிரகலாதர் நன்ருக ராஜ்ய பரிபால னம் செய்துவந்தார். பின்பு பிரம்மதேவர் சாந்தராகிய நரசிம்மரைப் பார்த்து, தேவர்களுடன் சுத்தமான வார்த்தைகளால் பின்வருமாறு துதிக்கலானுர்: 'ஓ தேவர் களுக்கும் தேவரே! எல்லாவற்றிற்கும் அதிபதியே! பிராணிகளுக்கு அந்தர்யாமியாக இருப்பவரே! எல்லாவற் றிற்கும் முந்தியவரே! இந்த ஹிரண்யகசிபு என்னுல்

சிருஷ்டிக்கப்பட்ட பூதங்களால் கொல்லமுடியாதவன் என்ற வரத்தை என்னிடமிருந்து பெற்றுக்கொண்டு, தவத்தினலும், யோக பலத்தாலும் மதித்து, தர்மங்களைக் கெடுத்துவந்தான். அப்படிப்பட்ட லோகத்தை உபத்திர வித்த அசுரனைக் கொன்றீர். பின்னும், அவனுடைய புத்திரனும், மிக்க சாதுவும், மகா பாகவதனுமாகிய பிரக லாதரை அநுக்ரகித்தீர். இந்த உம்முடைய சுரூபமானது தியானஞ் செய்பவனை மிருத்யு முதலிய பயத்திலிருந்து காப்பாற்றுகிறது. இந்தப் பிரகலாதன் சகல வேத சுரூபியும், சகல யாகசுரூபியும், சகல தபோரூபியும்; சகல தீர்த்தமயமான மடியுள்ளவருமாகிய உமமை அடைந்து, அக்னியை அடைந்த சுவர்ணம்போல் சுத்தனுனன்'' என்றார்.

32—36. அதனைக் கேட்ட பகவான் பிரம்மதேவரை நோக்கி, ''ஓ தாமரை மலரிலிருந்து உண்டானவரே! குரூர சுபாவமுள்ளவர்களுக்கு இம்மாதிரியான வரத்தை இனி கொடுக்கவேண்டாம். அது சர்ப்பத்திற்குப் பாலைக் கொடுப்பதுபோலிருக்கிறது'' என்று சொல்லி, பிரம்ம தேவரால் பூஜிக்கப்பட்டு அந்தர்த்தானத்தை அடைந் தார். பின்பு பகவானுடைய அம்சமாகிய பிரகலாதர் பரமசிவன், பிரம்மதேவர், மற்ற தேவர்கள் ஆகிய இவர் களைப் பூஜித்து நமஸ்கரித்தார். அதன்பின் பிரம்மதேவர், சுக்ராசாரியர் முதலியவர்களுடைய அநுமதியால், மகரிஷி களுடன் பிரகலாதரைத் தைத்யர்களுக்கும் தானவர் களுக்கும் அதிபதியாகச் செய்தார். இப்படி பிரகலாத ரால் பூஜிக்கப்பட்ட பிரம்மா முதலிய தேவர்கள் அவரைச் சிலாகித்து ஆசீர்வதித்து, தங்களிருப்பிடஞ்சென்றார்கள்.

37—53. விஷ்ணுவின் பார்ஷதர்கள் பிராம்மண சாபத் தால் அசுர ஜன்மத்தை அடைந்து, விரோத புத்தியால் பகவானை மனத்தில் வைத்து அவரால் கொல்லப்

பட்டார்கள். பின்னுமவர்கள் கும்பகர்ணன், ராவணன் என்ற ராக்ஷஸர்களாகப் பிறந்தார்கள். பகவான் ராமனாக அவதரித்து அவர்களை நிக்ரகித்தார். அவர்கள் ராமனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டு அவரையே தியானித்துச் சரீரத்தை விட்டார்கள். அவர்களே சிசுபாலன், தந்தவக்திரன் என்ற பெயருடன் திரும்பவும் பிறந்தார்கள். அவர்கள் பகவானிடத்தில் விரோத புத்தி வைத்து, நீர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மகா புருஷனை அடைந்தார்கள். இப்படியே ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் விரோத புத்தியுள்ள அரசர்கள் பகவானுடைய தாரதம்மியத்தை அடைந்திருக்கிறார்கள். புழுவானது குளவியைத் தியானித்துத் தானும் அதுவாக ஆகவில்லையா? பாகவதர்கள் பகவானிடத்தில் மிகுந்த பக்திசெய்து பகவானை அடைவதுபோலச் சிசுபாலன் முதலிய அரசர்களும் பேத புத்தியால் ஈசுவரனை அடைந்தார்கள். ஓ தர்மபுத்திரரே! சிசுபாலனைப்பற்றி உம்மால் கேட்கப்பட்ட விஷயத்தைச் சொன்னேன். இந்த உபாக்கியானத்தில் பிராமணர்களையே தெய்வமாகக்கொண்டவரும் மகாத்மாவுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய அவதார கதை, இரண்யாட்சன், இரண்யகசிபு இவர்களுடைய வதம், மகா பாகவதராகிய பிரகலாதருடைய சரிதம், பக்தி, ஞானம், வைராக்கியம், பகவானுடைய தத்துவம், சிருஷ்டி, ஸ்திதி, லயம் ஆகிய இவைகளுக்கு அதிபதியான பகவானுடைய சரிதம், தேவர்கள், அசுரர்கள் ஆகிய இவர்களுடைய ஸ்தானத்தின் மாறுதல், பகவானை அடையக்கூடிய பாகவத தர்மங்கள், ஆத்ம விஷயம் ஆகிய இவைகள் வர்ணிக்கப்பட்டிருப்பதால் இது மிகவும் புண்ணியகரமானது. ஸ்ரீ மகாவிஷ்ணுவின் சரிதங்கள் நிறைந்த இந்தக் கதையை எவன் சிரத்தையுடன் உச்சரிக்கிறானோ, அவன் கர்ம பாசத்திலிருந்து நிவர்த்தி அடைவான். மேலும், எவன்

நரசிம்மமாக அவதரித்த ஆதி புருஷனுடைய சரிதத்தையும், இரண்யகசிபுவின் வதத்தையும், சாதுக்களுக்குச் சிறந்தவராகிய பிரகலாதருடைய புண்ணியமான சரிதத்தையும் பக்தியுடன் படிக்கிறுரே அவன் நிர்ப்பயமான லோகத்தை அடைகிறுன். யோகிகளாலும் அடைய முடியாத பரப்பிரம்மமானது மனித சரீரத்துடன் உங்களுடைய கிரகத்தில் வசிப்பதால் நீங்கள் மிக்க பாக்கியசாலிகள். இந்த ஸ்ரீ கிருஷ்ண பகவான் பிரம்மம்; மகான்களால் தேடக்கூடிய மோட்ச சுகானுபவ சுரூபம்; அவரே உங்களுக்கு அம்மான் சேய் ஆகவும், சுகிருத்தாகவும், வேலைசெய்பவராகவும், குருவாகவும் இருக்கிறுர். அவருடைய சுரூபத்தைப் பரமசிவன், பிரம்மதேவர் முதலியவர்களாலும் இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்லமுடியவில்லை. ஆனதால் மௌனத்தாலும், பக்தியாலும், உபசமத்தாலும் பூஜிக்கப்பட்டு இந்த ஸ்ரீ கிருஷ்ண பகவான் நம்மிடத்தில் கிருபை செய்யட்டும். மேலும், இவர் மாயாவியாகிய மயனைக்கொண்டு பரமசிவனுடைய கீர்த்தியைப் பரவச்செய்தார்" என்று நாரதர் சொன்னுர்.

54. அதனைக் கேட்ட தர்மபுத்திரர் நாரதரை நோக்கி, "எந்தக் காரியத்தில் பரமசிவனுடைய கீர்த்தியானது மயனுல் கெடுக்கப்பட்டது? எப்பொழுது அதனை ஸ்ரீ கிருஷ்ணன் விருத்திசெய்தார்? அதனைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

55—73. அதனைக் கேட்ட நாரதர் அரசனை நோக்கி, "ஸ்ரீ கிருஷ்ணனுடைய சகாயமுள்ளவர்களான தேவர்களால் அசுரர்கள் ஜயிக்கப்பட்டு, மாயாவிகளுக்குச் சிறந்தவனுகிய மயனென்பவனைச் சரணமடைந்தார்கள். அவன் அசுரர்களுக்காகத் தங்கம், வெள்ளி, எஃகு ஆகிய இவைகளால் மூன்று பட்டணங்களை உண்டுபண்ணினுன். அவைகளின் சேர்க்கையும், பிரிவும் பிறரால் அறியமுடி

யாதவை. அவைகளுடைய சாமக்கிரிகளும் இன்னது என்று ஊகிக்க முடியாதவை. அந்தப் பட்டணங்களில் அசுரர்கள் வசித்து, கண்ணுக்குப் புலப்படாமல் முந்திய விரோதத்தை நினைத்துக்கொண்டு மூவுலகத்தையும் லோகபாலகர்களையும் இம்சித்தார்கள். அப்பொழுது சகல உலகங்களும் லோகபாலகர்களும் பரமசிவனைச் சரணமடைந்து, "மாயையால் உண்டுபண்ணப்பட்ட பட்டணங்களில் வசிக்கும் அசுரர்கள் எங்களை உபத்திரவிப்பதால் உம்மைச் சார்ந்தவர்களான எங்களைக் காப்பாற்றும்" என்று வேண்டிக்கொண்டார்கள். அதனைக் கேட்ட பகவான் "பயப்படாதீர்கள்" என்று அபயப்பிரதானஞ் செய்து தனுஸில் பாணத்தைப் பூட்டி, திரிபுரர்களை உத்தேசித்து அஸ்திரத்தைப் பிரயோகித்தார். சூரிய மண்டலத்திலிருந்து கிரணங்கள் வெளிப்பட்டாற் போல அக்னி போன்ற பாணங்கள் அந்த அஸ்திரத்திலிருந்து கிளம்பி அந்தப் பட்டணங்களை மறைத்தன. அந்தப் பாணங்களால் அடிக்கப்பட்ட அசுரர்கள் மரணமடைந்தார்கள். பின்பு மகா யோகியாகிய மயன் மரணமடைந்த அசுரர்களை அமிருதக் கிணற்றில் போட்டான். சித்தமான அமிருத ரசத்தின் சம்பந்தத்தால் அவர்கள் பிழைத்து, வஜ்ரம்போன்ற சரீரமுள்ளவர்களாகி மேகத்தைப் பேதிக்கும் மின்னலாகிய அக்னிகள்போல உயரக் கிளம்பினார்கள். அதனைக் கண்ட பரமசிவன் தம்முடைய எண்ணம் நிறைவேறாமல் கவலையை அடைந்திருந்தார். அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் அதற்கு ஓர் உபாயஞ்செய்தார். அதாவது: ஸ்ரீ மகாவிஷ்ணு பசுவின் சுரூபத்தைத் தரித்து, பிரம்மதேவர் கன்றாக இருந்து, கிணற்றிலிருந்து அமிருதத்தைப் பானஞ் செய்தார்கள். அதனை அசுரர்கள்

பார்த்திருந்தாலும் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் மாயையால் மோகித்துத் தடைசெய்யாமலிருந்தார்கள். பின்பு யோகியாகிய மயனானவன் அமிருத ரசத்தைச் சம்ரட்சிக்கும் காவலாட்களை நோக்கி, தெய்வகதியை நினைத்துத் துக்கமற்றவனாகி, "தேவனானாலும், அசுரனானாலும், தனக்காவது பிறருக்காவது இருவர்களுக்குமாவது தெய்வத்தால் ஏற்படுத்தப்பட்டதை மாற்றுவதற்கு முடியாது. ஆனதால் இந்த ஸ்ரீ கிருஷ்ணன் பரமசிவனுக்குத் தமது சக்திகளுடன் ஒத்தாசை செய்கிறார்" என்று சொன்னான். பின்பு பரமசிவன் யுத்தத்தில் தகுந்த முயற்சியுடன் ரதத்தின்மீதேறி, தனுஸில் பாணத்தைப் பூட்டி அபிஜித் என்ற முகூர்த்தத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் தேஜஸால் காப்பாற்றப்பட்டு, திரிபுரங்களை எரித்தார். அப்பொழுது ஆகாயத்தில் தேவதுந்துபிகள் முழங்கின. அநேக விமானங்கள் ஆகாயத்தில் வந்தன. தேவர்கள், மகரிஷிகள், பிதிருக்கள், சித்தர்கள் ஆகிய இவர்கள் 'ஜய' என்ற சப்தத்தைச் சொல்லிப் புஷ்பமாரி பெய்தார்கள்; கானஞ் செய்தார்கள்; அப்ஸரஸுக்கள் நர்த்தனஞ் செய்தார்கள். இப்படிப் பரமசிவன் திருபுர ஸம்ஹாரஞ்செய்து பிரம்மா முதலியவர்களால் துதிக்கப்பட்டுத் தமது உலகம் சென்றார். சகல ஜகத்திற்கும் குருவாகிய ஸ்ரீ மகாவிஷ்ணு தமது மாயையால் பூலோகத்தில் அவதரித்துச் செய்த சரிதங்கள் மகரிஷிகளால் கானஞ்செய்யப்படுகின்றன; லோகத்தைப் பரிசுத்தப்படுத்துகின்றன; வேறு எதனைச் சொல்லவேண்டு"மென்று கேட்டார்.

# அத்தியாயம் 11

## பொதுவான தர்மம்

பகவானையே தியானஞ்செய்துகொண்டிருக்கும் அசுர சிரேஷ்டராகிய பிரகலாதருடைய சாதுசம்மதமான சரித்தைக் கேட்ட தர்மபுத்திரர் சந்தோஷத்துடன் பிரம்ம புத்திரராகிய நாரதரை நோக்கி, "ஓ பகவன்! நீர் பிரம்ம தேவருடைய புத்திரர். தவம், ஞானம், சமாதி ஆகிய இவைகளால் சிறந்தவர்; பிரம்மதேவருக்கு அநேக புத்திரர்கள் இருந்தாலும் உம்மிடத்தில் விசேஷ பிரீதி. சாந்தர்களும், ஜீவகாருண்யமுள்ளவர்களும், ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பக்தர்களுமான சாதுக்களுக்குத் தர்மத்தின் ரகசியம் நன்றாகத் தெரியும். மற்றவர்களுக்கு அப்படித் தர்மம் தெரியாது. மனிதர்களால் அனுஷ்டிக்கப்பட வேண்டிய சாசுவத தர்மத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். வர்ணம், ஆசிரமம் இவைகளுக்குரிய தர்மத்தை அனுஷ்டிப்பதால் புருஷன் ஞானம், பக்தி ஆகிய இவைகளை அடைவான். அதனை எனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

5—15. அதனைக் கேட்ட நாரதர் தர்மபுத்திரரை நோக்கி, "ஜனங்களுடைய தர்மத்தைக் காப்பாற்றுபவரான ஸ்ரீமந் நாராயணனை நமஸ்கரித்து, அவரிடமாகத் தெரிந்துகொண்ட சநாதன தர்மத்தைச் சொல்லுகிறேன். எந்தப் பகவான் தர்மத்தின் பத்தினியாகிய மூர்த்தி என்பவளிடம் அவதரித்து, உலகங்களுடைய க்ஷேமத்திற்காகப் பதரிகாசிரமத்தில் தவம் செய்கிறாரோ அந்தப் பகவானே தர்மத்திற்கு மூலம். அவர் சகல வேத சுரூபி. மேலும், வேதங்களை அறிந்தவர்களுடைய ஸ்மிருதியும், அவர்களுடைய ஆசாரமும், ஆத்ம சந்தோஷமும் தர்மத்திற்கு மூலங்கள். சத்தியம், தயை, ஏகாதசி உபவாஸம்

முதலிய தவம், சௌசம், யுக்தம், அயுக்தம் இவைகளை விசாரிப்பது, மனத்தை அடக்குவது, இந்திரியங்களை அடக்குவது, பிறருக்கு இம்சை செய்யாமலிருப்பது, பிரம்மசரியம், கொடுப்பது, ஜபம், ரிஜு புத்தியுள்ளவனாக இருப்பது, தெய்வச் செயலாகக் கிடைத்ததில் சந்தோஷப்படுவது, மகான்களைச் சேவிப்பது, கிராம்யமான ஆசையை ஒழிப்பது, பயனற்றவைகளைத் தெரிந்து கொள்வது, வீணுகப் பேசாமலிருப்பது, தேகம் முதலியவைகளை விட ஆத்மா வேருனதென்று விசாரித்தல், அன்னம் முதலியவைகளைப் பிராணிகளுக்குத் தக்கபடி பிரித்துக் கொடுத்தல், பிராணிகளை ஆத்மாவென்றும், தேவதை என்றும் நினைப்பது, மனிதர்களைத் தேவதையாக நினைப்பது, இந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சரிதங்களைக் கேட்பது, வாக்கினுல் உச்சரிப்பது, இவரை ஸ்மரிப்பது, சேவிப்பது, பூஜிப்பது, வணங்குவது, சிநேகிப்பது, தாசனுயிருப்பது, ஆத்மாவைச் சமர்ப்பிப்பது ஆகியவைகள் மனிதர்களுக்குப் பொதுவான தர்மங்கள் ஆகும். இவைகளை அனுஷ்டிப்பதால் முப்பத்திரண்டு லட்சணங்களுள்ளவரும், சகல சுரூபியுமான பகவான் சந்தோஷத்தை அடைகிருர். எவனிடத்தில் கர்ப்பாதானம் முதலிய சம்ஸ்காரங்கள் தொடர்ந்திருக்கின்றனவோ, அவைகளுடன் கூடிய எவனைப் பிரம்மதேவர் துவிஜன் என்று சொன்னுரோ அவனே துவிஜன் (இரண்டு பிறப்புள்ளவன்). யாகம் செய்வது, அத்தியயனம் செய்வது, தானம் ஆகிய இவைகள் துவிஜர்களுக்கு உரிய தர்மங்களென்று விதிக்கப்பட்டன. மேலும், நல்ல குலத்தில் பிறந்தவர்களும், நல்ல ஆசாரமுள்ளவர்களுமான மேற்காட்டிய த்விஜர்களுக்குப் பிரும்மசரியம் முதலிய ஆசிரம தர்மங்களும் விதிக்கப்பட்டன. பிராம்மணனுக்கு, பிறருக்கு வேதத்தைச் சொல்லிக் கொடுப்பது முதலியவை தர்மங்

கள். க்ஷத்திரியனுக்கு, பிறரிடத்தில் தானம் வாங்காமல் இருப்பது (பிரதிக்கிரகிக்காமலிருப்பது) தர்மம். பிரஜை களைச் சம்ரட்சிக்கும் க்ஷத்திரியனுக்கு, பிராம்மணனைத் தவிர மற்றவர்களிடம் கப்பம் வாங்குவது தர்மம். வைசியன் கிருஷி, வியாபாரம் முதலியவைகளால் ஜீவித்து, பிராம்மணனைச் சேவிக்கவேண்டும். சூத்திரனுக்கு, பிராம் மணனைச் சேவிப்பதே தர்மமென்று விதிக்கப்பட்டது. ஆனால் அவன் யஜமானனால் கொடுக்கப்பட்ட அன்னத் தால் ஜீவிக்கவேண்டும்.

16—34. மேலும் பலவகையான வார்த்தை (கிருஷி முதலியவை), சாலீனம் (யாசிக்காமல் கிடைத்தது), யாயாவரம் (ஒவ்வொரு நாளும் யாசித்துச் சம்பாதிப்பது), சிலோஞ்சனம் (வயலில் அதற்கு உடையவனால் தள்ளப் பட்ட தானியத்தைப் பொறுக்கி எடுத்துக்கொள்வது சிலம்; கடைவீதியில் இறைந்திருப்பதை எடுத்துக்கொள் வது உஞ்சனம்.) ஆகிய நான்கும் பிராம்மணனுக்கு ஏற் பட்ட விருத்திகள். மேற்காட்டிய நான்கு வகையிலும் ஒன் றைவிட மற்றொன்று மேலானது. கீழான ஜாதியார்கள் மேலான வர்ணத்தாருடைய தர்மத்தை அனுஷ்டிக்கக் கூடாது. ஆனால் அவர்களுக்குத் தங்கள் ஜாதிக்குரிய விருத்தி கிடைக்காத காலத்தில் மேலானவர்களுடைய விருத்தியைச் செய்யலாம். அதுவும் க்ஷத்திரியனுக்குத் தர்மமாகாது. ரிதம், அமிருதம், மிருதம், பிரமிருதம், சத்தியானிருதம் ஆகிய இவைகளுக்குள் ஏதனாலாவது ஜீவிக்கவேண்டும். எப்பொழுதும் சுவ விருத்தியை ஆசிர யிக்கவேண்டாம். வயல், கடைவீதி முதலிய இடங்களில் இறைந்திருப்பதைப் பொறுக்குவது ரிதமெனப்படுகிறது. யாசியாமல் கிடைப்பதே அமிருதம். ஒவ்வொரு நாளும் யாசிப்பதே மிருதம், பயிரிடுவது பிரமிருதம். வியாபா ரஞ் செய்வது சத்தியானிருதம். நீசனைச் சேவிப்பது சுவ

விருத்தி எனப்படுகிறது. பிராம்மணன் சகல வேதசுரூபி யாகையாலும், க்ஷத்திரியன் சகல தேவசுரூபியாகையா லும் அவ்விருவர்களும் நிந்திக்கக்கூடிய விருத்தியான சுவ விருத்தியை ஒருபொழுதும் அனுஷ்டிக்கக் கூடாது. சமம் (மனத்தை அடக்குவது), தமம் (இந்திரியங்களை அடக்கு வது), தவம், சந்தோஷம், பொறுமை, ரிஜுபுத்தியாக இருப்பது, ஞானம், தயை, பகவானிடத்திலேயே மனத் தைச் செலுத்துவது சத்தியம் ஆகிய இவைகள் பிராம் மணனுடைய லட்சணங்கள். யுத்தத்தில் உற்சாகம், பிர தவம், தைரியம், தேஜசு, கொடுப்பது, தேகத்தை ஜயிப் பது, பொறுமை, பிராம்மணர்களைத் தெய்வமாகக் கொள் வது. அனுக்கிரகம், ரட்சிப்பது ஆகிய இவைகள் க்ஷத்தி ரியர்களுடைய லட்சணங்கள். தேவர்கள், குருக்கள், பெரியோர்கள், பசுக்கள் ஆகிய இவைகளிடத்தில் பக்தி செய்வது, மூன்று ஜாதியார்களைச் சந்தோஷப்படுத்து வது, பரலோகம் இருக்கிறதென்ற ஆஸ்திக புத்தி, பணம் சம்பாதிக்க முயற்சிப்பது, சாமர்த்தியம் ஆகிய இவைகள் வைசியனுடைய லட்சணங்களாகின்றன. மேலான ஜாதி யார்களை வணங்குவது, சுத்தனாக இருப்பது, கபடமற்று யஜமானனைச் சேவிப்பது, மந்திரமில்லாமல் நமஸ்காரத் தாலேயே பஞ்சயக்ஞத்தை அனுஷ்டிப்பது, திருடாமல் இருப்பது, பொய் சொல்லாமல் இருப்பது, பசுக்களையும பிராம்மணர்களையும் காப்பாற்றுவது ஆகிய இவைகள் சூத்திரனுடைய லட்சணங்கள்.

25—29. பர்த்தாவையே தெய்வமாக நினைப்பது, புருஷனுக்குச் சிசுரூஷை செய்வது, அவருக்கு அனுகூல மாக இருப்பது, பர்த்தாவைச் சார்ந்த பந்துக்களை அனு சரிப்பது, புருஷனுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கும் விரதத் தை அனுஷ்டிப்பது, வீட்டைப் பெருக்குவது, மெழுகு வது முதலியவைகளால் அலங்கரித்துக்கொண்டு வீட்டி

லேயே இருப்பது, பாத்திரம், வஸ்திரம் முதலியவைகளைச் சுத்தமாக வைத்துக்கொள்வது, தான் அலங்கரித்துக் கொள்வது, புருஷனுக்குப் பிரியமான பலவகையான காமங்களாலும், வணக்கத்தாலும், மனத்தை அடக்குவதாலும், உண்மை பேசுவதாலும், பிரியமான வார்த்தைகளாலும் ஒவ்வொரு சமயத்திலும் புருஷனைச் சந்தோஷப்படுத்துவது, பதிவிரதையாக இருப்பது ஆகிய இவைகள் பெண்களுடைய தர்மங்கள். மேலும், கிடைத்ததால் சந்தோஷிக்கவேண்டும். எதிலும் அதிகமாக ஆசை வைக்கக்கூடாது; சாமர்த்தியமுள்ளவளாயிருக்க வேண்டும். புருஷனுக்குச் சுசுரூஷை செய்வதே தர்மம் என்று தெரிந்துகொண்டிருக்கவேண்டும்; எப்பொழுதும் எல்லாரிடத்திலும் பிரியமாகவும், உண்மையாகவும் பேச வேண்டும். சாசுவதமாகவும், சுத்தமாகவும் சிநேகத்துடன் புருஷனைச் சேவிக்கவேண்டும். புருஷன் மகா பாபியாக இருந்தால் அவனுடைய பாபம் நிவர்த்தியாகும் காலத்தை எதிர்பார்த்திருந்து, பின்பு அவனைச் சேவிக்க வேண்டும். இப்படி நற்குணங்கள் உள்ளவளாகி எவள் தன்னுடைய பர்த்தாவை ஸ்ரீமகாவிஷ்ணுவாகப் பாவித்து லக்ஷ்மீதேவிபோல் சேவிக்கிறாளோ, அவள் ஸ்ரீ மகாவிஷ்ணுவுடன் லக்ஷ்மீதேவி சந்தோஷிப்பது போல் பரலோகத்திலும் தன் பர்த்தாவுடன் சேர்ந்து சுகத்தை அடைவாள்.

30–35. அந்த்யஜர்கள், அந்தாவசாயிகள் முதலிய சங்கர ஜாதிகளுக்குக் குலக்கிரமமாக ஏற்பட்டதே விருத்தியாகும். ஆனால் பிறரை இம்சிப்பது, திருடுவது முதலியவை தர்மமாகா. ‘ஓ தர்மபுத்திரரே! ஒவ்வொரு யுகத்திலும் மனிதர்களுக்குத் தர்மம், வேதத்தை அறிந்தவர்களால் விதிக்கப்பட்டிருக்கிறது. அது இவ்வுலகத்திலும், பரலோகத்திலும் சுகத்தைக் கொடுக்கக்கூடியது.

தனக்கு உரியதான கர்மத்தை அனுஷ்டிப்பவன் அந்தக் கர்மபந்தத்திலிருந்து நிவர்த்தியடைந்து, கிரமமாகப் பிரம்மமாக ஆகிவிடுவான். அடிக்கடி விதை விதைக்கப் படும் வயலானது வீரியமற்றுப்போய்விடும். அது மறுபடி பயிரை உண்டுபண்ணுகிறதில்லை. அதில் விதையை விதைத்தாலும் அந்த விதையும் நசிக்கிறது. அது போலவே காமத்திற்கு இருப்பிடமான சித்தமானது காமத்தை அதிகமாகச் சேவிப்பதால் வைராக்கியத்தை அடையும். ஜ்வலிக்கும் அக்கினியானது நெய்த் துளிகளால் சாந்தியை அடைகிறதில்லை. விசேஷமாக நெய்யைக் கொட்டினுல் சாந்தி அடையுமல்லவா? எந்த ஜாதிக்கு, எது லட்சணஞ் சொல்லப்பட்டிருக்கிறதோ அது வேறு ஜாதியில் காணப்படுமானுல் அதனையும் அந்த ஜாதியென்று சொல்லலாம்.

## நோட்டு

**தர்மத்திற்கு மூலம்:—** பகவானே தர்மத்திற்குப் பிரமாணம். ஈசுவரன் சாக்ஷாத்தாக தர்மத்திற்குப் பிரமாணமாகாதபோனுலும் வேத சுரூபியாக இருப்பதால் அதன் வழியாகத் தர்மத்திற்குப் பிரமாணமாகிருர். சகல வேதங்களும், அவைகளை அறிந்தவர்களால் செய்யப்பட்ட ஸ்மிருதிகளும், சாதுக்களுடைய ஆசாரமும், ஆத்ம துஷ்டியும் தர்மமூலம்.— **யாக்ஞவல்கிய ஸ்மிருதி —மநு ஸ்மிருதி—சுருதி, சத்தியம்** இது முதல் ஐந்து சுலோகங்களால் மனிதர்களுக்குப் பொதுவாகிய தர்மம் சொல்லப்பட்டிருக்கிறது. **த்விஜன்:—** இரண்டு பிறப்புள்ளவன். மாதரு கர்ப்பத்திலிருந்து ஜனிப்பது ஒன்று; உபநயன ஸம்ஸ்காரத்தால் இரண்டாவது ஜனனம். கர்ப்பாதானம் முதலிய சம்ஸ்காரமுள்ளவன் த்விஜனென்ருல் சூத்திரனுக்கும் மேற்காட்டிய சம்ஸ்காரங்களிருந்தால் அவனும் த்விஜனுகிவிடலாமே என்ருல், பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன் ஆகிய இவர்களுக்கு சம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டனவே யொழிய சூத்திரனுக்கு விவாகத்தைத் தவிர வேறு சம்ஸ்காரம் சொல்லப்படவில்லை. ஆனதால் உபநயனம் சூத்திர

னுக்கு விதிக்கப்படாததால் அவன் த்விஜனாகமாட்டான். சூத்திரன் விவாகமாகிய ஸம்ஸ்காரத்தை மாத்திரம் அடையட்டும். ஒரு சந்தசுடனும் அவனைப் பிரம்மதேவர் உண்டுபண்ணவில்லை— **ஸ்ம்ருதி**.— காயத்ரீ சந்தஸினால் பிராம்மணனையும், திரிஷ்டுப்ச் சந்தசுடன் க்ஷத்திரியனையும், ஜகதீச் சந்தசுடன் வைசியனையும் பிரஜாபதி உண்டுபண்ணினார். சூத்திரனை ஒரு சந்தசுடனும் உண்டு பண்ணவில்லை. **சுருதி—ஆசிரம தர்மங்கள்:**— மூன்று ஜாதியார்களுக்கு ஆசிரம தர்மங்கள் விதிக்கப்பட்டன. சூத்திரனுக்கு வர்ண தர்மமேயொழிய ஆசிரமத்தையொட்டிய தர்மம் சொல்லப்படவில்லை. அதனாலும் அவனுக்கு பிரம்மசரியம் முதலிய ஆசிரமங்களில்லை. **வேதத்தைச் சொல்லி:**—பிராமணனுக்கு யாகஞ் செய்வது, யாகஞ் செய்விப்பது, வேதத்தை அத்தியயனம் செய்விப்பது, சொல்லிவைப்பது, கொடுப்பது, வாங்குவது ஆகிய ஆறுவகையான கர்மங்கள் விதிக்கப்பட்டன. மேற்சொல்லிய ஆறு கர்மங்களில் யாகஞ்செய்விப்பது, வேதத்தைச் சொல்லிக் கொடுப்பது, பிரதிக்கிரகம் ஆகிய இவைகள் ஜீவனத்திற்கு உபயோகமானவை. க்ஷத்திரியனுக்கு யாகஞ்செய்வித்தல், வேதத்தை உபதேசித்தல் ஆகிய இவைகள் ஜீவன தர்மங்கள். **ஆக்ஷேபம்:** க்ஷத்திரியனுக்கு யாஜனம், அத்தியாபனம் ஆகிய இவைகள் ஜீவன தர்மமென்று சொல்வது நியாயமல்ல. அவைகளை க்ஷத்திரியன் அனுஷ்டிக்கக்கூடாதென்று நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. தவிரவும் ஸ்ரீ ராமாயணத்தில் திரிசங்குவின் உபாக்கியானத்தில், "எந்த சதசில் க்ஷத்திரியன் யாகஞ் செய்விக்கிறானோ, சண்டாளன் யஜமானனோ அந்த யாக சதசில் தேவர்கள் எப்படி ஹவிஸைப் புசிப்பார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் யாகஞ் செய்விப்பது முதலியவை பிராமண தர்மமேயொழிய க்ஷத்திரியனுடையதல்ல. சில க்ஷத்ரியர்கள் வேதாந்தத்தைப் பிறருக்கு உபதேசித்ததாக உபாக்கியானங்களில் சொல்லப்பட்டிருந்தாலும் அவர்கள் ஆத்ம தத்துவத்தைச் சூதரைப்போல் உபதேசித்தவர்களேயொழிய சாங்கமாய் வேதத்தை ஸ்வரப்பிழையின்றித் தாங்கள் சொல்லி உடனே சிஷ்யனைச் சொல்லும்படி செய்விப்பதான அத்தியா

பனத்தை அனுஷ்டித்தவர்களல்லவென்று தாத்பரியம். சமா தாரம்:— வேறு ஜீவனத்திற்கு உபாயம் ஏற்படாத காலத்தில் இது ஆபத் தனமாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்று ஸ்ரீதராசாரியர் சொன்னார் வீரராகவீயத்தில், க்ஷத்திரியனுக்கு இவைகள் தர்மங்களே அல்ல; மூலத்திலிருக்கும் அப்ரதிக்ரஹ: என்ற பதத்திற்கு வாங்குவது, யாஜனம், அத்யாபனம் ஆகிய இவைகள் க்ஷத்திரியனுடைய தர்மங்கள் அல்லவென்றே தாத்பரியம். அவனுடைய ஜீவன தர்மம் அடுத்த சுலோகத்தால் கூறப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது, அந்த்யஜர்கள்:— வண்ணான், தோல் தைப்பவன், நடன், புருடன், மீன் பிடிப்பவன் [கைவர்த்தன்], வேடன், மேதன் ஆகிய இவர்கள் அந்த்யஜர்கள்; சண்டாளன் முதலியவர்கள் அந்தாவசாயிகள், தனக்குரிய:— பிறருடைய தர்மத்தை சாங்கமாக அனுஷ்டிப்பதைக் காட்டிலும் தனக்குரிய தர்மத்தைச் சாத்தியமான வரையில் அனுஷ்டிப்பதே மேலானது.

## அத்தியாயம் 12

### ஆசிரம தர்மம்

**1-16.** பிரம்மசாரியாக இருப்பவன் ஆசாரியனுடைய கிருகத்தில் வசித்து, இந்திரியங்களை அடக்கிக்கொண்டு, ஆசாரியனிடத்தில் மிகுந்த பிரீதிவைத்து, தாசன்போல் குருவுக்கு அனுகூலமானதையே செய்துகொண்டிருக்க வேண்டும். சாயங்காலத்திலும், விடியற்காலத்திலும் குரு, அக்கினி, சூரியன், சிறந்த தேவர்கள் ஆகிய இவர்களைப் பூஜிக்கவேண்டும். இரண்டு சந்தியா காலங்களிலும் மௌனமாகக் காயத்திரியை ஜபிக்கவேண்டும். ஆசாரியரால் அழைக்கப்பட்டால் மிகவும் வணக்கமாக அவர் சமீபம் செல்லவேண்டும். வேதத்தை அத்தியயனஞ் செய்யும்பொழுது ஆரம்பத்திலும், முடிவிலும் ஆசாரியனை நமஸ்கரிக்கவேண்டும். மேலும் மேகலை, மான்

தோல், வஸ்திரம், ஜடை, தண்டம், கமண்டலு, யக்ஞோப வீதம் ஆகிய இவைகளைத் தாங்கள் வர்ணத்திற்குச்சொல் லியபடி தரிக்கவேண்டும். பவித்திரத்தைக் கையில் போட் டுக்கொள்ளவேண்டும். சாயங்காலத்திலும், விடியற் காலத்திலும் பிட்சை வாங்கி, அதனைக் குருவினிடத்தில் தெரிவித்துச் 'சாப்பிடு' என்று அவர் உத்தரவு கொடுத் தால் அதனைப் புசிக்கவேண்டும். ஆசாரியனுடைய அனுமதி கிடைக்காவிடில் அன்றைய தினம் உபவாசம் இருக்கவேண்டும். நன்னடக்கை உள்ளவனுகவும், சொற்ப மாகப் புசிப்பவனும், சமர்த்தனும், சிரத்தையுள்ளவனும், இந்திரியங்களை ஜயித்தவனுமாக இருக்கவேண்டும். பின்னும் ஸ்திரீகளிடத்திலும், ஸ்திரீகளால் ஜயிக்கப் பட்டவர்களிடத்திலும் அதிகமாகப் பேசக்கூடாது. உப யோகமுள்ள வரையில் பேசவேண்டும். இந்திரியங்கள் சன்னியாசிகளின் மனத்தையும் அபகரிக்கின்றன. ஆன தால் பிரம்மசாரியானவன் ஸ்திரீ விஷயமான வார்த்தை யைப் பேசக்கூடாது. யௌவன வயதுள்ளவன் யுவதி களான ஆசாரியனுடைய ஸ்திரீகளைக்கொண்டு தலை வாருவது, எண்ணைத் தேய்ப்பது முதலியவைகளைச் செய்துகொள்ளக்கூடாது. ஸ்திரீயானவள் அக்கினிக்குச் சமானம்; புருஷன் நெய்க்குடத்திற்கு ஒப்பானவன். ஆனதால் ரகசியத்தில் தன்னுடைய பெண்ணுனலும் அவளுடன் பேசக்கூடாது. எண்ணெய் முதலானதைத் தேய்க்கும்படி செய்யக்கூடாது. மற்ற காலத்தில், உசித மாகப் பேசவேண்டும். ஜகத்தானது அசத்யமானலும் ஜீவன் தன் சுவரூபத்தை அறிந்து, தேகம் முதலியவை களை அநித்யமென்று தெரிந்துகொள்ளுகிறவரையில், 'நான், நீ, ஸ்திரீ, புருஷன்' என்ற பேதபுத்தி நிவர்த்தி யாகிறதில்லை. அந்த பேத புத்தியால் கெடுதலுண்டா கிறது. ஆனதால் மேற்சொல்லியபடி ஸ்திரீகளிடத்தில்

சம்பாஷணையை விட்டுவிடவேண்டும்'. மேற்சொல்லிய தர்மங்கள் யாவும் பிரம்மத்தை உபாசிப்பது முதலிய விரதமுள்ள சன்னியாசியாலும், கிருகஸ்தனலும் அனுஷ்டிக்கக்கூடியவை. ஆனல் கிருகஸ்தனல் குரு விருத்தியானது (ஸ்திரீகளின் சேர்க்கையில்லாமலிருப்பது) சில காலம் அனுஷ்டிக்கப்படும். ஏனென்றல், கிருகஸ்தன் ருது காலத்தில் ஸ்திரீயைச் சேரவேண்டியவனகையால் ருது காலந் தவிர மற்ற காலத்தில் மேற்சொல்லிய குரு விருத்தியை அநுஷ்டிப்பான். மேலும், பிரம்மசாரியாக இருப்பவன் சரீரத்தை ஸம்ஸ்கரித்துக்கொள்வது, எண்ணெய் தேய்த்துக்கொள்வது, ஸ்திரீ, சித்திரம், நல்ல ஆகாரம், மது, புஷ்பமாலை, சந்தனம் பூசிக்கொள்வது, அலங்காரஞ் செய்துகொள்வது ஆகிய இவைகளை உபயோகப்படுத்திக்கொள்ளக்கூடாது. இப்படி குரு குலத்தில் வசித்து, வேதத்தை அங்கங்களுடனும், உபநிஷத்துக்களுடனும் அத்யயனஞ் செய்து, அவைகளின் அர்த்தத்தைத் தன் பலத்திற்கும் தன் புத்திக்கும் தக்கபடி தெரிந்துகொண்டு, குருவிற்குத் தட்சிணை கொடுத்து, அவருடைய உத்தரவின்மீது கிருகஸ்தாச்சிரமத்தையாவது அடையலாம்; அல்லது வனத்திற்காவது போகலாம்; சன்யாசமாவது செய்துகொள்ளலாம்; அல்லது பிரம்மசரியத்திலேயே இருக்கலாம். அக்கினிடத்திலும், குருவினிடத்திலும், ஆத்மாவிடத்திலும், சகல பிராணிகளிடத்திலும் பகவான் பிரவேசித்திருப்பதாகவும் நினைக்கவேண்டும். பிரம்மசாரியானலும், வானப்பிரஸ்தனலும், சன்னியாசியானலும், கிருகஸ்தனனலும் தெரிந்துகொள்ளவேண்டியதைத் தெரிந்துகொண்டு சுவதர்மத்தை அநுஷ்டித்தால் பரமாத்மாவையே அடைவான்.

*17–32.* வானப்ரஸ்தனுடைய தர்மங்களைச் சொல்லுகிறோம். அவைகளை அனுஷ்டித்த முனியானவன் மகர்லோகத்தை யடைவான். மேலும், அவன் உழுது விதைத்துப் பலித்த நெல் முதலிய அன்னத்தைப் புசிக்கலாகாது. நன்றாய்ப் பழுப்பதற்கு முன் பழங்களையும் புசிக்கலாது. அக்கினியில் பக்குவமானதையும், அபக்குவமானதையும் புசிக்கக்கூடாது. வெயிலால் பக்குவமான பழம் முதலியவைகளைப் புசிக்கவேண்டும். நீவாரம் முதலிய காட்டு தானியங்களைச் சரு, புரோடாசம் ஆகிய இவைகளுக்கு உபயோகப்படுத்தவேண்டும். புதிதாகப் பழம் முதலியவைகள் சம்பாதிக்கப்பட்டபொழுது முந்தி சம்பாதிக்கப்பட்டதைச் செலவழிக்கவேண்டும். பின்னும் பனி, காற்று, அக்கினி, மழை, வெயில் ஆகிய இவைகளைச் சகித்திருக்கவேண்டும். அக்கினியைச் சமரட்சிப்பதற்காகவே ஆசிரமம், மலையின் குகை ஆகிய இவைகளை ஆசிரயிக்கவேண்டும். மேலும் தலைமயிர்கள், நகம், மீசை, கமண்டலு, மான் தோல், மரவுரி ஆகிய இவைகளைத் தரித்து, பன்னிரண்டு வருஷங்கள் அல்லது எட்டு வருஷங்கள், அல்லது நான்கு வருஷங்கள், அல்லது இரண்டு வருஷங்கள், அல்லது ஒரு வருஷமாவது வனத்தில் சஞ்சரித்து, தவஞ் செய்வதில் நேரிடும் கஷ்டங்களைச் சகித்திருக்கவேண்டும். எப்பொழுது வியாதியாலும், கிழத்தனத்தாலும் கர்மங்களைச் செய்ய முடியாதவனாக இருக்கிறானோ, அப்பொழுது கர்மங்களை விட்டு அனசனம் [ஆகாரமில்லாமலிருப்பது] முதலிய விரதங்களை அனுஷ்டிக்கவேண்டும். எப்படி என்றால், ஆத்மாவில் அக்கினியை ஆரோபித்துக்கொண்டு 'நான், என்னுடையது' என்ற அகங்காரத்தை விட்டுச் சரீரத்தை ஆகாசம் முதலிய காரணங்களில் லயப்படுத்தவேண்டும். ஆகாயத்தில் ஆகாசத்தையும், வாயுவில் மூச்சுக்களையும்,

தேஜஸில் உஷ்ணத்தையும், ஜலத்தில் ரத்தத்தையும், சிலேஷ்மத்தைப் பூமியிலும், பாக்கியான பாகத்தை அதனுடைய காரணத்திலும் லயப்படுத்தவேண்டும். வாக்கை அதன் விஷயத்துடன் அக்கினியிலும், சில்பத்தையும் கைகளையும் இந்திரனிடத்திலும், நடையையும் கால்களையும் விஷ்ணுவிடத்திலும், ரதியையும் [ஆசை] உபஸ்தத்தையும் பிரஜாபதியினிடத்திலும், மிருத்யுவினிடத்தில் உத்சர்க்கத்தையும் வாயுவையும், திக்குகளிடத்தில் சப்தத்தையும் ச்ரோத்ரத்தையும், வாயுவினிடத்தில் ஸ்பர்சத்தையும் த்வக் இந்திரியத்தையும், தேஜஸில் ரூபத்தையும் சக்ஷுஸையும், ஜலத்தில் ரசனேந்திரியத்தையும் பிரசேதசையும், பூமியில் வாசனையையும், கிராணேந்திரியத்தையும் லயப்படுத்தவேண்டும். சங்கற்பங்களையும் மனத்தையும் சந்திரனிடத்திலும், ஞானத்தையும் புத்தியையும் பரமாத்மாவினிடத்திலும், அகங்காரத்தையும் கர்மங்களையும் ருத்திரனிடத்திலும், சைதன்யத்துடன் சித்தத்தை க்ஷேத்திரக்ஞனிடத்திலும், குணங்களுடன்கூடிய க்ஷேத்திரக்ஞனைப் பரப்பிரம்மனிடத்திலும் லயப்படுத்தவேண்டும். மேலும், ஜலத்தில் பூமியையும், ஜலத்தைத் தேஜஸிலும், தேஜஸை வாயுவிலும், வாயுவை ஆகாசத்திலும், ஆகாசத்தை அகங்காரத்திலும், அதனை மகத்தத்துவத்திலும், அதனை அவ்யக்தமென்ற பிரதானத்திலும், அதனை அக்ஷரமாகிய பரமாத்மாவினிடத்திலும், லயப்படுத்தி, ஆத்மாவை அக்ஷர சுரூபியாகவும் சித்சுரூபியாகவும் தெரிந்துகொண்டு, பேதபுத்தியற்றவனாகி, கட்டைகளை எரித்த அக்கினிபோல் தானாகச் சாந்தியை அடையவேண்டும்.

## நோட்டு

**மேகலை:—** முஞ்சிப்புல்லால் செய்யப்பட்ட **அரைநாண்.**
**ஜடை:—** தலை வாரிக்கொள்வது முதலியவை செய்யாமலிருப்பது.

வர்ணத்திற்கு:— ப்ராம்மணன் பலாச தண்டம் வைத்துக்கொள்ள வேண்டியது. க்ஷத்திரியன் அசுவ தண்டத்தைத் தரிக்கவேண்டு மென்றபடி. ஸ்திரீ விஷயமான:— எந்த ஆசிரமிகளானாலும் ஸ்திரீ விஷயமான வார்த்தையை அடக்குவது நியாயம். அதிலும், கிருகஸ்தன் தவிர மற்றவர்கள் பெண்களுடைய கதையை ஒரு பொழுதும் பேசக்கூடாது. குரு விருத்தி:— பெரிதான விருத்தி யென்று தாத்பரியம். ஸ்திரீகளின் புணர்ச்சியில்லாமலிருப்பதே மேற்சொல்லிய விருத்தி. அப்படியிருப்பது மிகவும் அரிதான தாகையால் அது பெரிதான விருத்தி எனப்படுகிறது. பிரவேசித்திருப்பதாக:— "அதனைச் சிருஷ்டித்து, அதில் பிரவேசித்தா" என்ற சுருதிப்படி உண்மையில் பிரவேசிக்காதவரானாலும் பிரவேசித்தவர்போல் ஜகத்தைச் சேஷ்டிக்கச்செய்பவர். நமேமயீ:- க்ஷௌரம் செய்துகொள்ளாமல் தீட்சை செய்துகொள்ளவும். ஆகாரத்தையும்:— தேகத்திலிருக்கும் துவாரங்களை. வாக்கை:—ல லிங்க சரீர ரூபமாகிய அத்யாத்மம் முதலியவைகளின் லயம் காண்பிக்கப்படுகிறது. ஜலத்தில்:— விகாரமுள்ள ஜீவனுக்கு விகாரமற்றவனிடத்தில் எப்படி லயம் பொருந்துமென்றால் காரணங்களான சகல உபாதிகளின் லயத்தினால் என்று அறிய வேண்டும்.

# அத்தியாயம் 13

## யதியின் தர்மம்

முன் அத்தியாயத்தில் சொல்லியபடி வனத்தில் வசித்துப் பின்னும் தர்மத்தை யனுஷ்டிக்கச் சக்தியுள்ளவனாக இருந்தால் சரீரத்தைத் தவிர மற்றவைகளை விட்டு, தேகத்தில் மாத்திரம் அபிமானத்துடன் ஒவ்வொரு நாள் ஒவ்வொரு கிராமத்தில் வசிக்கிறதென்ற விதியை அநுஷ்டிக்கவேண்டும். வஸ்திரம் உடுத்திக்கொள்ள விரும்புவானாகில் கௌபீனத்தை மறைப்பதற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு வஸ்திரத்தை அபேட்சிக்கவேண்டும்.

சன்யாச மந்திரத்தை யுச்சரித்து எல்லாவற்றையும் விட்டு விட்டபடியால் அவைகளைத் திரும்பவும் கிரகிக்கலாகாது. ஆனால் காஷாயம், தண்டம் இவைகளை மட்டில் தரிக்கலாம். ஆபத்துக் காலத்தில் மற்றவைகளை அங்கீகரிக்கலாம். பிக்ஷான்னத்தால் ஜீவித்துத் தானொருவனாகவே, ஆத்மா ராமனாகச் சஞ்சரிக்கவேண்டும். ஒரே இடத்தில் நியதமாக வசிக்கக்கூடாது. சகல பிராணிகளிடத்திலும் சிநேக முள்ளவனாகி, சாந்தனாகி, நாராயணனையே ஆசிரயித்து, காரியகாரணங்களுக்கு மேலானவரும், நாசமற்றவருமான பரமாத்மாவிடத்தில் இந்த ஜகத்து வசிப்பதாகவும் ஜகத்தைப் பரமாத்ம சுரூபமாகவும், நினைக்கவேண்டும். தூங்கி விழிப்பதற்கு முந்திய காலத்தில் தமோ குணம், விட்சேபம் ஆகிய இவைகளில்லாததனால் சுத்தமாக இருக்கும் ஆத்மசுரூபத்தைப் பரப்பிரம்மம் என்று தெரிந்துகொள்ளவேண்டும். ஆனதால் பந்தம், மோட்சம் ஆகிய இவைகள் மாயையால் ஏற்பட்டவைகளேயொழிய உண்மையிலில்லை. நிச்சயமாக நேரக்கூடிய மரணத்தையாவது, அஸ்திரமான ஜீவிதத்தையாவது விரும்ப வேண்டாம். பிராணிகளுக்கு உற்பத்தி, நாசம் ஆகிய இவைகளையுண்டுபண்ணும் காலத்தை எதிர்பார்த்திருக்க வேண்டும். அனாத்மபரமான சாஸ்திரங்களை நம்பக் கூடாது. வித்தையை விருத்திக்கு உபயோகப்படுத்தக் கூடாது. விதண்டா வாதம் முதலிய தர்க்கத்தையும் விட்டுவிடவேண்டும். நிர்ப்பந்தமாக ஒரு பட்சத்தை ஆசிரயிக்கக்கூடாது. பலவகையான கிரந்தங்களை அப்யசிக்கவேண்டாம். வியாக்யானத்தை உபயோகிக்கக் கூடாது. மடம் முதலிய வியாபாரங்களில் பிரவர்த்திக்கக் கூடாது. சாந்தனும், சமமான சித்தமுள்ளவனும், மகாத்மாவுமான சன்யாசிக்குப் பெரும்பாலும் ஆசிரம தர்மங்களில்லை. [ஞானம் உண்டாகிறவரையில் பஹூ-

தகன் முதலிய அடையாளத்தையும், சித்தசுத்திக்காக யம நியமங்களை அனுஷ்டித்துக்கொண்டே ஞானத்திற்காக யத்தனம் செய்யவேண்டும்.] ஞானம் வந்த பிறகு அந்த அடையாளங்களை அஞ்ஞர்களைக் காப்பாற்றுவதற்காக வைத்துக்கொண்டாலும் வைத்துக்கொள்ளலாம் அல்லது விட்டுவிடலாம். ஆத்மாநுசந்தானஞ் செய்பவன் வித்துவானனாலும் பைத்தியங்கொண்டவன் போலும், சிறுவன்போலும், ஊமையன்போலும் இருப்பான். தன்னுடைய அடையாளத்தை வெளியில் காண்பிக்கமாட்டான். தேகத்தைவிட ஆத்மா வேறானது என்று தெரிந்துகொள்வான். மேலும், பிரகலாதருக்கும் அஜகர [மலைப் பாம்பு] விரதமுள்ள சன்னியாசிக்கும் ஏற்பட்ட ஸம்வாதத்தை மேற்சொல்லிய விஷயத்தில் உதாரணமாகச் சொல்லுகிறேன்.

12-19. பகவானுடைய கிருபையை அடைந்தவராகிய பிரகலாதர் லோகத்தின் தத்துவத்தை அறிய வேண்டி, சில மந்திரிகளுடன் லோக சஞ்சாரஞ் செய்து வரும்பொழுது ஸஹ்ய பர்வதத்தின் தாழ்வரையில் காவிரி நதியின் கரையில், பூமியில் படுத்திருக்கும் ஒரு புருஷனைக் கண்டார். அந்தப் புருஷனுடைய சரீரமானது அழுக்குள்ளதாக இருந்தபடியால் அவருடைய இயற்கையான தேஜஸ் மறைந்திருந்தது; அந்தப் புருஷன் தன்னுடைய கர்மத்தாலாவது, சுரூபத்தாலாவது, வாக்கினாலாவது வர்ணம், ஆசிரமம் இதற்குரிய அடையாளத்தினாலாவது இன்னரென்று ஜனங்களால் அறியமுடியாதவராக இருந்தார். அவரைக் கண்ட மகா பாகவதராகிய பிரகலாதர் நமஸ்கரித்து அவரை நோக்கி, "உலகத்தில் முயற்சியுள்ளவர்களுக்குப் பணம் கிடைக்கும்; பணமுள்ளவர்களுக்கு நல்ல போகங்கள் கிடைக்கும். உமக்கு முயற்சி

யும், பணமும் இல்லையென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். போகமுள்ளவர்களுடைய சரீரந்தான் பருத்து இருக்கும். உம்முடைய சரீரமோ பருத்திருக்கிறது. ஒரு வித முயற்சியுமில்லாமல் படுத்திருக்கும் உமக்குப் பணமாவது போகமாவது இல்லையே? அப்படியிருக்க, சரீரம் இளைக்காமலிருப்பதற்கு என்ன காரணம்? சொல்லக் கூடியதானால் அதனைச் சொல்லவேண்டும். மேலும், நீர் வித்துவானாக இருக்கிறீர்; சமர்த்தர்; விசித்திரமான கதைகளைச் சொல்பவர்; எல்லாரிடத்திலும் சம புத்தியுள்ளவர்; கர்மங்களைச் செய்யும் லோகத்தைப் பார்த்துக் கொண்டு உதாசீனராக இருக்கிறீர். அதன் காரணம் என்ன?" என்று கேட்டார்.

20—47. அந்தப் பிரகலாதருடைய வாக்கிய அமிருதத்திற்குக் கட்டுப்பட்டுப் பிராம்மணர் அவரை நோக்கிச் சிரித்துக்கொண்டு, "ஓ அசுரர்களுக்குட் சிறந்தவரே! உம்முடைய இருதயத்தில் சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணன் எப்பொழுதும் வசிக்கிறார். அவரிடத்தில் நீர் சுத்தமான பக்தி செய்வதால் சூரியன் இருட்டை நாசஞ் செய்வது போல இருதயத்தின் மலத்தைப் போக்கடிக்கிறீர்; பெரியோர்களுக்குச் சம்மதர்; ஆனதுபற்றிப் பிரவிருத்தி, நிவிருத்தி ஆகிய இவைகளின் பயன் நன்றாக உமக்குத் தெரியும். ஆனாலும் உம்மால் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு நான் குரு முகமாகத் தெரிந்துகொண்டபடி பதில் சொல்லுகிறேன். தன்னைச் சுத்தி செய்துகொள்ள விரும்பிய புருஷன் உம்முடன் பேசவேண்டும். விஷயங்களில் ஆசைப்படுவதால் ஜன்மங்களுண்டாகின்றன. உசிதமான காமங்களை அனுபவித்தாலும் அந்த ஆசை பூர்த்தியாகிறதில்லை. அப்படிப்பட்ட, விஷய ஆசையால் பலவகையான கர்மங்களைச் செய்து பலவகையான ஜன்மங்களை அடைந்தேன். பின்பு தெய்வச்செயலாக இந்த மனுஷ்ய ஜன்மத்தை

அடைந்தேன். இது சுவர்க்கத்தையும், மோட்சத்தை யும், பசு பட்சிகளின் ஜன்மத்தையும், திரும்பவும் மனித ஜன்மத்தையும் கொடுக்கக்கூடியது (தர்மத்தை அநுஷ்டித்தால் சுவர்க்கம் கிடைக்கும். எல்லா ஆசைகளையும் ஒழித்தால் மோட்சம் கிடைக்கும். பாபஞ் செய்தால் தாழ்ந்த ஜன்மத்தை அடைகிறான். புண்ணியம், பாபம் இரண்டையும் அநுஷ்டித்தால் திரும்பவும் மனிதனாகப் பிறப்பான் என்று தாத்பரியம்). இந்த மனித ஜன்மத்திலும் ஸ்திரீகளும் புருஷர்களும் சுகத்தை அடைவதற்கும், துக்கத்தை நிவர்த்தித்துக்கொள்வதற்கும் கர்மங்களைச் செயகிறார்கள். ஆனால் சுகத்தையடைகிறதுமில்லை. துக்கத்தை அடைகிறார்கள். ஆனதால் இதைக் கண்டு கர்மங்களை யநுஷ்டியாமல் நிவிருத்தியடைந்தேன. மேலும், ஆத்மாவின் சுரூபமே சுகமெனப்படுகிறது. சகல ஆசைகளையும் ஒழிப்பதே அதனுடைய சரீரம் அதற்காக வேறு விதமாக முயற்சிக்கவேண்டாமென்று கருத்து). போகங்கள் யாவும் மனோமாத்திரத்தால் உண்டானவை: சாசுவதங்களல்ல என்று தெரிந்துகொண்டு பிராரப்த கர்மத்தால் ஏற்படும் போகங்களை யநுபவித்துக்கொண்டு படுத்திருக்கிறேன். இம்மாதிரியான புருஷார்த்தம் தன்னிடத்திலேயே இருப்பதைப் புருஷன் மறந்து, த்வைதம்(பேதம் இல்லாமலிருக்கையிலும் பலவகையான கோரமான ஜன்மங்களை அடைகிறான். ஜலத்தில் விருப்பமுள்ளவன் பாசி; கோரை முதலியவைகளால் மறைக்கப்பட்ட ஜலத்தைவிட்டுக் கானலை ஜலமென்று நினைத்து ஓடுவதுபோல் ஆத்ம சுரூபத்தை அறிய விரும்பியவன் தன்னிடத்தில் இருக்கும் நிஜ சுரூபத்தை விட்டு மற்றவிடத்தில் தேடுகிறான். கர்மங்களால் ஏற்பட்டிருக்கும் தேகத்தாலும், இந்திரியங்களாலும் தான் சுகத்தைச் சம்பாதித்துக் கொள்ளவும் புருஷன் முயற்சிக்கிறான். ஆனால் இவன் கர்மத்திற்குச் சுவாதீனப்பட்டவன். இவன் செய்யும் கர்

மங்கள் யாவும் பயனற்றவைகளாக ஆகின்றன. மேலும், புருஷனை ஆத்யாத்மிகம் முதலிய துக்கங்கள் விடுகிற தில்லை. அப்படிப்பட்ட புருஷன் மிக்க சிரமப்பட்டுப் பணத்தைச் சம்பாதித்தாலும், அதனாலுண்டாகும் காமங்களால் என்ன சுகத்தை அடையபோகிறான்? இந்திரியங்களை ஜயிக்காதவர்களும், லுப்தர்களுமான பணக்காரர்கள் எங்கும் பயந்து நித்திரையில்லாமல் கஷ்டப்படுவதைப் பார்த்திருக்கிறேன். பணத்தைப் பிராணனைப் பாவித்தவர்கள் அரசனிடத்திலும், திருடனிடத்திலும், சத்துருவினிடத்திலும், பந்துக்களிடத்திலும், பசுக்களிடத்திலும, பட்சிகளிடத்திலும், யாசகர்களிடத்திலும், காலத்தினிடத்திலும், தன்னிடத்திலும் எப்பொழுதும் பயப்படுகிறார்கள். மேலும், துக்கம், மோகம், பயம், கோபம், ஆசை, சிரமம் முதலியவைகள் பணத்தாலும் பிராணனாலும் உண்டாகின்றன. ஆனதால் வித்வான் அவைகளில் ஆசைப்படக்கூடாது. உலகத்தில் தேனீக்களும் மலைப்பாம்புகளும் மேலான ஆசாரியர்கள். இவைகளுடைய குணங்களைப் பார்த்தே நான் வைராக்கியத்தையும், சந்தோஷத்தையும் அடைந்தேன். அநேக புஷ்பங்களிலிருந்து தேனீக்களால் சம்பாதித்துச் சேர்த்து வைக்கப்பட்ட தேனை மற்றொருவன் அவைகளைக் கொன்று அபகரிப்பதுபோலக் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பொருளை மற்றவன் அபகரிப்பது வழக்கமாயிருப்பதால் பணத்தில் ஆசைப்படக்கூடாதென்பதைத் தேனீக்களின் சரிதத்தால் தெரிந்துகொண்டு வைராக்கியத்தை அடைந்தேன். பின்னும், மகா சர்ப்பம்போல எவ்வித முயற்சியையும் செய்யாமல் தெய்வச்செயலாகக் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷத்தை அடைகிறேன். அப்படி ஒன்றும் கிடைக்காவிடில் வெகுநாள் ஆகாரமில்லாமல் தைரியத்துடன் படுத்துக்கொண்டிருக்கிறேன். சிலவேளை அற்பமான ஆகாரத்தையும், சில சமயம் அதிகமாகவும்,

சில வேளை நல்ல அன்னத்தையும், சில வேளை கெட்ட ஆகாரத்தையும், சில சமயம் விசேஷ குணமுள்ள அன்னத்தையும், சில சமயம் குணமற்றதையும், சிரத்தையுடன் கொடுக்கப்பட்டதையும், அனாதரவாகக் கொடுக்கப்பட்டதையும் புசிக்கிறேன். சில சமயம் இரவும் பகலும் தெய்வச்செயலாகக் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷிக்கிறேன். மேலும் வெண்பட்டாலும், கந்தையாலும், மரவுரியாலும், மற்றவையாலும் எது பிரயத்தனமின்றிக் கிடைக்குமோ அதனை உடுத்திக் கொள்ளுகிறேன். தெய்வாதீனமாகக் கிடைத்ததைக் கொண்டு சந்தோஷத்தை அடைகிறேன். சில சமயம் தரையின் மீதும், சில சமயம் திருணம், இலை, கல், சாம்பல் ஆகிய இவைகளின் மீதும் படுக்கிறேன். பின்னும், ஜனங்கள் என்னைத் தூக்கி மாடியின்மீது போட்டாலும், கட்டில் முதலிய படுக்கையில் கிடத்தினாலும் அதில் படுக்கிறேன். சிலசமயம் பிறரால் ஸ்நானஞ்செய்விக்கப்பட்டு அலங்கரிக்கப்படுகிறேன். சில சமயம் ரதத்தின்மீதும், யானையின் மீதும், குதிரையின் மீதும் ஏற்றி வைக்கப்பட்டுச் சஞ்சரிக்கிறேன். இயற்கையில் விஷம சுபாவமுள்ள ஜனங்களை நான் நிந்திக்கவுமில்லை; தோத்திரம் செய்யவுமில்லை. அவர்களுக்கு க்ஷேமமுண்டாகவேண்டும் என்றும், ஸ்ரீ மகாவிஷ்ணுவிடத்தில் பக்திசெய்யவேண்டுமென்றும் விரும்புகிறேன். ஜாதி முதலிய பேதத்தைச் சித்தத்திலும், அதனைப் பிரம்மத்திற்குக் காரணமான மனத்திலும், அதனைச் சாத்விக அகங்காரத்திலும், அதனை மூலப் பிரகிருதியிலும் லயப்படுத்தவேண்டும். பின்னும் மனனஞ் செய்பவனும், தத்துவத்தை அறிந்தவனும், முயற்சியற்றவனுமாகி அந்த மாயையை ஆத்மானுபவத்தில் லயப்படுத்தவேண்டும். பின்பு பரமாத்ம சுரூபத்திலிருந்து சேஷ்டையற்றவனாகி ஒழிவடையவேண்டும். என்று

டைய சரிதத்தைச் சொன்னேன். இது மிகவும் ரகசிய மானது; அஞ்ஞர்களுக்கு லோக விரோதமாகவும், சாஸ் திர விரோதமாகவும் தோன்றும்; வித்வான்களுக்கு சம்மத மானது; நீர் பகவானிடத்தில் பிரீதியுள்ளவராகையால் சொன்னேன்'' என்றார்.

48. அசுர சிரேஷ்டராகிய பிரகலாதர் பரமஹம்சர் களுடைய தர்மத்தை அந்தப் பிராமண முகமாகக் கேட்டு, அவரைப் பூஜித்து விடைபெற்றுத் தமது இருப் பிடஞ் சென்றார்.

---

## அத்தியாயம் 14

### கிருஹஸ்த தர்மம்

தர்மபுத்திரர் நாரதரை நோக்கி, "ஓ தேவரிஷியே! என்னைப் போன்ற கிருகஸ்தன் எந்தத் தர்மத்தை யனுஷ் டித்தால் மோட்சத்தை அடைவான்? அதனைச் சொல்ல வேண்டும்'' என்று கேட்டார்.

2—27. அதனைக் கேட்ட நாரதர் தர்மபுத்திரரை நோக்கி, "ஓ மகாராஜ! நன்றாகக் கேட்டீர். உலகங்களை அனுக்கிரகிப்பதற்காகவே இதனைக் கேட்டீர். கர்மங்களை எப்படி அனுஷ்டித்தால் மோட்சம் கிடைக்குமோ அதன் தத்துவத்தைச் சொல்லுகிறேன். கிருகத்திலிருப்பவன் அந்த ஆசிரமத்திற்குரிய கர்மங்களை அனுஷ்டித்து அதனை ஸ்ரீ வாசுதேவரிடம் சமர்ப்பித்துப் பெரியோர்களை உபாசிக்கவேண்டும். சாந்தர்களான ஜனங்களுடன் சேர்ந்து ஒவ்வொரு காலத்திலும் சிரத்தையுடன் பகவா னுடைய அவதாரக் கதைகளை அடிக்கடி கேட்கவேண் டும். சொப்பனத்தில் கண்ட புத்திரன் முதலியவர்களு டைய சினேகத்தை விழித்துக்கொண்ட பின் எப்படி விட்டுவிடுகிறானோ அப்படி சாதுக்களுடைய சங்கத்தால்

அஞ்ஞானமாகிய தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு களத்திரம் முதலியவைகளில் அபிமானத்தை விட்டுவிட வேண்டும். வித்துவானாக இருப்பவன் தேகத்திலும், வீட்டிலும் எவ்வளவு உபயோகமோ அவ்வளவு வரையில் அபிமானத்தை அடைந்து, வெளியில் ஆசைப்பட்டவன் போல அபிநயஞ் செய்துகொண்டு உண்மையில் ஆசைப் படாமல், ஜனங்கள் நடுவில் தன்னுடைய பௌருஷத் தைக் காண்பிக்கவேண்டும். ஞாதிகள், தாய், தகப்பன் கள், புத்திரர்கள், சகோதரர்கள், மற்றவர்கள் ஆகிய இவர்கள் எதனைச் சொல்லுகிறார்களோ, எதனை விரும்பு கிறார்களோ, அதனை ஆக்கிரகமில்லாமல் அனுமோதிக்க வேண்டும். மழை முதலியவையால் விருத்தியான தானி யம், சுவர்ணம் முதலிய பூமியிலுண்டானவை, காரணமன் னியில் கிடைத்தவை ஆகிய தெய்வத்தால் கிடைத்த மேற் சொல்லிய பணத்தை உபயோகித்துக் கர்மங்களை அனுஷ் டிக்கவேண்டும். ஜீவியத்திற்கு எவ்வளவு பணம் வேண்டு மோ, அதற்குமேல் விரும்பலாகாது; அப்படி விரும்பி னல் அவன் திருடன். அவனைச் சிக்ஷிக்கவேண்டும். [தெய்வச் செயலாகப் பணம் அதிகமாகக் கிடைத்தாலும் அதில் அதிக அபிமானம் வைக்கக்கூடாது.] மேலும், மிருகம், ஒட்டகம், கழுதை, பூனை, எலி, சர்ப்பம், தேனீ ஆகிய இவைகளைத் தன்னைப்போலவும் புத்திரனைப்போல வும் பார்க்கவேண்டும். அவைகளுக்கும் அவர்களுக்கும் பேதமேது? கிருகஸ்தனயிருப்பவனும் தர்மம், அர்த்தம், காமம் ஆகிய இவைகளை அடைவதற்கு அதிகமாக முயல வேண்டாம். தெய்வச் செயலாகக் கிடைத்ததை, தேச காலத்திற்குத் தக்கபடி யனுபவிக்கவேண்டும். உலகத்தில் 'ஸ்திரீ எனக்கே சிசுரூஷை செய்யக்கூடியவள்' என்ற ஆக்கிரகம் மனிதர்களுக்கு இருக்கிறது. அப்படிப்பட்ட களத்திரத்தை நாய், பதிதர்கள், 'அம்பட்டன் முதலிய அந்தாவசாயிகள் ஆகிய எல்லா அதிதிகளுக்கும் சிசு

ருஷை செய்யும்படி செய்யவேண்டும். பின்னும் எந்த ஸ்திரீ விஷயத்தில் தன்னுடைய பிராணனையும் விடுகிருனே, எவளுக்காகத் தகப்பன், ஆசாரியன் ஆகிய இவர்களைக்கூடக் கொல்லுகிருனே, அவளிடத்தில் ஆசை வைக்கக்கூடாது. அவளால் ஜயிக்கப்படாதவன் ஈசுவரனேயாம். இந்தச் சரீரமானது முடிவில் புழுவாகவாவது, அமேத்தியமாகவாவது, சாம்பலாகவாவது ஆகிறது. ஆனதால் அந்தச் சரீரத்தைப் போஷிப்பதற்காகக் களத்திரத்தினிடம் ஆசை வைக்கலாகாது. ஆகாயத்தையும் மறைக்கக்கூடியது ஆத்மா. இதற்கும் சரீரத்திற்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது? பஞ்ச மகா யக்ஞங்களை அனுஷ்டித்து, பாக்கியான அன்னத்தால் தன் சரீரத்தைக் காப்பாற்றவேண்டும். பாக்கியான சொத்தில் 'தன்னுடையது' என்ற அபிமானம் வைக்கக் கூடாது. இப்படி இருப்பவன் மகான்களுடைய கதியை அடைவான். மேலும் தேவ யக்ஞம், ரிஷி யக்ஞம், மனுஷ்ய யக்ஞம், பூத யக்ஞம், பிதிரு யக்ஞம் இவைகளை அனுஷ்டிப்பதால் அந்தர்யாமியாகிய பகவானை ஒவ்வொரு நாளும் தனியே பூஜிக்கவேண்டும். தனக்கு யாகத்தை அனுஷ்டிக்கத்தக்க பணம், வயது முதலியவைகளிருக்குமானல் சர்வேசுவரனை அக்னிஹோத்திரத்தால் பூஜிக்கலாம். அதற்காகப் பிறரை நிர்ப்பந்திக்கலாகாது. பிராம்மணர்களுக்கு அன்னங்கொடுத்துப் பூஜிப்பதால் பகவான் சந்தோஷப்படுவதுபோல் யாகத்தை அனுஷ்டித்துக் கொடுக்கப்படும் ஹவிஸினுல் சந்தோஷப்படுகிறதில்லை. ஆனதால் பிராம்மணர்கள், தேவர்கள், மனிதர்கள் முதலியவர்களுக்கு இஷ்டமானதைக் கொடுத்துத் தக்கபடி பூஜிப்பதால் அந்தர்யாமியாகிய பகவானைப் பூஜிப்பதாக ஆகிறது. பின்னும் பிதா, மாதா, அவர்களுடைய பந்துக்கள் ஆகிய இவர்களை உத்தேசித்து மகா

ளய சிராத்தத்தைப் பாத்ரபத மாதத்தில் (புரட்டாசி) தன் சக்திக்குத் தக்கபடி செய்யவேண்டும். இரண்டு அயனங்கள் (ஆடிமாதப் பிறப்பு, தைமாதப் பிறப்பு) விஷுவம் (சித்திரை, ஐப்பசி இவைகளின் பிறப்பு), வியதீபாதம், சந்திர கிரகணம், சூரிய கிரகணம், துவாதசி, சிரவணம், அட்சயதிருதியை, கார்த்திகை மாத சுக்லபட்ச நவமிதிதி, மார்கழி முதலிய நான்கு மாதத்திய கிருஷ்ண பட்சத்திய அஷ்டமி திதிகள், ஹேமந்த ருது, சிசிர ருது, மாசி மாதத்திய சுக்லபட்ச ஸப்தமி, மக நட்சத்திரமும் பௌர்ணமியும் சேர்ந்த தினம், அந்தந்த மாதத்திய நட்சத்திரங்கள் ராகையுடனாவது, அநுமதியுடனாவது சேரும் தினம், அநுஷம், சிரவணம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி ஆகிய நட்சத்திரங் கூடிய துவாதசி தினம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி இந்த நட்சத்திரங்கள் கூடிய ஏகாதசி தினம், ஜன்ம நட்சத்திரங் கூடிய தினம், சிரவணங்கூடிய தினம் ஆகிய இந்தக் காலங்களில் சிராத்தஞ்செய்து பிதிருக்களைத் திருப்திசெய்துவைக்க வேண்டும். மேற்சொல்லிய காலங்கள் மனிதனுக்கு க்ஷேமத்தை விருத்திசெய்யக்கூடிய காலங்கள். ஆனதால் அந்தக் காலங்களில் பின்சொல்லப்படும் ஸ்நானம் முதலிய க்ஷேம சாதனமாகிய தர்மங்களை அநுஷ்டிக்க வேண்டும். அப்படி அநுஷ்டித்தால் ஆயுள் பயனுள்ளதாகும். மேற்சொல்லிய புண்ணிய காலங்களில் ஸ்நானம், ஜபம், ஹோமம், தவம், தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜிப்பது, பிதிருக்களையும், தேவர்களையும், மனிதர்களையும், பூதங்களையும் உத்தேசித்துக் கொடுத்த தானம் ஆகிய இவைகள் குறைவற்ற பலனைக் கொடுக்கின்றன. மேலும், களத்திரத்திற்குச் செய்யும் பும்ஸவனம் முதலிய காலம், புத்திரனுக்குச் செய்யும் ஜாதகர்ம காலம், தான் யாகதீட்சை செய்துகொள்ளும் காலம், இறந்தவர்களுக்கு

உத்தரக்கிரியை செய்யும் காலம், சிராத்த தினம் ஆகிய காலங்களில் மேற்சொல்லிய ஸ்நானம், ஜபம் முதலியவைகளை அநுஷ்டித்தால் விசேஷ பலன் கிடைக்கும். (க்ஷேம சாதனமான காலங்கள் சொல்லப்பட்டன.)

28—34. தர்மம் முதலிய சிரேயஸைக் கொடுக்கும் தேசங்களைச் சொல்லுகிறேன். நல்ல பாத்திரம் எவ்விடத்தில் கிடைக்கிறதோ அதுவே புண்ணியஸ்தலம். மேலும் சராங்கள், அசரங்களடங்கிய பகவானுடைய பிம்பம் எவ்விடத்திலிருக்கிறதோ, எவ்விடத்தில் தவம், வித்தை, தயை ஆகிய இவைகளுள்ள பிராம்மணர்கள் வசிக்கிறார்களோ, எந்த ஸ்தலத்தில் பகவானுடைய பூஜை நடக்கிறதோ, அந்த ஸ்தலம் க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியது. எந்த ஸ்தலத்தில் கங்கை முதலிய மகா நதிகள் இருப்பதாகவும எவ்விடத்தில் புஷ்கரம் முதலிய புண்ணிய தீர்த்தங்களிருக்கின்றனவென்றும், எந்த க்ஷேத்திரங்களில் பெரியோர்கள் வசிப்பதாகவும் புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறதோ அவைகள் மேலானவைகள். மேலும், குருக்ஷேத்திரம், கயாசுரனுடைய தலை விழுந்த இடம், ப்ரயாகம (கங்கையும் யமுனையும் சேருகிற தலம்), புலகாசிரமம் (சாலக்கிராம க்ஷேத்திரம்), நைமிசாரண்ணியம், பால்குனம் (கயையிலிருக்கும் பல்குனீ நதி), ஸ்ரீ ராமசேது, பிரபாசம், குசஸ்தலீ (துவாரகை), காசீ, மதுபுரீ, பம்பை, பிந்துசரஸ், பதரிகாசிரமம், அலகநந்தையின் கரை, சீதை இராமன் இவர்கள் வசித்த சித்திர கூடம் முதலியவை, சகல குல பர்வதங்கள், மகேந்திரம், மலயம் முதலிய மலைகள், பகவானுடைய பிரதிபிம்பமுள்ள மற்ற ஸ்தலங்கள் ஆகிய இவைகள் புண்ணிய ஸ்தலங்கள். க்ஷேமத்தை விரும்பிய புருஷன் மேற்சொல்லிய புண்ணிய ஸ்தலங்களைச் சேவிக்கவேண்டும். அந்த ஸ்தலங்களில் செய்யப்படும் புண்ணியம் ஆயிர மடங்கு பலனைக் கொடுக்

கிறது. (புண்யஸ்தலங்கள் காட்டப்பட்டன; இனி பாத்திரம் குறிப்பிடப்படுகிறது.)

சராசரங்களடங்கிய உலகமானது ஸ்ரீமந் நாராயண சுரூபமாக இருப்பதால் அந்தப் பகவானே ஸத்பாத்திரம் என்று வித்வான்கள் சொல்லுகிருர்கள். (பகவானைப் பூஜித்தால் எல்லாரையும் பூஜித்ததாகும்.) ஓ மகாராஜ! தேவர்களும், பெரியோர்களான மகரிஷிகளும், சனகாதிகளும் இருக்க ஸ்ரீ பகவானுக்கே ராஜசூய யாகத்தில் அக்ரபூஜை செய்தீரல்லவா? சகல ஜீவராசிகள் அடங்கிய அண்டகோசமாகிய பெரியதான மரத்திற்கு ஸ்ரீ பகவான் மூலமாக இருக்கிருர். வேரில் ஜலம் கொட்டினுல் அதன் கிளைகளுக்குப் புஷ்டி ஏற்படுவதுபோல மூலமாகிய பகவானைப் பூஜித்தால் மற்ற எல்லாரையும் பூஜித்ததாகிறது. தேவ சரீரம், மகரிஷி சரீரம், பசுக்கள் முதலிய சரீரம், மனித சரீரம் ஆகிய புரங்கள் இந்தப் பகவானுல் சிருஷ்டிக்கப்பட்டன. அவைகளில் ஜீவசுரூபியாக வசிப்பதால் பகவானுக்குப் புருஷன் என்று பெயர். மேலும், அந்தப் பகவான் மேற் சொல்லிய சரீரங்களில் தம்முடைய ஞானம் முதலிய சக்திகளைச் சிலவிடங்களில் குறைவாகவும், சிலவிடங்களில் அதிகமாகவும் வெளிப்படுத்திக்கொண்டிருக்கிருர். அதனுல் மகாபுருஷனே பாத்திரம். எவர்களிடத்தில் ஞான சக்தி குறைவாகக் காணப்படுகிறதோ, அவர்கள் அதம பாத்திரம். ஓ மகாராஜ! மனிதர்கள் ஒவ்வொருவரும் பிறரை நிந்திக்கும் சுபாவமுள்ளவர்களாக இருப்பதைக் கண்டு வித்வான்கள் திரேதா முதலிய யுகங்களில் பகவானுடைய பிரதிமையைப் பூஜிக்கவேண்டுமென்ற விதியை ஏற்படுத்தினுர்கள். பின்பு சிலர் சிரத்தையுடன் அந்தப் பிரதிமையில் பகவானைப் பாவித்துப் பூஜிக்கிருர்கள். ஆனுலும் பகவத் சுரூபிகளான புருஷர்களிடத்தில்

த்வேஷ புத்தியுடன் பிரதிமைகளைப் பூஜிப்பது பயனைக் கொடுக்கிறதில்லை. ஓ ராஜசிரேஷ்ட! பிராம்மணன் தவம், வித்தை கிடைத்ததால் சந்தோஷப்படுகிறது ஆகிய இவைகளுள்ளவனாக இருப்பதாலும், ஸ்ரீ பகவானுடைய சரீரமாகிய வேதத்தைத் தரிப்பதாலும், எல்லாப் புருஷர்களிலும் உத்தம பாத்திரமாகிறான். ஓ மகாராஜ! தம்முடைய பாதத்தில் ஒட்டிய தூளியால் மூவுலகத்தையும் பரிசுத்தப்படுத்தும் ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கும் பிராமணர்கள் தெய்வமாகிறார்கள். மற்றவர்களுக்குத் தெய்வமென்பதில் என்ன சந்தேகம்?" என்றார்.

## நோட்டு

**பஞ்ச மகா யக்ஞம்**—தேவ யக்ஞம், பூத யக்ஞம், பிதிரு யக்ஞம், மனித யக்ஞம், ரிஷி யக்ஞம். **ஹேமந்த ருது**—மார்கழி, தை இந்த மாதங்கள். **சிசிர ருது**—மாசி, பங்குனி மாதங்கள். **அந்தந்த மாதத்திய**—சைத்ரம், வைசாகம் என்ற வியவகாரத்திற்குக் காரணமான சித்திரை, விசாகம், கேட்டை, பூராடம், சிரவணம் முதலிய நட்சத்திரங்கள். **ராகை**—பூர்ண சந்திரனுள்ள பூர்ணிமா திதி. **அநுமதி**—கலை குறைந்த சந்திரனுள்ளது.

---

# அத்தியாயம் 15

## மோட்ச தர்மங்களுடைய சுருக்கம்

"ஓ மகாராஜ! சில பிராம்மணர்கள் கர்மங்களையே அனுஷ்டிப்பவர்கள்; சிலர் தவத்தை அனுஷ்டிப்பவர்கள்; சிலர் வேதாத்யயனத்தையே செய்பவர்கள்; மற்றுஞ் சிலர் பிரவசனத்தையே செய்பவர்கள் (பிறருக்குச் சொல்வது); இன்னுஞ் சிலர் ஞான நிஷ்டையுள்ளவர்கள்; பின்னுஞ் சிலர் யோகநிஷ்டையுள்ளவர்கள். தேவதையை யுத்தேசித்தும், பிதிருக்களை யுத்தேசித்துஞ் செய்யும் கர்மங்களில் ஞானநிஷ்டனாகிய பிராம்மணனை

உபயோகிக்கவேண்டும். அதனால் அளவற்ற பலன் கிடைக்கும். அப்படிப்பட்ட பிராமணன் கிடைக்காத காலத்தில் மற்றவர்களைத் தக்கபடி உபயோகிக்கலாம். விச்வேதேவ ஸ்தானத்திலும், பிதிரு ஸ்தானத்திலும் இரண்டு பிராம்மணர்களையாவது, ஒவ்வொரு பிராம் மணனையாவது நிமந்திரித்துப் போசனஞ் செயவிக்க வேண்டும். மிகவும் பணமுள்ளவனானாலும், மேற்சொல்லிய படி சிராத்தத்தில் பிராம்மணரை நிமந்திரிக்கவேண்டு மேயல்லால் விஸ்தாரஞ்செய்யக்கூடாது. பந்துக் களை யுத்தேசித்து விஸ்தாரமாக நடத்தினால் தேசம், காலம், உசிதமான சிரத்தை, திரவியம், பாத்திரம், பூஜைக்கு வேண்டிய சாமக்ரி ஆகிய இவைகள் நன்றாகச் சேருகிறதில்லை. மேற்சொல்லிய புண்ய ஸ்தலங்களில், புண்ய காலத்தில் சிராத்தத்தை அனுஷ்டிக்கவேண்டு மானால் காட்டிலுண்டான நீவாரம் முதலிய அன்னமானு லும் உபயோகிக்கலாம். விஷ்ணுவை உத்தேசித்து நல்ல பாத்திரத்தில் கொடுக்கப்படும் அன்னமானது இஷ்ட மான பலனைக் கொடுக்கும். அது அட்சயமாகும். மேலும், அன்னத்தைத் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பூதங் களுக்கும், பிதிருக்களுக்கும், தனக்கும், பந்துக்களுக்கும் பிரித்துக்கொடுக்கவேண்டும். மேற்சொல்லியவர்களை ஸ்ரீமகாவிஷ்ணுவாகப் பாவிக்கவேண்டும். சிராத்தத்தில் மாமிசத்தை உபயோகிக்கக்கூடாது; தானும் மாமி சத்தைப் புசிக்கலாகாது. நீவாரம் முதலிய அன்னமானு லும் உபயோகிக்கலாம். அதனால் பிதிருக்கள் திருப்தி அடைவதுபோலப் பசு இம்சை செய்து மாமிசத்தை உபயோகிப்பதால் திருப்தியடைகிறதில்லை. மனத்தா லும், வாக்கினாலும், சரீரத்தாலும் பிராணிகளுக்குத் துரோகம் செய்யாமலிருப்பதே மேலான தர்மம். நல்ல தர்மத்தைச் செய்ய விரும்பியவர்களுக்கு இதைவிட

மேலானது ஒன்றுமில்லை. யக்ஞத்தின் உண்மையை அறிந்த ஞானிகளான சிலர் கர்ம யக்ஞங்களை அனுஷ்டியாமல் ஞானத்தால் பிரகாசிக்கும் மனத்தை அடக்குவதாகிய அக்கினியில் ஹோமம் செய்கிறார்கள். (புருஷவித்தையில் சொல்லியபடி ஞான யக்ஞத்தை அனுஷ்டிக்கிறார்.) ஆத்ம தத்துவத்தை அறியாதவர்களும், தன் பிராணனைத் திருப்தி செய்பவர்களும், தயவில்லாதவர்களுமான புருஷர்கள் திரவிய யக்ஞத்தை அனுஷ்டிப்பவர்களைப் பார்த்துப் பிராணிகளைப் போலப் பயப்படுகிறார்கள். ஆனதால் தர்மத்தை அறிந்தவன் தெய்வச் செயலாகக் கிடைத்த நீவாரம் முதலிய அன்னத்தாலாவது நித்தியம் சந்தோஷமடைந்து, நித்திய நைமித்திக கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டும். மேலும், விதர்மம், ஆபாஸ தர்மம், உப தர்மம், சல தர்மம் என்று அதர்ம சாகைகள் ஐந்து இருக்கின்றன. அவைகளைத் தர்மத்தை அறிந்தவன் அதர்மத்தைப் போல விட்டுவிடவேண்டும். தர்மமென்று செய்யப்பட்டாலும், அதனால் சுதர்மத்திற்குக் கெடுதி நேரிடுமானால் அது அதர்மமேயாம். அதனையே விதர்மமென்று சொல்லுகிறார்கள். பிறருக்கு விதிக்கப்பட்ட தர்மத்தை யனுஷ்டிப்பது பர தர்மம். வேத விரோதமான பாஷண்ட தர்மமும், ஜனங்களை வஞ்சித்துப் பணத்தை அபகரிப்பதற்காகச் செய்யப்படும் காரியமும் உபதர்மம் எனப்படுகிறது. சல தர்மமென்பது அர்த்தச்சலம், சப்தச்சலமென்று இருவகையானது. பசுவைத் தானஞ்செய்ய வேண்டுமென்ற விதி வாக்கியத்திலிருக்கும் பசுவென்ற சப்தத்திற்குக் கிழப் பசு என்று அர்த்தங்கொள்வது அர்த்தச்சலம். சப்தத்தைப் பேதித்து அர்த்தங்கொள்வது சப்தசசலம். ஸ்மிருதிகளில் சொல்லிய ஆசிரமங்களை விட்டுத் தன்னுடைய இஷ்டப்படி ஆசிரமத்தைக் கற்பித்துக்கொள்வது ஆபாஸ தர்மம். தன்னுடைய

வர்ணாசிரமத்திற்குரிய தர்மத்தை அனுஷ்டிப்பதே மனத்தைச் சுத்தப்படுத்தும். தரித்திரன் தர்மத்தை அனுஷ்டிப்பதற்காகவும் பணத்தை விரும்பக்கூடாது. தேக போஷணைக்காகவும தனத்தைச் சம்பாதிக்க முயற்சிக்க வேண்டாம். மலைப் பாம்புபோல ஆசையில்லாமல் முயற்சி அற்றவனாக இருப்பவனுக்கு அந்த வைராக்கியமே சுகத்தைக் கொடுக்கின்றது. அதிக ஆசையில்லாமல், கிடைத்தைக்கொண்டு சந்தோஷத்தை அடைந்து, ஆத்மாராமனாக இருப்பவனுக்கு எவ்வளவு சுகம் கிடைக்கிறதோ அவ்வளவு சுகம் அதிக ஆசையால் பணம் சம்பாதிக்க வேண்டி ஒவ்வொரு திக்குகளிலும் ஓடுகிற புருஷனுக்குக் கிடைக்கிறதில்லை. காலில் பாதரட்சை தரித்தவன் கற்கள் முட்களுள்ள தலத்தில் சுகமாக நடப்பதுபோல் தெய்வச்செயலாகக் கிடைத்ததைக்கொண்டு எபபொழுதும் சந்தோஷப்படும் புருஷன் எவ்விடம் சென்றாலும் சுகத்தை அடைவான். ஓ மகாராஜ! கிடைத்ததால் சந்தோஷப்படும் புருஷன் ஜலத்தைப் புசித்தும் சுகத்தை அடைவான். நாக்கு முதலிய இந்திரியங்களைத் திருப்தி செய்ய விரும்பி, அதனால் தீனனாகிய புருஷன் நாய்போல அலைகிறான். கிடைத்ததில் சந்தோஷத்தை அடையாமல் இந்திரியங்களுக்கு வசப்பட்டு அந்த பிராம்மணனுக்குப் பிரமதேஜஸ், சாஸ்திரம் படித்ததாலுண்டாகிய ஞானம், அனசனம் முதலிய தவம், [illegible] ஆகிய இவைகள் கெட்டுப்போகின்றன. பசி [illegible] த்தால் அன்னத்தைப் புசிக்கவேண்டும்; தீர்த்தத் [illegible] தப் பானஞ் செய்யவேண்டும் என்ற விருப்பமுள்ள [illegible] அன்னம், தீர்த்தம இவைகளைப் புசிப்பதால் அந்த [illegible] ச நிவர்த்தியாகிறது. கோபத்தை அடைந்தவ [illegible] தன பயன் கிடைத்தால் கோபம் தணிந்துவிடும். [illegible] பேராசை கொண்டவனுக்குச் சகல திக்குகளை [illegible] ப் பூமியை

அடைந்தாலும் அந்த ஆசை சாந்தமாகிறதில்லை. சாஸ்திரங்களைப் படித்தவர்களும், அநேக லௌகிக வைதிக நியாயங்களை அறிந்தவர்களும், சம்சயத்தை நிவர்த்திசெய்யக்கூடியவர்களும் சபைக்கு அதிபதிகளுமாகிய வெகு ஜனங்கள் அதிக ஆசையால் நரகத்தை அடைந்தார்கள். சங்கற்பமற்றவனாக இருப்பதால் காமத்தையும், காமத்தை விடுவதனால் கோபத்தையும், பணம் அனர்த்தத்தைக் கொடுக்கக்கூடியதென்று தெரிந்துகொள்வதால் லோபத்தையும் (எவ்வளவு கிடைத்தாலும் சந்தோஷப்படாமலிருப்பது), ஆத்ம தத்துவத்தை விசாரிப்பதால் பயத்தையும் ஜயிக்கவேண்டும். பிறந்தவனுக்கு மரணம் நிச்சயமாலதென்று தெரிந்துகொள்வதால் சோக மோகங்களை விலக்கவேண்டும். சாதுக்களுடைய சங்கத்தால் டம்பத்தை ஒழிக்கவேண்டும். மௌனவிரதத்தால் யோகத்திற்கு இடையூறுகளான வீணான வார்த்தைகளை விலக்கவேண்டும். தேகம் முதலியவைகளில் ஆசையையொழிப்பதால் பிராணி இம்சை நீங்கும். பிராணிகளிடத்தில் கிருபையுள்ளவனாக இருந்தால் அவைகளால் நேரிடும் துக்கம் விலகும். நம்மால் அடையக்கூடியது, அடையப்பட்டது, இதற்காக நம்மால் செய்யவேண்டிய தொன்றுமில்லை யென்று மனத்தைச் சமாதானப்படுத்திக்கொண்டால் ஆதி தெய்விகமான துக்கம் நிவர்த்தியாகிறது. பிராணாயாமம் முதலிய யோகத்தால் சரீர துக்கம் நசிக்கிறது. சாத்விகமான ஆகாரத்தைப் புசித்தால் தூக்கத்தை ஜயிக்கலாம். ஸத்வ குணத்தை விருத்திசெய்தால் ரஜோ குணத்தையும், தமோ குணத்தையும் ஜயிக்கலாம். சாந்தியால் அந்தக்கரணத்தை ஜயிக்கவேண்டும். மேற்சொல்லிய காமம் முதலிய எல்லாவற்றையும் குரு பக்தியைக்கொண்டு சுகமாக ஜயிக்கலாம். ஞானதீபத்தைக் கொடுப்பவரும், பகவத்

சுரூபியுமாகிய ஆசாரியனை எவன் மனிதனென்று நினைக்கிருனோ அவனால் செய்யப்படும் சகல கர்மங்களும், காமம் முதலியவைகளை ஜயிப்பதும் யானை ஸ்நானஞ் செய்வது போல் வியர்த்தமானதேயாம். சிறந்த யோகிகளால் தேடக்கூடிய பாதாரவிந்தமுள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவானை ஜனங்கள் மனிதன் என்று நினைத்தாலும், உண்மையில் அவர் பகவானல்லவா? அதுபோல ஆசாரியனை அவருடைய புத்திரன் முதலியவர்கள் மனிதனாக நினைத்திருந்தாலும் நாம் ஈசுவரனாகவே பாவிக்கவேண்டும். இந்திரியங்களை அடக்கிக் காமம் முதலியவைகளை ஜயித்து, ஆத்மத்தியானஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்யாவிடில் அவன் படித்த சகல சாஸ்திரங்களும் அவனுக்கு, உபயோகப்படுகிறதில்லை; கிருஷி முதலியவைகளை அனுஷ்டித்தால் அதன் பயன் கிடைக்கிறதேயொழிய அவை மோட்சத்தைக் கொடுக்கிறதில்லை; சம்சாரத்தையே கொடுக்கின்றன. அதுபோல, பகிர்முகனாக இருப்பவன் செய்யும் யாகம் முதலிய தர்மங்கள் மோட்சத்திற்குச் சாதகமாகிறதில்லை. எவன் மனத்தை அடக்க விரும்புகிருனோ, அவன் ஆசைகளை ஒழித்து சன்னியாசஞ் செய்துகொள்ளவேண்டும். மேலும், அவன் பிறருடைய சேர்க்கையின்றி ஏகாந்தத்தில் வாசஞ் செய்யவேண்டும். பிக்ஷான்னத்தை மிதமாகப் புசிக்கவேண்டும். மேடுபள்ளமில்லாமல் சமமாக இருக்கும் சுத்தமான ஸ்தலத்தில் அசைவற்றதும், சுககரமுமான ஆசனத்தைப் போட்டு, அதிலுட்கார்ந்து ரிஜுவான சரீரமுள்ளவனாகிப் பிரணவத்தை உச்சரிக்கவேண்டும். பின்னும், மனது ஆசைகளை விடுகிறவரையில் பிராணனையும், அபானனையும், பூரகம், கும்பகம், ரேசகம் ஆகிய இவைகளால் சரீரத்தில் அடக்கி, மூக்கின் நுனியைப் பார்த்திருக்கவேண்டும். காமமுள்ள மன

மான்து எதன் வழியாக வெளியில் வந்து அலேகிறதோ, அதிலிருந்து அதனை இருதயத்தில் நிலேநிறுத்தவேண்டும். இப்படி பிராணுயாமத்தைச் செய்துவரும் யதியின் சித்தமானது சொற்ப காலத்தில் சாந்தியை அடையும். எரிப்பதற்குக் கட்டையில்லாவிடில் அக்கினி அணைகிற தில்லேயா? காமம் முதலியவைகளுடைய சம்பந்தமற்று, விருத்திகளற்று பிரம்ம சுகத்தை அடைந்ததான சித்தமானது திரும்பவும் விட்சேபத்தைத அடைகிறதில்லே. எவன் சன்னியாசஞ் செய்துகொண்டு தர்மம், அர்த்தம், காமம் இவைகளுக்காகக் கிருஹஸ்தாசிரமத்தை அடைகிறனே, அவன் வாந்திசெய்ததைப் புசிப்பவனுக்குச் சமானான்; வெட்கமில்லாதவன். [கிருஹஸ்த தர்மத்தை விட்டவன் திரும்பவும அதனை விரும்புவாறு என்றல் திருஷ்டாந்தம் காட்டப்படுகிறது.] எவர்கள் தங்கள் தேகத்தை அனுத்மாவென்றும், அநித்தியமென்றும் புழுவாகவும், சாம்பலாகவும், அமேத்யமாகவும் ஆகப்போகிற தென்றும் விசாரித்துத் தெரிந்துகொண்டார்களோ அவர்ளே திரும்பவும் அந்தச் சரீரத்தைத் தங்களுடைய தென்று சிலாகிக்கிருர்கள். கிருஹஸ்தன் கர்மங்களை விட்டுவிடுவது, பிரமமசாரி அவன் விரதத்தை அநுஷ்டியாமலிருப்பது, வானப்ரஸ்தன் கிராமத்தில் வசிப்பது, சன்னியாசி இந்திரியங்களுக்கு வசப்படுவது ஆகிய இவைகள் ஆசிரமத்தைக் கெடுக்கக்கூடியவைகள். ஆதலால் ஆசிரமம் சித்திக்கிறதில்லே. தேவனுடைய மாயையால் மூடர்களான அவர்களிடத்தில் கிருபை வைத்து(மேலான கதியை அடையக்கூடியவர்கள் தாழ்ந்த கதியை அடைகிருர்களே என்று கருத்து) உதாசீனனுக இருக்கவேண்டும். தன்னைப் பிரம்மமென்று தெரிந்துகொண்டால் சகல வாசனைகளும் நசிக்கின்றன. அப்பொழுது எதனை விரும்புவான்? எதற்காகச் சரீரத்தைப் போஷிப்பான? (ஆத்ம

க்கு ருக்கு இந்திரிய சாபல்யம் உண்டாகிறதில்லை என்று தாத்பரியம்.) மேலும், சரீரத்தை ரதமாகவும், இந்திரியங்களைக் குதிரைகளாகவும், இந்திரியங்களுக்கு அதிபதியான மனதைக் கடிவாளமாகவும், சப்தம் முதலிய விஷயங்களைப் போகவேண்டிய ஸ்தலங்களாகவும், புத்தியைச் சாரதியாகவும் சித்தத்தைப் பந்துரமாகவும் ஈசுவரன் ஏற்படுத்தியிருக்கிறார். மேலும், அந்த ரதத்திற்குப் பத்துப் பிராணன்களே அச்சாக இருக்கின்றன. தர்மமும், அதர்மமும் சக்கரங்கள். ஜீவனே அந்த ரதத்திலிருக்கும் சாரதி. பிரணவமே வில். சுத்த ஜீவனே பாணம். பரப்பிம்மமே லட்சியம். (வில்லில் பாணத்தைப் பூட்டி, அதனைக் குறியில் தள்ளுவதுபோலப் பிரணவத்தைக் கொண்டு ஜீவனைப் பிரம்மத்தினிடத்தில் தள்ளவேண்டும் என்று கருத்து.) ராகம், (ஆசை) துவேஷம், லோபம் (பேராசை), சோகம், மோகம், பயம், மதம், மானம், அவமானம், அசூயை, மாயை, ஹிம்சை, மாத்ஸரியம், ரஜஸ், பிரமாதம், நித்திரை, பசி முதலியவை சத்துருக்கள். இவைகளை ஜயிக்கவேண்டும். சிலர் ரஜோ குணம், தமோ குணம் ஆகிய இவைகளைச் சுபாவமாகக் கொண்டவர்கள். சிலர் சத்வ குணப் பிரகிருதிகள். (சத்வ குணத்தால் பிறருக்கு உபகாரஞ் செய்யவேண்டுமென்ற பிரவிருத்தி உண்டாவதால் அதனையும் ஜயிக்கவேண்டுமென்பது கருத்து.) இந்த மனித சரீரத்தை எப்பொழுது தன் வசப்படுத்திக்கொள்வாரோ, அப்பொழுது மகான்களுடைய பாதத்தைச் சேவித்ததால் கூர்மையான ஞானமாகிய கத்தியை அடைந்து, பகவானுடைய சகாயத்தால் சத்துருக்களை நாசஞ்செய்து, சாந்தனாகி, தன்னுடைய ஆனந்தத்தால் சந்தோஷப்பட்டு, தேகம் முதலியவைகளில் அபிமானத்தை விட்டுவிடுவான். அப்படி இல்லாவிடில் அசத்துக்களான இந்திரியங்கள் முதலியவைகள் பிரமத்தனாகிய ஆத்மாவைக் கெட்ட மார்க்கத்தில் கொண்டு

போய் விஷயங்களாகிய திருடர்களிடத்தில் ஒப்புவிக்கின்றன. அந்தத் திருடர்கள் இந்த ஆத்மாவைக் குதிரைகளுடனும், சாரதியுடனும் மிருத்யு பயமுள்ள ஸம்ஸாரமாகிய பாழுங் கிணற்றில் தள்ளுகிறார்கள்.

47—49. வைதிகமான கர்மமானது பிரவிருத்தம், நிவிருத்தமென்று இருவகையுள்ளது. பிரவிருத்த தர்மத்தால் சம்சாரத்தை அடைகிறான்; நிவிருத்த தர்மத்தை அனுஷ்டித்தால் மோட்சத்தை அடைகிறான். சியேனயாகம் முதலியவைகளும், காம்யமான அக்னிஹோத்ரம், தர்சம், பூர்ணமாசம், சாதுர்மாஸ்யம், பசு யாகம், சோம யாகம் ஆகிய இவைகள் சாந்தியைக் கொடுக்கக்கூடியவைகளல்ல. பின்னும் ஹுதம் (வைச்வதேவம்), பிரஹுதம் (பலிகரணம்) முதலிய இஷ்ட தர்மங்களும், தேவாலயங் கட்டுவது, கிணறு வெட்டுவது, தோட்டம் போடுவது முதலிய பூர்த்த தர்மங்களும் பிரவிருத்தங்களாகும். அவை பலனை யுத்தேசித்துச் செய்யப்படுமானல் சம்சாரத்தைக் கொடுக்கின்றன.

50—52. நிஷேகம் முதல் மசானம் வரையிலுள்ள சம்ஸ்காரங்களால் சம்ஸ்கிருதனும், இஷ்டாபூர்த்தம் முதலிய தர்மங்களை அனுஷ்டித்தவனுமாகிய பிராம்மணன் மரித்த பிறகு பூத சூட்சுமங்களுடன் புகைக்கு அபிமானியாகிய தேவதையை அடைந்து, அதன் பிறகு கிருஷ்ண பட்சத்திற்கு அபிமானியான தேவதையை அடைந்து, அதன்பின் அமிருத மயனை சந்திரனை அடைகிறான். அவ்விடத்தில் புண்ணிய பலனை யனுபவித்துப் புண்யம் குறைந்தவுடன், தர்சத்திற்கு அபிமானியான தேவதையை அடைந்து, ஓஷதி, கொடிகள் இவைகளை அடைந்து, அன்னத்தையடைந்து, ரேதஸ்ஸாகித் திரும்பவும் ஜன்மத்தை அடைகிறான். இது பித்ருயானமெனப் படுகிறது (தட்சிண மார்க்கம்).

53—60. நிவிருத்தி தர்மத்தை யநுஷ்டித்து, அர்ச்சிராதி மார்க்கமாகச் செல்லுகிறவர்கள் ஞானேந்திரியங்களில் கர்மேந்திரிய வியாபாரங்களையும், அந்த ஞானேந்திரியங்களை சங்கல்பம் முதலியவைகளுள்ள மனத்திலும், வைகாரிகமான மனத்தை வாக்கிலும், வாக்கை அட்சரக்கூட்டத்திலும், அதனை ஓங்காரத்திலும், அதனை நாதத்திலும், அதனை ரூத்ராத்மாவிடத்திலும், அதனைப் பிரம்மத்தினிடத்திலும் லயப்படுத்தவேண்டும். மேலும் அவட்சம், அக்கினி, சூரியன், பகல், பிராஹ்ணம், சுக்ல பட்சம், பூர்ணிமா, உத்தராயணம் ஆகிய இவைகளுக்கு அபிமானிகளான தேவதைகளை அடைந்து, பிரம்மலோகத்தை அடைகிறார்கள். ஸ்தூலத்தை உபாதியாகவுடைய விசுவன் ஸ்தூலத்தைச் சூட்சுமத்தில் லயப்படுத்தித் தைஜஸ் கிறான். அவனுக்கு சூட்சும தேகம் உபாதியாக இருக்கிறது. அவன் தன்னுடைய உபாதியான சூட்சுமத்தைக் காரணத்தில் லயப்படுத்திப்பிராக்ஞனுகிறான். அவனுக்குக் காரண சரீரம் உபாதியாக இருக்கிறது. அவன் தன்னுடைய உபாதியான காரணம் சாட்சியாக எங்குமிருப்பதால் சுரூபத்தில் லயப்படுத்தி, துரியனுகிறான். இப்படி ஆத்மா சுத்தனுகிறான். மேற்சொல்லிய கிரமமாக ஒவ்வொன்றை அடைந்து, செல்லும் மார்க்கத்தைத் தேவயானம் என்று சொல்லுகிறார்கள். ஆத்ம யாகஞ் செய்த சாந்தனுக இருப்பவன் ஆத்ம சுரூபத்தை அடைந்து திரும்புகிறதில்லை. இப்படி பிதிருயானம், தேவயானம் என்று இரண்டு மார்க்கங்கள் வேதத்தால் ஏற்படுத்தப்பட்டன. ஞானியானவன் சரீரமுள்ளவனுலும் இவ் விஷயத்தில் மோகிக்கமாட்டான். ஏனென்றால், சரீரத்திற்கு முந்தியும், சரீரம் போன பிறகும் எவர் சத்தியமாக இருக்கிறாரோ, எவர் உள்ளிலும் வெளியிலுமிருக்கிறாரோ, எவர் மேலானதும், தாழ்ந்ததும், ஞானமாகவும், அறியக்

கூடியதாகவும் சப்தமாகவும், அதன் அர்த்தமாகவும், தாமஸாகவும், ஜோதியாகவும் இருக்கிறுரோ, அந்தப் பகவான் தாமே யென்று ஞானியானவன் பார்ப்பதால் அவனுக்கு மோகமேது? அப்படியானுல் தன்னைவிட வேருக அவனுக்கு ஏன் தோன்றுகிறதென்ருல் யுக்தி முதலியவைகளால் பிரதிபிம்பம் பிம்பத்தைக் காட்டிலும் வேறல்லவென்று ஏற்பட்டாலும் வேருகத் தோற்றுவது போல இந்திரிய விஷயங்கள் தோன்றுகின்றன. ஆனுலும் சத்தியங்களல்ல. மேலும், பிருதிவி முதலிய ஐந்து பூதங்களின் சேர்க்கையால் சரீரம் ஏற்பட்டிருந்தாலும் அந்தச் சரீரம் இன்ன பூதத்தின் விகாரமென்ருவது, அவைகளுடைய கூட்டமென்ருவது சொல்ல முடியவில்லை. ஆனதால் சத்தியமல்ல. பின்னும், மகா பூதங்கள் அதன் அவயவங்களால் உண்டானவைகள் என்று சொல்ல வேண்டும். அவயவமுள்ளதான மகா பூதமே சத்தியமல்லவென்ருல் அதன் அவயவங்கள் எப்படி சத்தியங்களாகும்? அவித்தையின் விகற்பத்தால் அவன் தான் இவன் என்ற பிரமம் உண்டாகிறது. அவித்தை உள்ள வரையில் அந்தப் பிரமமிருக்கும். சொப்பனத்தில் ஜாக்ரதவஸ்தையும், சொப்பனமும் காணப்படுவதுபோல விதிநிஷேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. பாவாத்வைதம், கிரியாத்வைதம், திரவ்யாத்வைதம ஆகிய இவைகளை சுய அநுபவத்தால் ஆலோசித்து, ஞானியானவன் மூன்று சொப்பனங்களையும் நிவர்த்தித்துக் கொள்ளுகிருன். வஸ்திரம், நூல் இவைகள் எப்படி ஒன்ருே, அப்படி காரியம் காரணம் ஆகிய இரண்டும் ஒன்று என்று யோசிப்பது பாவாத்வைதம் எனப்படுகிறது. பரமாத்மாவின் கிரியா சக்திகளே கர்மங்களைச் செய்யும்படி தூண்டுகின்றன. ஆனதால் அவைகளைப் பரமாத்மாவிடம் சமர்ப்பிக்க வேண்டும் என்று மனத்தாலும், வாக்கினுலும், சரீரத்

தாலும், கர்மங்களைப் பிரம்மார்ப்பணம் செய்வதே கிரியாத்வைதம் எனப்படுகிறது. தன்னுடைய களத்திரம், புத்திரன் முதலியவர்களுடைய சரீரங்கள் பஞ்ச பூதங்களால் ஏற்பட்டவைகளாகையால் அவைகளை அனுபவிப்பவன் பரமாத்மா ஒருவனாகையால் அவைகளுடைய அர்த்த காமங்கள் பேதமற்றவைகள் என்று யோசிப்பது திரவியாத்வைதம் என்று சொல்லப்படுகிறது. எவனுக்கு எந்தத் திரவியம் நிஷித்தமல்லவோ, எதனிடமிருந்து, எதனால் கிடைத்ததோ அதனால் அதற்குத் தக்கபடி கர்மங்களைச் செய்யவேண்டும். ஆபத்துக்காலத்தில் இது விதியல்ல. ஓ மகாராஜ! மேற்சொல்லிய கர்மங்களையும், வேதத்தில் சொல்லிய மற்ற கர்மங்களையும் அனுஷ்டித்து ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பக்திசெய்யும் கிருகஸ்தனும் பகவானை அடைவான். ஓ தர்மபுத்திரரே! இந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய பாதாரவிந்தத்தைச் சேவித்ததால் நிவர்த்திக்கொள்ள முடியாத ஆபத்துக்களை நிவர்த்தித்துக்கொண்டு, திக் கஜங்களையும் ஜயித்து, ராஜசூயத்தை அநுஷ்டித்தீர். ஆனதால் அந்தப் பகவானிடத்தில் எல்லாரும் பக்தி செய்யவேண்டும்.

70—78. "முன் கல்பத்தில் நான் உப பர்ஹணன் என்ற கந்தர்வனாக இருந்தேன்; என்னுடைய ரூபத்தாலும், சௌகுமாரியத்தாலும் நல்வாசனையாலும், பிரியமான பார்வையாலும், ஸ்திரீகள் என்னிடம் பிரியமடைந்திருந்தார்கள். ஆனதால் மிகவும் மதமுள்ளவனாகவும், விஷயத்தில் மிகுந்த ஆசையுள்ளவனாகியும் இருந்தேன். ஒருகால் பிரஜாபதிகள் கந்தர்வர்களையும், அப்ஸரஸுக்களையும் அழைத்து, பகவானுடைய கதையைக் கானம் செய்யும்படி ஆஞ்ஞாபித்தார்கள். அதனை நான் தெரிந்துகொண்டு, ஸ்திரீகளுடன் அவ்விடஞ் சென்று கானம் செய்தேன். அப்பொழுது பிரஜாபதிகள் தங்களை நான்

அலட்சியஞ் செய்ததாக நினைத்து, சூத்ர ஜன்மத்தை அடையும்படி சபித்தார்கள். அதனால் ஐசுவரியமற்றவனாகி, பிராம்மண கிருகத்தில் வேலைசெய்துகொண்டிருந்த சூத்திர ஸ்திரீயினிடத்தில் பிறந்தேன். அந்த ஜன்மத்தில் சாதுக்களுக்குச் சிசுரூஷை செய்ததாலும், அவர்களுடைய சங்கத்தாலும் பிரம்மதேவருக்குப் புத்திரனாக ஜனித்தேன். பாபத்தைப் போக்கக்கூடிய கிருஹஸ்த தர்மத்தைச் சொன்னேன். கிருஹஸ்தன் அதனை யநுஷ்டித்தால் சன்னியாசிகளுடைய கதியை அடைவான். உம்முடைய கிருஹத்தில் பரப்பிரம்மமானது மநுஷ்ய சரீரத்துடன் வசிப்பதால் மகரிஷிகள் வருகிறார்கள். ஆனதால் நீர் மிகவும் பாக்கியசாலி. பெரியோர்களால் தேடப்பட்டதும், பரமசுக ரூபமுமான அந்தப் பரப்பிரம்மமானது உமக்குப் பிரியனாகவும், ஹிதனாகவும், அம்மான்சேயாகவும், ஏவின வேலையைச்செய்கிறதாகவும், குருவாகவும் இருக்கிறதல்லவா? இவருடைய சுரூபமானது பரமசிவன், பிரம்மதேவர் முதலியவர்களாலும் குறிப்பிடமுடியவில்லை. அப்படிப்பட்ட இந்தப் பகவான் மௌனத்தாலும் உபசமத்தாலும், பக்தியாலும் பூஜிக்கப்பட்டு என்னிடம் தயை செய்யட்டும்' என்று நாரதர் சொன்னார்.

79—81. அதனைக் கேட்ட தர்மபுத்திரர், மிகுந்த பிரியத்துடன் நாரதரையும் ஸ்ரீ கிருஷ்ண பகவானையும் பூஜித்தார். பின்பு நாரதர் தர்மபுத்திரர், ஸ்ரீ கிருஷ்ணன் இவர்களிடத்தில் விடைபெற்றுத் தமது இஷ்டப்படி சென்றார். தர்மபுத்திரரும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பரமாத்மா என்று நாரத முகமாகத் தெரிந்துகொண்டு, மிகவும் ஆச்சரியத்தை அடைந்தார். "ஓ பரீக்ஷித்து மகாராஜா! தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் முதலிய சராசரங்களடங்கிய லோகமானது எதனால் விஸ்தரிக்கப்பட்டதோ அந்தத் தக்ஷகுமாரிகளுடைய வம்சங்களைத் தனியே சொன்னேன்" என்று சுகர் சொன்னார்.

ஏழாவது ஸ்கந்தம் முற்றிற்று

Printed at Sri Mahabharatham Press, Kumbakonam, 27-1-49, C. 2000

உ

ஸ்ரீ கிருஷ்ணாய பரமாத்மனே நம:

# ஸ்ரீமத் பாகவதம்

## (தமிழ் வசனம்)

### எட்டாவது ஸ்கந்தம்

மொழிபெயர்த்தவர்:

பண்டிட், ஆர். சிவராம சாஸ்திரிகள்



ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ்

கும்பகோணம்

பதிப்புரிமை] [விலை ரூ. 1/-

# பொருளடக்கம்

# ஸ்ரீமத் பாகவதம்

## ஸ்கந்தம்—8

### அத்தியாயம் 1

#### நான்கு மந்வந்தரங்கள்

பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஸ்வாயம்புவ மநுவின் வம்சமானது விஸ்தாரமாகக் கேட்கப்பட்டது. அதனையொட்டி நான்கு வர்ணத்தார்களுடைய தர்மங்களும், மரீசி முதலிய பிரஜாபதிகளின் வம்சமும் கேட்கப்பட்டன. மற்ற மநுக்களைப்பற்றிச் சொல்லவேண்டும். எந்த எந்தக் காலத்தில் பகவான் அவதரித்து அற்புதமான காரியங்களைச் செய்ததாக வித்வான்கள் சொல்லுகிறார்களோ, அதனையுஞ் சொல்லவேண்டும். சகல பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாகவிருக்கும் பகவான் எல்லா மந்வந்தரங்களிலும் எதைச் செய்தாரோ, எதனைச் செய்கிறாரோ, எதனைச் செய்யப் போகிறாரோ அதனையுஞ் சொல்லவேண்டும்" என்று கேட்டார்,

4—17. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "இந்தக் கல்பத்தில் ஸ்வாயம்புவர் முதலிய ஆறு மநுக்களுடைய காலம் சென்றுவிட்டது. முதல் மநுவைப்பற்றி முந்தியே சொன்னேன். அவருடைய காலத்தில் தேவர்கள் முதலியவர்கள் உண்டானார்கள். அந்த மநுவின் புத்திரிகளான ஆகூதி, தேவஹூதி ஆகிய இருவர்களிடத்திலும் முறையே யக்ஞர், கபிலர் என்ற திவ்ய நாமதேயத்துடன் தர்மத்தையும், ஞானத்

தையும் உபதேசிப்பதற்காக பகவான் புத்திரனாக அவ தரித்தார். அதில் கபிலருடைய் சரிதத்தை முன்ன மேயே சொன்னேன். யக்ஞருடைய் சரிதத்தைச் சொல்லுகிறேன். சத்ரூபையின் பர்த்தாவாகிய மநு காமபோகங்களில் வைராக்யத்தை படைந்து, ராஜ் யத்தை விட்டு ஸ்திரீயுடன் தபஸ் செய்வதற்காக வனஞ் சென்றார். அவர் ஸுநந்தையின் கரையில் ஒரு காலால் பூமியில் நின்று நூறு வருஷம் உக்கிரமாகத் தபஸ் செய்தார். அப்பொழுது பின்வருமாறு சொல்லலானர். எப்படியெனில், சகல பிராணிகளுடைய் சரீரத்திலும் ஸ்ரீ வாஸுதேவன் வஸிக்கிறார். அவராலேயே ஜகத் தானது இயங்குகிறது. ஜகத்து அவரை இயங்கச் செய்கிறதில்லை. (ஜகத் ஜடம்; பகவான் சித்ரூபி) இந்த ஜகத் தூங்கும்பொழுது அவர் விழித்துக்கொண் ருக்கிறார். அவர் அதனை அறிவார்; அது அவரை அறி யாது. உலகத்தில் காணப்படும் பிராணிகள் எல்லாம் ஈசுவர சுரூபமென்று பார்க்கவேண்டும். ஈசுவரனுக்கு எல்லாவற்றையும் அர்ப்பணஞ்செய்து, தன்னுடைய தென்ற அபிமானமற்றவனாகிப் போகங்களை அனுப விக்கவேண்டும்; அல்லது அபிமானத்தை விடுவத னல் ஆத்மாவைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். எவருடைய தனத்தையும் விரும்பாதே. தனம் யாருடை யது (ஒருவனுடையது மல்லவென்று தாத்பர்யம்). எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு சாட்சியாக விருக் கும் எந்த ஆத்மாவைக் கண், மனம் முதலியவைகள் பார்க்கிறதில்லையோ, எவருடைய ஞானமானது நசிக்கிற தில்லையோ, அப்படிப்பட்டவரும், ஸகல பிராணிகளிடத் திலும் அந்தர்யாமியாக விருப்பவரும், அழகான வர்ண முள்ளவருமான பகவானைச் சேவியுங்கள். அவருக்கு ஆதியும், அந்தமும், மத்யமும், தான், பிறர், உள், வெளி ஆகிய இவைகளுமில்லை. ஜகத்திற்கு மேற்சொல்லிய ஆதி முதலியவைகளிருக்கின்றன. இந்த ஜகத்தும் அவருடைய சுரூபமாகவே இருக்கிறது. ஆனதால் அதுவே பரப்ரம்மம். (ஜகத்ரூபியாக பகவானிருப்ப தானல் ஜகத்தினுடைய் ஆதியந்தம் முதலியவை பக வானுக்கும் ஏற்படுமே என்றால், அடுத்த சுலோகத்தால்

சமாதானஞ் சொல்லப்படுகிறது.) அவர் ஜகத் சுரூபி யாக விருப்பவர். அநேக திவ்ய நாமதேயங்களுள்ளவர்; எல்லாவற்றிற்கும் அதிபதி; எல்லாவற்றையும் சம் ரட்சிப்பவர்; ஜரையற்றவர்; புராணபுருஷர்; ஆனாலும் அந்தப் பகவான் தம்முடைய சக்தியாகிய மாயையைக் கொண்டு இந்த ஜகத்தைப் படைப்பது, காப்பாற்று வது, சங்கரிப்பது ஆகிய இவைகளைச் செய்கிறார். அந்த மாயையை ஞானத்தால் நாசஞ்செய்து கர்மங்களற்றவ ராகிறார். ஆனதால் மகரிஷிகளும் கர்மங்களற்றவர் களாக இருக்கவேண்டிக் கர்மங்களை யனுஷ்டிக் கிறார்கள். புருஷன் கர்மங்களைச் செய்தாலும் பெரும் பாலும் கர்மங்களற்றவனாகிவிடுவான். பகவான் கர்மங் களைச் செய்தாலும் அவைகளில் ஆசைப்படுகிறதில்லை. அதுபோல் பலனில் ஆசையில்லாமல் ஆத்மலாபத்தில் திருப்தியடைந்து கர்மங்களைச் செய்பவர்கள் துக்கிக்க மாட்டார்கள். மேலும், உலகங்களை அனுக்கிரகிப்பதற் காக மனிதனாக அவதரித்து, அதற்குத் தகுதியான கர்மங்களை யநுஷ்டிப்பவரும், அகங்காரமற்றவரும், வித் வானும், ஆசையற்றவரும், பூரணரும், தாம் தர்மத்தை அநுஷ்டித்து அதனால் மனிதர்களைச் சிட்சிப்பவரும், சகல தர்மங்களையும் பிரவர்த்திக்கச் செய்பவருமான பிரபுவைச் சரணமடைகிறேன்" என்று சொன்னார்.

18—23. மேற்சொல்லியபடியுள்ள மந்திரத்தைச் சொல்லித் தபஸ் செய்யும் அந்த மநுவைப் பார்த்துத் தேவர்களும், யாதுதானர்களும் மிகவும் பசியுள்ளவர் களாகி அவரைப் புசிப்பதற்காக ஓடிவந்தார்கள். அப் பொழுது யக்ஞமூர்த்தியானவர் யாமர்களுடன் (அப் பொழுதிருந்த தேவர்கள்) அவர்களைக் கொன்று சுவர் கத்தைக் காப்பாற்றினார். பின்பு ஸ்வாரோசிஷர் இரண் டாவது மநுவானார். அவர் அக்னியின் புத்திரர். த்யுமான், ஸுஷேணர், ரோசிஷ்மான் முதலியவர்கள் அந்த மநுவின் புத்திரர்கள். அந்த மன்வந்தரத்தில் ரோசனன் இந்திரனாக இருந்தான். துஷிதன் முதலிய வர்கள் தேவர்கள். ஊர்ஜர், ஸ்தம்பர் முதலியவர்கள் சப்த ரிஷிகள். வேதசிரஸ் என்னும் மகரிஷிக்கு

துஷிதை யென்ற பத்தினியிடத்தில் விபுவென்ற திவ்ய நாமதேயத்துடன் பகவான் அவதரித்தார். கௌமார பிரமசாரியான அந்த விபுவினுடைய விருதத்தைப் பதினெண்ணாயிரம் மகரிஷிகள் அப்பியசித்தார்கள்.

24—31. பிரியவ்ரதருடைய புத்திரராகிய உத்தமனென்பவர் மூன்றாவது மநுவாக இருந்தார். பாவனன், சிருஞ்ஜயன், யக்ஞன், ஹோத்திரன் முதலியவர்கள் அந்த உத்தமருடைய புத்திரர்கள். பிரமதன் முதலிய வசிஷ்ட புத்திரர்கள் சப்தரிஷிகள். ஸத்யர்கள், தேவச்ருதர்கள், பத்ரர்கள் ஆகிய இவர்கள் தேவர்களாக இருந்தார்கள். ஸத்யஜித் என்பவரே இந்திரனாக இருந்தார். அப்பொழுது தர்மனுக்கு சூனிருதையென்ற பத்தினியினிடத்தில் பகவான் ஸத்யஸேனரென்ற திவ்ய நாமதேயத்துடன் அவதரித்தார். பின்னுமவர் ஸத்யஜித்தாகிய இந்திரனுக்குத் தோழனாக இருந்து பொய் சொல்லும் துஷ்டர்களான யட்சர்களையும் ராட்சதர்களையும், பிராணிகளுக்குத் துரோகஞ் செய்யும் பூத கணங்களையும் கொன்றார்.

28—31. உத்தமருடைய சகோதரனாகிய தாமஸனென்பவர் நான்காவது மநுவானார். விருஷகியாதி, நரன், கேது முதலியவர்கள் அவருடைய புத்திரர்கள். ஸத்யகர்கள், ஹரிகள், வீரர்கள் என்பவர்கள் தேவர்கள். திரிசிகனென்பவர் இந்திரன்; ஜ்யோதி, வ்யோமர் முதலியவர்கள் ஸப்த ரிஷிகள். விதிருதியின் புத்திரர்களான வைதிருதியென்பவர்களும் தேவர்களாக இருந்தார்கள். கால மகிமையால் ஒளிந்துபோன வேதங்களை அவர்கள் தங்களுடைய தேஜஸ்ஸால் தரித்தார்கள். அந்த தாமஸ மன்வந்தரத்தில் பகவான் ஹரிமேதஸ் என்பவருடைய பத்தினியாகிய ஹரிணீயென்பவளிடத்தில் ஹரியென்ற திவ்ய நாமதேயத்துடன் அவதரித்தார். அவர் முதலையால் பிடிக்கப்பட்டுக் கஷ்டப்படும் கஜேந்திரத்தைக் காப்பாற்றினார்" என்றார்.

32—34. அதனைக் கேட்ட பரீட்சித்து மகாராஜன் சுகனை நோக்கி, "ஓ பகவன்! முதலையால் பிடிக்கப்பட்ட

கஜேந்திரத்தைப் பகவான் எப்படிக் காப்பாற்றினார்? அந்தக் கதை மிகவும் புண்யகரமானது; தனத்தைக் கொடுக்கக்கூடியது; மேலான க்ஷேமத்தைக் கொடுக்கக் கொடுக்கக்கூடியது; உத்தம சுலோகராகிய பகவானுடைய சரிதமாக இருக்கிறது. ஆனதால் அதனைச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். பிராயோபவேசஞ் செய்திருக்கும் பரீட்சித்து மகாராஜனால் இம்மாதிரி கேட்கப்பட்டு சுகர் அரசனைச் சிலாகித்து மகரிஷிகள் முன்பர்கச் சொல்லத் தொடங்கினார் என்று சூதர் நைமிசாரண்யத்தில் வசிக்கும் மகரிஷிகளுக்குச் சொன்னார்.

# அத்தியாயம் 2

## கஜேந்திரன் ஹரியை ஸ்மரித்தது

திரிகூடமென்று பிரசித்தமான மலையொன்று இருக்கிறது அதுபால் சமுத்திரத்தால் சூழப்பட்டது; லக்ஷம் யோசனை உயரமுள்ளது; அவ்வளவு யோசனைதூரம் பருத்தது; அதற்கு மூன்று யோஜனை சிகரங்களுண்டு; அவைகளில் ஒன்று தங்கமயமானது; மற்றொன்று வெள்ளிமயமானது; இன்னமொன்று எஃகுமயமானது. அந்தப் பர்வதம் இந்தச் சிகரங்களாலும், மற்ற தர்துக்களாலும் சகல திக்குகளையும் பிரகாசிக்கச் செய்கிறது. மேலும், அதில் பலவகையான மரங்களும், கொடிகளும், மலையாறுகளு மிருக்கின்றன ஸமுத்திரத்தின் ஜலத்தால் அதன் சுற்றுப்பக்கங்கள் அலம்பப்பட்டிருக்கின்றன. அதிலுள்ள மரகத ரத்தினங்களால் பூமியானது கருமை நிறமுள்ளதாக இருக்கிறது. மேலும் ஸித்தர்கள், சாரணர்கள், கந்தர்வர்கள், வித்யாதரர்கள், உரகர்கள், கின்னரர்கள், அப்ஸரஸ்கள் ஆகிய இவர்கள் அதன் குகையில் விளையாடுகிறார்கள். அவர்களுடைய கானத்தைக் கேட்டுச் சிங்கங்கள் தங்களுக்கு

எதிரி சப்திப்பதாக நினைத்துக் கர்ஜிக்கின்றன. மேலும் அதன் குகையில் பல வகையான காட்டு மிருகங்கள் வசிக்கின்றன. பலவகையான மரங்களும், தோட்டங்க் ளும், மயில்கள் முதலியவைகளும் இருக்கின்றன. மேலும் அவ்விடத்தில் தெளிந்த ஜலமுள்ள நதிகளும், குளங்களும் இருக்கின்றன. அவைகளில் ரத்தினங்களே மணல்களாக இருக்கின்றன. தேவஸ்திரீகள் அந்தக் குளங்களில் ஸ்நானஞ் செய்வதால் வாசனையுள்ள காற்று வீசுகிறது.

9—20. அதன் குகையில் வருணனுடைய உத் யான மொன்றிருக்கிறது. அது ரிதுமத் என்ற பெய ருள்ளது; தேவஸ்திரீகள் விளையாட்கூடியது; எப்பொ ழுதும் புஷ்பங்கள், பழங்கள் இவைகளுள்ள விருட்சங் களால் அலங்கரிக்கப்பட்டது; அந்தத் தோட்டத்தில் மந்தாரம், பாரிஜாதம், பாதிரி, அசோகம், சம்பகம், மாமரம், பிரியாளு, பலா, பாக்கு, தென்னை, பேரீச்ச மரம், மாதுளை, இலுப்பை, பனை, சாலம், பச்சிலை, அர்ச் சுனம், அஸனம், அரிஷ்டம், அத்தி, புளி, ஆல், முள் முருங்கை, சந்தனம், வேம்பு, கோவிதாரம், ஸரளம், தேவதாரு, திராட்சை, கரும்பு, நாகை, இலந்தை, நெல்லி, வில்வம், விளா, எலுமிச்சை, தானிக்காமரம் முதலியவைக ளிருக்கின்றன. அந்தத் தோட்டத்தில் அகலமான குளமிருக்கிறது. அது தங்கத் தாமரைக ளாலும், குமுதம், உத்பலம் முதலிய புஷ்பங்களாலும் அலங்கரிக்கபபட்டிருக்கிறது. மதித்த வண்டுகளும், இனிமையாகச் சப்திக்கும் பறவைகளும், ஹம்ஸங்களும், நீர்க்காக்கைகளும், சக்ரவாகங்களும், ஸாரஸங்களும், நீர்க்கோழிகளும் அதில் சப்தித்துக்கொண்டிருக்கின் றன. மச்சங்களும், ஆமைகளும் துள்ளுவதால் ஜல மும், தாமரை மலர்களும் அசைகின்றன. அதன் கரை களில் அடப்ப மரம், நீர் நொச்சில், நளம், நீபம், வஞ்சு ளம், குந்தம், மருதாணி, அசோகம், வாகை, குடஜம், இங்குதம், குப்ஜகம், சுவர்ணயூதி, நாகை, புன்னை, ஜாதிமல்லிகை, மாதவீ, ஜாலகம் முதலியவைகள் இருக்கின்றன.

21—34. ஒருகால் அந்தப் பர்வதத்தில் வசிக்கும் ஒரு சிறந்த யானையானது மூங்கில் முதலிய மரங்களையும் குல்மங்களையும் நாசஞ்செய்துகொண்டு சஞ்சரித்தது. அதனுடைய வாசனையை முகர்ந்து சிங்கங்களும், யானைகளும், புலி முதலிய துஷ்ட மிருகங்களும், கட்க மிருகங்களும், கௌர மிருகங்களும், கிருஷ்ண மிருகங்களும், சமரிகளும், சரபங்களும், சர்ப்பங்களும் பயப்படுகின்றன. செந்நாய்கள், பன்றிகள், எருமைகள், கரடிகள், சல்யங்கள், கோலாங்கூலங்கள், குரங்குகள், மான்கள், முயல்கள் முதலிய அற்பப் பிராணிகள் அதன் கண்ணில் படாமலேயே வசிக்கின்றன. அப்படிப்பட்ட கஜேந்திரமானது வெயிலால் தாபமடைந்து அந்தக் குளத்தை நோக்கிப் புறப்பட்டது. மதமுள்ள குட்டி யானைகள் அதனைப் பின்தொடர்ந்தன. அதனுடைய நடையால் மலை அசைந்தது. வண்டுகள் அதன் மத ஜலத்தைப் பானஞ் செய்துகொண்டிருந்தன. வெகு தூரத்திலேயே குளத்தின் வாசனையுள்ள காற்றை முகர்ந்து அந்த யானையானது மதித்துத் தன் கூட்டத்துடன் அந்தக் குளத்தின் கரைக்கு வந்தது. பின்பு குளத்திலிறங்கி அமிர்தம்போன்ற அதன் ஜலத்தைக் குடித்தது. அந்த ஜலம் தங்கநிற தாமரை மலரின் வாசனையுள்ளது; அதன் துதிக்கையால் எடுத்துத் தன் சரீரத்தை நனைத்துக்கொண்டது. மேலும், கிருகஸ்தன் ஸ்திரீகளுடன் கிரீடிப்பதுபோலத் துதிக்கையால் ஜலத்தை யெடுத்துப் பெண் யானைகளை நனைத்தும், குடிக்கச் செய்துகொண்டும், தெய்வமாயையால் மோகித்துக் கிரீடித்துக்கொண்டு மிருந்தது. ஓ மகாராஜ! அந்தக் குளத்திலிருந்த மிக்க பலமுள்ள ஒரு முதலையானது தெய்வத்தால் தூண்டப்பட்டு அந்த யானையின் கால்களைப் பிடித்துக்கொண்டது. தெய்வச்செயலாக இம் மாதிரியான ஆபத்தை அடைந்த மிக்க பலசாலியான கஜேந்திரன் தன் பலத்திற்குத் தக்கபடி முதலையைக் கரையில் இழுத்தான். அதனைக் கண்ட பெண் யானைகளும், சகாயமாக வந்திருந்த மற்ற யானைகளும் மிக்க தைனியத்தை அடைந்து கதறின. அவைகளும் தங்களால் முடிந்தவரையில் கஜேந்திரனைக்

காப்பாற்ற முயன்றும் சக்தியற்றவைகளாயின. அப்பொழுது முதலையானது ஜலத்திற்குள் யானையை இழுக்கிறது. யானையோ முதலையைக் கரைக்குக் கொண்டுபோக முயலுகிறது. இப்படி இரண்டும் சண்டை செய்துகொண்டே ஆயிரம் வருஷங்களைக் கழித்தன. இரண்டும் உயிரோடிருந்தன. இதனைக் கண்ணுற்ற தேவர்கள் ஆச்சரியத்தை அடைந்தார்கள். பின்பு வெகுகாலமானதால் யானைக்கு மனம் களைத்தது; பலம் குறைந்தது. ஜலத்திலிருக்கும் முதலைக்குப் பலம் முதலியவை விருத்தியாயின. இப்படி யானையானது மிகவும் களைப்படைந்து வெகுகாலமாக முயன்றும் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முடியாததாகி, "என்னுடைய ஞாதிகளான யானைகளால் என்னைக் காப்பாற்ற முடியவில்லை. பெண் யானைகளால் எப்படிக் காப்பாற்ற முடியும்? தெய்வமானது முதலையாகிய பாசத்தால் என்னைக் கட்டியிருக்கிறது. ஆனதால் எவர் மிக்க பலசாலியான யமனாகிய சர்ப்பத்திலிருந்து பயந்து சரணமடைந்தவர்களைச் சம்ரக்ஷிக்கிறாரோ, எவரிடமிருந்து மிருத்யுவும் பயந்து ஓடுகிறானோ, அந்தப் பகவானைச் சரணமடைகிறேன்" என்று யோசித்தது.

---

# அத்தியாயம் 3

## பகவான் கஜேந்திரனைக் காப்பாற்றியது

கஜேந்திரன் பகவானைச் சரணமடைந்து இந்தச் சங்கடத்தை நிவர்த்தித்துக்கொள்ளவேண்டுமென்ற நிச்சயத்துடன் மனத்தை யொருவகைப்படுத்திப் பின்வருமாறு பகவானைத் தியானித்தான். பகவானைத் தியானஞ்செய்யும் மார்க்கமானது முன் ஜன்மத்தில் அப்பியசிக்கப்பட்டிருந்தது. அதெப்படியெனில் சித் (ஞானமுள்ளது), அசித் (ஜடம்) ஆகிய இவைகளின் சுரூபமாகிய உலகமானது எவருடைய சுரூபமாக இருக்கிறதோ, எவர் எல்லாவற்றிற்கும் முந்தியவரோ, அந்தப் பகவானாகிய

பரமேசுவரனைத் தியானிக்கிறேன். இந்த ஜகத் தானது எவரிடத்தில் இருக்கிறதோ, எவரிடத்தி லிருந்து உண்டானதோ, எவரால் உண்டுபண்ணப் பட்டதோ, எவர் இந்த ஜகத் ரூபமாக இருக்கிறாரோ, எவர் காரியத்தைக் காட்டிலும், காரணத்தைக் காட்டி லும் மேலானவரோ, எவர் நித்திய சித்தமான வஸ் துவோ, அந்தப் பகவானை சரணமடைகிறேன். எவரிடத் தில் இந்த ஜகத்தானது சில சமயம் பிரகாசிப்பதும், சில சமயம் மறைந்துமிருக்கிறதோ, எவர் குறைவற்ற ஞான முள்ளவரோ, காரியம், காரணம் இரண்டையும் சாட்சி யாகவிருந்து எவர் பார்க்கிறாரோ, எவர் நேத்திரம் முதலியவைகளையும் பிரகாசிக்கச் செய்கிறாரோ, எவர் ஆத்மாவிற்கு மூலரோ அந்தப் பகவான் என்னை ரக்ஷிக் கட்டும். இந்த உலகங்களும், உலோகபாலகர்களும் கால மகிமையால் நசித்தபொழுது மிகுந்த இருட்டு உண்டா யிற்று. அப்பொழுது எந்தப் பிரபு பிரகாசித்தாரோ, அவர் என்னைக் காப்பாற்றட்டும். எவருடைய சுரூபத்தை மகரிஷிகளும் அறியமாட்டார்களோ, அவ ருடைய சுரூபத்தைப் பிராகிருதனாகிய என்னால் அறியமுடியுமா? சொல்ல முடியுமா? எவருடைய சரித மானது நடனுடையது போலக் கண்டுபிடிக்க முடி யாததோ அந்தப் பகவான் என்னைச் சம்ரட்சிக்கட்டும். மிகுந்த வைராக்கியமுள்ள மகரிஷிகள் எவருடைய திவ்யமங்கள விக்கிரகத்தைத் தரிசிக்க விரும்பி, சகல பிராணிகளையும் பரமாத்மாவாகப் பாவித்து, வனத்தில் பிரம்மசரியம் முதலிய விரதங்களை அனுஷ்டிக்கிறார் களோ, அந்தப் பகவானே எனக்குக் கதி. எவருக்கு ஜன னங்களும், கர்மங்களும், நாமதேயங்களும், ரூபமும், குணமும், தோஷமும் இல்லையோ, ஆனாலும் அவர் உல கத்தைப் படைப்பது, சங்கரிப்பது முதலியவைகளைத் தம்முடைய மாயையால் ஒவ்வொரு காலத்திலும் செய்கி றாரோ, பரமேசுவரனும், பிரும்மமும், அளவற்ற சக்தி யுள்ளவரும், ரூபமற்றவரும், பலவகையான ரூபமுற்ற வரும், ஆச்சரியகரமான சரிதங்களைச் செய்பவருமான அந்தப் பகவானுக்கு நமஸ்காரம். ஆத்ம பிரகாச சுரூபி யும், சாட்சியும், பரமாத்மாவும், மனத்திற்கும் வாக்குக்கும்

சித்தவிருத்திகளுக்கும் எட்டாதவரான பகவானுக்கு நமஸ்காரம் செய்கிறேன். மேலும் அவர் சத்தியத்தாலும், ஸௌர்சத்தாலும் அடையக்கூடியவர்; கைவல்யத்திற்கு அதிபதி; மோக்ஷானந்தத்தின் அநுபவ சுரூபியாக இருப்பவர்; சாந்தரும், கோரரும், மறைந்தவரும், ஸத்வம் முதலிய குணங்களை அநுசரிப்பவரும், பேதமற்றவரும், ஸமானரும், ஞானகனருமாகிய பகவானுக்கு நமஸ்காரம். ஸகலத்திற்கும் அத்யக்ஷரும், ஸாக்ஷியும், க்ஷேத்ரக்ஞருமான உம்மை நமஸ்கரிக்கிறேன். பின்னும் க்ஷேத்ரக்ஞர்களுக்கு மூலமும், பிரதானத்திற்குக் காரணரும், புருஷருமான உமக்கு நமஸ்காரம். ஸகல இந்திரியங்களுடைய குணங்களைப் பார்ப்பவரும், ஸகல ஞானத்திற்கும் காரணரும், அஸத்தாகிய ஜகத்தினுடைய அத்யாஸ முள்ளவரும், விஷயங்களில் ஸத்ரூபமான ஆபாஸம் (தோற்றம்) உள்ளவருமான பகவானை நமஸ்கரிக்கிறேன். பகவான் எல்லாவற்றிருக்கும் காரணர்; அவருக்குக் காரணமொன்றுமில்லை; ஆச்சரியகரமான காரணராக இருப்பவர்; ஸகல ஆகமங்களாலும் வேதங்களாலும் நிரூபிக்கப்பட்டவர்; மோக்ஷ ஸ்வரூபி; உத்தமர்களால் ஆச்ரயிக்கக்கூடியவர்; அரணிக்கட்டையில் அக்னி மறைந்திருப்பதுபோல குணங்களால் மறைக்கப்பட்ட ஞானமுள்ளவர்; குணங்களுடைய க்ஷோபத்தால் ஜகத்தை சிருஷ்டிக்கவேண்டுமென்ற சங்கல்பத்தை அடைகிறவர்; ஆத்மபாவனையால் விதிநிஷேதங்களுக்கு உட்படாதவர்; தாமாகப் பிரகாசிப்பவர்; அப்படிப்பட்ட பகவானுக்கு நமஸ்காரம். மேலும் அந்தப் பகவான் என்னைப்போன்ற பசுக்களை ரக்ஷிப்பவர்; முக்தர்; மிகுந்த கிருபையுள்ளவர்; அழிவற்றவர்; எல்லாப் பிராணிகளுடைய ஹிருதயத்திலும் அந்தர்யாமியாக இருந்து எல்லாவற்றையும் இயங்கச் செய்பவர்; ஆனாலும் அளவிடக்கூடாதவர்; அப்படிப்பட்ட பகவானுக்கு நமஸ்காரம். சரீரம், புத்திரன், பந்துக்கள், பணம், வீடு ஆகிய இவைகளில் அபிமானமுள்ள ஜனங்களால் நீர் அடையமுடியாதவர்; குணங்களுடைய சம்பந்தமற்றவர்; தேகம் முதலியவைகளில் ஆசையற்றவர்களான முக்தர்களால் தியானிக்கப்பட்டவர்; ஞானசுரூபி; அப்படிப்பட்ட

பகவானுக்கு நமஸ்காரம். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம ஆகிய இவைகளை அடைய விரும்பிய ஜனங்கள் பகவானைச் சேவித்து இஷ்டத்தை அடைகிறார்கள். பகவான் அவர்கள் கேட்காதவைகளையும் கொடுக்கிறார். அவர்களுடைய தேகத்தை மரணம், கிழத்தனம் இவைகளற்றதாகவுஞ் செய்கிறார். அந்த மிகுந்த கிருபையுள்ள பகவான் எனக்கு இந்தச் சங்கடத்தை நிவர்த்திக்கட்டும். (வேறொன்றையும் விரும்பவில்லையென்று தாத்பர்யம்) பக்தி சுகத்தை நான் அறியாதவனாகையால் இதை விரும்புகிறேன். (பக்தர்கள் ஒன்றையும் விரும்பார்களென்று மேல் சுலோகத்தால் காட்டப்படுகிறது) எவர்கள் பகவானையே கதியாகக் கொண்டவர்களோ, மிகுந்த பக்தர்களோ, அவர்கள் பகவானுடைய அற்புதமான திவ்ய மங்கள சரித்தைக் கானஞ் செய்து ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கியிருக்கிறார்கள். பகவான் அக்ஷரசுரூபி, பரப்ரம்மசுரூபி; மேலான வைகளுக்கு அதிபதி; அவ்யக்தர்; அத்யாத்மயோகத்தால் அடையக்கூடியவர்; இந்திரியங்களுக்கும் புலப்படாதவர்; சூக்ஷ்மசுரூபி; மிகவும் தூரத்திலிருப்பவர்; நாசமற்றவர்; துதிக்கக்கூடியவர்; பரிபூர்ணர்; அந்தப் பகவானைத் தோத்திரஞ் செய்கிறேன். பிரம்மதேவர் முதலிய தேவர்களும், வேதங்களும், சராசரங்களடங்கிய லோகங்களும் எவருடைய அம்சமோ, பெயராலும், ரூபத்தாலும் பேதமேயொழிய உண்மையில் பகவானுடைய அம்சமேயாம். அந்தப் பகவான் ஜயிக்கட்டும். அக்னியினிடத்திலிருந்து நெருப்புப் பொறிகள் எப்படி வெளிவருகின்றனவோ, சூரியனிடத்திலிருந்து கிரணங்கள் எப்படி வெளிவருகின்றனவோ, அப்படிப் பகவானிடத்திலிருந்து புத்தி, மனம், ஆகாயம் முதலிய குணங்களின் வெள்ளம் உண்டாகிறது; மேலும் அவர் தேவனல்ல; அசுரனல்ல; மனிதனல்ல; பசு பட்சி முதலிய திர்யக் ஜாதியுமல்ல; ஸ்திரீயுமல்ல; புருஷனுமல்ல; நபும்ஸகனுமல்ல; ஜந்துவுமல்ல; குணமுமல்ல; கர்மமுமல்ல; ஸத்துமல்ல; அஸத்துமல்ல; இவைகளில்லாதவர் எவரோ அவரென்று சொல்லக்கூடியவர். அப்படிப்பட்ட பகவான் பிரகாசிக்கட்டும். உள்ளிலும் வெளியிலும் அவி

வேகத்தால் வியாப்தமான யானை ஜன்மத்தால் என்ன பிரயோஜனம்? நான் இந்த ஜன்மத்துடன் ஜீவிக்க வேண்டு மென்று விரும்பவில்லை. எதற்குக் காலத்தால் நாசமில்லையோ, ஆத்ம சுரூபத்தை மறைக்கும் அவித்யை எதனால் நசிக்கிறதோ, அதனை அடைய விரும்புகிறேன். ஜகத்தைப் படைத்தவரும், ஜகத் சுரூபியும், ஜகத்திற்கு விலக்ஷணரும், ஜகத்தைத் தனமாகக் கொண்டவரும், ஜகத்திற்கு ஆத்மாவும், உற்பத்தியற்றவரும், பரப்பிரம்மமுமாகிய அந்தப் பகவானை மோக்ஷத்தை அடைய விரும்பிய நான் நமஸ்கரிக்கிறேன். மேலும், யோகிகள் யோகத்தால் கர்மங்களை யெரித்து யோகத்தால் பிரகாசிக்கும் ஹிருதயத்தில் எவரைத் தரிசிக்கிறார்களோ, அந்த யோகேசனை நமஸ்காரஞ் செய்கிறேன். சகிக்க முடியாத வேகமுள்ள ராகத்வேஷங்களாகிய மூன்று சக்திகளுள்ளவரும், சகல இந்திரியங்களுக்கு விஷயமான சப்தம் முதலியவைகளின் சுவரூபரும், சரணுகதர்களைக் காப்பாற்றுகிறவரும், மிகுந்த சக்தியுள்ளவரும், கெட்ட இந்திரியங்களால் அடையக்கூடாத மார்க்கமுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். மேலும் நான் எந்தப் பகவானுடைய மாயையால் அகங்காரமுள்ளவனாகி அவருடைய சுரூபத்தை அறியவில்லையோ, அறியக்கூடாத மாகாத்மியமுள்ள அந்தப் பகவானைச் சரணமடைகிறேன்'' என்றான்.

30—33. இப்படி கஜேந்திரன் மூர்த்தி பேதமில்லாமல் துதித்தபடியால் பிரம்மா முதலிய தேவர்கள் வரவில்லை. ஏனென்றால் அவர்கள் பலவகையான அடையாளமுள்ளவர்கள்; பேதபுத்தியுள்ளவர்கள்; அபிமானமுள்ளவர்கள்; அப்பொழுது ஸகல சுரூபியும், ஸகல தேவ சுரூபியுமான ஸ்ரீ பகவான் அவ்விடத்தில் ஆவிர்ப்பவித்தார் (தோன்றினார்). எப்படியென்றால், சக்கரபாணியான பகவான் அந்த ஸ்தோத்திரத்தைக் கேட்டு வேதமயமாகிய கருடன்மீதேறி வேகமாகக் கஜேந்திரனிருக்குமிடம் வந்தார். அவரைத் தேவர்களும் துதித்தார்கள். அப்பொழுது குளத்தில் மிக்க பலமுள்ள முதலையால் பிடிக்கப்பட்டுச் சிரமத்தை அடைந்திருக்கும் கஜேந்திரன்

கருடன் மீது பிரகாசிப்பவரும், சக்ராயுதத்தைத் தரித்தவருமான பகவானை நோக்கித் தாமரைமலருடன் கூடிய கையைத் தூக்கிக்கொண்டு, "ஓ நாராயண! எல்லாவற்றிற்கும் குருவாக இருப்பவரே! உம்மை நமஸ்கரிக்கிறேன்' என்றான். அதனைக்கேட்ட பகவான் சீக்கிரமாகக் கருடனைவிட்டு இறங்கி முதலையுடன் கஜேந்திரனைக் கரையில் கொண்டுவந்து சக்கரத்தால் முதலையின் வாயைப் பிளந்து, தேவர்கள் பார்த்திருக்க கஜேந்திரனைக் காப்பாற்றினார்.

# அத்தியாயம் 4

## கஜேந்திரனுடைய முன் ஜன்மம்

அப்பொழுது தேவர்களும், மகரிஷிகளும், கந்தர்வர்களும் பிரம்மதேவரையும் பரமசிவனையும் முன்னிட்டு பகவானுடைய அற்புதமான சரித்தைச் சொல்லிக்கொண்டு புஷ்பங்களை வருஷித்தார்கள். தேவதுந்துபிகள் முழங்கின. கந்தர்வர்கள் நர்த்தனஞ்செய்தார்கள்; கானஞ்செய்தார்கள். ரிஷிகளும், சாரணர்களும், ஸித்தர்களும சந்தோஷமடைந்து புருஷோத்தமனைத் துதித்தார்கள். முன் ஜன்மத்தில் ஹூஹூ என்ற கந்தர்வன் தேவல மகரிஷியின் சாபத்தால் முதலை ஜன்மத்தை அடைந்து, அந்தக் குளத்தில் வசித்தான். அவன் பகவானுடைய சக்கரத்தால் அடிக்கப்பட்டுத் தன்னுடைய கந்தர்வ ரூபத்தை அடைந்து, துதிக்கக்கூடிய உத்தம குணங்களுள்ளவரும், உத்தமசுசீலரும், அழிவற்றவருமாகிய பகவானை நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்தான். இப்படி பிரதக்ஷிண நமஸ்காரங்களால் உபசரிக்கப்பட்ட பகவான் அவனை அநுக்கிரகித்தார். அந்தக் கந்தர்வன் எல்லா ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது தன்னுடைய உலகஞ் சென்றான். மேலும், கஜேந்திரன் பகவானுடைய அங்க ஸ்பரிசத்தால் அஞ்ஞான பந்தத்திலிருந்து

நிவர்த்தியடைந்து பீதாம்பரத்தைத் தரித்து, நான்கு கைகளுள்ளவனுகி பகவத் சுருபத்தை அடைந்தான். அந்த கஜேந்திரன் முன் ஜன்மத்தில் பாண்டிய தேசத்து அரசனுக இருந்தான். அவனுக்கு இந்திரத்யும்னன் என்று பெயர். அவன் விஷ்ணு விரதத்தையே முக்கியமாகக்கொண்டவன். அவன் ஒருகால் ஜடை தரித்துத் தவசியாகி மௌனவிருதத்துடன் குலபர்வதத்திலிருந்து ஸ்ரீ பகவானைப் பூஜித்தான். அந்தச் சமயத்தில் மிகுந்த கீர்த்தியுள்ள அகஸ்திய மகரிஷியானவர் தம்முடைய சிஷ்யர்களுடன் தெய்வச்செயலாக அவ்விடம் வந்தார். அவரைப் பார்த்ததும் அர்க்கியம் முதலியவைகளால் பூஜிக்கவில்லை. அதனைக் கண்டு மகரிஷி கோபித்து அரசனைநோக்கி, "யானைபோல் மதங்கொண்ட புத்தியுள்ளவனுகிப் பிராமணனை அவமதித்தபடியால் யானை ஜன்மத்தை அடைவாய்" என்று சபித்தார். இப்படி அகஸ்தியர் சபித்துவிட்டுத் தம் இஷ்டப்படி சென்றுர். இந்திரத்யும்னன் என்ற ராஜனும், "தெய்வாதீனமாகக் கிடைத்தது இந்தச் சாபம். இது நம்மால் அநுபவிக்கக் கூடியது" என்று நினைத்து, யானை ஜன்மத்தை யடைந்தான். முன் ஜன்மத்தில் பகவானைப் பூஜித்ததால் யானை ஜன்மத்தை அடைந்தும் பூர்வஜன்ம ஞாபகமுண்டாயிற்று. இம்மாதிரி பகவான் கஜேந்திரனை சம்ரக்ஷித்து அவனைப் பார்ஷதனுகச் செய்து, கந்தர்வர்கள், சித்தர்கள் முதலியவர்களால் கானஞ்செய்யப்பட்டுத் தமது உலகஞ் செல்ல ஆரம்பித்தார். ஓ மகாராஜ! கஜேந்திரனைக் காப்பாற்றியதாகிய பகவானுடைய சரிதத்தைச் சொன்னேன். இது சுவர்க்கத்தைக் கொடுக்கக்கூடியது; கீர்த்தியைக் கொடுக்கக்கூடியது; கலியின் தோஷத்தை நிவர்த்திக்கக்கூடியது; கேட்டவர்களுக்கு துஸ்வப்னத்தைப் போக்கக்கூடியது; க்ஷேமத்தை விரும்பிய பிராமணர்கள் சுத்தர்களாகக் காலையிலெழுந்திருந்து இதைப் படித்தால் அவர்களுக்கு துஸ்வப்னம் நேரிடுகிறதில்லை. சகல பிராணிகளின் சுருபியான ஸ்ரீமந் நாராயணன் மிகுந்த பிரியத்துடன் கஜேந்திரனை நோக்கி, "என்னையும், உன்னையும், இந்தக் குளத்தையும், இந்த மலையையும், குகையையும், காட்டையும், பிரம்பு

மூங்கில் முதலியவைகளின் குல்மங்களையும், தேவ விருக்ஷங்களையும், அதன் சிகரங்களையும், பிரும்மா, சிவன் இவர்கள் வசிக்கக்கூடிய இந்த ஸ்தலங்களையும், எனக்குப் பிரியமான திருப்பாற்கடலையும், சுவேதத்வீபத்தையும் ஸ்ரீவத்ஸத்தையும், கௌஸ்துபத்தையும், கௌமோதகியென்ற கதாயுதத்தையும், சுதர்சனமென்ற சக்ரத்தையும், பாஞ்சஜன்யமென்ற சங்கத்தையும், கருடனையும், என்னுடைய கலையாகிய ஆதிசேஷனையும், என்னை ஆச்ரயித்திருக்கும் லக்ஷ்மீதேவியையும், பிரும்மதேவரையும், நாரத மகரிஷியையும், பரமசிவனையும், பிரஹலாதரையும் மத்ஸ்யம், கூர்மம், வராஹம் முதலிய அவதாரங்களில் என்னல் செய்யப்பட்ட புண்யமான சரித்திரத்தையும், சூரியனையும், சந்திரனையும், அக்னியையும், பிரவணத்தையும், ஸத்யத்தையும், அவ்யக்தையையும், பசுவையும், பிராமணர்களையும், தர்மத்தையும், தர்மத்தின் பத்னிகளான தக்ஷகுமாரிகளையும், ஸோமனுடைய பத்னிகளையும், கச்யபருடைய பத்னிகளையும், கங்கையையும், ஸரஸ்வதி நதியையும், நந்தையையும், காளிந்தியையும், ஐராவதத்தையும், துருவரையும், ஸப்தரிஷிகளையும், புண்யகரமான நாமதேயமுள்ள மநுஷ்யர்களையும் என்னுடைய விபூதிகளாக எவர்கள் விடியற்காலத்தில் எழுந்திருந்து சாவதானர்களாகித் தியானஞ் செய்கிறார்களோ, அவர்களுக்குச் சகல பாபங்களும நிவர்த்தியாகின்றன. காலையில் எவர்கள் விழித்துக்கொண்டு என்னை ஸ்தோத்திரஞ் செய்கிறார்களோ அவர்களுக்கு மரணகாலத்தில் நல்ல புத்தியைக் கொடுப்பேன்" என்று சொல்லி, சங்க சப்தஞ்செய்து அதனல் தேவர்களைச் சந்தோஷிக்கச்செய்து கருடன் மீதேறினர்.

# அத்தியாயம் 5

## ஐந்தாவது ஆருவது மநுக்கள்

"ஓ பரீட்சித்து மகாராஜ! பகவான் கஜேந்திர னைக் காப்பாற்றியதாகிய அற்புதமான சரிதத்தைச் சொன்னேன். அது பாவத்தைப் போக்கக்கூடியது. ரைவத மந்வந்தரத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். தாமஸனுடைய சகோதரனாகிய ரைவதரென்பவர் ஐந்தாவது மநு. அர்ச்சுனன், பிரதிவித்யன் முத லியவர்கள் அவருடைய குமாரர்கள். விபு என்பவர் இந்திரன். பூதரயர்கள் முதலியவர்கள் தேவர்கள். ஹிரண்யரோமா, வேதசிரஸ், ஊர்த்வபாஹு முதலிய வர்கள் ஸப்த ரிஷிகள். சுப்ரருடைய பத்னியாகிய விகுண்டா வென்பவளிடத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு தம் முடைய அம்சமாக அவதரித்தார். அவர் லக்ஷ்மி யால் பிரார்த்திக்கப்பட்டு, அவளுடைய பிரீதிக்காக் வைகுண்டமென்ற லோகத்தை யுண்டுபண்ணினுர். அது எல்லாராலும் நமஸ்கரிக்கக்கூடியது. அவருடைய மகி மையை முந்தியே சொல்லியிருக்கிறேன். அவருடைய குணங்கள் விசேஷ க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடி யவை. விஷ்ணுவின் குணங்களை முழுமையும் எவன வர்ணிக்கிருனே, அவன் பூமியிலிருக்கும் தூளிகளைத் தனியே பிரித்து எண்ணுவான். (பகவானுடைய குணங் கள் வர்ணிக்க முடியாதவை; அனந்தங்களென்று தாத்பர்யம்)

7—10. சட்சுஸ் என்பவருடைய புத்திரராகிய சட்சுஷ ரென்பவர் ஆருவது மநுவாக இருந்தார். புரு, புரு ஷன், சுத்யுமனன் முதலியவர்கள் அந்த மநுவின் குமாரர்கள். மந்திரத்யும்ன ரென்பவர் இந்திரன். ஆப் யர்கள் முதலிய கணங்கள் தேவர்கள். ஹவிஷ்மான், விரகன் முதலியவர்கள் ஸப்த ரிஷிகள். அந்த மன்வந் தரத்தில் வைராஜருடைய பத்னியாகிய ஸம்பூதியினிடத் தில் ஜகத்பதியாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணு அஜிதரென்ற திவ்யநாமதேயத்துடன் அவதரித்தார். அவர் சமுத் திரத்தைக் கடைந்து தேவர்களுக்கு அமிருதத்தைக்

கடைந்து தேவர்களுக்கு அமிருதத்தைக் கொடுத்தார். ஜலத்தில் அசையும மந்தர மலையைக் கூர்மமாக அவதரித்து முதுகில் தாங்கினுர்" என்ருர்.

11—13. அதனைக் கேட்ட அரசன் சுகரை, நோக்கி "ஓ பிராம்மண! திருப்பாற்கடல், எப்படி, எதற்காகக் கடையப்பட்டது? எதற்காகப் பகவான் கூர்ம ரூபியாக மலையைத் தரித்தார்? தேவர்கள் அமிருதத்தை எப்படி அடைந்தார்கள்? அப்பொழுது பின்னும் என்ன நடந்தது? அதிக அற்புதமான பகவானுடைய சரிதத்தைச் சொல்லவேண்டும். மிகுந்த தாபமுள்ள என் மனது உம்மால் சொல்லப்பட்ட பகவானுடைய மகிமையைக் கேட்டுப் போதுமென்ற திருப்தியை அடையவில்லை" என்று சொன்னுர்.

14—23. அதனைக் கேட்ட சுகர் அரசனைச் சிலாகித்துப் பகவானுடைய வீரியத்தைச் சொல்வதற்கு ஆரம்பித்தார். "முன்னொருகால் தேவாசுர யுத்தத்தில் தேவர்கள் அசுரர்களால் அடிக்கப்பட்டு உயிரற்றவர்களாக விழுந்தார்கள்; எழுந்திருக்கவில்லை. மேலும் துர்வாஸஸ் என்ற மகரிஷியின் சாபத்தால் மகேந்திரனும். மூவுலகங்களும் காந்தியற்றுப்போயின. யாகம் முதலிய நல்ல கர்மங்கள் நடக்கவில்லை. இதனைக் கண்ட மகேந்திரனும், வருணன் முதலிய தேவகணங்களும் இதற்கென்ன செய்யலாம் என்று யோசித்தும் ஒருவித நிச்சயமும் ஏற்படவில்லை. பின்பு அவர்கள் மேருவின் சிகரத்திலிருக்கும் பிரும்மதேவருடைய சபைக்குச் சென்று நமஸ்கரித்துப் பிரும்மதேவரிடம் தெரிவித்தார்கள். அதனைக் கேட்ட பிரும்மதேவர், இந்திரன் முதலிய தேவர்கள் காந்தியற்றவர்களாக இருப்பதையும், லோகங்கள் அமங்களமாக இருப்பதையும், அசுரர்கள் பலிஷ்டர்களாக இருப்பதையும் பார்த்து யோசித்து அவர்களை நோக்கி, "நான், பரமசிவன், நீங்கள், அசுரன் முதலியவர்கள், மனிதர்கள், திர்யக் ஜாதிகள், விருட்சங்கள், கொசு முதலியவைகள் எவருடைய அம்சமோ, அந்தப் பகவானைச் சரணமடைவோம். கொல்லக்கூடியவனுவது, காப்பாற்றக்கூடியவனுவது, உபேட்சிக்கத்

தக்கவனுவது, ஆதரிக்கக்கூடியவனுவது எவருக்கு இல்லேயோ, அப்படிப் பற்றுதலில்லாதவரானலும் எவர் ஜகத்தைப் படைப்பது, காப்பாற்றுவது, சங்கரிப்பது ஆகிய இவைகளுக்காக ரஜோ குணம், தமோ குணம், ஸத்வ குணம் ஆகிய இவைகளேத் தரிக்கிருரோ, பிராணிகளுடைய க்ஷேமத்திற்காக ஸத்வ குணத்தை அடைந்த அந்தப் பகவான் ஜகத்தைக் காப்பாற்றும் சமயம் இது. ஆனதால் ஜகத்குருவாகிய பகவானேச் சரணமடைவோம். அவர், தம்மைச் சார்ந்தவர்களான நமக்கு க்ஷேமத்தைச் செய்வார்" என்ருர்.

24—50. பிரும்மதேவர் இப்படிச் சொல்லித் தேவர்களுடன் அஜிதரிடஞ் சென்ருர். அந்த ஸ்தலமானது தமஸ்ஸுக்கு மேலானது; அஜிதருடைய சுரூபம் ஒருவராலும் பார்க்கப்படாதது. பகவான் அஜிதராக அவதரித்திருக்கிருரென்று பிரும்மதேவர் கேள்விப்பட்டிருக்கிருரே யொழிய அவரைப் பார்த்ததில்லே. அப்படிப்பட்ட அஜிதரை வேத வாக்கியங்களேக்கொண்டு பின் வருமாறு துதிக்கலாஞர்: "விகாரமற்றவரும், ஸத்யரும், அழிவற்றவரும், எல்லாவற்றிருக்கும் முந்தினவரும், எல்லாப் பிராணிகளுடைய ஹிருதய குகையில் வசிப்பவரும், உபாதியற்றவரும், ஊகிக்க முடியாதவரும், மனத்தைக்காட்டிலும் வேகமாகச் செல்லுபவரும், வாக்குக்கு எட்டாதவரும், துதிக்கக்கூடியவருமான பகவானே நமஸ்கரிக்கிருேம். பிராணன், மனது, புத்தி ஆகிய இவைகளே அறிந்தவரும் (இவரை அவைகளால் அறிய முடியாதென்று தாத்பர்யம்),இந்திரியங்கள், அதன் விஷயங்கள் ஆகிய இவைகளின் சுரூபமாகப் பிரகாசிப்பவரும், அஞ்ஞானமற்றவரும், சரீரமற்றவரும், எங்கும் வியாபித்திருப்பவரும், அட்சரசுரூபியும், மூன்று யுகங்களில் அவதரிப்பவருமான பகவானேச் சரணமடைகிறேன். அவரிடத்தில் ஜீவதர்மமான அவித்தையாவது, அதனே நிவர்த்திக்கும் வித்தையாவது இல்லே. மனேமயமானதும், பதினேந்து ஆரங்களுள்ளதும், வேகமாகச் செல்லக்கூடியதும், மூன்று நாபிகளுள்ளதும், மின்னல் போலச் சஞ்சலமானதும், எட்டு நேமியுள்ளதுமான ஜீவ

னுடைய சக்ரமானது (சரீரம்) பிரகிருதியால் தூண்டப் பட்டுச் சுற்றுகிறது. அந்தச் சக்ரத்திற்கு எவர் அச்சாக (அதிஷ்டானம்) இருக்கிறாரோ, ஸத்ய சுரூபியாகிய அவரைச் சரணமடைகிறேன். ஞானசுரூபியும், பிரகிருதியைக்காட்டிலும் மேலானவரும், பார்க்கமுடியாதவரும், பேதமற்றவரும், காலத்தாலும் தேசத்தாலும் அளவிடக்கூடாதவரும், கருடன்மீது வீற்றிருப்பவருமான இந்தப் பகவானை வித்துவான்கள் யோக மார்க்கத்தால் உபாசிக்கிறார்கள். எவருடைய மாயையை ஜனங்கள் தாண்டவில்லையோ, எவருடைய மாயையால் ஜனங்கள் மோகித்து சுருபத்தை அறியவில்லையோ, எவர் ஆத்மா, ஆத்மசக்தியான மாயை, அதன் குணங்கள் ஆகிய இவைகளை ஜயித்திருக்கிறாரோ, எவர் சகல பிராணிகளையும் சமமாக நடத்துகிறாரோ, அந்தப் பரமாத்வை நமஸ்கரிக்கிறேன். ரிஷிகளும் தேவர்களுமாகிய நாங்கள் பகவானுக்குப் பிரிய சரீரமான ஸத்வ குணத்தால் சிருஷ்டிக்கப்பட்டோம். அப்படிப்பட்ட எங்களாலும் உள்ளிலும், வெளியிலும், எப்பொழுதும் பிரகாசிக்கும் உபாதியற்ற பகவத் சுருபம் தரிசிக்கமுடியவில்லை. ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் பிரதானமாகக்கொண்டவர்களால் பார்க்கமுடியுமா? ஜராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜம் ஆகிய நான்கு வகையான பூதங்கள் பூமியால் செய்யப்பட்டவைகளாகையால் அவைகள் பூமியின் அம்சங்களேயாம. அவைகளே பகவானுக்குப் பாதங்கள். மகாபுருஷனும், சுதந்திரரும், மிகுந்த விபூதிகளுள்ளவரும், பரப்பிரும்மமுமான பகவான் நம்மிடத்தில் தயவு செய்யட்டும். ஜலம் மிகுந்த வீரியமுள்ளது. அதனாலேயே சகல லோகங்களும் லோகபாலகர்களும் உண்டாகிறார்கள். அப்படிப்பட்ட ஜலமானது எவருக்கு ரேதஸ்ஸாக இருக்கிறதோ அவர் எங்களிடம் கிருபை செய்யட்டும். சந்திரன் தேவர்களுக்கு அன்னமாகவும், பலமாகவும், ஆயுசாகவு மிருக்கிறார். மேலும், விருட்சங்களை விருத்தி செய்கிறார். அந்தச் சந்திரன் எவருக்கு மனதாக இருக்கிறாரோ, அவர் கருணைசெய்யட்டும். அக்னியானவர் சகல கர்மங்களுக்கும் நிமித்தமாக இருப்பவர். மேலும்,

அவர் சரீரத்தில் ஜாடராக்னியாக இருந்து அன்னம் முதலியவைகளைப் பசனஞ்செய்கிறார். பின்னுமவர் சமுத்திர மத்தியில் படபாக்னியாக இருந்து ஜலத்தைப் புசிக்கிறார். அப்படிப்பட்ட அக்னி எவருக்கு முகமோ அந்தப் பகவான் சந்தோஷத்தை அடையட்டும். சூரியன் அர்ச்சிராதி மார்க்கத்தின் தேவதை; வேதசுரூபி; பிரும்மத்திற்கு ஸ்தானம்; மோக்ஷத்திற்கு வழி; அமிருதர்; காலசுரூபியாகையால் மிருத்யு. அப்படிப்பட்ட சூரியன் எவருக்கு சக்ஷுஸாக (கண்) இருக்கிறாரோ அந்த மகா விபூதியுள்ள பகவான் சந்தோஷத்தை அடையட்டும். சரங்களுக்கும், அசரங்களுக்கும் பலம், தேக காந்தி, மனோபலம் முதலியவை வாயுவினிடத்திலிருந்தே உண்டாகின்றன. புத்தி முதலியவைகளுக்கு அபிமானி தேவர்களான நாங்கள் வாயுவை வேலைக்காரர்களைப் போல் அனுசரிக்கிறோம். அந்த வாயுவானவர் எவருடைய பிராணனிடத்திலிருந்து உண்டானாரோ, அந்தப் பகவான் சந்தோஷத்தை அடையட்டும். மேலும், எவருடைய சுரோத்திரத்திலிருந்து திக்குகளும், எவருடைய ஹிருதயத்திலிருந்து சரீரத்திலிருக்கும துவாரங்களும் பிராணன், இந்திரியங்கள், மனது, சரீரம் ஆகிய இவைகளுக்கு ஆசிரயமான ஆகாசமானது நாபியிலிருந்தும் உண்டாயினவோ, அந்த மகாவிபூதிகளுள்ள பகவான் சந்தோஷத்தை அடையட்டும். எவருடைய பலத்திலிருந்து மகேந்திரனும், பிரசாதத்திலிருந்து தேவர்களும், எவருடைய கோபத்திலிருந்து பரமசிவனும், சந்தோஷத்திலிருந்து பிரம்மதேவரும், எவருடைய சரீர துவாரங்களிலிருந்து சந்தஸ்களும், ரிஷிகளும், எவருடைய உறுப்பிலிருந்து பிரஜாபதியும் உண்டானார்களோ அந்த மகாவிபூதிகளுள்ள பகவான் கிருபைசெய்யட்டும். எவருடைய மார்பிலிருந்து ஸ்ரீ தேவியும், சாயையிலிருந்து பிதிருக்களும், ஸ்தனத்திலிருந்து தர்மமும், பின் பக்கத்திலிருந்து அதர்மமும், எவருடைய சிரசிலிருந்து திரிலோகமும், எவருடைய சிரிப்பிலிருந்து அப்ஸரஸ்களும் உண்டானார்களோ, அந்தப் பகவான் கருணைசெய்யட்டும். எவருடைய முகத்திலிருந்து பிராம்மண குலமும், இந்திரியங்களுக்குப் புலப்படாததைத் தெரிந்து

கொள்வதும்,வேதமும், எவருடைய கையிலிருந்து க்ஷத்திரிய குலமும், பலமும், எவருடைய தொடைகளிலிருந்து வைசிய ஜாதியும், சாமர்த்தியமும் (வைசியனுடைய விருத்தி), எவருடைய பாதங்களிலிருந்து பணிசெய்தலைத் தொழிலாகக்கொண்ட சூத்திர ஜாதியும் உண்டாயினவோ, அந்தப் பகவான் கிருபைசெய்யட்டும். மேலும், எவருடைய கீழுதட்டிலிருந்து லோபமும், மேலுதட்டிலிருந்து பிரீதியும், மூக்கிலிருந்து காந்தியும், ஸ்பரிசத்திலிருந்து பிராணிகளுக்கு அநுகூலமான காமமும், புருவங்களிலிருந்து யமனும், இமைகளிலிருந்து காலமும் உண்டாயினவோ அவர் தயைசெய்யட்டும். ஐந்து பூதங்கள், காலம், கர்மங்கள், குணங்கள், காரியம் ஆகிய இவைகள் எவருடைய யோகமாயையால் ஏற்பட்டனவென்று சொல்லுகிருர்களோ, எவர் பிராகிருதஜனங்களால் அறியமுடியாதவரோ, எவர் வித்வான்களால் அறியக்கூடியவரோ, அந்த மகாவிபூதிகளுள்ள பகவான் தயைசெய்யட்டும். (இதுவரையில் காரிய சுரூபமாகச் சொல்லப்பட்டது.) அந்தப் பகவான் சிருஷ்டிக்க வேண்டுமென்ற சங்கற்பமில்லாத காலத்தில் தம்முடைய சக்திகளை அடக்கிக்கொள்ளுகிருர்; ஆத்மலாபத்தால் பூரணமான ஆத்மாவாகவுள்ளவர்; மாயையால் ஏற்பட்ட குணங்களில் சம்பந்தப்பட்டவர்; வாயுவின் லீலை போன்ற லீலையுள்ளவர்; அப்படிப்பட்ட பகவானை நமஸ்கரிக்கிருேம். ஓ பகவன்! மேற்சொல்லிய மகிமை பொருந்திய உம்முடைய புன்சிரிப்புள்ள முகாரவிந்தத்தைச் சரணுகதர்களான நாங்கள் தரிசிக்க விரும்புகிருேம்; தரிசனங் கொடுக்கவேண்டும். மேலும், ஒவ்வொரு சமயத்திலும், தமது இஷ்டப்படி அவதரித்து, எங்களால் செய்யமுடியாத காரியங்களைச் செய்து சம்ரட்சிக்கிறீர். விஷயத்தில் ஆசையுள்ளவர்களால் செய்யப்படும் கர்மங்கள் மிக்க சிரமத்தைக் கொடுக்கின்றன. அதன் பயனே மிகவும் அற்பமாக இருக்கிறது. சில தருணம் பயன கிடைக்கிறதுமில்லை. உம்மிடத்தில் கர்மங்களைச் சமர்ப்பித்தால் (பலனை யுத்தேசியாமல் செயதால்) அவைகள் மிகுந்த பலனைக் கொடுக்கின்றன. பகவானுகிய நீர் பிராணிகளுக்கு ஆத்மாவாகவும், அநு

கூலராகவும், பிரியராகவுமிருப்பதால் சொற்ப கர்மமானு லும் உம்மிடத்தில் சமர்ப்பிக்கப்படுமானால் அது பய னற்றதாக ஆகிறதில்லை. மரத்தின் வேரில் ஜலம் விட்டால் அதன் கிளைகள் புஷ்டியடைவதுபோல் ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் பூஜிப்பதால் எல்லாரையும், தன்னை யும் பூஜித்ததாக ஆகிறது. அனந்தராகிய உமக்கு நமஸ்காரஞ் செய்கிறோம். உம்முடைய அற்புதமான சரிதங்கள் ஊகிக்கமுடியாதவைகள். நீர் குணங்களற்ற வர்; குணங்களுக்கு அதிபதியாக் இருப்பவர்; ஸத்வ குணத்தை ஆச்ரயித்தவர்" என்று தோத்திரஞ் செய் தார்கள்.

# அத்தியாயம் 6

## அமிருதத்திற்காக முயன்றது

இப்படி தேவர்கள் தோத்திரஞ் செய்யும்பொழுது பகவான் அவர்களுக்குத் தரிசனங் கொடுத்தார். அந் தப் பகவானுடைய சுரூபமானது ஆயிரம் சூரிய னுடைய தேஜஸ்போன்ற தேஜஸ் உள்ளதாக இருந்தது. அந்தக் காந்தியால் தேவர்களுடைய நேத்திரத்தின் தேஜஸ் குறைந்தது; அதனால் ஆகாயம், திக்கு, பூமி, தங்களுடைய சரீரம் ஆகிய இவைகளை அவர்களுக்குப் புலப்படவில்லை. ஆனதால், பகவானுடைய சுரூபம் பார்க்கப்படவேயில்லை. பிரும்மதேவரும், பரமசிவனும் பகவானுடைய சுரூபத்தைத் தரிசித்தார்கள். அந்த சுரூபம், மரகதம்போலக் கறுத்த திருமேனியுள்ளது; தாமரை மலரின் நடுப்பாகம்போல் சிவந்த கண்களுள் ளது; புடம்போட்ட தங்கம்போன்ற பீதாம்பரத்தால் பிரகாசிப்பது; அழகான முகம், ரமணீயமான புருவங்கள் ஆகிய இவைகளுள்ளது; உயர்ந்த ரத்தினங்கள் இழைத்த கிரீடம், தோள் வளை ஆகிய இவைகளால் அழகானது; கர்ணகுண்டலங்களால் பிரகாசிக்கும் கன்னங்களுள்ளது; காஞ்சீகலாபம் (சலங்கை கட்

டிய அரைநாண்), காப்பு, ஹாரம், பாதத்தின் ஆபரணம் ஆகிய இவைகளுள்ளது; கௌஸ்துப மாலையுள்ளது; வனமாலையுள்ளது; லக்ஷ்மி தேவியால் ஆசிரயிக்கப்பட்டது; சுதரிசனம் முதலிய அஸ்திரங்கள் சரீரமுள்ளவைகளாகி, அந்த சுரூபத்தை உபாசிக்கின்றன. அப்படிப்பட்ட பகவானுடைய திவ்ய மங்கள மூர்த்தியைத் தரிசித்து, பிரும்மதேவர் பரமசிவனுடனும் எல்லாத் தேவர்களுடனும் நமஸ்கரித்து, பின் வருமாறு துதிக்கலானார்: "எவருக்கு ஜனனம், ஜீவித்திருப்பது, மரணம் இவைகளில்லையோ, மிகவும் சூட்சுமமான சுரூபியோ, இவ்வளவென்று குறிப்பிடக்கூடாத மகிமை, சரீரம் ஆகிய இவைகளுள்ளவரோ, அப்படிப் பட்ட உமக்கு நமஸ்காரம். ஓ புருஷோத்தம! இந்தத் திவ்ய சுரூபமானது க்ஷேமத்தை விரும்பியவர்களால் வைதிகமான பூஜையாலும், தாந்திரீகமான பூஜையாலும் பூஜிக்கத்தக்கது. சகல ஜகத் சுரூபமான இந்தச் சரீரத்தில் மூவுலகங்களும் இருப்பதாகப் பார்க்கிறேன். ஓ சுதந்திரராக இருப்பவரே! இந்த ஜகத்தானது முந்தியும், மத்திய காலத்திலும், பிரளய காலத்திலும் உம்மிடத்திலேயே இருக்கிறது. மேலும், இந்த ஜகத்திற்கு ஆதியும், மத்யமும், அந்தியமும் நீரே. குடத்திற்கு மண் காரணமாக இருப்பதுபோல் ஜகத்துக்கு நீர் காரணமாக இருக்கிறீர்; பிரகிருதியைக்காட்டிலும் மேலானவர். மேலும், உம்முடைய மாயையால் இந்த ஜகத்தைப் படைத்து அதில் பிரவேசித்திருக்கிறீர். விவேகிகளான வித்வான்கள் குணங்கள் நசித்தபோது குணங்களற்றவராக உம்மைப் பார்க்கிறார்கள். அரணிக் கட்டையைக் கடைந்து அக்னியை எடுத்துக்கொள்வது போலும், பசுவினிடத்திலிருந்து பாலைக் கறப்பதால் நெய்யை அடைவதுபோலவும், பூமியிலிருந்து நெல் முதலிய அன்னத்தை அடைவதுபோலவும், பூமியை வெட்டுவது முதலிய முயற்சியால் ஜலத்தை அடைவது போலவும், கிருஷி முதலியவையால் ஜீவனத்தை அடைவதுபோலவும் வித்வான்கள் குணங்களிலிருந்து புத்தியால் உம்மை அடைகிறார்கள். ஓ நாதா! தொப்புளில் தாமரைமலரைத் தரிப்பவரே! உம்முடைய சுரூப

மானது யோகத்தால் பார்க்கக்கூடியது; வெகு காலமாக எங்களால் விரும்பப்பட்டது; காட்டுத்தீயினால் தாபமடைந்தவர்கள் கங்கா ஜலத்தில் ஸ்நானஞ் செய்து தாபத்தை நிவர்த்தித்துக்கொண்டாற்போல உம்முடைய சுரூபத்தைத் தரிசித்து நாங்களெல்லாரும் சுகத்தை அடைந்தோம். வெளியிலும் உள்ளிலும் இருக்கும் ஓ பகவன்! சகல லோகபாலகர்களாகிய நாங்கள் எதற்காக உம்முடைய பாதத்தில் சரணமடைகிறோமோ, அதனைச் செய்யவேண்டும். சகலத்திற்கும் சாட்சியாக இருக்கும் உமக்கு எல்லோருடைய மனத்திலிருக்கும் அபிப்பிராயம் தெரியுமாகையால் 'இன்ன காரியத்தை உத்தேசித்து வந்தோம்' என்று நாங்கள் சொல்லவேண்டியதில்லை. நான், பரமசிவன், தேவர்கள், தக்ஷர் முதலிய பிரஜாபதிகள் ஆகிய நால்வரும் அக்னியிலிருந்து கிளம்பிய நெருப்புபொறிகள்போல் உம்முடைய அம்சங்கள். ஆனதால் எங்களுக்கு என்ன தெரியும்? நீரே பிராம்மணர்களுக்கும், தேவர்களுக்கும் அநுகூலமானதை உபதேசியும்'' என்றார்.

16—27. அதனைக் கேட்ட பகவான் அஞ்சலி செய்துகொண்டு, சகல கரணங்களையும் அடக்கிக் கொண்டு, அநுக்கிரகத்தை எதிர்பார்த்திருக்கும் தேவர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு அவர்களுடைய காரியத்தைச் செய்யச் சக்தியுள்ளவராலும் சமுத்திரத்தைக் கடைவது முதலிய கர்மங்களைச் செய்து விளையாடவேண்டுமென்ற எண்ணத்துடன், "ஓ பிரம்மதேவரே! ஓ பரமசிவனே! ஓ தேவர்களே! நான் சொல்வதைச் சாவதானர்களாகக் கேளுங்கள். உங்களுக்கு க்ஷேமமுண்டாகும். தானவர்களுக்கும், தைத்தியர்களுக்கும் இது க்ஷேம காலமாகையால் உங்களுக்கு க்ஷேம காலம் வருகிறவரையில் அவர்களுடன் சிநேகமாக இருக்கவேண்டும். ஆனதால் அவர்களிடஞ் சென்று சிநேகஞ்செய்துகொள்ளுங்கள். பெட்டியில் அடைக்கப் பட்டிருக்கும் சர்ப்பமானது தான் வெளியில் வருவதற்காக எலியைச் சிநேகித்து, அதைக்கொண்டு பெட்டியில் துவாரஞ்செய்து அதன் வழியாக வெளியில் வந்து

எலியைக் கொல்வதுபோலச் சத்துருக்களாலும் காரியம் இருக்குமானால் அவர்களுடன் சிநேகஞ்செய்துகொள்ள வேண்டும். அசுரர்கள் பலசாலிகளாக இருப்பதால் அவர்களை ஒத்தாசையாகக்கொண்டு அமிருதத்திற்காக முயற்சியுங்கள். அமிருதத்தைப் புசித்தால் மரணமில்லாமலிருக்கலாம். திருப்பாற்கடலில், சகல ஒஷதிகளையும், கொடிகளையும் போட்டு மந்தர மலையை மத்தாக வைத்துக்கொண்டு, வாசுகியைக் கயிருக வைத்து என்னுடைய சகாயத்தால் கடையுங்கள்; உங்களுக்குப் பலன் கிடைக்கும். அசுரர்கள் சிரமத்தை அடைவார்களேயொழிய அவர்களுக்கு அமிருதங் கிடைக்காது. அவர்கள் சம்மதிப்பார்களானால் நீங்களும் ஒப்புக்கொள்ளுங்கள். நல்ல வார்த்தையால் காரியத்தை முடித்துக்கொள்வதுபோலக் கோபத்தால் அடையமுடியாது. சமுத்திரத்தைக் கடையும்போது காலகூடமென்ற விஷமுண்டாகும். அதனைக் கண்டு பயப்படவேண்டாம். பின்னும், சமுத்திரத்திலிருந்து உண்டாகும் வஸ்துக்களிடத்தில் கோபிக்கவேண்டாம்; ஆசைப்படவேண்டாம்" என்று ஆஞ்ஞாபித்து சுதந்திரராகிய பகவான் மறைந்தார். பின்பு பிரம்மதேவரும் பரமசிவனும் பகவானுக்கு நமஸ்காரஞ்செய்து தமது உலகஞ் சென்றார்கள். தேவர்கள் பலிச்சக்கரவர்த்தியின் சமீபஞ் சென்றார்கள்.

28—38. அப்போது அசுரர்கள் தேவர்களை அடிக்க ஆரம்பித்தார்கள். அதனைக் கண்ணுற்ற பலிச் சக்கரவர்த்தி சந்தி, விக்கிரகம் இவைகளுக்குரிய காலத்தையறிந்தவராகையாலும், புண்யசுலோகராகையாலும் தன்னுடைய சேவகர்களைத் தடுத்தார். தேவர்கள் விரோசனனுடைய புத்திரரும், அசுர சேனாதிபதிகளால் காப்பாற்றப்பட்டவரும், மிகுந்த காந்தியுள்ளவரும், எல்லாரையும் ஜயித்தவருமான பலியின் சமீபஞ் சென்றார்கள். மகேந்திரன் மிக்க புத்திசாலியாகையால் நல்ல வார்த்தைகளால் பலியைச் சமாதானப்படுத்தி, புருஷோத்தமனுகிய பகவான் சொன்ன விஷயத்தை இனிமையான வார்த்தைகளால் பலிச்சக்ரவர்த்தியினிடஞ்

சொன்னார். அது பலிக்கும் சம்மதமாக இருந்தது. சம்பரன், அரிஷ்டநேமி முதலிய அசுர சேனாதிபதிகளும் அதனை ஒப்புக்கொண்டார்கள். பின்பு தேவர்களும் அசுரர்களும் "சமுத்திரத்தைக் கடைந்து அமிருதத்தை இவர்களும் புசிக்கிறது" என்ற உடன்படிக்கை பேசிக் கொண்டு அதற்காக முயன்றார்கள். மந்தர மலையைத் தங்கள் பலத்தால் பிடுங்கி, பரிகம்போன்ற கைகளால் தாங்கி, கர்ஜித்துக்கொண்டு சமுத்திரத்திற்குக்கொண்டு போனார்கள். ஆனாலும் வெகுதூரம் மலையைத் தூக்கிக் கொண்டு வந்ததனால் தேவர்களும் அசுரர்களும் களைத்து, வழியில் மலையைத் தூக்கச் சக்தியற்றவர்களாகிக் கீழே போட்டார்கள். அந்த மலை விழுந்ததனால் அநேக தேவர்களும், அசுரர்களும் அடிக்கப்பட்டு பிராணமடைந்தார்கள். சிலருக்குக் கைகள் முறிந்தன. மற்றுஞ் சிலருக்குத் தொடைகள் போயின. பின்னுஞ் சிலருக்குக் கண்டம் ஒடிந்தது. மற்றவர்கள் கவலையை அடைந்தார்கள். அந்தச் சமயத்தில் ஸ்ரீமந்நாராயணன் அவ்விடஞ் சென்று கருணை நிறைந்த பார்வையால் அவர்களை ஜீவிக்கச்செய்தார். பின்னுமவர் ஒரு கையால் மந்தர மலையைத் தூக்கிக் கருடன்மீது வைத்துக் கொண்டு திருப்பாற்கடல் சென்றார். தேவர்களும் அசுரர்களும் பின் தொடர்ந்தார்கள். கருடன் பாற்கடலில் அந்த மலையைத் தள்ளிவிட்டு ஸ்ரீ பகவானிடம் விடைபெற்றுத் தமது இருப்பிடஞ் சென்றார். (கருடன் அவ்விடமிருந்தால் வாசுகி அவ்விடம் வரமாட்டானென்பது கருதது.)

# அத்தியாயம் 7

## காலகூட விஷத்தைப் பரமசிவன் பானஞ்செய்தது

அந்தத் தேவர்களும், அசுரர்களும் நாகங்களுக்கு அதிபதியான வாசுகியினிடம் சென்று, "அமிருதத்தைக் கடைந்து எடுக்கப்போகிறோம்; நீயும் அதனைப் புசிக்கலாம். அதற்கு ஒத்தாசை செய்" என்று கேட்டுக்கொண்டு வாசுகியைக் கயிறாக மந்தர மலையில் சுற்றி மிகுந்த சந்தோஷத்துடன் சமுத்திரத்தைக் கடைந்தார்கள். அப்பொழுது ஸ்ரீமந் நாராயணன் வாசுகியைத் தலைப்பக்கத்தில் பிடித்துக்கொண்டார். தேவர்களும் மிகுந்த முயற்சியுடன் அதே பக்கத்தைப் பிடித்துக்கொண்டார்கள். அதனைக் கண்ணுற்ற அசுர சேனாதிபதிகள், 'வேதாத்தியயனம் முதலியவைகளைச் செய்து பிரசித்தர்களான நாங்கள் பாம்பின் வாலைப் பிடித்துக் கொள்ளமாட்டோம்; சர்ப்பத்தின் வாலைத் தொடுவது மங்களமான காரியமல்ல' என்று நினைத்துப் பேசாமல் நின்றார்கள். அதனைக் கண்ட புருஷோத்தமன் சிரித்துக்கொண்டு சர்ப்பத்தின் தலைப் பக்கத்தை விட்டு வாலைப் பிடித்துக்கொண்டார். தேவர்களும் அந்தப் பக்கமே சென்றார்கள். இப்படி கச்யபருடைய புத்திரர்கள் மிகுந்த முயற்சியுடன் இரண்டு கட்சியாக நின்று சமுத்திரத்தைக் கடைந்தார்கள். அப்பொழுது அந்த மந்தர மலையானது ஜலத்திற்குள் அழுந்தியது. பல சாலிகளால் கடையப்பட்டும் அசையவில்லை. அதனைக் கண்ட தேவரும் அசுரரும் மனத்தில் மிகவும் கவலையடைந்தார்கள்; அவர்களுடைய முகம் வாடியது. மேலும் அவர்கள், தங்களுடைய முயற்சியானது வீணாகப் போனதால் வருத்தமடைந்தார்கள். அதனைக் கண்ட ஸ்ரீ மகாவிஷ்ணு ஆமையாக அவதரித்து, சமுத்திர ஜலத்துக்குள் பிரவேசித்து, அந்த மலையை முதுகில் தாங்கினார். அந்த ஆமையின் சரீரமானது லக்ஷம் யோஜனை தூரம் அகலமுள்ளது. மேலும், அந்தச் சரீரம் ஒரு தீவுபோல் விளங்கியது. அதனைக் கண்ட தேவாசுரர்கள் திரும்பவும் சமுத்திரத்தைக் கடைய

ஆரம்பித்தார்கள். இப்படித் தேவர்களாலும், அசுரர்களாலும் அசைக்கப்பட்ட அந்த மந்தர மலையை முதுகில் தாங்கிய பகவான் தினவுக்காகச் சொரிந்துகொள்வதுபோல நினைத்தார். மேலும், அந்தப் பகவான் அசுரர்களிடத்திலும் தேவர்களிடத்திலும், வாசுகியிடத்திலும் பிரவேசித்துப் பலத்தையும், வீரியத்தையும் விருத்திசெய்தார். பின்னும் அவர், மலைபோன்ற ரூபத்துடன் மந்தர மலையின் மேற்பாகத்தை அசையாமல் அழுத்திக்கொண்டும் இருந்தார். பிரம்மதேவர், பரமசிவன், மகேந்திரன் முதலிய தேவர்கள் தோத்திரஞ் செய்தார்கள். புஷ்பமாரி பெய்தது. இப்படி பகவான் மலைக்கு மேலுங் கீழும், தேவர்களிடத்திலும், அசுரர்களிடத்திலும் பிரவேசித்து, அவரவர்களுக்குப் பலத்தை விருத்திசெய்ததால் அவர்கள் மதமுள்ளவர்களாகிக் கடைந்தார்கள். சமுத்திரமானது மத்தாகிய மந்தர மலையினால் கலக்கப்பட்டது. அப்பொழுது வாசுகியின் கண்களிலிருந்து பெருமூச்சு உண்டாயிற்று. அது விஷக்காற்றானதால் அந்த விஷாக்கினியால் பௌலோமன், காலேயன், பலி, இல்வலன் முதலிய அசுரர்கள் எரிக்கப்பட்டு, காட்டுத்தீயினால் எரிக்கப்பட்ட ஸரளவிருட்சங்கள் போல் ஆனார்கள். தேவர்களும் அந்த விஷக் காற்றினால் சிரமத்தையும் அடைந்தார்கள். அவர்களுடைய வஸ்திரம், மாலை, கவசம் முதலியவைகள் கறுத்துப்போயின. அந்தக் காலத்தில் பகவானால் தூண்டப்பட்ட மேகங்கள் மழை பொழிந்தன. சமுத்திரத்தின் அலைக்காற்று வீசியது. இப்படி தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து வெகுகாலம் கடைந்தும் அமிருதம் உண்டாகவில்லை. அப்பொழுது பகவான் தாமே கடைந்தார். அந்தப் பகவான் மேகம்போல் கருத்த திருமேனியுள்ளவர்; பீதாம்பரத்தைத் தரித்தவர்; மின்னல்போல் பிரகாசிக்கின்ற குண்டலங்களுள்ளவர்; மேலான தலைமயிர்களால் பிரகாசிக்கும் தலையுள்ளவர்; வனமாலையைத் தரித்தவர்; அழகான கழுத்துள்ளவர்; அப்படிப்பட்ட பகவான் ஜகத்திற்கு அபயத்தைக் கொடுக்கும் ஜயசீலமான கைகளால் வாசுகியாகிய கயிற்றைப் பிடித்துக் கடையும்

பொழுது அவருடைய சரீரம் ஒரு மலைபோலிருந்தது. இப்படிக் கடையும்பொழுது மீன்கள், நண்டுகள், சர்ப்பங்கள், ஆமைகள், திமிங்கலங்கள் ஆகிய இவை கலங்கின. ஹாலாஹலம் என்ற விஷமானது முதலில் உண்டாயிற்று. அந்த விஷத்தின் வேகமானது சகல திக்குகளிலும் மேலுங் கீழும் பரவி, சகிக்க முடியாததாகவும், நிவர்த்திக்கக்கூடாததாகவும் இருந்தது. அதனைக் கண்டு பயந்து ஓடிய தேவர்கள் முதலியோர் தங்களை வேறொருவரும் காப்பாற்றாததால் பரமசிவனைச் சரணமடைந்தார்கள். அந்தப் பரமசிவன் தேவர்களுக்குச் சிறந்தவர்; மூவுலகத்தின் க்ஷேமத்திற்காகப் பார்வதியுடன் கைலாசத்தில் தவஞ்செய்பவர்; அவரை நோக்கிப் பிரஜாபதிகள் நமஸ்கரித்துப் பின்வருமாறு தோத்திரஞ்செய்தார்கள்: 'ஓ தேவர்களுக்குந் தேவரே! மகாதேவ! சகல பிராணிகளின் சுருபியாக இருப்பவரே! அந்தர்யாமியாக இருந்து பூதங்களைச் சேஷ்டிக்கச் செய்பவரே! மூவுலகத்தையும் எரிக்கக்கூடிய இந்த விஷத்தைக் கண்டு பயந்து சரணமடைந்தவர்களான எங்களைக் காப்பாற்றும்; சகல பிராணிகளுக்கும் பந்தத்தையும் மோட்சத்தையும் கொடுப்பவர் நீர் ஒருவரே. ஆகவே வித்வான்கள், சரண மடைந்தவர்களுடைய உபத்திரவத்தைப் போக்கடிப்பவரும் குருவுமாகிய உம்மைப் பூஜிக்கிறார்கள். ஓ மகிமை பொருந்தியவரே! நீர் உம்முடைய சக்தியும் முக்குண சுரூபமுமான மாயையைக்கொண்டு ஜகத்தைப் படைப்பது, காப்பாற்றுவது, அழிப்பது ஆகிய இவைகளைச் செய்யும்பொழுது முறையே பிரம்மா, விஷ்ணு, பரமசிவன் என்ற பெயரை அடைகிறீர். நீர் பிரம்மமே. காரிய காரண ரூபமான ஜகத்தை உண்டுபண்ணுகிறவரும் நீரே; பலவகையான ஜகத்தாகத் தோன்றுகிறவரும் நீரே; ஆத்மாவாக இருப்பவரும் நீரே. உம்முடைய உண்மையைத் தெரிந்துகொள்வது மிகவும் சிரமம். நீர் வேதத்திற்குக் காரணம்; ஜகத்திற்கு ஆதியாயிருப்பவர்; ஆத்மா, பிராணன், இந்திரியங்கள், திரவியம் ஆகிய இவைகளுக்குக் காரணமாகிய குணங்கள், சுபாவங்கள் இவைகளும் உம்முடைய சுரூபம். மேலும் நீர், கால

சுரூபி; யாக சுரூபி; ஸத்ய சுரூபி; ரித சுரூபி; தர்ம சுரூபி. பிரணவமானது உம்மையே ஆசிரயித்திருக்கிறது; சகல தேவசுரூபியான அக்னியே உமக்கு முகம். ஓ ஜகத்தைப் படைப்பவரே! பூமியே உம்முடைய பாதாரவிந்தம். சகல தேவதா சுரூபியே! காலமே உம்முடைய நடை. திக்குகளே காதுகள். வருணனே நாக்கு. ஆகாயமே தொப்புள். வாயுவே மூச்சுக் காற்று. சூரியனே நேத்திரம். ஜலமே ரேதஸ். உம்முடைய ஆத்மாவானது சகல ஜீவர்களுக்கும் ஆசிரயமாக இருக்கிறது. சந்திரன் உம்முடைய மனதாக இருக்கிறார். த்யுலோகம் உமக்கு சிரஸ். சமுத்திரங்கள் உமக்கு வயிறு. மலைகளே எலும்பு. சகல ஓஷதிகளும் கொடிகளும் உமக்கு ரோமங்களாகின்றன. சந்தஸ்ஸுக்களே ஏழு தாதுக்களாகின்றன. வேதசுரூபியாக இருப்பவரே! தருமமே உம்முடைய ஹிருதயம். ஓ ஈச! ஐந்து உபநிஷத்துக்கள் உம்முடைய முகங்கள். அவைகளால் முப்பத்தெட்டு மந்திர வர்க்கங்கள் ஏற்படுகின்றன. ஞான சுரூபமும், பரமார்த்த தத்வமுமான தேஜோரூபமே உம்முடைய சுரூபம். அதர்மமானது உம்முடைய சாயை; எந்தக் குணங்களால் ஜகத் சிருஷ்டிக்கப்படுகிறதோ, அந்த மூன்று குணங்களும் உம்முடைய மூன்று கண்கள். சாஸ்திரத்தைச் செய்தவரான உமக்கு காயத்ரீ முதலிய சந்தஸ்ஸுள்ளபுராதனமாகிய வேதமேசங்கற்பமாகிறது. ஓ பரமசிவ! தேஜோ ரூபமும், பேதமற்றதும், பிரம்ம சுரூபமுமான உம்முடைய ஸ்வரூபமானது ரஜோ குணமற்றது; தமோ குணமற்றது; ஆனதால் சகல லோகபாலர்களாலும், பிரம்மதேவராலும், ஸ்ரீ மகாவிஷ்ணுவினாலும் அடைய்க்கூடாதது; பிரளய காலத்தில் இந்த ஜகத்தானது உம்முடைய நேத்திரத்திலிருக்கும் அக்னியின் பொறியால் எரிக்கப்பட்டுச் சாம்பலாக ஆகிறது. ஆனதால் லோகத்தை உபத்திரவிக்கும் மன்மதன், தக்ஷன், திரிபுரர்கள், யமன், காலகூட விஷம் ஆகிய இவைகளை நீர் நாசஞ் செய்ததைப்பற்றித் ஸ்தோத்திரஞ்செய்வது உசிதமல்ல. நீர் ஆத்மாராமர்களும் ஆசாரியர்களுமான பெரியோர்களால் தியானிக்கப்படும் பாதங்களுள்ளவர்; தவஞ்செய்பவர்; அப்படிப்பட்ட உம்மை எவர்

கள் பார்வதியுடன் சேர்ந்து சஞ்சரிப்பவரென்றும் (காமி), சுடுகாட்டில் வசிப்பவரென்றும், உக்கிரரென்றும் வெட்கமில்லாமல் சொல்லுகிறார்களோ, அவர்கள் உம்முடைய சுரூபத்தை அறியாதவர்கள். காரியங்களுக்கும், காரணங்களுக்கும், பரனுக்கும் மேலான வராகிய உம்முடைய சுரூபமானது பிரம்மா முதலிய எங்களாலும் அறியமுடியவில்லை. எங்களால் சிருஷ்டிக்கப்பட்டதைத் தெரிந்துகொள்ள முடியுமே யொழிய எங்களுக்கு மேலானதை எப்படி அறியமுடியும்? உம்மை எப்படி எங்களால் துதிக்கமுடியும்? ஆனாலும் சக்திக்குத் தக்கபடி சொல்லுகிறோம். இந்த உம்முடைய ஸ்வரூபத்தை மாத்திரம் பார்க்கிறோம். மேலானதை அறியவில்லை. லோகத்தின் க்ஷேமத்திற்காகவே நீர் சரீரமுள்ளவராக இருக்கிறீர்" என்றார்கள்.

36—40. பிரஜைகள் காலகூடத்தால் துக்கிப்பதைப் பார்த்துச் சகல பிராணிகளுக்கும் நன்மை செய்பவராகிய பரமசிவன் தம்முடைய மனைவியை நோக்கி, 'ஓ பவானி! தேவசுரர்கள் அமிருதத்திற்காகப் பாற்கடலைக் கடையும்பொழுது காலகூட மென்ற விஷமுண்டாயிற்று. அதனால் பிரஜைகள் தாபத்தை அடைகிறார்கள். ஆனதால் அவர்களுடைய உயிரைக் காப்பாற்றவேண்டும். தீனர்களை ரட்சிப்பது பிரபுவின் கடமை. சாதுக்கள் நிலையில்லாத தங்கள் உயிரைக் கொடுத்துப் பிராணிகளைக் காப்பாற்றுகிறார்கள். மாயையால் ஜனங்கள் மோகத்தை அடைந்து ஒருவருக்கொருவர் விரோதப்படுகிறார்கள். அவர்களிடத்தில் எவன் கிருபைசெய்கிறானோ, அவனிடத்தில் சகல ரூபமுள்ளவரான ஸ்ரீ மகாவிஷ்ணு பிரியப்படுகிறார். அவர் பிரியப்பட்டால் நான் சந்தோஷப்படுகிறேன். அதனால் சகல லோகங்களும் திருப்தியடைகின்றன. என்னுடைய ஜனங்கள் க்ஷேமமாக வசிக்கட்டும். இந்த விஷத்தை நான் புசிக்கிறேன்" என்றார்.

41—46. அதனைக் கேட்ட பார்வதி, பகவானுடைய மகிமையை அறிந்தவளாகையால் சம்மதித்தாள். பின்பு பகவான் எங்கும் வியாபித்திருக்கும் ஆலகால விஷத்

தைக் கையிலெடுத்துப் புசித்தார். ஜலத்தின் மலமாகிய அந்த விஷமானது தன் வீரியத்தைப் பரமசிவனிடத்தி லும் காண்பித்தது. அதாவது பரமசிவனுடைய கழுத் தைக் கருமை நிறமுள்ளதாகச் செய்தது. அது அவ ருக்குப் பூஷணமாயிற்று. அதனால் நீலகண்டரென்ற பெயருண்டாயிற்று, பெரும்பாலும் சாதுக்கள் பிற ருடைய துக்கத்தைப் பார்த்துச் சகிக்கமாட்டார்கள். அப்படி அநுதாபத்தை அடைவது சகல சுரூபியான பரமபுருஷனை ஆராதித்ததாகும். தேவதேவராகிய பரமசிவன் விஷத்தைப் புசித்து ஜனங்களைக் காப்பாற்றி யதைக் கேட்டு ஜனங்களும், பார்வதியும், பிரம்மதேவரும், ஸ்ரீமந்நாராயணனும் ஸ்லாகித்தார்கள். இப்படி பகவான் விஷத்தைப் புசிக்கும் சமயத்தில் அவருடைய கையி லிருந்து விழுந்த விஷத்துளிகளை அடைந்த பிராணிகள் தேள் என்றும், சர்ப்பங்கள் என்றும் சொல்லப்படுகின் றன. அதனை யடைந்த ஓஷதிகள் விஷக்கொடிகளாயின.

# அத்தியாயம் 8

## பகவான் மோஹினி ரூபத்தைத் தரித்தது

காலகூடத்தைப் பரமசிவன் புசித்தபின் தேவர்களும் அசுரர்களும் திரும்பவும் கடைந்தார்கள். அப்பொழுது காமதேனு உண்டாயிற்று; மகரிஷிகள் தேவலோகத்தை அடைவதற்குச் சாதனமான யாகத்தின் ஹவிஸ்ஸுக் காக அதனைக் கிரகித்துக்கொண்டார்கள். பின்பு சந் திரன்போல் வெளுத்த உச்சைசிரவஸ் என்ற குதிரை உண்டாயிற்று. பலசாலியான மகேந்திரன் பகவானு டைய வார்த்தையை நினைத்துக்கொண்டு அதனை விரும்பவில்லை. பின்பு ஐராவதமென்ற வெள்ளை யானை யுண்டாயிற்று. அது கைலாஸ பர்வதத்தின் சிகரம் போன்ற நான்கு தந்தங்களுள்ளது. பின்பு தேவலோகத் திற்கு அலங்காரமாகிய பாரிஜாதமென்ற விருட்சமுண் டாயிற்று. பூமியில் தண்ணீர் யாசகர்களுடைய மனோ

ரதத்தைப் பூர்த்திசெய்வதுபோல் சுவர்க்கலோகத்தில் அந்த விருட்சமானது யாசகர்களுடைய இஷ்டத்தை நிறைவேற்றுகிறது. பின்பு அப்ஸர ஸ்திரீகள் உண்டா னார்கள். அவர்கள் ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டவர் கள்; நல்ல வஸ்திரத்தை உடுத்திக்கொண்டவர்கள்; அழகான நடை, பார்வை முதலியவைகளுள்ளவர்கள்; சுவர்க்கத்திலிருப்பவர்களுக்கு அவர்கள் ஸ்திரீகள். அதன் பிறகு பகவக்பக்தியுள்ளவளாகிய ஸ்ரீ தேவி யுண்டானாள். மின்னல்போன்ற அவளுடைய காந்தியால் திக்குகள் பிரகாசித்தன. அவளிடத்தில் தேவர்களும், அசுரர்களும், மனிதர்களும் ஆசைப்பட்டார்கள். அவ ளுடைய ரூபம், ஔதார்யம், வயது, காந்தி, மகிமை ஆகிய இவைகளால் அவர்களுடைய மனது கலங்கியது. மகேந்திரன் அவளுக்கு அற்புதமான ஆசனங் கொடுத் தார். சிறந்த நதிகள் திவ்ய சரீரத்துடன் தங்கக் குடங் களில் ஜலத்தைக் கொண்டுவந்தன. அபிஷேகத்திற்கு உபயோகமான சகல ஓஷதிகளையும் பூமிதேவி உற்பத்தி செய்தாள். பசுக்கள் பஞ்ச கவ்யங்களைக் கொடுத்தன. வசந்த ருதுவானது சித்திரை வைகாசி மாதங்களிலுண் டாகும் பழம் முதலியவைகளைக் கொடுத்தது. மகரிஷி கள் அபிஷேகத்திற்குரிய ஏற்பாட்டைச் செய்தார்கள். கந்தர்வர்கள் கானஞ்செய்தார்கள்; நடிகள் ந்ர்த்தனஞ் செய்தார்கள்; பாடினார்கள்; மேகங்கள் மிருதங்கம், முர ஜம், பணவம், கோமுகம், சங்கம், வேணு (புல்லாங்குழல்) முதலிய வாத்தியங்கள் முழங்கின. திக் கஜங்கள் பூர்ண கலசங்களைக்கொண்டு அபிஷேகஞ் செய்தன. பிராமணர் கள் மந்திரங்களை யுச்சரித்தார்கள். சமுத்திரமானது பட்டு வஸ்திரத்தைக் கொடுத்தது. வருணன் வைஜயந்தி யென்ற மாலையைக் கொடுத்தார். விசுவகர்மாவானவர் பலவகையான ஆபரணங்களைச் சமர்ப்பித்தார். ஸரஸ் வதியானவள் ஹாரத்தைக் கொடுத்தாள். பிரம்ம தேவர் தாமரை மலரைக் கொடுத்தார். நாகங்கள் குண்டலங்களைக் கொடுத்தன. அவைகளைப் பெற்றுக் கொண்ட லக்ஷ்மீதேவி அழகான கன்னங்களாலும், குண்டலங்களாலும் பிரகாசிக்கும் வெட்கம், சிரிப்பு இவைகளுடன் கூடினதுமான முகமுள்ளவளாக இருந்

தாள். குங்குமப்பூ முதலிய வாசனைத் திரவியங்கள் சேர்ந்த சந்தனத்தால் பூசப்பட்ட பருத்த ஸ்தனங்களுள்ளவளாகவு மிருந்தாள். அப்படிப்பட்ட ஸ்ரீ தேவி புஷ்பமாலையைக் கையில் வைத்துக்கொண்டு யாரைக் கணவராக வரிக்கலாமென்று தங்கக்கொடிபோல் அலைந்தாள். கந்தர்வர்கள், யக்ஷர்கள், ஸித்தர்கள், சாரணர்கள் முதலிய சுவர்க்கவாசிகளான தேவர்களில் ஒருவராவது நித்யனாக இருக்கவில்லை; தோஷமற்றவராகவும், குணசாலியாகவும் இருக்கவில்லை. அப்பொழுது அவள் பின்வருமாறு தனக்குள் யோசிக்கலானாள்: "துர்வாஸர் முதலிய மகரிஷிகள் கோபத்தை ஜயிக்காதவர்கள். பிருகஸ்பதி, சுக்கிரன் முதலியவர்கள் ஞானமுள்ளவர்களானாலும் சங்கமற்றவர்களல்லர் (பிறருடைய சேர்க்கை). பிரம்மதேவர் முதலியவர்கள் மகான்களானாலும் காமத்தை ஜயித்தவர்களல்லர். இந்திரன் முதலியவர்கள் பிறரை அபேக்ஷித்தவர்களாகையால் அவர்கள் பிரபுக்களல்லர். பரசுராமன், யமன் முதலியவர்கள் தர்மிஷ்டர்களானாலும் பிராணிகளிடத்தில் அன்பில்லாதவர்கள். சிபி முதலியவர்கள் கொடுப்பவர்களானாலும், அவர்களுடைய தானம் முக்திக்குக் காரணமல்ல; கார்த்தவீர்யன் முதலியவர்களிடத்தில் பராக்கிரம மிருந்தாலும் அது காலத்தால் குறைக்கப்படுகிறது. ஸனகாதிகள் குணசம்பந்தமற்றவர்களானாலும் எப்பொழுதும் சமாதி நிஷ்டர்களாகையால் எனக்கு அவர்கள் மேலானவர்களாகத் தோற்றவில்லை. மார்க்கண்டேயர் முதலியவர்கள் தீர்க்காயுள் உள்ளவர்களானாலும், எப்பொழுதும் இந்திரியங்களை அடக்கினவர்களாகையால் மங்களமான சுபாவமுள்ளவர்களல்லர் மங்கள சுபாவமுள்ளவர்கள் தீர்க்கமான ஆயுள் உள்ளவர்களாகவில்லை. தீர்க்காயுளும், மங்கள சுபாவமும் (இந்திரியங்களை அடக்காமலிருப்பது) பரமசிவனிடத்திலிருந்தாலும் அவர் சுடுகாட்டில் வசிக்கிறார். தோஷமற்றவரும், மங்கள சுபாவமுள்ளவருமான ஒருவர் இருக்கிறார். அவர் என்னிடம் ஆசைப்படுகிறதில்லை" என்று ஆலோசித்து ஒன்றையும் விரும்பாதவரும், தர்மம், ஞானம் முதலிய நற்குணங்களுள்ளவருமான ஸ்ரீ மகா

விஷ்ணுவையே பர்த்தாவாக வரித்தாள். (அவர் ஆத்ம ராமையால் ஒன்றிலும் பற்றுதலில்லாதவர்; ஆனாலும் அவரை அணிமா முதலிய சித்திகள்போல் நானும் அடைகிறேன். அவரைச் சேவிப்பதாலேயே ஸ்திரதாத் தையாக ஆகிவிடுவேனென்று தாத்பரியம்.) பின்பு மதித்துச் சப்திக்கும் வண்டுகளுள்ள தாமரைப் புஷ்ப மாலையை ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய கழுத்தில் போட்டு அவருடைய வக்ஷஸ்தலத்தை விரும்பியவளாகி நின்றாள். மிகுந்த விபூதியுள்ளவளும், மூவுலகத்திற்கும் மாதாவு மான அந்த லக்ஷ்மீதேவியின் இஷ்டப் பிரகாரம் நாரா யணன் அவளைத் தம்முடைய மார்பில் வசிக்கும்படி செய்தார். அவளும் அவ்விடத்தில் வசித்து, கருணைப் பார்வையால் மூவுலகத்தையும் விருத்திசெய்தாள். அப்போது சங்கம், தூர்யம், மிருதங்கம், பேரி முதலிய வாத்தியங்கள் முழக்கப்பட்டன. தேவ ஸ்திரீகள் நர்த்த னஞ்செய்தார்கள்; கானஞ்செய்தார்கள். பிரம்மா, ருத்ரன், அங்கிரஸ் முதலியவர்கள் வைஷ்ணவமான மந்திரங்களை யுச்சரித்து, பிரபுவை ஸ்தோத்திரஞ் செய் தார்கள்; புஷ்பமாரி பெய்தார்கள். தேவர்கள், பிரஜா பதிகள் முதலிய பிரஜைகள் லக்ஷ்மியின் கருணாதிருஷ் டியை அடைந்து, நல்ல சுபாவம் முதலிய குணங்களை யும் ஆனந்தத்தையும் அடைந்தார்கள். மேலும், லக்ஷ்மி யினால் உபேக்ஷிக்கப்பட்ட தைத்யர்கள், தானவர்கள் ஆகிய இவர்கள் பலமற்றவர்களாகவும், முயற்சியற்றவர்க ளாகவும், காந்தியற்றவர்களாகவும், ஆசையுள்ளவர்க ளாகவும் ஆனார்கள். பின்பு வாருணியான கன்னிகை யுண்டானாள் (ஸுரைக்கு அதிதேவதை). அவளை அசுரர்கள் கிரகித்துக்கொண்டார்கள். அதனை மகா விஷ்ணுவும் ஒப்புக்கொண்டார். அதன் பிறகு சமுத்தி ரத்திலிருந்து மிகுந்த அற்புதனான ஒரு புருஷன் உண் டானார். அவருடைய கைகள் நீண்டவைகளும், பருத்த வைகளுமாக இருந்தன; கழுத்து சங்கம் போலிருந்தது; கண்கள் சிவந்திருந்தன. அவர் யுவாவாகவும், மாலை யைத் தரித்தும், சகல ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டும் இருந்தார். மேலுமவர் பீதாம்பரத்தைத் தரித்தவர்; விசாலமான மார்புள்ளவர். மேலான ரத்ன

குண்டலங்களுள்ளவர்; மினுமினுப்புள்ளதும், சுருட்டை யுமான தலைமயிருள்ளவர்; ஸிம்மம்போன்ற பராக்கிரமமுள்ளவர்; புன்சிரிப்புள்ளவர். அவருடைய் கையில் அமிருதம் நிறைந்த குடமிருந்தது. அவர் பகவானுடைய் அம்சத்தின் அம்சம். அவருக்குத் தன்வந்தரியென்று பெயர். யாகத்தில் ஹவிர்ப்பாக முள்ளவர்; ஆயுர்வேதத்தை அறிந்தவர். அமிருத கலசத்துடன் கூடிய் அவரைக் கண்டவுடன் எல்லா வற்றையும் விரும்பும் எல்லா அசுரர்களும் பலாத்கார மாக அமிருதகலசத்தை அபகரித்தார்கள். அப்பொழுது தேவர்கள் கவலையுள்ளவர்களாகி ஸ்ரீ மகாவிஷ்ணுவைச் சரணமடைந்தார்கள்.

36—45. அப்பொழுது தேவர்கள் வருத்தப்படு வதைப் பார்த்து பகவான், பக்தர்களுடைய மனோரதத் தைப் பூர்த்திசெய்பவராகையால், "அமிருதத்திற்காக நீங்கள் கவலைப்படவேண்டாம்; என்னுடைய் மாயை யால் உங்களுடைய் காரியத்தை முடிக்கிறேன்" என்று தேவர்களைச் சமாதானப்படுத்தி, அந்தர்த்தானத்தை அடைந்தார். அப்பொழுது தேவர்களும் அசுரர்களும் 'எனக்கு, எனக்கு' என்று அமிருதத்திற்காக யுத்தஞ் செய்தார்கள். பலமற்ற தேவர்கள் பலசாலிகளான அசுரர்களை நோக்கி, 'ஸத்ர யாகத்தில் எல்லோருக்கும் எப்படி பலம் சமமாகக் கிடைக்கிறதோ அப்படி தேவர் களும் இவ்விஷயத்தில் உங்களைப்போல் சிரமப்பட்டவர் களாகையால் பலத்திலும் பாகத்தை அடையத்தக்கவர் கள்' என்று சொல்லித் தடுத்தார்கள். இதற்குள் சகல உபாயங்களையும் அறிந்தவராகிய் ஸ்ரீ விஷ்ணுவானவர் ஸ்திரீ வேஷத்தை எடுத்துக்கொண்டார். அந்த ஸ்வ ரூபமானது அழகான நீலோத்பலம் போன்ற காந்தி யுள்ளது; அழகான சகல அவயவங்களுமுள்ளது; அழகான கன்னங்களும் உயர்ந்த மூக்குமுள்ள முகமுள் ளது; புதிதாக யௌவன வயதினால் பருத்த ஸ்தனங்க ளுள்ளது; இளைத்த வயிறுள்ளது; அவளுடைய் முக வாசனைக்காக வண்டுகள் பின்செல்லுகின்றன. அவை களை யுத்தேசித்து ஓங்காரஞ் செய்கிறாள். மலர்ந்த

மல்லிகா புஷ்பத்தின் மாலையைச் சிரசில் வைத்துக் கொண்டிருந்தாள் ; அவளுடைய அழகான கழுத்தில் மாலைகள் பிரகாசிக்கின்றன. அழகான கைகளில் தோள்வளைகள் பிரகாசிக்கின்றன ; சுத்தமான வஸ்திரம் முதலியவை விளங்குகின்றன. அதில் ஒட்டியாணம் பிரகாசிக்கிறது. அப்படிப்பட்ட மோஹினி ரூபத்தைத் தரித்த பகவான் வெட்கம், சிரிப்பு இவைகளுள்ள பார்வையாலும், அழகான புருவங்களாலும், அசுரர்களுடைய மனத்தில் மன்மதனை விருத்திசெய்தார். (அசுரர்கள் மோஹினியைக் கண்டு மோகித்தார்களென்று தாத்பர்யம்.)

# அத்தியாயம் 9

## பகவான் தேவர்களுக்கு அமிருதத்தைக் கொடுத்தது

இப்படி தேவர்களும், அசுரர்களும் திருடர்கள் போல அமிருத குடத்தை ஒருவருக்கொருவர் தெரியாமல் அபகரித்துச் சண்டை செய்துகொண்டிருக்கும் பொழுது அவ்விடம் வந்த மோஹினியைக் கண்டு அசுரர்கள், "இவளுடைய ரூபம் ஆச்சரியப்படக்கூடியது. தேஜஸ் அபூர்வமானது; இவள் யௌவன வயதுள்ளவள்" என்று மோகித்து மன்மதனுக்கு வசப்பட்டவர்களாகி அவளை நோக்கி, "தாமரை மலர் போன்ற கண்களுள்ளவளே ! நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? எதனைச் செய்ய விரும்புகிறாய்? யாருடைய மகள்? எங்களுடைய மனத்தை அபகரிக்கிறாய். மேலும் தேவர்கள், தைத்யர்கள், ஸித்தர்கள், கந்தர்வர்கள், சாரணர்கள், மனிதர்கள் முதலியவர்களால் நீ அனுபவிக்கப்படாதவளென்று நினைக்கிறோம். பிராணிகளுடைய இந்திரியங்கள், மனம் ஆகிய இவைகளைத் திருப்தி செய்வதற்காகவே பிரம்மதேவர் உன்னை அனுப்பியிருக்கிறார். ஒரே விஷயத்தைப்பற்றிச் சண்டை செய்கிறவர்களும் ஞாதிகளும், ஒருவர்க்கொரு

வர் விரோதமுள்ளவர்களுமான எங்களுக்கு அமிரு தத்தைப் பிரித்துக் கொடு. நாங்கள் கச்யபருடைய புத்திரர்கள்; சகோதரர்கள்; எங்களுக்குப் பட்சபாத மின்றி அமிருதத்தைப் பிரித்துக் கொடு'' என்றார்கள்.

8—26. அதனைக் கேட்ட மோஹினியானவள் அழகான கடாக்ஷத்தால் அவர்களைப் பார்த்துச் சிரித் துக்கொண்டு, ''கச்யபருடைய புத்திரர்களான நீங்கள் விபசாரிணியான என்னிடத்தில் எப்படிப் பிரீதி வைத் தீர்கள்? வித்வான்கள் ஸ்திரீகளை நம்பமாட்டார்கள். செந்நாய் முதலிய துஷ்ட மிருகங்கள், ஸ்திரீகள், விபசாரிகள் இவர்களுடைய பிரீதி நிலையற்றது. அவர்கள் அடிக்கடி வெவ்வேறு மனிதனைத் தேடு வார்கள்'' என்றாள். அதனைக் கேட்ட அசுரர்கள் அவ் ளிடம் நம்பிக்கை வைத்துச் சிரித்தார்கள். அமிருத குடத்தை அவளிடம் கொடுத்தார்கள். அதனைப் பெற்றுக்கொண்டு மோஹினியானவள் புன்சிரிப்புடன் அவர்களை நோக்கி, ''உங்களுக்கு அமிருதத்தைப் பிரித்துக் கொடுக்கும் விஷயத்தில் நான் செய்வது நியாயமானாலும், அநியாயமானாலும் நீங்கள் ஆட்சேபி யாமல் சம்மதிப்பதானால் நான் அதனைச் செய்வேன்'' என்றாள். அதனைக் கேட்ட அசுரர்கள் அவளுடைய உண்மையை அறியாதவர்களாகையால் அதற்குச் சம் மதித்தார்கள். பிறகு அவளுடைய உத்தரவின்மேல் தேவர்களும், அசுரர்களும் ஸ்நானஞ் செய்து, உபவாஸ மிருந்து, அக்னியில் ஹோமஞ் செய்து, பசுக்கள் முத லியவைகளைப் பிராமணர்களுக்குத் தானஞ்செய்து, பிராமணர்களுடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுத் தங்க ளிஷ்டப்படி புது வஸ்திரத்தை யுடுத்திக்கொண்டு கிழக்கு நுனியான தருப்பைகளில் உட்கார்ந்தார்கள். இப்படி தேவர்களும் அசுரர்களும் கிழக்கு முகமாக உட்கார்ந்தார்கள். அந்தச் சாலை அகில் தூபத்தால் வாசனையுள்ளதாக இருந்தது. மேலும், அவ்விடத்தில் நெய்விளக்கு எரிந்தது. அந்தச் சமயத்தில் பட்டு வஸ் திரத்தால் பிரகாசிக்கும் இடுப்பையுடையவளும், மெது வாக நடப்பவளும், மதத்தால் கலங்கிய கண்களுள்ள

வளும், தங்கச் சலங்கைகளின் சப்தமுள்ளவளும், குடம் போன்ற ஸ்தனங்களுள்ளவளுமான அந்த மோஹினி அமிருத குடத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அவ் விடம் வந்தாள். லக்ஷ்மிதேவியின் தோழியும், சுவர்ண குண்டலங்களால் அழகான காதுகளாலும் மூக்கினாலும் ரமணீயமான முகமுள்ளவளும், பரதேவதையென்று சொல்லக்கூடியவளும், நழுவிய ஸ்தனவஸ்திரமுள்ளவளு மான அந்த ஸ்திரீயைப் பார்த்துத் தேவர்களும், அசுரர் களும் மோகித்தார்கள். அப்பொழுது ஸ்திரீரூபியான பகவான், "இயற்கையில் குரூர ஜாதிகளான அசுரர் களுக்கு அமிருதத்தைக் கொடுப்பது சர்ப்பத்திற்குப் பாலைக் கொடுப்பது போலாகிறது" என்று நினைத்து அவர்களுக்குக் கொடுக்கவில்லை. தான் செய்தது நியாயமானாலும், அநியாயமானாலும் அசுரர்கள் தங்களுக் குச் சம்மதமென்று ஒப்புக்கொண்டார்கள்; ஆனதால் பக்தர்களான தேவர்களுக்கு அமிருதத்தைக் கொடுப் போம்; நியாயப்படி கொடு என்று அவர்களால் சொல் லப்பட்டிருந்தாலும் குரூர ஜாதிகளுக்கு அமிருதத்தைக் கொடுப்பது நியாயமல்ல" என்று யோசித்தார். ஜகத் திற்கு அதிபதியான பகவான் அந்தத் தேவாசுரர்களைத் தனியே வரிசையாக உட்காரவைத்தார். பின்பு அமிருத குடத்தைக் கையிலெடுத்துக்கொண்டு ஒவ்வொரு பந்தி யிலும் அசுரர்களுடைய சமீபஞ் சென்று பிரியமான வார்த்தைகளைச் சொல்லி, சிலாகித்து அவர்களை ஏமாற்றி, தூரத்திலிருக்கும் தேவர்களுக்கு அமிருதத் தைப் பரிமாறினார். அசுரர்கள், ஸ்திரீகளுடன் விவாதம் செய்வதில் வெறுப்பினாலும், அவளிடத்திலிருக்கும் பிரீதியினாலும், அவளால் செய்யப்பட்டதைத் தாங்கள் ஆட்சேபிக்கிறதில்லை என்று சம்மதித்தபடியாலும், தங் களுக்கும் அவளுக்குமுள்ள விசுவாசம் மாறிவிடுமோ வென்ற பயத்தாலும், தங்களைக் கௌரவப்படுத்திய தாலும் (பலமற்ற தேவர்கள் முந்தி புசிக்கட்டும்; பல சாலிகளான நீங்கள் சிறிது தாமதியுங்கள் என்பது) மௌனமாக இருந்தார்கள். ஸிம்ஹிகையின் புத்திரனை ஸ்வர்பானுவென்பவன் தேவனைப்போல் வேஷந் தரித்து, தேவர்களின் பந்தியில் உட்கார்ந்து அமிருத

பானம் செய்தான். அப்பொழுது சந்திரனும் சூரியனும் 'இவன் அசுரன்' என்று பகவானிடம் தெரிவித்தார்கள். அவர் தமது சக்கராயுதத்தால் அவனுடைய தலையை வெட்டினார். அவனுடைய் தலையானது அமிருத சம்பந்தத்தை அடைந்ததாகையால் அதனைப் பிரம்மதேவர், சூரியன் முதலியவர்களைப் போல் ஒரு கிரகமாகச் செய்தார். அது ராகு எனப்படுகிறது. அவனுடைய உடல் அமிருத சம்பந்தத்தை அடையாததாகையால் கீழே விழுந்தது. அந்த ராகுவானவன் அந்த விரோதத்தை நினைத்துப் பருவ காலத்தில் சந்திர சூரியர்களை எதிர்க்கிறான்.

27—29. இப்படி தேவர்கள் அநேகமாக அமிருதத்தைப் பானம் பண்ணியபோது பகவான் ஸ்திரீ ரூபத்தை விட்டுத் தமது ரூபத்தை எடுத்துக்கொண்டார். தேவர்களும் அசுரர்களும் ஒரே தேசத்தில், ஒரே காலத்தில், ஒரே காரணத்தைக்கொண்டு, ஒரே பலத்தை யுத்தேசித்து யத்தனித்தவர்களானாலும் பலத்தில் வித்தியாசம் ஏற்பட்டது. பகவானுடைய் பாதாரவிந்தத்தை ஆசிரயித்த தேவர்கள் அமிருதத்தைப் பானஞ்செய்தார்கள். அசுரர்களுக்கு அமிருதம் கிடைக்கவில்லை. லோகத்தில் பிராணன், பணம், கர்மம், மனது, வாக்கு இவைகளால் சரீரத்திற்காகவும், புத்திரன் முதலியவர்களுக்காகவும் செய்யப்படும் கர்மங்கள் பேத புத்தியால் செய்யப்படுகிறவைகளாகையால் நல்ல பலத்தைக் கொடுக்கிறதில்லை. அவைகளைக்கொண்டே பகவானை உத்தேசித்துச் செய்யப்படும் கர்மங்கள் எல்லாப் பிராணிகளிடத்திலும் ஈசுவரன் வசிப்பதால் மேலான பலனைக் கொடுக்கின்றன. மரத்தின் வேரில் ஜலம் வார்த்தால் அதன் கிளைக்குப் புஷ்டி உண்டாகிறதல்லவா? அதுபோல எல்லாவற்றிற்கும் மூலமான பகவானை உபாசித்தால் கிளைகள் போன்ற பிராணிகளுக்கு க்ஷேமம் உண்டாகிறது.

# அத்தியாயம் 10

## தேவாசுர யுத்தம்

தானவர்களும், தைத்தியர்களும் பராக்கிரமமுள்ளவர்களானாலும், கர்வமுள்ளவர்களானாலும், சாமர்த்தியமுள்ளவர்களானாலும் ஸ்ரீ பகவானிடத்தில் பக்தி செய்யாதவர்களாகையால் அமிருதத்தை அடையவில்லை. ஸ்ரீ மகாவிஷ்ணு தம்முடைய பக்தர்களான தேவர்களுக்கு அமிருதத்தைக் கொடுத்து எல்லாரும் பார்த்திருக்கும்பொழுது கருடன் மீதேறிச் சென்றார். அசுரர்கள் தேவர்களுடைய க்ஷேமத்தைப் பார்த்துப் பொறாமை கொண்டவர்களாகி ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு யுத்தத்திற்குத் தயாரானார்கள். ஸ்ரீ மந் நாராயணனையே ரக்ஷகராகக்கொண்ட தேவர்களும் அமிருத பானத்தால் மிக்க பலமுள்ளவர்களாகி அசுரர்களை எதிர்த்து யுத்தஞ்செய்தார்கள். இப்படி சமுத்திரக் கரையில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நேர்ந்த யுத்தமானது மிக்க பயங்கரமாக இருந்தது. அவர்கள் மிகுந்த கோபத்துடன் கத்திகளாலும், பாணங்களாலும் அடித்துக்கொண்டார்கள். சங்கம், தூரியம், மிருதங்கம், பேரி, டமரு முதலிய யுத்த வாத்தியங்கள் கோஷிக்கப்பட்டன. யானை, குதிரை, ரதம், காலாட் படை ஆகிய இவைகளுடைய சப்தம் அதிகமாக உண்டாயிற்று. ரதிகர்கள் ரதிகர்களுடனும் (ரதத்தின் மீதிருக்கும் வீரர்கள்), காலாட்கள் காலாட்களுடனும், குதிரைகள் குதிரைகளுடனும், யானைகள் யானைகளுடனும் சேர்ந்து அடித்துக்கொண்டார்கள். சிலர் ஒட்டகத்தின்மீதும், சிலர் யானைகளின்மீதும், மற்றுஞ் சிலர் கழுதைகளின்மீதும், பின்னுஞ் சிலர் கௌர மிருகங்களின்மீதும், மற்றுஞ் சிலர் கரடிகளின்மீதும், சிலர் புலிகளின்மீதும், சிங்கங்களின்மீதும், கழுகு, செந்நாய், சியேனம், பாஸம், திமிங்கலம், சரபம், மகிஷம், கட்க மிருகம், விருஷபம், கவய மிருகம், ருணம், நரிகள், எலிகள், ஓணான், நாய், மனிதன், ஆடு, கிருஷ்ண

ஸாரம், ஹம்ஸம், பன்றி முதலியவைகளின்மீதும், மற்றுஞ் சிலர் ஜலத்தில் சஞ்சரிக்கும் பிராணிகளின் மீதும் ஏறிக்கொண்டு இரண்டு சைன்னியங்களில் பிரவேசித்து யுத்தஞ் செய்தார்கள். அந்த இரண்டு சைன்னியங்களும் பலவகையான துவஜ படங்களாலும், சுத்தமான வெள்ளைக் குடைகளாலும், வஜ்ஜிரப் பிடியுள்ள விலையுயர்ந்த சாமரங்களாலும், வைரங்களால் அலங்கரித்துக் காற்றினால் அசையும் தலைப்பாகையாலும், சூரியனுடைய கிரணம்போலப் பிரகாசிக்கும் ஆயுதங்களாலும், சூரர்கள் தரித்திருக்கும் மாலைகளாலும் பிரகாசித்தன. மேலும், அந்த இரண்டு சைன்னியங்களும் ஜல ஜந்துக்களால் பூர்ணமான சமுத்திரங்கள் போலும் இருந்தன.

16—23. வீரனும் அசுர சேனாதிபதியுமாகிய பலியானவன் ஒரு மேலான விமானத்தின்மீது குடைசாமரம் இவைகளால் உபசரிக்கப்பட்டு உதயமாகும் சந்திரன் போல விளங்கினான். அந்த விமானம் மயனால் உண்டு பண்ணப்பட்டது; அது யஜமானனுடைய இஷ்டப்படி செல்லக்கூடியது ; யுத்தத்திற்கு உபயோகமான சகல சாமான்களாலும் நிறைந்தது ; அற்புதமானது ; குறிப்பிட்டு வர்ணிக்க முடியாதது ; சில சமயம் கண்ணுக்குப் புலப்படுகிறதில்லை; வைஹாயஸ மென்ற பெயருள்ளது அந்தப் பலியின் சேனாதிபதிகளாகிய நமுசி, சம்பரன், பாணன், விப்ரசித்தி, அயோமுகன், துவிமூர்த்தா, காலநாபன், ஹேதி, பிரஹேதி, இல்வலன், சகுனி, பூத சந்தாஸன், வஜ்ர தம்ஷ்ரன், விரோசனன், ஹயக்ரீவன், சங்குசிரஸ், கபிலன், மேக துந்துபி, தாரகன், உக்ர திருக், சும்பன், நிசும்பன், ஜம்பன், உத்கலன், அரிஷ்டன், அரிஷ்ட நேமி, திருபுரத்திற்கு அதிபனாகிய மயன், பௌலோமன், காலேயன், நிவாதகவசர்கள் முதலியவர்கள் அமிருதத்திற்காகத் தாங்கள் மிக்க சிரமப்பட்டும் அது கிடைக்காததனால் தேவர்களுடன் யுத்தஞ் செய்தார்கள். அப்பொழுது அசுரர்களால் தேவர்கள் ஜயிக்கப்பட்டார்கள். அசுரர்கள் சங்கத்தை ஊதினார்கள்; கர்ஜித்தார்கள்.

24—40. அதனைக் கேட்ட தேவராஜன் ஐராவதத்தின் மீதேறி யுத்தத்திற்காகப் பிரயாணப்பட்டார். அது சூரியன் உதய பர்வதத்தை அடைந்தது போலிருந்தது. மேலும், ஐராவதத்தின் இரண்டு கன்னங்களிலிருந்து மதஜலம் பெருகுவது உதய பர்வதத்திலிருந்து நதிகள் பிரவகிப்பதுபோலிருந்தது. வாயு, அக்கினி, வருணன் முதலிய லோகபாலகர்களாகிய சகல தேவர்களும் பலவகையான ஆயுதங்களுடனும் பலவகையான வாகனங்களில் நின்றார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் பெயரைச் சொல்லி அழைத்துக்கொண்டு சத்துரு சைன்யத்தில் பிரவேசித்து யுத்தஞ் செய்தார்கள். பலியானவன் மகேந்திரனுடனும், சுப்ரமண்யர் தாரகனுடனும், வருணன் ஹேதி யென்பனுடனும், மித்திரன் ப்ரஹேதியென்பவனுடனும், யமன் காலநாபனுடனும், விசுவகர்மா மயனென்பவனுடனும், சம்பரன் த்வஷ்டாவுடனும், விரோசனன் ஸவிதாவுடனும், நமுசியானவன் பராஜிதனுடனும், அசுவினி தேவர்கள் விருஷபர்வா வென்பவனுடனும், சூரியன் பாணன் முதலிய பலியின் புத்திரர்களுடனும், ஸோமன் ராகுவுடனும், வாயு புலோமாவுடனும், பத்திரகாளி நிசும்பன், சும்பன் ஆகிய இவர்களுடனும், விருஷாகபியானவர் ஜம்பனுடனும், விவஸ்வானை மஹிஷனென்பவனுடனும், காம்மபுத்திரர்கள் இல்வலன், வாதாபி ஆகிய இவர்களுடனும், காமதேவன் துர்மர்ஷனுடனும், மாதிரு கணங்கள் உத்கலனுடனும், பிரகஸ்பதி சுக்கிரனுடனும், சனைச்சுரன் நரகனுடனும், மருத்துக்கள் நிவாதகவர்களுடனும், வஸுக்கள் காலேயர்களுடனும், விசுவேதேவர்கள் பௌலோமர்களுடனும், ருத்தர்கள் குரோதவசர்களுடனும் யுத்தஞ்செய்தார்கள். இப்படி தேவர்களும் அசுரர்களும் பாணங்கள், கத்திகள், தோமரங்கள் முசுண்டிகள், சக்ரம், கதை, யஷ்டி, பட்டஸம், சக்தி, உல்முகம், பிராஸம், பரச்வதம், நிஸ்திரிம்சம், பல்லம், பரிகம், முத்கரம், பிண்டி, பாலம் ஆகிய ஆயுதங்களால் அடித்துக்கொண்டு துவந்த்வ யுத்தஞ் செய்தார்கள். அப்பொழுது யானைகளும், குதிரைகளும், காலாட்களும், ரதிகளும் அடிபட்டார்கள்.

கைகள் அறுக்கப்பட்டவர்கள் சிலர். மற்றுஞ் சிலருடைய தொடைகள் வெட்டப்பட்டன. சிலருடைய கழுத்துக்களும், விரல்களும் வெட்டப்பட்டன. மேலும் துவஜங்களும், நாண் கயிறும், கத்தியும், கவசமும உடைந்து சிதறின. பின்னும், அந்த யுத்த பூமியிலிருந்து கிளம்பிய தூளியானது திக்குகளையும் சூரியனையும் மறைத்தது. அடிபட்டவர்களுடைய ரத்த வெள்ளத்தால் தூளி அடங்கியது. ஆயுதங்களால் வெட்டப்பட்ட தலைகளால் யுத்த பூமி மறைக்கப்பட்டது. அந்தத் தலைகள் உதடுகளைக் கடித்துக்கொண்டிருந்தன. மேலும், கைகள் ஆயுதங்களுடன் வெட்டுப்பட்டுக் கீழே விழுந்தன. தொடைகளும் அங்குமிங்கும் கிடந்தன. பின்னும், தலையற்ற உடல்கள் கையில் பிடித்த ஆயுதங்களுடன் உயரக் கிளம்பின.

**41—57.** அப்பொழுது பலியானவன் பத்து பாணங்களால் மகேந்திரனையும், மூன்று பாணங்களால் ஐராவதத்தையும், நான்கு பாணங்களால் ஐராவதத்தின் பாதங்களைக் காப்பாற்றும் யானைகளையும், ஒரு பாணத்தால் ஐராவதத்தின் மீதிருந்து அதனை நடத்தும் ஸாரதியையும் அடித்தான். அதனைக் கண்ட மகேந்திரன் அவ்வளவு பல்லமென்ற பாணங்களைப் பிரயோகித்து, அந்த பாணங்கள் சமீபத்தில் வருகிறதற்கு முந்தியே சிரித்துக்கொண்டு அவைகளை வெட்டினன். அதன்பின் பலியானவன் சக்தியென்ற ஆயுதத்தை யெடுத்தான். பலியின் கையிலிருந்து ஜொலித்துக்கொண்டிருக்கும் அந்த சக்தியை மகேந்திரன் வெட்டினன். பின்பு பலியானவன் சூலம், பிராஸம், தோமரம், யஷ்டி முதலிய எந்தெந்த ஆயுதத்தை எடுக்கிறனே, அவைகளை மகேந்திரன் வெட்டினன். அப்பொழுது அசுரன் அந்தர்த்தானத்தை அடைந்து மாயையைச் செய்தான். அதனல் தேவர்களின்மீது மலை விழுந்தது. பின்பு காட்டுத் தீயினல் எரிக்கப்பட்ட மரங்கள் விழுந்தன. குண்டுக் கற்களும் விழுந்தன. அவைகளால் தேவ சைன்யம் நாசஞ் செய்யப்பட்டது. பின்னும், அந்த மாயா பலத்தால் சர்ப்பங்களும், தேள் முதலிய விஷ ஜந்துக்களும், சிங்கங்

களும், புலிகளும், பன்றிகளும், பருத்த யானைகளும், சூலத்தைக் கையில் வைத்துக்கொண்டிருக்கும் வஸ்திர மில்லாத ராக்ஷஸ ஸ்திரீகளும் உண்டானார்கள். அவை களும் தேவ சைன்யங்களை நாசஞ் செய்தன. ராக்ஷஸ கணங்கள் 'வெட்டு, குத்து' என்று சொல்லிக்கொண்டு யுத்தஞ் செய்தார்கள். பின்னும், ஆகாயத்தில் மகா மேகங்கள் கம்பீரமாகக் கர்ஜித்து, காற்றினால் நெருப்புப் தணல்களையும் வர்ஷித்தன. அசுரனுடைய மாயையால் உண்டுபண்ணப்பட்ட அக்னியானது பிரளயகால நெருப் புப்போல் தேவசைன்யத்தைத் தகித்தது. அப் பொழுது சமுத்திரம் கரையைத் தாண்டியது. மிகுந்த காற்றினால் பயங்கரமான அலைகள் உண்டாயின. இப் படி அசுரர்கள் மறைந்திருந்து மாயைகளை யுண்டு பண்ணுவதால் தேவசைன்னியங்கள் களைப்படைந்தன. இந்திரன் முதலிய தேவர்கள் அதற்குப் பதில் செய்யச் சக்தியற்றவர்களாக இருந்தார்கள். அப்பொழுது தேவர் கள் ஸ்ரீ மகாவிஷ்ணுவைத் தியானஞ்செய்தார்கள். சகல பிராணிகளின் ரூபியான பகவான் அவ்விடத்தில் கருடன்மேல் தோன்றினார். அவர் பீதாம்பரந் தரித்த வர்; தாமரைமலர் போன்ற கண்களுள்ளவர்; ஆயுதங் களால் பிரகாசிக்கும் எட்டுக் கைகளுள்ளவர்; கௌஸ்து பத்தால் பிரகாசிப்பவர்; விலையற்ற கிரீடம், குண்டலம் ஆகிய இவைகளுள்ளவர்; விழிப்பு வந்தவுடன் சொப் பனம் நசிப்பதுபோலும், பகவானுடைய திவ்ய நாமத்தை ஸ்மரித்தால் சகல ஆபத்துக்களும் நிவர்த்தி யடைவதுபோலும் ஸ்ரீ மகாவிஷ்ணுவைக் கண்டவுடன் அசுரர்களுடைய மாயைகள் நசித்தன. சிங்கத்தை வாகனமாகக் கொண்ட காலநேமி யென்பவன் சூலத் தால் கருடனுடைய தலையில் அடித்தான். ஸ்ரீ பக வான் அந்த சூலத்தை யெடுத்து அந்த அசுரனையும் அவனுடைய வாகனத்தையும் கொன்றார். மாலி, ஸுமாலியென்ற இவர்களுடைய தலைகள் பகவானு டைய சக்கரத்தால் வெட்டப்பட்டன. அதனைக் கண்ட மால்யவான் என்பவன் கதாயுதத்தால் கருடனை அடித்துக் கர்ஜித்தான். பகவான் அவனுடைய சிர சைச் சக்ராயுதத்தால் வெட்டினார்.

# அத்தியாயம் 11

## தேவர்களால் அசுரர்கள் ஜயிக்கப்பட்டது

பின்பு பகவானுடைய கிருபையால் இந்திரன், வாயு முதலிய தேவர்கள் பலிஷ்டர்களாகி முந்தி யார் யாருடன் சேர்ந்து துவந்துவ யுத்தஞ் செய்தார் களோ, அவர்கள் அவர்களை அடித்தார்கள். அப் பொழுது மகேந்திரன் மிகுந்த கோபத்துடன் விரோ சனனுடைய புத்திரனை பலியை யுத்தெசித்து வஜ்ரா யுதத்தை எடுத்தார். ஜனங்கள் ஹா, ஹா என்று கதறினார்கள். வஜ்ரத்தைக் கையிலெடுத்துக்கொண்ட மகேந்திரன் மிகுந்த கோபத்துடன் யுத்தகளத்தில் சஞ்சரிக்கும் பலியை நோக்கி, "அட மூட! ஜால வித்தை செய்பவன் பாமர மக்களுடைய கண்களைக் கட்டி அவர்களுடைய பணத்தை அபகரிப்பதுபோல் மாயை களுக்கு அதிபதிகளாகிய எங்களை ஜயிக்கலாமென்று நினைக்கிறாய். எவர்கள் மாயையால் சுவர்க்கத்தை அடைய விரும்புகிறார்களோ, சுவர்க்கத்தை ஆக்ரமிக்க வேண்டுமென்று விரும்புகிறார்களோ, அந்தத் திருடர் களான உங்களைக் கீழே தள்ளுகிறேன். மந்தபுத்தியுள்ள வனே! கெட்ட மாயாவியான உன்னுடைய தலையை அநேக முனைகளுள்ள வஜ்ராயுதத்தால் வெட்டுகிறேன். ஞாதிகளுடன் சேரலாம்" என்றார்.

7—36. அதனைக் கேட்ட பலியானவன், இந்திரனை நோக்கி, "காலத்தால் தூண்டப்பட்டுக் கர்மங்களைச் செய்யும் ஜனங்களுக்கு ஜயம், அபஜயம், கீர்த்தி, மர ணம் இவைகள் நேரிடுகின்றன. ஜனங்கள் காலத்திற்கு வசப்பட்டவர்களாகையால் வித்வான்கள் யுத்தத்தில் நேரும் ஜயத்தால் சந்தோஷிக்கமாட்டார்கள். அப ஜயம், மரணம் முதலியவைகளால் துக்கப்படமாட் டார்கள். அந்த விஷயத்தில் நீங்கள் வித்வான்களல்ல. நீங்கள், 'தங்களுடைய பலத்தால் ஜயிக்கிறோம்' என்ற எண்ணமுள்ளவர்களாகையால் துக்கிக்கத்தக்கவர்கள். உங்களுடைய வார்த்தையைக் கேட்கமாட்டோம்"

என்று நிந்தித்து, நாராசமென்ற பாணங்களை வில்லில் பூட்டிக் காதுவரையில் வேகமாக இழுத்து மகேந்திரனை அடித்தான். இந்திரன் மாவெட்டியால் அடிக்கப்பட்ட யானைபோல் பலியின் வார்த்தையைப் பொறுக்காமல் அவன்மீது வஜ்ராயுதத்தைப் பிரயோகித்தான். அதனால் அடிக்கப்பட்ட பலியானவன் இறக்கை அறுபட்ட மலைபோல் வாகனத்துடன் கீழே விழுந்தான். அவனுடைய தோழனாகிய ஜம்பனென்பவன் அவனிடத்திலுள்ள பிரீதியினால் மகேந்திரனை எதிர்த்தான். சிங்க வாகனமுள்ள அந்த ஜம்பன் கதாயுதத்தால் மகேந்திரனையும் ஐராவதத்தையும் வேகமாக அடித்தான். கதையால் அடிக்கப்பட்டு ஐராவதமானது மிகுந்த சிரமத்தை அடைந்து, முழங்கால்களைப் பூமியில் ஊன்றிக்கொண்டு கீழே விழுந்தது. அப்பொழுது, மகேந்திரன் யானையை விட்டு இறங்கி மாதலியால் கொண்டுவரப்பட்ட ஆயிரம் குதிரைகள் பூண்ட ரதத்தின் மீதேறினார். அதனைக் கண்ட ஜம்பன் யஜமானனுக்கு சமயத்தில் ரதம் கொண்டுவந்த மாதலியைப் புகழ்ந்து சிரித்துக்கொண்டு ஜொலிக்கும் சூலத்தால் அடித்தான். அப்பொழுது மாதலியானவர் அதனால் உண்டான துக்கத்தைப் பொறுத்துக்கொண்டார். அதனைக் கண்ட மகேந்திரன் கோபங்கொண்டு வஜ்ரத்தால் ஜம்பனுடைய தலையை வெட்டினார். பிறகு அவனுடைய ஞாதிகளான நமுசி, பலன், பாகன் ஆகிய இவர்கள் ஜம்பனுடைய வதத்தை நாரதமகரிஷியின் முகமாகத் தெரிந்துகொண்டு மிகுந்த வேகத்துடன் யுத்தகளத்திற்கு வந்தார்கள். மேலும், அவர்கள் மகேந்திரனை நோக்கி, நிஷ்டூரமான வார்த்தைகளைச் சொல்லி, மேகமானது மலையின்மீது மழைபெய்வதுபோல் மகேந்திரன் மீது பாணங்களை வர்ஷித்தார்கள். மிக்க லாகவம் பொருந்திய கைகளுள்ள பலனென்பவன் ஆயிரம் பாணங்களைப் பிரயோகித்து மகேந்திரனுடைய ரதத்தில் கட்டியிருக்கும் ஆயிரங் குதிரைகளையும் அடித்தான். பாகனென்பவன் நூறு பாணங்களைப் பிரயோகித்து மாதலியை அடித்ததுமல்லாமல் ரதத்தையும் எள்ளளவாகச் சிதைத்தான். அது மிகவும் அற்புதமாக இருந்தது.

நமுசி யென்பவன் தங்கக்கட்டுகள் கட்டிய் பதினைந்து பாணங்களைப் பிரயோகித்து மகேந்திரனை அடித்து, நீருண்ட மேகம்போலக் கர்ஜித்தான். இப்படி அசுரர்கள் மழைக்காலத்திய மேகங்கள் சூரியனை மறைத்தது போல் இந்திரனைப் பாணங்களால் மறைத்தார்கள். அப்பொழுது தேவர்கள் தங்களுக்கு அதிபதியான மகேந்திரனைக் காணாமல் சத்துருக்களால் அடிக்கப்பட்டுத் துக்கித்தார்கள். அது சமுத்திரத்தில் கப்பல் உடைந்து போனதால் வியாபாரிகள் துக்கப்படுவதுபோல் இருந்தது. பிறகு மகேந்திரன் ரதம், குதிரை, ஸாரதி ஆகிய இவைகளுடன் பாணங்களிலிருந்து வெளிப்பட்டு, சூரியன் விடியற்காலத்தில் பிரகாசிப்பதுபோல விளங்கினன். மேலும், அவர் தம்முடைய சைனியம் சத்துருக்களால் அடிக்கப்பட்டுத் துக்கிப்பதைப் பார்த்து சத்துருக்களைக் கொல்வதற்காக வஜ்ராயுதத்தை எடுத்துக்கொண்டார். அந்த வஜ்ரத்தால் பலன், பாகன் ஆகிய இவர்களுடைய தலையை வெட்டினர். அதனைக் கண்டு அசுரர்கள் பயந்தார்கள். அதனைக் கண்ட நமுசியென்பவன் துக்கம், பொருமை, கோபம் இவைகளுள்ளவனகி, மகேந்திரனைக் கொல்வதற்காக மிகுந்த முயற்சி செய்தான். அதாவது மலைபோல் கெட்டியானதும், மணிகள் கட்டியதுமான சூலத்தை யெடுத்துக்கொண்டு மகேந்திரனை யெதிர்த்தான். "நீ அடிபட்டாய்" என்று அதட்டினன், சிம்மம்போல் கர்ஜித்து அந்த சூலத்தைப் பிரயோகித்தான். அதனைக் கண்ட மகேந்திரன் ஆகாயத்தில் வரும் அந்த சூலத்தைப் பாணங்களைக்கொண்டு ஆயிரம் துண்டாக வெட்டினன். பின்னுமவன் கோபத்துடன் வஜ்ரத்தால் நமுசியின் கழுத்தை அறுத்தான். வஜ்ரமானது பலமுள்ளதானலும், கூர்மையுள்ளதானலும் அவன் கழுத்தின் தோலைக்கூட வெட்டச் சக்தியற்றதாயிற்று. அது மிகுந்த அற்புதமாக இருந்தது. நமுசியின் கழுத்துத் தோலைக்கூட வெட்டமுடியாதிருக்கும் வஜ்ரத்தைக் கண்டு மகேந்திரன் பயந்து தனக்குள் பின்வருமாறு யோசித்தான: "இதென்ன தெய்வச் செயலா? முன் காலத்தில் மலைகள் இறக்கைகளுடன் பறந்து பிராணி

களுக்கு உபத்திரவத்தைச் செய்யும்பொழுது எந்த வஜ்ரமானது அவைகளுடைய இறக்கைகளை வெட்டியதோ, எது தபஸின் சக்திரூபமோ, எது விருத்திராசுரனைக் கொன்றதோ, சகல அஸ்திரங்களால் கொல்லப்படாத மற்ற அசுரர்கள் எதனால் கொல்லப்பட்டார்களோ, அந்த வஜ்ராயுதமானது இந்த அற்பனாகிய அசுரனைக் கொல்ல முடியாமல் முனை மழுங்கியதே! ததீசி மகரிஷியின் எலும்பினால் செய்யப்பட்ட பிரும்ம தண்டமானாலும் சக்தியற்றதாக இருப்பதால் அதனை நான் இனி எடுக்கவில்லை,'' என்று கவலைப்பட்டிருந்தான்.

37—42. அப்பொழுது மகேந்திரனை நோக்கி, "ஓ மகேந்திர! இந்த அசுரன் உலர்ந்த ஆயுதங்களாலும், ஈரமான ஆயுதங்களாலும் கொல்லமுடியாதவன்; என்னால் இம்மாதிரி இவனுக்கு வரம் கொடுக்கப்பட்டது. ஆனதால் இவனைக் கொல்வதற்கு வேறு உபாயத்தைச் செய்யும்'' என்று ஆகாயவாணி சொல்லிற்று. அதனைக் கேட்ட மகேந்திரன் மனதைச் சமாதானஞ் செய்துகொண்டு, யோசித்து நமுசியைக் கொல்லக்கூடியது உலர்ந்ததும், ஈரமுமானது நுரையேயென்று தீர்மானித்தார். அதனால் நமுசியின் தலையை வெட்டினார். அந்த மகேந்திரனை மகரிஷிகள் தோத்திரஞ்செய்தார்கள். புஷ்பமாரி பெய்தது. கந்தர்வர்களுக்குச் சிறந்தவர்களான விசுவாவசு, பராவசு என்ற கந்தர்வர்கள் கானஞ்செய்தார்கள்; நர்த்தனஞ் செய்தார்கள். தேவ துந்துபிகள் முழங்கின. இப்படிப்போலவே வாயு, அக்னி, வருணன் முதலிய தேவர்கள் தங்கள் தங்களுடன் சேர்ந்து யுத்தஞ்செய்த அசுரர்களைக் கொன்றார்கள். அது, சிங்கங்கள் மிருகங்களைக் கொன்றதுபோலிருந்தது.

43—48. அப்பொழுது பிரும்ம தேவரால் அனுப்பப்பட்ட தேவரிஷியாகிய நாரதர் அவ்விடஞ் சென்று தேவர்களை நோக்கி, "ஸ்ரீமந் நாராயணனுடைய அநுக்கிரகத்தால் அமிருதத்தைப் பானஞ்செய்தீர்கள்; காந்தி பொருந்தியிருக்கிறீர்கள். ஆனதால் இனி சண்டை செய்யவேண்டாம்'' என்று தடுத்தார். அதனைக் கேட்ட

தேவர்கள் மகரிஷியின் வார்த்தையில் மிகுந்த கௌரவம் வைத்துத் தங்களுடைய சேவகர்களால் துதிக்கப்பட்டு சுவர்க்கலோகஞ் சென்றார்கள். அசுரர்களில் உயிருடன் எவர்கள் பிழைத்தார்களோ, அவர்கள் நாரதருடைய உபதேசத்தால் பலியைத் தூக்கிக்கொண்டு அஸ்தம மலைக்குச் சென்றார்கள். அவ்விடத்தில் சுக்ராசாரியர் ஸஞ்ஜீவினியென்ற வித்தையைக்கொண்டு கை கால் முதலிய அவயவங்கள் இல்லாதவர்களைப் பிழைக்கச் செய்தார். பலியும் சுக்ராசாரியரால் தொடப்பட்டு இந்திரிய சாமர்த்தியத்தையும், பூர்வ ஞாபகத்தையும் அடைந்துதான் அபஜயப்பட்டவனானாலும் லோகத்தின் உண்மையை அறிந்தவனாகையால் துக்கப்படவில்லை.

# அத்தியாயம் 12

## பரமசிவன் மோஹினி ரூபத்தைப் பார்க்க விரும்பியது.

பின்பு "ஸ்ரீ மஹாவிஷ்ணு மோஹினி வேஷங் கொண்டு அசுரர்களை மோஹிக்கச்செய்து அவர்களை ஏமாற்றித் தேவர்களுக்கு அமிருதத்தைக் கொடுத்தார்" என்றதைப் பரமசிவன் கேள்விப்பட்டு விருஷபத்தின் மீதேறிப் பார்வதியுடன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் சமீபஞ் சென்றார். பிரமத கணங்களும் அவர்பின் சென்றன. அப்பொழுது ஸ்ரீமந்நாராயணன் பரமசிவனையும் பார்வதியையும் பூஜித்தார். ஆசனத்தில் சுகமாக உட்கார்ந்த பரமசிவன், 'ஸ்ரீ மஹாவிஷ்ணுவைக் கொண்டாடி, சிரித்துக்கொண்டு ' ஓ தேவர்களுக்கும் தேவரே! ஜகத்தில் வியாபித்திருப்பவரே! ஜகத்திற்கு அதிபதியே! ஜகத்ரூபியாக இருப்பவரே! சகல பிராணிகளுக்கும் நீரே காரணம். ஆத்மாவாகவும், ஈசுவரனாகவும் இருக்கிறீர். நீர் ஜகத் சுரூபியானாலும் அதனுடைய ஜடத்வம் முதலியவைகள் உமக்கில்லை. இந்த ஜகத்திற்கு ஆதி, மத்தியம், அந்தியம் ஆகிய இவைகளை எது உண்டுபண்ணுகிறதோ, எதற்கு மேற்காட்டிய ஆதி,

மத்யம், அந்தியம் இவைகளில்லையோ, எது காரிய ரூபமாக இருக்கிறதோ, எது திருஷ்டாவாகவுமிருக்கிறதோ, எது போக்யத்தைவிட வேறான போக்தாவாக இருக்கிறதோ, அந்த சித்சுரூபியாகிய பிரம்மமே நீர். க்ஷேமத்தையடைய விரும்பிய முனிகள் பலனை யுத்தேசியாமல் இந்த லோக சுகத்திலும் பரலோக் சுகத்திலும் ஆசைப்படாமல் உம்முடைய பாதாரவிந்தத்தையே உபாஸிக்கிறார்கள் நீர் பரப்பிரம்மம்; பூர்ணர்; மரண தர்மமில்லாதவர்; குணங்களற்றவர்; துக்கமற்றவர்; ஆநந்த சுரூபி; (நித்தியர்) விகாரமற்றவர்; உம்மைவிட வேறொன்றுமில்லை; காரியங்களைவிட வேறானவர் (காரண சுரூபம்); அப்படிப்பட்ட நீர் இந்த ஜகத்தைப் படைப்பது காப்பாற்றுவது, ஸம்ஹரிப்பது முதலியவைகளைச் செய்பவர்; சகல பிராணிகளுக்கும் ஆத்மா; ஈசுவரன்; நீர். ஒன்றையும் அபேட்சிக்காதவர்; (ஒருவரே ஜகத் சுரூபியாகவும் ஜகத்தைவிட வேறாகவும் எப்படியிருக்க முடியுமென்றால் மேல் சுலோகத்தால் சமாதானஞ் சொல்லப்படுகிறது.) காரியகாரண ரூபியும், பரம காரண சுரூபியுமாக இருப்பவர் நீர் ஒருவரேயாம். தங்கத்தால் செய்யப்பட்ட குண்டலம் முதலிய ஆபரணங்களும், ஆபரணமாகச் செய்யப்படாத சுவர்ணமும் தங்கமேயாம். வஸ்துவில் பேதமில்லை. அதுபோல் காரியரூபியும், காரண சுரூபியும் ஒருவரே யொழிய வஸ்துவில் பேதமில்லை. உபாதியற்றவராகிய உமக்குக் குணங்களுடைய சம்பந்தால் பேதமேற்பட்டது. அதுவும் உம்முடைய உண்மையான சுரூபத்தைத் தெரிந்துகொள்ளாத ஜனங்களால் ஏற்படுத்தப்பட்டதேயாம். வேதாந்திகள் உம்மைப் பிரம்மமென்று சொல்வார்கள். மீமாம்ஸகர்கள் தர்மமென்கிறார்கள்; ஸாங்கியர்கள் பிரகிருதி புருஷன் ஆகிய இவைகளுக்கு மேலான புருஷனென்று சொல்லுகிறார்கள்.

பாஞ்சராத்தார்கள் ஒன்பது சக்திகளுள்ள பரனென்று சொல்லுகிறார்கள். பாதஞ்ஜலர்கள் மஹாபுருஷனென்று சொல்லுகிறார்கள். ஓ ஈச! என்னையும், பிரம்மதேவரையும், மரீசி முதலிய மகரிஷிகளையும் ஸத்வ குணத்தைக்கொண்டு சிருஷ்டித்தீர். அப்படிப்பட்ட எங்களாலும் உம்மால் சிருஷ்டிக்கப்பட்ட ஜகத்தின்

உண்மையை அறியமுடியவில்லை. உம்முடைய தத்வத்தை எப்படி அறியமுடியும்? ரஜோ குணம், தமோ குணம் இவைகளுள்ளவர்களும் உம்முடைய மாயையால் மோகித்தவர்களுமான அசுரர்கள் முதலியவர்களால் உம்முடைய சுரூபம் அறியப்படுமா? மேலும், நீர் ஸகல சுரூபியாக இருப்பதால் இந்த ஜகத்தின் ஸ்திதியையும் நாசத்தையும், பிராணிகளுடைய எண்ணத்தையும், ஜகத்தினுடைய ஸம்ஸாரத்தையும், மோக்ஷத்தையும் தெரிந்துகொள்ளுகிறீர். வாயுவானவர் எப்படி சராசரங்களடங்கிய ஜகத்திலும் ஆகாசத்திலும் பிரவேசிக்கிறாரோ, அப்படி எல்லாவற்றையும் வியாபித்திருக்கிறீர். அப்படிப்பட்ட நீர் அநேக அவதாரங்கள் செய்து கிரீடித்தீர். அவைகளைத் தரிசித்தேன். மோஹினீ வேஷத்தை மாத்திரம் பார்க்கவில்லை. எந்த வேஷத்தால் அசுரர்களை மோகிக்கச் செய்தீரோ, எதனால் தேவர்களை அமிருதபானஞ் செய்யும்படி செய்தீரோ, அந்த சுரூபத்தைத் தரிசிப்பதற்காக வந்தேன். அதனைப் பார்க்க மிக்க ஆவலுடையவனாக இருக்கிறேன்" என்று கேட்டுக் கொண்டார்.

**14—36.** அதனைக் கேட்ட மஹாவிஷ்ணுவானவர் அபிப்பிராயத்துடன் சிரித்து, "அமிருத குடத்தை அசுரர்கள் அபகரித்தபொழுது அவர்களை ஏமாற்றித் தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுக்கவேண்டிய நிமித்தம் ஸ்திரீ வேஷந் தரித்தேன். அதனைக் கண்டு அசுரர்கள் மோகித்தார்கள். அந்த சுரூபமானது மன்மதனை விருத்திசெய்யக்கூடியது; காமிகளால் தோத்திரஞ்செய்யக்கூடியது; அதனை உமக்குக் காண்பிக்கிறேன்" என்று சொல்லி அந்தர்த்தான மடைந்தார். பரமசிவன் பார்வதியுடன் நான்கு பக்கங்களிலும் பார்த்திருந்தார். பின்பு பலவகையான புஷ்பங்கள், சிவந்த தளிர்கள் இவைகளுள்ள விருட்சங்களால் அலங்கரிக்கப்பட்ட சமீபத்திலுள்ள தோட்டத்தில் ஒரு பெண்ணைக் கண்டார். அவள் பந்து விளையாடிக்கொண்டிருந்தாள். அவளுடைய நிதம்பம், மேகலை இவைகள் பட்டு வஸ்திரத்தால் மறைக்கப்பட்டிருந்தன. மேலுமவள் பந்து

விளையாடுவதால் குனியும்பொழுதும் நிமிரும்பொழுதும் ஸ்தனங்களும், உயர்ந்த ஹாரங்களும் அசைகின்றன. அவைகளின் சுமையால் ஒடிந்து விழுகிறவள்போலிருக் கிருள். தளிர்போல மிருதுவான கால்களை அங்கு மிங்கும் தூக்கி வைக்கிருள். ஒவ்வொரு திக்குகளிலும் போகும் பந்தைப் பார்ப்பதால் சுழலும் கருவிழிக ளுள்ள நீண்ட கண்களுள்ளவளாக இருந்தாள். அவ ளுடைய காதுகளில் பிரகாசிக்கும் குண்டலங்களுடைய காந்தியால், அழகான கன்னங்களில் தொங்குகின்ற தலை மயிர்களால் முகம் அழகாக இருக்கிறது. மேலும், வஸ்திரமும் தலைமயிரும் அவிழ்ந்தபடியால் இடது கையி னல் அவைகளைக் கட்டிக்கொள்கிருள், மற்ருெரு கையி னல் பந்து அடிக்கிருள். தன்னுடைய மாயையால் ஜகத்தை மோகிக்கச் செய்தால், இப்படிப் பந்து விளை யாடிக்கொண்டு வெட்கத்தால் கொஞ்சமாகச் சிரித்துக் கடாக்ஷிக்கும் அந்தப் பெண்ணைப் பார்த்த மகா தேவன் மனங் கலங்கினவராகி, சமீபத்திலிருக்கும் பார் வதியையும் தம்முடைய கணங்களையும் சமீபத்திலிருப்ப தாக அறியாமல் மறந்தார். அப்போது அவள் கையி லிருந்து வெகு தூரத்தில் விழுந்த பந்தை எடுப்பதற் காக ஓடினள். அந்தச் சமயத்தில் காற்று வீசியதால் அவள் வஸ்திரம் கீழே விழுந்தது. அப்பொழுது பரம சிவன் அவளிடத்தில் ஆசை கொண்டார். விவேகம் மாறிற்று. மன்மத தாபம் மிகுதியாயிற்று. அதனல் பார்வதிதேவி பார்த்திருக்கும்பொழுதும் வெட்கமில்லா மல் அவள்பின் சென்ருர். அந்தப் பெண்ணனவள் தன் பின் வரும் பரமசிவனைப் பார்த்து வெட்கத்துடன் மரங்களில் ஒளிந்துகொண்டு ஓடினள். பரமசிவன் கலங் கிய இந்திரியங்களுள்ளவராக, மன்மதனுக்கு வசப் பட்டுப் பெண்யானையை ஆண்யானை பின்தொடர்ந்தாற் போல் அவள் பின் ஓடினர். பின்னும் அவர் மிக்க வேகமாக ஓடி அவள் சம்மதிக்காமலிருக்கும்பொழுதே அவளுடைய தலைமயிரைப் பிடித்து அவளை இரு கைக ளால் ஆலிங்கனஞ் செய்துகொண்டார். பின்பு அவள் அவிழ்ந்த தலைமயிருள்ளவளாகிப் பரமசிவனை வஞ் சித்து ஓடினள். சத்துருவினல் ஜயிக்கப்பட்டவன்

போலப் பரமசிவன் மன்மதனுக்கு வசப்பட்டு அற்புத சரிதமுள்ள ஸ்ரீமஹா விஷ்ணுவின் பின் ஓடினார். பெண் யானையின் பின் ஓடிய யூதபதியான மதித்த ஆண்யானையின் ரேதஸ் விழுந்தாற்போல அமோகவீரியமுள்ள பரமசிவனுடைய வீரியமானது மார்க்கத்தில் விழுந்தது. அந்த வீரியம் எந்தெந்த விடத்தில் விழுந்ததோ, அந்த ஸ்தலங்கள் தங்கம், வெள்ளி விளையும் பூமிகளாயின. எந்த நதிகளிலும், குளங்களிலும், எந்த மலைகளிலும், எந்த வனங்களிலும், எந்தத் தோட்டங்களிலும் அந்த வீரியம் விழுந்ததோ, அவைகளில் பரமசிவன் ஸான்னித்யம் செய்கிறார். மகரிஷிகளும் அவ்விடத்தில் வசிக்கிறார்கள். ஓ மஹாராஜ! வீரியம் நழுவினபின் பரமசிவனுக்குக் காமவிகாரம் அடங்கிற்று; அவர் 'விஷ்ணுவின் மாயையால் மூடனாக்கப்பட்டேன்' என்று தெரிந்து கொண்டார். ஜகத் ரூபியும், அறியமுடியாத மகிமையுள்ளவருமான ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் மகிமையை அறிந்தவராகையால் பரமசிவன் அதனை மிகுந்த அற்புதமென்று நினைக்கவில்லை,

37—40. அப்பொழுது மோகமற்றவரும், வெட்கமற்றவருமான பரமசிவனை நோக்கி ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸ்திரீ ரூபத்தை விட்டுத் தமது சுரூபத்தைத் தரித்து, "ஓ தேவ சிரேஷ்ட! என்னுடைய ஸ்திரீ வேஷத்தைக் கண்டு மோகமடைந்த உமக்கு தெய்வாதீனமாக அந்த மோகம் நிவர்த்தியாயிற்று. உம்முடைய நிலைமையை அடைந்தீர். என்னுடைய மாயையை ஜயிப்பதற்கு உம்மைத் தவிர வேறொருவராலும் முடியாது. அந்த மாயையானது பாபிகளால் தாண்ட முடியாத அநந்த விஷயங்களை யுண்டுபண்ணக்கூடியது. கால சுரூபியான எனக்கு சுவாதீனமாகவிருக்கும் அந்த முக்குண சுரூபியான மாயையால் உம்மை ஜயிக்க முடியாது" என்றார்.

41—44. இப்படி ஸ்ரீமஹாவிஷ்ணுவினால் சிலாகிக்கப்பட்ட பரமசிவன் தம்முடைய கணங்களுடன் அவரிடம் விடைபெற்றுத் தமதிருப்பிடஞ் சென்றார். பின்னுமவர் தம்மால் பார்க்கப்பட்ட பகவானுடைய மாயையைப் பற்றி அநேக மகரிஷிகள் கேட்டிருக்கும்பொழுது

பார்வதியை நோக்கிச் சொல்லலானார்: "ஓ பார்வதி! உற்பத்தியற்றவரும், பரமபுருஷனுமாகிய புருஷோத்தமனுடைய மாயையைப் பார்த்தாயோ? நான் சகல வித்தைகளுக்கும் அதிபதியானாலும் அந்த மாயையால் மோகித்தேன். மற்றவர்கள் மோகிப்பதற்கு என்ன சந்தேகம்? நீ அநேக வர்ஷங்கள் தவஞ்செய்து திரும்பி வந்த என்னை நோக்கி, "உம்மால் உபாஸிக்கப்பட்ட வஸ்து எது" என்று கேட்டாயல்லவா? அந்த வஸ்து இந்தப் புராண புருஷனேயாம். அவர் காலத்தால் பாதிக்கப்படுகிறதில்லை, காலம் அவரைத் தெரிந்து கொள்ளுகிறதுமில்லை" என்றார்.

45—47. ஓ மகாராஜ! அமிருத மதன காலத்தில் எவர் மந்தர மலையை முதுகில் தாங்கினாரோ, அந்த சாரங்கபாணியின் சரிதத்தைச் சொன்னேன். இதனை எவன் வாக்கினால் உச்சரிக்கிறானோ, கேட்கிறானோ அவனுடைய முயற்சியானது தடைப்படுகிறதில்லை. உத்தம சுலோகராகிய பகவானுடைய குணங்களை வர்ணித்தால் அது ஸம்ஸார துக்கத்தை நிவர்த்திசெய்யும். அஸத்துகளால் அடைய முடியாததும், பக்தியால் அடையக்கூடியதுமான சரணாரவிந்தத்தை ஆச்ரயித்த பக்தர்களான தேவர்களுக்கு எவர் அமிருதத்தைக் கொடுத்துப் புசிக்கச்செய்தாரோ, எவர் ஸ்திரீ வேஷந் தரித்து அசுரர்களை மோகிக்கச்செய்தாரோ, எவர் தம்மைச் சரணமடைந்தவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்தாரோ, அந்தப் பகவானை நமஸ்கரிக்கிறேன்.

# அத்தியாயம் 13

## மன்வந்தரங்கள்

விவஸ்வானுடைய புத்திரனாகிய மனுவிற்கு சிராத்த தேவரென்று பெயர். இவர் ஏழாவது மநு. இவர்களுடைய புத்திரர்களைச் சொல்லுகிறேன், கேளும். இக்ஷ்வாகு, நாபகர், திருஷ்டர், சய்யாதி, கருஷ்யந்தன் நபாகன், திஷ்டன், கருசகன், பிருஷ்திரன், வஸுமான் என்ற பத்து புத்திரர்கள். ஆதித்யர்களும், வஸுக்களும், ருத்திரர்களும், விசுவேதேவர்களும், அசுவினி தேவர்களும் தேவர்களாம். அவர்களுக்கு இந்திரன், புரந்தரன், கச்யபர், அத்ரி, வஸிஷ்டர், விசுவாமித்திரர், கௌதமர், ஜமதக்னி, பரத்வாஜர் என்ற மகரிஷிகள் ஸப்த ரிஷிகள். அந்த மன்வந்தரத்தில் ஸ்ரீ மஹா விஷ்ணு கச்யபருக்கு அதிதி தேவியினிடத்தில் வாமனராக அவதரித்தார். இந்த ஏழு மன்வந்தரங்களையும் சுருக்கமாகச் சொன்னேன். இனி வரும் மன்வந்தரங்களையும் சொல்லுகிறேன். அதிலும் பகவானுடைய அவதாரங்கள் உண்டு.

*8—17.* விவஸ்வானுக்குச் சாயா, ஸம்ஜ்ஞா என்ற இரண்டு பத்னிகளுண்டு. அவர்கள் விசுவகர்மாவின் குமாரிகள். இவர்களைப்பற்றி முந்தியே சொல்லியிருக்கிறேன்; சிலர் விவஸ்வானுக்கு படைபயென்பவளை மூன்ருவது பத்னி யென்கிருர்கள். (ஸம்ஜ்ஞா என்பவளே படை என்பவளென்று ஆருவது ஸ்கந்தத்தில் சொல்லப்படுகிறது.) ஸம்ஜ்ஞை யென்பவளுக்கு யமன், சிராத்ததேவன் என்ற இரண்டு புத்திரர்களும், யமுனை யென்ற பெண்ணும் உண்டாஞர்கள். சாயை யென்பவளுக்கு ஸாவர்ணி, சனைச்சரன் என்ற இரண்டு பிள்ளைகளும், தபதி என்ற பெண்ணுமுண்டு. தபதியென்பவள் ஸம்வர்ணனுடைய பத்னி. எட்டாவது மன்வந்தரத்தில் ஸாவர்ணி என்பவர் மநுவாகப் போகிருர். நிர்மோஹன், விரஜஸ்கன் முதலியவர்கள் ஸாவர்ணிக்குப்

புத்திரர்களாவார்கள். அமிருதத்தின் வர்ணம்போன்ற வர்ணமுள்ள ஸுதபஸ் என்றவர்கள் தேவர்களாவார்கள். எந்தப் பலியானவர் பகவானால் கட்டப்பட்டுப் பின்பு சந்தோஷத்தையடைந்த பிரபுவினால் சுவர்க்கத்திற்கு மேலான ஸுதலத்தில் வைக்கப்பட்டு இந்திரன் போலிருக்கிறாரோ, அந்த விரோசனனுடைய புத்திரராகிய பலியென்பவர் அவர்களுக்கு இந்திரனாக இருப்பார். ஏழாவது மன்வந்தரத்தில் அந்த பலியானவர் வாமன ரூபியாக இருந்து யாசித்த ஸ்ரீமஹாவிஷ்ணுவிற்கு, மூன்றடி கொண்ட பூமியைக் கொடுத்து அவருடைய அநுக்ரகத்தால் கிடைத்த இந்திர பதத்தை எட்டாவது மன்வந்திரத்தில் அநுபவித்து, பின்பு மோக்ஷத்தை அடைவார். காலவர், தீப்திமான், பரசுராமன், அசுவத்தாமர், கிருபர், ரிஷ்யசிருங்கர், என்னுடைய பிதாவாகிய வியாஸர் ஆகிய இவர்கள் ஸப்தரிஷிகளாக இருப்பார்கள். அவர்கள் இந்த மன்வந்தரத்தில் அவர்களுடைய ஆசிரமத்தில் வஸிக்கிறார்கள். எட்டாவது மன்வந்திரத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸார்வபௌமரென்ற திவ்ய நாமதேயத்துடன் ஸரஸ்வதி நதியில் அவதரித்து, ஏழாவது மன்வந்திரத்திய இந்திரனிடத்திலிருந்து சுவர்க்கத்தைப் பிடுங்கிப் பலியினிடம் கொடுப்பார்.

18—20. வருணனுடைய புத்திரராகிய தக்ஷஸாவர்ணியென்பவர் ஒன்பதாவது மநுவாகப் போகிறார். திருதகேது, தீப்தகேது முதலியவர்கள் அவருக்குப் புத்திரர்களாவார்கள். பரன், மரீசிகர்க்கன் முதலியவர்கள் தேவர்களாவார்கள் (தாகா, மரீசிகர்க்கன் முதலியவர்களென்றும் பாடமுண்டு ) அத்புதரென்பவர் இந்திரனாக இருப்பார். த்யுதிமான் முதலியவர்கள் ஸப்தரிஷிகளாக இருப்பார்கள். அப்பொழுது அம்புதாரை என்பவளிடத்தில் ஆயுஷ்மானென்பவருக்கு ரிஷபரென்ற திவ்ய நாமதேயத்துடன் ஸ்ரீ பகவான் அவதரித்து, மூவுலகத்தையும் காப்பாற்றப்போகிறார். அதனை அதபுதரென்ற இந்திரன் அநுபவிக்கப் போகிறான்.

21—24. உபச்லோகருடைய புத்திரராகிய பிரம்ம ஸாவர்ணியென்பவர் பத்தாவது மநுவாக இருப்பார். பூரிஷேனன் முதலியவர்கள் அவருடைய புத்திரர்கள். ஹவிஷ்மான், ஸுக்ருதி, ஸத்தியர், ஜடாமூர்த்தி முதலியவர்கள் ஸப்தரிஷிகள். விபுத்தர் முதலியவர்கள் தேவர்கள். சம்புவென்பவர் இந்திரன். அப்பொழுது பகவான் விஷூசி யென்பவளிடத்தில் விசுவஸிருட் என்பவருடைய கிருகத்தில் அம்சமாக அவதரித்து, இந்திரனுக்குச் சக்தியை யுண்டுபண்ணப்போகிறார். அவர் அமூர்த்தி யென்ற திவ்ய நாமதேயமுள்ளவர். அவரால் ஜகத்தானது சுகத்தை அடையப்போகிறது.

25—27. தர்மஸாவர்ணி யென்பவர் பதினொன்றாவது மநுவாகப் போகிறார். ஸத்ய தர்மன் முதலியவர்கள் அவருடைய புத்திரர்கள். விஹங்கமர்கள், காமகமர்கள், நிர்வாணர்கள், ருசிகள் ஆகிய இவர்கள் தேவர்களாம். வைதிருதனென்பவர் இந்திரன். அருணன் முதலியவர்கள் ஸப்தரிஷிகள். சூரியகருடைய புத்திரராக பகவான் அவதரிப்பார். அவருக்கு தர்மஸேது என்று பிரசித்தி யுண்டாகும்.

28—30. பத்ரஸாவர்ணி யென்பவர் பன்னிரண்டாவது மநுவாவார். தேவவர்ன், உபதேவர், தேவசிரேஷ்டர் முதலியவர்கள் அவருடைய புத்திரர்கள். ரிதுதாமாவென்பவர் இந்திரன். ஹரிகன் முதலியவர்கள் தேவர்கள். தபோமூர்த்தி, தபஸ், ஆக்னீத்ரகன் முதலியவர்கள் ஸப்தரிஷிகள். ஸத்ய தபஸிற்கும், ஸூந்ருதை யென்பவளுக்கும் புத்திரனாகிய மஹாவிஷ்ணுவின் அம்சமானது அந்த மன்வந்தரத்தைக் காப்பாற்றப்போகிறது.

31—33. தேவஸாவர்ணி யென்பவர் பதின்மூன்றாவது மநு. சித்திரஸேனன், விசித்திரன் முதலியவர்கள் தேவஸாவர்ணியின் புத்திரர்கள். ஸுகர்மா, ஸுத்ராமா யென்பவர்கள் தேவர்கள். திவஸ்பதி யென்பவர் இந்திரன். நிர்மோஹன், தத்வதர்சன் முதலியவர்கள் ஸப்தரிஷிகள். பகவான் தேவஹோத்திரருக்கு பிரஹதி

யென்பவளிடத்தில் யோகேசுவரர் என்ற திவ்ய நாம தேயத்துடன் அவதரித்து இந்திரனுக்கு உபகாரஞ் செய்யப்போகிறார்.

34—37. இந்திரஸாவர்ணி யென்பவர் பதினான்கா வது மநுவாக ஆகப்போகிறார். உருக்ம்பீரன், வஸு முதலியவர்கள் இந்திரஸாவர்ணியின் புத்திரர்கள். பவித் ரர்களும், சாக்ஷுஷர்களும் தேவர்கள். சுசி யென்பவர் இந்திரனாக ஆகப்போகிறார். அக்னி, பாஹு, சுசி சுக்ரன், மாகதர் முதலியவர்கள் ஸப்தரிஷிகள். அப் பொழுது ஸ்ரீபகவான் ஸத்ராயணருக்குப் புத்திரராக பிரஹத்பானு வென்ற திவ்ய நாமதேயத்துடன் அவ தரித்து, யாகம் முதலிய ஸத் கர்மங்களைப் பரவச்செய் யப் போகிறார். மூன்று காலங்களிலும் தொடர்ந்திருக் கும் பதினான்கு மன்வந்தரங்களடங்கியது பிரம்ம தேவ ருடைய ஒரு பகல்; அது ஆயிரம் யுகங்கள் கொண்டது. இந்த மன்வந்தரங்களை உமக்குச் சொன்னேன்.

# அத்தியாயம் 14

## மநுக்களின் சரிதம்

அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, " ஓ பிராம்மணோத்தம! ஒவ்வொரு மன்வந்தரத்திலும் எந் தெந்த மனுக்கள், எந்தெந்தக் காரியத்தைச் செய்யும் படி ஆஞ்ஞாபிக்கப்பட்டிருந்தார்கள்? அதனைச் சொல்ல வேண்டும் " என்று கேட்டார்.

2—11. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, " ஓ மகாராஜ! மநுக்களும், அவர்களுடைய புத்திரர் களும், ஸப்தரிஷிகளும், தேவர்களும், இந்திரனும் மகா புருஷனுடைய ஆஞ்ஞையின்படி நடப்பவர்கள். யக்ஞர் முதலிய அவதாரங்கள் பகவானுடைய அம்சங்கள். அவைகளுடைய உத்தரவின்படி மநு முதலியவர்கள் கர்மங்களைச் செய்கிறார்கள். சதுர்யுகத்தின் முடிவில் கால மகிமையால் வேதங்கள் மறைந்துபோயின. அவை

களை மகரிஷிகள் தவஞ்செய்து கண்டுபிடித்தார்கள். அந்த வேதங்களாலேயே சாசுவதமான தர்மங்கள் வெளிப்படுகின்றன. பின்பு மநுக்கள் ஸ்ரீ மகாவிஷ்ணுவினால் தூண்டப்பட்டு, சாவதானர்களாகித் தங்கள் தங்கள் காலத்தில் நான்கு பாதங்களுள்ள தர்மத்தை லோகத்தில் பரவச் செய்தார்கள். மநுவின் புத்திரர்கள் அந்த மன்வந்தரம் முடிகிற வரையில் அந்தத் தர்மத்தைக் காப்பாற்றுகிறார்கள். ஒவ்வொரு மன்வந்தரத்திலும் எவர்களைத் தேவர்கள் என்று சொன்னோமோ, அவர்கள் யாகத்தில் ஹவிர்ப்பாகத்தைப் புசித்தார்கள். இந்திரன் பகவானால் கொடுக்கப்பட்ட மூவுலகத்திய சம்பத்தை அநுபவித்துக்கொண்டு மூவுலகத்தையும் சம்ரட்சிக்கிறார்; லோகத்தில் மழை பெய்யச் செய்கிறார்; ஒவ்வொரு யுகத்திலும் ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் சிறந்த ஸித்தர்களாக (ஸனகர் முதலியவர்கள்) அவதரித்து ஞானத்தை யுபதேசிக்கிறார். மேலும், அவர் யோகேசுராக (தத்தாத்ரேயர் முதலியவர்கள்) ரிஷி ரூபத்தைத் தரித்து, கர்ம யோகத்தையும் உபதேசிக்கிறார்; மரீசி முதலிய பிரஜாபதிகளாக இருந்து சிருஷ்டியைச் செய்கிறார்; இந்திரனாகவிருந்து சத்துருக்களைக் கொல்லுகிறார். காலசுரூபியாக விருந்து எல்லாவற்றையும் நாசஞ் செய்கிறார். நாமரூப சுரூபமான மாயையால் மோகித்திருக்கும் ஜனங்களாலும், பலவகையான சாஸ்திரங்களாலும் பகவானுடைய சுரூபம் வர்ணிக்கப்பட்டிருந்தாலும் அவருடைய உண்மையை ஒருவரும் அறியவில்லை. பதினான்கு மன்வந்தரங்களடங்கிய அவாந்திர கல்பத்தின் சுருபத்தைச் சொன்னேன்." என்றார்.

# அத்தியாயம் 15

## பலி சுவர்க்கத்தை ஜயித்தது.

அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, சகல பிராணிகளுக்கும் அதிபதியாகிய பகவான் தரித்திரன் போல எதற்காகப் பலியை மூன்றடி கொடுக்கும்படி யாசித்தார்? யாசித்த பொருளைப் பெற்றுக்கொண்டு பிறகும் எதற்காக அவனைக் கட்டினார்? பூர்ணனாகிய பகவான் யாசித்த காரணத்தையும், குற்றஞ்செய்யாதவன் கட்டுப்பட்டதையும் சொல்லவேண்டும்." என்று கேட்டுக்கொண்டார்.

3—23. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி "பலிச்சக்கரவர்த்தி சத்துருவினால் ஜயிக்கப்பட்டு உயிரற்றவனானபொழுது சுக்ராசாரியர் அவனைப் பிழைக்கச்செய்தாரென்று சொன்னேனல்லவா? அப்பொழுது சிஷ்யனாகிய பலி, சுக்ராசாரியரை மூன்று கரணங்களாலும் சேவித்தான். சத்துருக்களால் தனக்கு நேர்ந்த துக்கத்தையும் தெரிவித்தான். அப்பொழுது பிருகுகுலத்திய பிராம்மணர்கள் மகாபிஷேகத்தால் (ருக்வேதத்தில் சொல்லியபடி) பலிக்கு அபிஷேகஞ் செய்வித்து மிகுந்த பிரீதியுடன் விசுவஜித் என்ற யாகஞ் செய்தார்கள். (மூவுலகத்தையும் ஜயிக்க விரும்பிய பலிக்கு) அந்த யாகத்தில் ஹவிஸ்ஸை அக்னியில் ஹோமஞ்செய்யும்பொழுது அந்த அக்னியிலிருந்து தங்கப் பட்டங்களடித்ததான ரதமும், இந்திரனுடைய குதிரையின் வர்ணம் போன்ற நிறமுள்ள குதிரைகளும், சிம்மதுவஜமும், சுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட வில்லும், அக்ஷய தூணியும், திவ்ய கவசமும் உண்டாயின. அவனுக்குப் பிதாமஹராகிய பிரகலாதர் ஒருபொழுதும் வாடாத தாமரை மலருள்ள மாலையைக் கொடுத்தார். சுக்ராசாரியர் சங்கத்தை யளித்தார். பலியானவன் இப்படி பிராம்மணர்களுடைய அநுக்கிரகத்தால் யுத்தத்திற்கு யோகமான ஸாமக்ரிகளை அடைந்து, அவர்களால் ஆசீர்வதிக்கப்பெற்று, பிரா

மணர்களைப் பிரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து, பிரகலாதரிடமும் விடைபெற்று ரதத்தின் மீதேறினன். உத்தமமான மாலையைத் தரித்தவனும், வில்லைக் கையில் பிடித்தவனும், அம்பரையை எடுத்துக்கொண்டவனும், வர்ண மயமான தோள் வளைகளால் பிரகாசிக்கும் கைகளுள்ளவனும், மகர குண்டலங்களால் பிரகாசிப்பவனுமான அந்தப் பலியானவன் வேதியில் ஜ்வலிக்கும் அக்னிபோல விளங்கினன். தைத்யர்களுக்குச் சிறந்தவர்களான சேனுதிபதிகள் அந்த ரதத்தைச் சுற்றிக்கொண்டார்கள். அவர்கள் பலிக்குச் சமமான ஐசுவரியம், பராக்கிரமம் ஆகிய இவைகளுள்ளவர்கள். பலியானவன் அவர்களுடனும், மற்ற அநேக அசுர சைன்யங்களுடனும், ஆகாசத்தையும் பூமியையும் அசைத்துக்கொண்டு சுவர்க்கத்தை நோக்கிச் சென்றுன். நந்தனம் முதலிய உத்யானங்கள் அந்த சுவர்க்கத்தி லிருக்கின்றன. அவைகளில் மதித்த வண்டுகளும், பறவைகளும் இனிமையாகச் சப்திக்கின்றன. தளிர்களாலும், புஷ்பங்களாலும் பாரமுள்ள தேவ விருக்ஷங்களிருக்கின்றன. மேலும், ஹம்ஸங்கள், ஸாரஸங்கள், சக்ரவாகங்கள், நீர்க்காக்கை முதலிய ஜலப் பறவைகளால் அலங்கிருதங்களான தாமரை ஓடைகளிருக்கின்றன. அதில் தேவர்களும், தேவ ஸ்திரீகளும் கிரீடிக்கிறுர்கள். பின்னும், ஆகாச கங்கையானவள் சுவர்க்கத்திற்கு அகழ்போலிருக்கிறுள். இன்னும் சுவர்க்க லோகம் அக்னிபோலப் பிரகாசிக்கும் உயரமான பிராகாரத்தால சுற்றப்பட்டிருக்கிறது. அதன் கோட்டைவாயிற்கதவுகள் சுவர்ண பட்டங்களுள்ளவைகள். கோபுரங்கள் ஸ்படிக மயமானவை. அதில் ராஜ வீதி முதலிய வீதிகள் தனித்திருக்கின்றன. அது விசுவகர்மாவினுல் சிருஷ்டிக்கப்பட்டது. அநேக சபைகளுள்ளது; நாற்சந்தி மண்டபங்களுள்ளது; நயர்புதக் கணக்கான விமானங்களுள்ளது; மண்டபங்களில் வஜ்ரத்தாலும், பவழத்தாலும் திண்ணைகளிருக்கின்றன. அவ்விடத்தில் எப்பொழுதும் யௌவன வயதுள்ளவர்களும், குறைவற்ற ரூபமுள்ளவர்களும், சுத்த வஸ்திரமுள்ளவர்களுமான ஸ்திரீகள் அக்னிபோலப் பிரகாசிக்

இருர்கள். தேவஸ்திரீகளுடைய் தலைமயிரிலிருந்து நழுவி விழுந்த புஷ்பத்தின் நல்வாசனையுள்ள காற்றானது மார்க்கத்தில் வீசுகிறது. சுவர்ண மயமான ஜன்னல் வழியாக வெளியில் வீசும் அகரு தூபத்தாலும் மார்க்க மானது வாசனையுள்ளதாக இருக்கிறது. அதில் வெயில் உபத்திரவமில்லை. அந்த மார்க்கத்தில் தேவஸ்திரீகள் சுகமாகச் செல்லுகிருர்கள். மேலும், அந்த சுவர்க்க மானது முத்துக்களால் செய்யப்பட்ட கொடுங் கைகளாலும், ரத்தின மயங்களும், சுவர்ண மயங் களுமான துவஜங்களாலும், பலவகையான பதாகைக ளாலும் ரம்யமானது. மயில் மாடப்புறா,வண்டு இவைகள் சப்திக்கின்றன. தேவ ஸ்திரீகள் இனிமையாகப் பாடு கிருர்கள். மிருதங்கம், சங்கம், ஆனகம், துந்துபி, தாளம், வீணை, முரஜம், புல்லாங்குழல் முதலிய வாத்தி யங்கள் சப்திக்கின்றன. அப்ஸரஸுகள் நர்த்தனஞ் செய்கிருர்கள் மிக்க காந்தியுள்ளது. எவர்கள் அதற் மிஸ்டர்களோ, எவர்கள் பிராணிகளுக்கும் தர்மத்திற் கும் துரோகஞ்செய்தவர்களோ, எவர்கள் வஞ்சகர்களோ, எவர்கள் அகங்காரமுள்ளவர்களோ, எவர்கள் லுப்த கர்களோ அவர்கள் அந்தவிடத்திற்குப் போகமாட் டார்கள். காமம் முதலிய ஆறு தோஷங்களற்றவர் கள் அதனை அடைவார்கள். அப்படிப்பட்ட தேவதை களுடைய் ராஜதானிக்குச் சென்று பலியானவன் தன் னுடைய் சைன்யங்களை சுவர்க்கத்திற்கு நான்கு புறத்தி லும் நிறுத்தி, சுக்ராசாரியரால் கொடுக்கப்பட்ட சங் கத்தை ஊதினன். அந்தச் சப்தத்தைக் கேட்டு தேவ ஸ்திரீகள் பயந்தார்கள்.

24—27. பலியின் முயற்சியைக் கண்ட தேவேந் திரன் தம்முடைய குருவாகிய் பிரகஸ்பதியை நோக்கி, "ஓ பகவன்! பூர்வவிரோதியான பலி திரும்பவும் யுத் தத்திற்கு முயற்சிசெய்யக் காரணமென்ன? எந்தப் பலத்தைக்கொண்டு வந்திருக்கிருன்? இவனை ஜயிக்க ஒருவராலும் முடியாதென்று நினைக்கிறேன். அவ னுடைய் முகமாது சுவர்க்கத்தை விழுங்கிவிடும் போலிருக்கிறது. பத்து திக்குகளையும் நடுக்கிவிடும்போ

லிருக்கிறது. கண்கள் எரித்துவிடும்போலிருக்கின்றன. ஆனதால் இவன் பிரளய காலத்திய அக்னிபோலிருக்கிறான். சத்துரு இவ்வளவு பராக்கிரமசாலியாக வருவதற்கு என்ன காரணம்? ஓஜஸ், பலம், தேஜஸ் ஆகிய இவைகள் எதனால் அவனுக்கு உண்டாயின? எந்த ஒத்தாசையைக் கொண்டு இப்பொழுது முயற்சிக்கிறான்?" என்று கேட்டார்.

28—36. அதைக் கேட்ட பிரகஸ்பதி பகவான் இந்திரனை நோக்கி, "ஓ மகேந்திர! சத்துருவிற்கு இவ்வளவு பலம் நேர்ந்த காரணம் இன்னதென்று எனக்குத் தெரியும். சிஷ்யனாகிய பலிக்கு சுக்ராசாரியர் முதலிய பிராம்மணர்கள் தேஜஸ்ஸை (பலத்தை)க் கொடுத்தார்கள். ஸ்ரீமந்நாராயணன் ஒருவரைத் தவிர நீயாவது, உன்னைப்போலொத்தவனாவது இப்பொழுது அவனுடைய முன்பாக நிற்கமுடியாது. ஆனதால் நீங்களெல்லோரும் சுவர்க்கத்தை விட்டு வேறு ஸ்தலஞ் செல்லுங்கள். சத்துருவிற்குப் பலங் குறையுங் காலத்தை எதிர்பார்த்திருங்கள். இப்பொழுது இவன் பிராம்மணர்களைப் பூஜித்து, பலிஷ்டனாக இருக்கிறான். இவன் சொற்பகாலத்தில் பிராம்மணர்களை அவமானஞ் செய்து, பந்துக்களுடன் நாசத்தை அடைவான்." என்று சொன்னார். காலத்திற்குத் தக்கபடி செய்ய வேண்டியதை அறிந்தவராகிய பிரகஸ்பதியின் வார்த்தையைக் கேட்டுத் தேவர்கள் சுவர்க்கத்தைவிட்டுப் போனார்கள். காமரூபிகளான தேவர்கள் இப்படி ஒளிந்த பின், வைரோசனனுடைய புத்திரனை பலியானவன் சுவர்க்கத்திலிருந்து மூவுலகத்தையும் வசப்படுத்திக் கொண்டான். ஜகத்தை ஜயித்தவனும், சிஷ்யனுமாகிய அந்த பலிக்கு பிருகுகுலத்திய பிராம்மணர்கள் நூறு அசுவமேத யாகஞ் செய்வித்தார்கள்-(இந்திரபதம் ஸ்திரமாக இருப்பதற்காக). பின்பு யாகங்களின் பலத்தால் தன்னுடைய கீர்த்தியை மூவுலகத்திலும் பரவச் செய்து, சந்திரன்போலப் பிரகாசித்தான். பிராம்மணர்களாலும், தேவர்களாலும் கொடுக்கப்பட்ட மூவுலகத்திய ராஜ்யத்தையும் அநுபவித்தான். தன்னைக் கிருத கிருத்தியனாகவும் நினைத்துக்கொண்டான்.

# அத்தியாயம் 16

## பயோ விரதம்

இப்படி தேவர்கள் சுவர்க்கத்தை விட்டு ஓடினதையும், சுவர்க்கமானது அசுரர்களால் அபகரிக்கப்பட்டிருப்பதையும் பார்த்துத் தேவர்களுடைய மாதாவாகிய அதிதி தேவியானவள் அனுதை போலத் துக்கித்தாள். வெகு காலமாகச் சமாதியிலிருந்த கச்யபர் ஒரு சமயம் சமாதியை விட்டெழுந்திருந்து, பத்னியாகிய அதிதியின் ஆச்சிரமம் சென்றார். அது உற்சாகமற்றதும், சந்தோஷமற்றதுமாக இருந்தது. அப்பொழுது அந்த ஆச்சிரமத்தில் முகம் வாடினவளாக இருக்கும் தம்முடைய பத்னியைக் கண்டார். அவளால் உசிதப்படி பூஜிக்கப்பட்டு, ஆசனத்தில் உட்கார்ந்து அவளை நோக்கி, "ஓ நல்ல சுபாவமுள்ளவளே! லோகத்தில் பிராம்மணர்கள் க்ஷேமமாக இருக்கிறார்களா? பசுக்கள் க்ஷேமமா? தர்மங்கள் சரியாக நடக்கின்றனவா? மிருத்யுவிற்கு வசப்பட்டவர்களான ஜனங்கள் சௌக்கியமாக இருக்கிறார்களா? ஓ பத்னி, நம்முடைய கிருகத்தில் தர்மம் முதலியவை நடக்கின்றனவா? அதில் பற்றுதலில்லாதவர்களுக்கும், அதன் பலன் கிடைக்கிறதல்லவா? வீட்டுக் காரியத்தில் நோக்கமுள்ளவளாகி, அதிதிகளை எதிர்கொண்டழைப்பது முதலியவையால் பூஜிக்காமலிருந்தாயோ? வீட்டிற்கு வந்த அதிதிகளுக்கு அன்னமிட்டுப் பூஜிக்கச் சக்தியில்லாவிடினும் தீர்த்தங் கொடுத்தாவது பூஜிக்க வேண்டும்; அப்படியும் பூஜிக்கப்படாமல் அதிதிகள் எந்த வீட்டிலிருந்து திரும்பிப் போகிறார்களோ, அது கிருகமல்ல; சர்ப்பங்கள் வசிக்கும் பிலமேயாம். நான் ஊரிலில்லாத சமயத்தில் உசித காலத்தில் அக்னியில் ஹோமஞ் செய்யவில்லையா? பிராம்மணர்களும் அக்னியும் சகல சுரூபியான விஷ்ணுவிற்கு முகம். ஆனதால் அவர்களைப் பூஜிப்பதால் கிருகஸ்தன் உத்தம லோகத்தை அடைகிறான். உன்னுடைய புத்திரர்க

ளான தேவர்கள் க்ஷேமமுள்ளவர்களாக இருக்கிருர்களா? உன்னுடைய லட்சணங்களைப் பார்க்கும்பொழுது உன்னை மனவருத்தமுள்ளவளென்று நினைக்கிறேன். அதன் காரணத்தைச் சொல்க." என்று கேட்டார்.

*11—17.* அதனைக் கேட்ட அதிதியானவள் பர்த்தாவாகிய கச்யபரை நோக்கி, "ஓ பிராம்மண! பிராம்மணர்களும், பசுக்களும், நான் முதலிய எல்லோரும் க்ஷேமமாக இருக்கிறோம். தர்மம், அர்த்தம், காமம் என்ற மூவர்க்கத்திற்கு இருப்பிடமாகிய கிருகமும் குறைவற்றதாக இருக்கிறது. நான் உம்மையே தியானித்துக்கொண்டிருப்பதால் அக்னி, அதிதிகள், வேலைக்காரர்கள், பிக்ஷுக்கள், யாசகர்கள் ஆகிய எல்லோரும் பூஜிக்கப்பட்டார்கள். ஒரு குறைவுமில்லை. நீர் இம்மாதிரி தர்மத்தை உபதேசிக்கக்கூடிய பாக்கியத்தை நான் பெற்றபடியால் எனக்கு எந்த எண்ணந்தான் நிறைவேருது? ஓ தேவ! ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய குணங்களுள்ள இந்தப் பிரஜைகள் உம்முடைய மனத்திலிருந்தும் சரீரத்திலிருந்தும் உண்டானவர்கள். அந்தத் தேவர்கள் முதலியவர்களிடத்தில் நீர் பட்சபாதமில்லாதவர்; ஆனல் பகவான் பக்தனுக்கு க்ஷேமத்தைச் செய்கிருர். ஓ நாத! ஆனதால் உம்மிடத்தில் பக்தியுள்ளவளாகிய எனக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணும். என்னுடைய புத்திரர்கள் சத்துருக்களால் ஜயிக்கப்பட்டு இருப்பிடத்தை விட்டு ஒளிந்தார்கள். அவர்களுடைய ஐசுவரியம், தேஜஸ், கீர்த்தி ஆகிய இவைகள் அசுரர்களால் அபகரிக்கப்பட்டன. ஓ க்ஷேமத்தைச் செய்பவர்களுக்குட் சிறந்தவரே! என்னுடைய புத்திரர்களான தேவர்கள் சுவர்க்கத்தையும், பலத்தையும், காந்தியையும் திரும்பவும் எப்படி அடைவார்களோ அப்படிச் செய்து அவர்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள்.

*18—21.* அதனைக் கேட்ட கச்யப பிரஜாபதியானவர் சிரித்துக்கொண்டு அவளை நோக்கி, "விஷ்ணுவினுடைய மாயையின் பலமானது ஆச்சரியப்படக்கூடியது. இந்த ஜகத்தானது சிநேகத்தால் கட்டப்பட்டிருக்

கிறது. பூதங்களாலேற்பட்டதும் அனாத்மாவுமான இந்தத் தேகத்திற்கும், பிரகிருதிக்கும், மேலான ஆத்மாவிற்கும் எவ்வளவு பேதமிருக்கிறது. பர்த்தா, புத்திரன் முதலியவர் யாருக்குச் சொந்தம்? ஒருவருக்கொருவர் என்ன சம்பந்தம்? (சம்பந்தமில்லை) என்னுடைய புத்திரன், என்னுடைய களத்திரம் என்று நினைப்பதற்கு அஞ்ஞானமே காரணமாக இருக்கிறது. ஆனதால் மகாபுருஷராகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவை உபாசித்தால் உன்னுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்வார். அவர் சகல பிராணிகளுடைய இருதய குகையில் வசிப்பவர். ஜகத்திற்குக் குரு; வாசுதேவர்; தீனர்களிடத்தில் கிருபையுள்ளவர்; அவரைச் சேவிப்பது வீணாகாது என்று என்னுடைய அபிப்பிராயம்" என்றார்.

22—23. அதனைக் கேட்ட அதிதியானவள், "ஓ பிராம்மணா! ஸத்ய சங்கற்பமுள்ள பகவான் என்னிடம் சந்தோஷமடைந்து எனது இஷ்டத்தைப் பூர்த்திசெய்யும்படி அந்தப் பகவானை எந்த விதிப்படி பூஜிக்கலாம்? அந்த முறையை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றாள்.

24-62. அதனைக் கேட்ட கச்யபர் அவளை நோக்கி, "முன்னொருகால் நான் பிரம்மதேவரை நோக்கி எனக்குப் புத்திரனுண்டாகும்படி எதைச் செய்யலாம் என்று கேட்டேன். அப்பொழுது பயோ விரதமென்றதை எனக்கு உபதேசித்தார். அதனை அநுஷ்டித்தால் ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்குச் சந்தோஷமுண்டாகிறது. அதை உனக்குச் சொல்லுகிறேன். பால்குண மாதத்தில் (பங்குனி) சுக்ல பட்சத்தில் பன்னிரண்டு நாள் அநுஷ்டிக்கவேண்டியது. அதற்குப் பயோ விரதமென்று பெயர். அமாவாசை தினத்தில் காட்டுப்பன்றியால் தோண்டப்பட்ட மண்ணைச் சரீரத்தில் பூசிக்கொண்டு, "ஓ பூமிதேவியே! ஆதி வராக மூர்த்தியால் நீ கொண்டுவரப்பட்டவள். ஆனதால் என்னுடைய பாபத்தைப் போக்கடிக்கவேண்டும்." என்று பிரார்த்தித்து நதியில் ஸ்நானஞ்செய்து தன்னுடைய நித்திய கர்மத்தை முடித்துக்கொண்டு ஸர்வதானாகி ஸ்ரீபக

வானைப் பூஜிக்கவேண்டும். எப்படியெனில்— மகா புருஷனும், சகல பிராணிகளுக்கும் ஸ்தானமும். வாசுதேவரும், சாட்சியும், காரியசுரூபியும், காரண சுரூபியும், பிரதான ஸ்வரூபியும், புருஷரும், இருபத்து நான்கு தத்வங்களை அறிந்தவரும், குணங்களுக்குக் காரணருமான பகவானை நமஸ்கரிக்கிறேன். மேலும் இரண்டுதலையுள்ளவரும், மூன்றுகால்களுள்ளவரும், நான்கு சிருங்கமுள்ளவரும், ஏழு கைகளுள்ளவரும், வேதவித்யா சுரூபியும், யஞ்ஞ சுரூபியுமான பகவானுக்கு நமஸ்காரம். சிவ சுரூபியும், ருத்ர சுரூபியும், சுப்ரமண்ய சுரூபியும், ஸகல வித்தைகளுக்கு அதிபதியும், பூதங்களுக்குப் பதியுமான உமக்கு நமஸ்காரம். ஹிரண்யகர்ப்பரும், ஸூத்ராத்மாவும், ஜகத்ரூபியும், யோகைச்வர்ய ரூபியும், யோகத்திற்குக் காரணருமான உமக்கு நமஸ்காரம். ஆதிதேவராகிய உமக்கு நமஸ்காரம். தேவதேவரும், நரநாராயணரூபியும், ஸ்ரீ மகாவிஷ்ணுவுமான உமக்கு நமஸ்காரம். மரகத ரத்னம்போன்ற திருமேனியுள்ளவரும், லக்ஷ்மிக்கு வாஸஸ்தலமும், பீதாம்பரத்தைத் தரித்தவருமான கேசவருக்கு நமஸ்காரம். ஓ பூஜிக்கக் கூடியவரே! வரத்தைக் கொடுப்பவர்களுக்குட் சிறந்தவரே! நீர் எல்லாருக்கும் வரத்தைக் கொடுப்பவர்; ஆனதால் க்ஷேமத்தை அடையவேண்டியதற்காக வித்வான்கள் உம்முடைய பாததூளியை உபாசிக்கிறார்கள். தேவர்களும், லக்ஷ்மீதேவியும் எவருடைய பாதாரவிந்தங்களை அநுசந்தித்தார்களோ, அந்தப் பகவான் என்னிடத்தில் கிருபை செய்யட்டும்,'. என்று பூமியிலாவது, சூரியனிடத்திலாவது, ஜலத்திலாவது, அக்னியிலாவது, குருவிடத்திலாவது, பகவானை ஆவாகனஞ் செய்து, பாத்யம் முதலியவைகளால் சிரத்தையுடன் பூஜிக்கவேண்டும். பாலினால் பகவானுக்கு அபிஷேகஞ்செய்து, வஸ்திரம், சந்தனம், புஷ்பம், அக்ஷதம், தூபம், தீபம் ஆகிய இவைகளால் பூஜித்து, பாலில் பக்குவமான அன்னத்தை நிவேதனஞ் செய்யவேண்டும். மேலும், விபவத்திற்குத்தக்கபடி நெய், வெல்லம் இவைகளுடன் அன்னத்தைப் பக்தர்களுக்குக்

கொடுக்கலாம். அல்லது தானாவது புசிக்கலாம். ஆசமனம், தாம்பூலம் ஆகிய இவைகளைக் கொடுத்து, ஸ்தோத்திரஞ்செய்து நூற்றெட்டுத் தடவை மூல மந்திரத்தை ஜபிக்கவேண்டும். பின்பு பிரதக்ஷிணஞ் செய்து தண்டம்போல நமஸ்கரிக்கவேண்டும். நிர்மால் யத்தைச் சிரஸில் வைத்துக்கொண்டு பகவானை உத்வாஸனஞ் செய்யவேண்டும். இரண்டு பிராம் மணர்களுக்குக் குறையாமல் போஜனஞ் செய்விக்க வேண்டும். அவர்களுடைய உத்தரவுபெற்று இஷ்டர் களுடன் புசிக்கவேண்டும். அன்றைய ராத்திரி ஸ்திரீ சங்கமமில்லாமலிருக்கவேண்டும். மறுநாள் காலையில் ஸ்நானஞ்செய்து சுத்தனாகி முன்சொன்ன விதிப்படி பகவானைப் பூஜித்து ஹோமம் முதலியவைகளை நடத்த வேண்டும். இப்படிப் பன்னிரெண்டு நாள் பயோ விர தத்தை யநுஷ்டிக்கவேண்டும். இது சுக்லபக்ஷ பிரதமை யில் ஆரம்பித்து, திரயோதசியில் முடிவாகிறது. இது நடுவில் ஸ்திரீ சங்கமஞ் செய்யக்கூடாது. தரையில் படுத்துக்கொள்ளவேண்டும். மூன்று காலம் ஸ்நானஞ் செய்யவேண்டும். கெட்ட வார்த்தைகளை யொழிக்க வேண்டும். பலவகையான போகங்களை யநுபவிக்கக் கூடாது. ஒருவருக்கும் இம்சைசெய்யாமல் ஸ்ரீ வாசு தேவனையே தியானஞ்செய்துகொண்டிருக்கவேண்டும். திரயோதசி தினத்தில் பஞ்சாமிருதத்தால் பகவானுக்கு ஸ்நானஞ் செய்வித்து, சாஸ்திர முறைப்படி பூஜிக்க வேண்டும். பணத்தில் லோபத்தை வைக்கக்கூடாது. அன்னத்தைப் பாலில் பக்குவஞ்செய்து, அந்த சருவை புருஷ ஸூக்தத்தால் அக்னியில் ஹோமஞ்செய்து பகவானுக்குத் திருப்தி யுண்டுபண்ணக்கூடியதை நிவே தனஞ் செய்யவேண்டும். ஞானமுள்ளவராகிய ஆசாரி யனுக்கு வஸ்திரம், ஆபரணம், தக்ஷிணை இவைகளையுங் கொடுத்து, ரித்விக்குகளுக்கும் தக்ஷிணை கொடுக்க வேண்டும். பிராமணர்கள், தீனர்கள், குருடர்கள் முதலிய எல்லோருக்கும் போஜனஞ் செய்வித்து, எல்லாரும் புசித்தபின் தான் புசிக்கவேண்டும். பிராமணர்களைச் சந்தோஷப்படுத்துவதே பகவானைப் பூஜித்ததாகும். இப்படி ஒவ்வொரு நாளும் நர்த்தனத்

தாலும், பாட்டினாலும், பகவானுடைய கதைகளைச் சொல்வதாலும பகவானைப் பூஜிக்கவேண்டும். இதற்குப் பயோ விரதமென்று பெயர். இது மஹாபுருஷனுடைய ஆராதனம். இது பிரம்மதேவரால் எனக்குச் சொல்லப்பட்டது. ஓ மிகுந்த அதிருஷ்டமுள்ளவளே! இந்த விதிப்படி சுத்தமான மனத்துடன் பகவானைப் பூஜி. இது ஸகல யக்ஞத்திற்குச் சமமானது. இதுவே சகல விரதம். ஓ நல்ல சுபாவமுள்ளவளே! இந்த விரதமே மேலான தபஸ். இதுவே நியமம். இதுவே சிறந்த யாகம். பகவானுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது. ஆனதால் இந்த விரதத்தைச் சிரத்தையுடன் அநுஷ்டி. பகவான் உன்னிடத்தில் சந்தோஷமடைந்து, உன்னுடைய "எண்ணத்தை நிறைவேற்றுவார்" என்றார்.

# அத்தியாயம் 17

## அதிதி பயோ விரதத்தை யநுஷ்டித்தது

அதிதி தேவியானவள் பர்த்தாவாகிய காச்யபருடைய வார்த்தையைக் கேட்டு, பன்னிரெண்டு நாட்கள் சோம்பலின்றி அந்த விரதத்தை அநுஷ்டித்தாள். அவள் புத்தியாகிய சாரதியால், மனதாகிய கடிவாளத்தைக்கொண்டு, இந்திரியங்களாகிய துஷ்டக் குதிரைகளை அடக்கி மனத்தை யொருவகைப்படுத்தி மஹாபுருஷனாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவையே தியானித்துக் கொண்டு பயோ விரதத்தைச் செய்தாள். அப்பொழுது ஸ்ரீ பகவான் அவளுக்கு நான்கு கைகளுடன் பீதாம்பரத்தைத் தரித்தவராகச் சங்கம், சக்கரம், கதை ஆகிய இவைகளுடன் தரிசனங் கொடுத்தார். அவரைக் கண்ட மாத்திரத்தில் அதிதியானவள் சீக்கிரமாக எழுந்திருந்து தண்டம்போலப் பூமியில் நமஸ்கரித்தாள். பின்னுமவள் எழுந்திருந்து மயிர்க்கூச்சலுள்ள

வளாகி, அவருடைய தரிசனத்தால் உண்டான மிகுந்த ஆசையால் சரீரத்தில் நடுக்கமுள்ளவளாகி, இரு கைகளை யும் கூப்பி நின்றாள். அவள் பகவானை ஸ்தோத்திரஞ் செய்யவேண்டுமென்ற விருப்பமுள்ளவளானாலும் ஆனந் தக்கண்ணீரால் கண்டமடைத்து மௌனமாக நின்றாள். சிலநாழிகை சென்றபின் கத்கத ஸ்வரத்துடன் மிகுந்த அன்பு பாராட்டி ஸ்ரீ பகவானைப் பின்வருமாறு ஸ்தோத் திரஞ் செய்தாள்: ஓ தீனர்களுக்கு அதிபதியே! யக்ஞங் களுக்கு அதிபதியே! யக்ஞபுருஷ! அழிவற்றவரே! பரிசுத்தப்படுத்தும் பாதங்களுள்ளவரே! சுத்தியைக் கொடுக்கும் சரிதங்களுள்ளவரே! காதுக்கு இனிமை யான திவ்ய நாமதேயங்களுள்ளவரே! ஆபத்தை அடைந்தவர்களுடைய பாபத்தைப் போக்கி க்ஷேமத் தைக் கொடுப்பவரே! முந்தியவரே! எனக்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணும். ஜகத் ரூபியும், ஜகத் தைப் படைப்பது, ரக்ஷிப்பது, ஸம்ஹரிப்பது ஆகிய இவைகளைச் செய்வதற்காக மாயாகுணங்களை அங்கீ கரித்தவரும், மஹா மகிமை பொருந்தியவரும், மாறாத சுரூபமுள்ளவரும், எப்பொழுதும் ஸ்திரமாகவிருக்கும் அகண்ட ஞானத்தால் மாயையை நிவர்த்திப்பவரு மான ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்கு நமஸ்காரம். ஓ அநந்த! எவனிடத்தில் நீர் சந்தோஷப்படுகிறீரோ அவனுக்கு தீர்க்கமான ஆயுள், நல்ல சரீரம், ஒப்பற்ற காந்தி, த்யுலோகம், பூலோகம், பாதாளம், சுத்தமான ஞானம் ஆகிய இவைகள் கிடைக்கின்றன. சத்துரு ஜயம் முதலியவை கிடைப்பதில் என்ன ஆக்ஷேபம்?'' என் றாள்.

11—20. தாமரை மலர்போன்ற கண்களுள்ள வரும், எல்லாப் பிராணிகளுக்கும் க்ஷேத்ரக்ஞருமாகிய ஸ்ரீ பகவான் அதிதி தேவியால் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டு அவளை நோக்கி, "ஓ தேவர்களுக்கு மாதாவாகிய அதிதியே! வெகுநாளாக உன் மனத்தி லிருக்கும் எண்ணத்தை நான் அறிவேன். உன்னுடைய புத்திரர்களுடைய சம்பத்து சத்துருக்களால் அபகரிக் கப்பட்டிருப்பதால் அவர்கள் திரும்பவும் ராஜ்ஜியத்தை

அடைந்து சுவர்க்கத்தில் விளையாடவேண்டும். அதனை நீ பார்த்து சந்தோஷிக்கவேண்டுமென்பது உன்னுடைய எண்ணம். ஆனாலும் அசுரர்களை இப்பொழுது தடுப்பது நியாயமல்ல. இப்பொழுது அவர்களுக்கு ஈசுவரனுடைய ஒத்தாசை இருக்கிறது. ஆனதால் அவர்களிடத்தில் பராக்கிரமம் பயன்படாது. ஆனாலும் நீ செய்த விருதத்தால் நான் ஆராதிக்கப்பட்டபடியால் அதற்கு ஏதாவதொரு உபாயஞ் செய்யவேண்டியவனாக இருக்கிறேன். என்னைப் பூஜிப்பது வீணாகாது சிரத்தைக்குத்தக்கபடி பயன் கிடைக்கும். நீ என்னைச் சிரத்தையுடன் பயோ விருதத்தால் பூஜித்தபடியால் நான் உனக்குப் புத்திரனாக அவதரித்து, உன்னுடைய புத்திரர்களாகிய தேவர்களைக்காப்பாற்றுகிறேன். ஆனதால் என்னை தியானஞ்செய்துகொண்டு பர்த்தாவாகிய மாரீசரை அடை. இது தேவ ரகஸ்யமானதால் பிறருக்குச் சொல்லக்கூடாது. தேவ ரகஸ்யத்தை மறைத்து வைத்துக்கொண்டால் எல்லாம் கிடைக்கும்'' என்று சொல்லி மறைந்தார்.

21—23. அதனைக் கேட்ட அதிதியானவள் தன் பர்த்தாவாகிய மாரீசருடைய சமீபஞ் சென்றாள். அவர் ஞானதிருஷ்டியால் நடந்த சமாசாரத்தைத் தெரிந்துகொண்டு, தன்னிடத்தில் பிரவேசித்திருக்கும் ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய அம்சத்தை அதிதியினிடத்தில் பிரவேசிக்கச் செய்தார். கட்டையில் அக்னி பிரவேசித்ததுபோலப் பகவானுடைய அம்சமானது அதிதியினிடம் பிரவேசித்தது.

24—27. இப்படி பகவான் அதிதியின் கர்ப்பத்தில் பிரவேசித்திருப்பதைப் பிரும்மதேவர் தெரிந்துகொண்டு பகவானுடைய திவ்ய நாமதேயங்களைச் சொல்லித் துதிக்கலானார். எப்படியெனில், பெரியோர்களால் கானஞ் செய்யக்கூடிய ஓ பகவன்! எல்லாருக்கும் மேலானவராக இருக்கவேண்டும். மேலான சரிதமுள்ளவராகிய உமக்கு நமஸ்காரம். பிரச்னிகர்ப்பராகிய உமக்கு நமஸ்காரம். வேதங்களால் நிரூபிக்கப்படும் விசுவரூபமுள்ள உம்மை நமஸ்கரிக்கிறேன். மூவுலகங்களையும் தொப்

புளில் வைத்துக்கொண்டிருக்கும் உமக்கு நமஸ்காரம். நீர் மூவுலகத்தைவிட மேலானவர்; சகல பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக இருப்பவர்; நீர் இந்த ஜகத்தை யுண்டுபண்ணுகிறவர்; நாசஞ்செய்பவர்; காப்பாற்றுகிறவர்; மிகுந்த சக்தியுள்ள புருஷர்; ஜலத்தில் விழுந்த திருணம் முதலியவைகளைப் பிரவாகம் போல நீர் காலசுரூபியாக இருந்து ஜகத்தைச் சேஷ்டிக்கச் செய்கிறீர். மேலும், நீர் சரங்கள், அசரங்கள் ஆகிய பிரஜைகளையும், பிரஜாபதிகளையும் படைத்தவர்; அப்படிப்பட்ட நீர் சமுத்திரத்தில் மூழ்குகிறவனுக்குக் கப்பல்போல ஆபத்தை அடைந்தவர்களான தேவர்களைக் காப்பாற்றும்" என்றார்.

# அத்தியாயம் 18

## வாமனவதாரம்

இம்மாதிரி பிரம்மதேவரால் துதிக்கப்பட்ட ஸ்ரீ மஹாவிஷ்ணு அதிதியினிடத்தில் அவதரித்தார். அவர் நான்கு கைகளுள்ளவர்; சங்கம், கதை, தாமரை மலர், சக்கரம் ஆகிய இவைகளைத் தரித்தவர்; பீதாம்பரத்தைத் தரித்தவர்; தாமரை மலர்போன்ற கண்கள் உள்ளவர்; கருத்த திருமேனியுள்ளவர்; மகரகுண்டலங்களால் பிரகாசிக்கும் முகமுள்ளவர்; ஸ்ரீவத்ஸத்துடன் கூடிய மார்புள்ளவர்; வளை, தோள் வளை, கிரீடம், அரைநாண், ஹாரம் முதலியவைகளுள்ளவர்; அவருடைய மார்பில் வனமாலை பிரகாசிக்கிறது. அது சுத்தமாக இருப்பதுடன் அதில் வண்டுகள் மதுபானஞ்செய்து சப்திக்கின்றன. கௌஸ்துப ஹாரம் பிரகாசிக்கிறது. அப்படிப்பட்ட பகவானுடைய காந்தியால் அந்த மாரீசருடைய கிருகமானது விளங்கிற்று. பகவான் அவதரித்த சுபமுகூர்த்தத்தில் திக்குகளும், நதிகளும் தெளிந்தன. பிரஜைகள் சந்தோஷித்தார்கள்.

எல்லா ருதுக்களின் அடையாளங்கள் பிரகாசித்தன. த்யுலோகம், அந்தரிக்ஷம், பூமி, தேவர்கள், பசுக்கள், பிராம்மணர்கள், பாகவதர்கள் ஆகிய இவர்கள் சந்தோஷித்தார்கள். பாத்ரபத மாதத்திய சுக்லபக்ஷ துவாதசி திதியும், சிரவணநக்ஷத்திரமும் கூடிய சுப தினத்தில் அபிஜித் என்ற சிரவணத்தின் முதல் பாக நக்ஷத்திரத்தில் பகவான் அவதரித்தார். அப்பொழுது ஸகல நக்ஷத்திரங்கள், சூரியன் முதலிய கிருகங்கள் இவைகள் மிக்க சுபர்களாக இருந்தார்கள். துவாதசியில் மத்தியான காலத்தில் பகவான் ஆவிர்பவித்தார். அந்தத் துவாதசிக்கு விஜயா என்று பெயர். மேலும் சங்கம், துந்துபி, மிருதங்கம், பணவம், ஆனகம் முதலிய வாத்தியங்கள் முழங்கின. சிறந்த அப்ஸரஸுக்கள் மிகுந்த பிரியத்துடன் நர்த்தனஞ்செய்தார்கள். சிறந்த கந்தர்வர்கள் பாடினார்கள். முனிகளும், தேவர்களும், மநுக்களும், பிதிருக்களும், அக்னிகளும், ஸித்தர்களும், வித்யாதரர்களும், கிம்புருஷர்களும், கருடர்களும், ஸர்ப்பங்களும் துதித்தார்கள்; கானஞ்செய்தார்கள்; சிலாகித்தார்கள்; அதிதியின் ஆச்ரமத்தில் புஷ்பங்களை வர்ஷித்தார்கள்.

11—19. பரமபுருஷன் தம்முடைய யோகமாயையால் சரீரத்தை யெடுத்துக்கொண்டு அதிதியின் கர்ப்பத்தில் அவதரித்ததைக் கண்டு அதிதியானவள் ஸந்தோஷமடைந்தாள். பிரஜாபதியாகிய மாரீசர் அவரைத் தரிசித்து ஆச்சரியமடைந்து ஜய என்று சொன்னார். அப்பொழுது அற்புதமான சரிதமுள்ள பகவான் சங்கம் முதலிய ஆயுதத்தைத் தரித்திருந்த சுரூபத்தை மறைத்துக்கொண்டு தாய் தகப்பனார் பார்த்திருக்கும் பொழுது வாமனராக ஆனார். அப்பொழுது மகரிஷிகள் மாரீசரை முன்னிட்டு அந்த வாமனருக்கு ஜாதகர்மம் முதலியவைகளைச் செய்தார்கள். அவருக்கு உபநயனஞ் செய்யும்பொழுது சூரியன் காயத்ரியை யுபதேசித்தார்; பிரஹஸ்பதி பகவான் யக்ஞோபவீதத்தை யளித்தார்; கச்யபர் மேகலையைக் கொடுத்தார்; பூமி கிருஷ்ணாஜினத்தையும், வானத்திற்கு அதிபதியான ஸோமன் (சந்திரன்)

தண்டத்தையும், தாயானவள் கௌபீனத்தை மறைக்கக் கூடிய அன்புள்ள வஸ்திரத்தையும, த்யு லோகமானது குடையையும், பிரம்மதேவர் கமண்டலுவையும் (கட்ம்), சப்தரிஷிகள் தர்ப்பைகளையும், ஸரஸ்வதி அக்ஷமாலையையும் (ஜபமாலை), குபேரன் பிக்ஷா பாத்திரத்தையும் கொடுத்தார்கள். பரமசிவனுடைய பத்தினியாகிய ஸ்ரீ தேவியென்ற உமாதேவியானவள் பிக்ஷையளித்தாள். இப்படி மகரிஷிகளால் பூஜிக்கப்பட்ட அந்த வாமனப் பிரம்மசாரி தம்முடைய பிரம்ம தேஜஸால் அந்த சபையிலிருப்பவர்களுக்கு மேலானவராக இருந்தார். அவர் பரிஸமூஹனம் முதலியவைகளைச் செய்து அக்னியை வளர்த்து அதில் ஸமித்துக்களை ஹோமஞ் செய்தார். (ஸமிதாதானஞ் செய்தார்).

20—32. அந்தக் காலத்தில் பலியானவன் பிருகு வம்சத்திய பிராம்மணர்களுடைய சகாயத்தால் நர்மதையின் வடக்குக்கரையில் பிருகுவத்ஸமென்ற க்ஷேத்திரத்தில் அசுவமேத யாகஞ்செய்தான். அதனைக் கேட்ட வாமனர் பூமி அனையக்கூடிய பாரமுள்ளவராகி அவ்விடஞ் சென்றார். அங்கிருக்கும் பிராம்மணர்கள் உதயமான சூரியன்போலப் பிரகாசிக்கும் அந்த வாமனரைப் பார்த்தார்கள். அந்த சபையிலுள்ள எல்லோரும், வாமனருடைய தேஜஸைப் பார்த்துச் சூரியன வருகிறாரோ, அல்லது அக்னியோ, அல்லது யாகத்தைப் பார்ப்பதற்காக ஸனத்குமாரர் வருகிறாரோ வென்று நினைத்துப் பிரமித்தார்கள். இப்படி அவர்களும், அவர்களுடைய சிஷ்யர்களுமம யோசித்துக்கொண்டிருக்க, தண்டம், குடை, ஜலம் நிறைந்த கமண்டலு, மௌஞ்ஜி, யக்ஞோபவீதம், அஜினமாகிய உத்தரீயம் ஆகிய இவைகளைத் தரித்தவரும், ஜடையுள்ளவருமான அந்த வாமனர் யாகசாலைக்கு வந்தார். அவரைக் கண்டவுடன் அங்கிருந்த பிராம்மணர்கள சிஷ்யர்களுடனும், அக்னிகளுடனும் எதிர்கொண்டழைத்தார்கள். அழகான சரீரமுள்ள அந்த வாமனரைக் கண்ட யஜமானனுகிய பலி மிகுந்த சந்தோஷத்துடன் அவருக்கு ஆசனங் கொடுத்தான். நல்வரவு கேட்டான்; நமஸ்கரித்தான்;

அவருடைய பாதங்களை அலம்பினன்; பூஜித்தான்; அவருடைய பாத தீர்த்தத்தைத் தலையில் புரோக்ஷித்துக்கொண்டான். அது சகல பாபங்களையும் போக்கக்கூடியது; தேவதேவரும் சந்திரமௌளியுமான பரமசிவனாலும் சிரஸில் தரிக்கப்பட்டது. பின்னுமவன் வாமனரை நோக்கி, "ஓ பிராம்மணா! நல்வரவா? உமக்கு நமஸ்காரம். உமக்கு என்னால் செய்யப்படவேண்டியது என்ன? பிரம்மரிஷிகளால் செய்யப்படும் தபஸ் சரீரமெடுத்துக்கொண்டு வந்திருப்பதாக நினைக்கிறேன். நீர் என்னுடைய கிருகத்திற்கு வந்தபடியால் இன்றைய தினம் என்னுடைய பிதுருக்கள் திருப்தியடைந்தார்கள். என்னுடைய குலம் பரிசுத்தமாயிற்று. யாகமானது செவ்வையாக அநுஷ்டிக்கப்பட்டது. உம்முடைய பாதங்களை அலம்பியதால் அக்னிகள் நன்றாக ஹோமஞ் செய்யப்பட்டன. உம்முடைய பாதம் பட்டபடியால் இந்தப் பூமி சுத்தமாயிற்று. ஓ பூஜ்யர்களுக்குச் சிறந்தவரே! எதனையோ யாசிக்க விருப்பமுள்ளவர் போல் தோன்றுகிறீர். உமக்கு எது வேண்டுமோ அதனைக் கொடுக்கிறேன். பசுக்கள் வேண்டுமோ? அல்லது சுவர்ணத்தில் ஆசையா? அல்லது மேலான கிருகம் வேண்டுமோ? அல்லது உத்தமமான ஆகாரத்தில் விருப்பமிருக்கிறதா? பிராம்மணக் கன்னிகையை விவாகஞ் செய்துகொள்ளவேண்டுமென்று நினைக்கிறீரோ? கிராமங்கள் வேண்டுமா? வேண்டியதைக் கேட்கலாம்" என்றார்.

# அத்தியாயம் 19

## வாமனர் பலியை யாசித்தது

இப்படி தர்மத்திற்கு உகந்த பலியின் பிரியமான வார்த்தையைக் கேட்டு வாமனர் மிக்க பிரியத்துடன் அவனைச் சிலாகித்து, "பரலோகத்திற்கு இதமான தர்மத்தை யநுஷ்டிப்பதில் பிருகுக்களும், உம்முடைய பிதாமகராகிய சாந்தரான பிரகலாதரும் திருஷ்

டாந்தமாக இருக்கிறார்கள். உம்மால் சொல்லப்பட்ட வார்த்தை உம்முடைய குலத்துக்குத் தகுதியானது; பிராம்மணனுக்கு ஒரு வஸ்துவைக் கொடுப்பதாகப் பிரதிக்ஞை செய்து பிந்தி மறுதளிப்பவனாவது, கொடாதவனாகிய கிருபணனாவது பலமற்றவனாவது உம்முடைய குலத்தில் ஜனித்ததில்லை. மேலும், உம்முடைய வம்சத்தில் யுத்தத்தில் புறங்காட்டி ஓடுகிறவனும், யாசகர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்யாதவனும் ஜனித்ததில்லை. ஆகாசத்தில் சந்திரன் பிரகாசிப்பது போல சுத்தமான கீர்த்தியுள்ள பிரகலாதர் உம்முடைய குலத்தில் பிரகாசிக்கிறாரல்லவா? பின்னும் உம்முடைய குலத்தில் பிறந்த ஹிரண்யாக்ஷனென்பவன் கதாயுதத்துடன் இப்பூமி முழுவதும் சஞ்சரித்துத் தன்னுடன் யுத்தஞ்செய்யத் தகுதியான வீரன் அகப்படாமல் சகல திக்குகளை ஜயித்தான். அவனை மஹாவிஷ்ணு மிகுந்த சிரமப்பட்டு ஜயித்ததுமன்றி அவனுடைய பராக்ரமத்தை அதிகமென்று நினைத்து, தம்மை ஜெயங்கொண்டவராக நினைக்கவேயில்லை. பின்பு ஹிரண்யகசிபுவென்பவன் தன்னுடைய சகோதரனைக் கொன்றவராகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவினிடம் கோபங்கொண்டு அவருடைய இருப்பிடஞ் சென்றான். யமன்போல் சூலத்தைக் கையில் வைத்துக்கொண்டு எதிர்த்துவரும் ஹிரண்யகசிபுவைக் கண்ட ஸ்ரீ மஹாவிஷ்ணு மாயாவிகளுக்குச் சிறந்தவராகையால் அந்தச் சமயத்திற்குத் தக்கபடி யோசித்து 'பிராணிகளுக்கு மிருத்யுபோல இவன் நான் செல்லுகிற இடங்களுக்கெல்லாம் வருவான். ஆதலால் இவனுடைய ஹிருதயத்திலேயே பிரவேசிக்கிறேன்' என்று நிச்சயம் செய்துகொண்டு அவனுடைய மூக்கின் வழியாகப் பிரவேசித்து சூக்ஷ்ம சரீரத்துடன் அவனுடைய மூச்சுக் காற்றில் மறைந்திருந்தார். அப்பொழுது அந்த ஹிரண்யகசிபு ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அரண்மனைக்குள் புகுந்து தேடியும் அவரைக் காணாமல் கோபத்துடன் கர்ஜித்தான். பின்னுமவன் பூமி, ஆகாசம், திக்குகள் சமுத்திரம் முதலியவிடங்களில் தேடினான். அப்படியும் பார்க்கவில்லை. அப்பொழுது அவன் 'நான் இந்தஜகத் முழுவதும் தேடினேன். என்னுடைய சகோதரனைக்

கொன்றவனைக் கானேன். திரும்பி வராமலிருக்கு மிடத்தை அடைந்தான்' என்று சொல்லித் தன்னிருப் பிடஞ் சென்றான்.

13—17. பிராணிகளுக்கு விரோதமென்பது மரணம் வரையிலிருக்கும். நான் என்ற அகங்காரத்தால் விருத்தியடையும் கோபமானது அஞ்ஞானத்தால் உண் டாகிறது. பிரகலாதருடைய புத்திரரும், உம்முடைய பிதாவுமாகிய விரோசனர் விஷ்ணுபக்தராக இருந்து தேவர்கள் பிராம்மண வேஷங்கொண்டு யாசிக்கிறார் களென்பதை அறிந்திருந்தும், தேவர்களுக்குத் தம் முடைய ஆயுளைக் கொடுத்தார். நீர் பெரியோர் களான கிருகஸ்தர்களாலும், பிராம்மணர்களாலும், மிகுந்த கீர்த்தியுள்ள சூரர்களாலும், அநுஷ்டிக்கப்பட்ட தர்மத்தைச் செய்கிறீர். ஆனதால் வரங்கொடுப்பவர் களுக்குச் சிறந்தவராகிய உம்மிடமிருந்து என் காலால் மூன்றடிகொண்ட பூமியைப் பெற்றுக்கொள்ளவேண்டு மென்று விரும்புகிறேன். நீர் மிக்க தாதாவானாலும் எனக்கு வேறொன்றும் வேண்டியதில்லை. வித்வானாக இருப்பவன் சரீர யாத்திரைக்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு அபேக்ஷிக்கலாமேயொழிய அதிகத்தை அபேக்ஷிக்கக்கூடாது. அப்படி அபேக்ஷித்தால் அவன் திருடன்; அவனை சிட்சிக்கவேண்டும்'' என்றார்.

18—20. அதனைக் கேட்ட பலி வாமனரை நோக்கி, ''ஓ பிராம்மண புத்ர! நீர் பாலனாக இருந்தாலும் உம் முடைய வார்த்தைகள் பெரியோர்களால் சிலாகிக்கக் கூடியவைகளாக இருக்கின்றன; ஆனால் நீர் உம்முடைய காரியத்தில் அறியாதவன்போலப் பேசுகிறீர். ஏனென் றால், என்னை யாசித்தவன் திரும்பவும் கஷ்டப்படமாட் டான். நீர் உம்முடைய காலால் மூன்றடி பூமியைக் கொடுக்க வேண்டுமென்று கேட்கிறீர். அது உம்முடைய ஜீவனத் திற்குப் போதுமானதல்லவே. ஆனதால் ஜீவனத்திற்கு எவ்வளவு பூமி வேண்டுமோ அதனை யாசியும்'' என்றான்.

21—27. அதனைக் கேட்ட வாமனர் பலியை நோக்கி, ''ஓ அரசனே! இந்திரியங்களை ஜயிக்காதவனுக்கு லோக த்திலுள்ள மேலான சகலவஸ்துக்கள் கிடைத்தாலும்

அவன் சந்தோஷிக்கமாட்டான். மூன்றடி பூமியை அடைந்து எவன் சந்தோஷப்படவில்லையோ, அவனுக்கு ஒன்பது வர்ஷங்களுள்ள பூமி கிடைத்தாலும் சந்தோஷமுண்டாகாது. ஏழு த்வீபங்களுக்கும் அதிபதிகளாக இருந்த வைன்யர், நிருகர் முதலிய அரசர்கள் அர்த்தங்களையும் காமங்களையும் தங்களிஷ்டப்படி அநுபவித்தும் போதுமென்று ஒழிவையடையவில்லையென்று கேள்விப்பட்டிருக்கிறோம். தெய்வச்செயலாகக் கிடைத்ததால் சந்தோஷத்தை அடைகிறவன் சுகத்தை அடைவான். அதிக ஆசையுள்ளவனுக்கு மூவுலகங் கிடைத்தாலும் சுகமில்லை. தெய்வச்செயலாகக் கிடைத்த அர்த்தத்திலும், காமத்திலும் திருப்தியடைகிறவன் முக்தியடைவான். அவைகளில் திருப்தியடையாமல் அதிகமாக விரும்புகிறவன் பிறவியை அடைவான். பிரயத்தனமின்றி கிடைத்தால் சந்தோஷப்படுகிற பிராம்மணனுக்குத் தேஜஸ் விருத்தியாகும். அதிக ஆசையுள்ள பிராம்மணனுடைய தேஜஸானது ஜலத்தால் அக்னி அணைவதுபோலக் குறைந்துவிடும். ஆனதால் மூன்றடி பூமி கொடுத்தால் போதுமானது; அதிகம் எனக்கு வேண்டியதில்லை" என்றார்.

28—43. அதனைக் கேட்ட பலி சிரித்துக்கொண்டே இஷ்டமானதைப் பெற்றுக்கொள்ளும்' என்று சொல்லி வாமனருக்குப் பூமியைக் கொடுப்பதற்காக ஜலபாத்திரத்தை எடுத்தார். அதனைக் கண்ட சுக்ராச்சாரியார் சிஷ்யனாகிய பலியை நோக்கி, "ஓ விரோசனருடைய புத்திரராகிய பலியே! இவர், அழிவற்றவரான ஸ்ரீ மஹாவிஷ்ணு. கச்யபருக்கு அதிதியினிடத்தில் வாமனராக தேவர்களுக்கு ஒத்தாசை செய்வதற்காக அவதரித்திருக்கிறார். இது கெடுதியைக் கொடுக்குமென்பதையறியாமல் கேட்டதைக் கொடுப்பதாக உறுதி சொல்லிவிட்டீர். அது நல்லதல்லவென்று நினைக்கிறேன். நீர் இப்படிச் செய்வதால் அசுரர்களுக்கு மிகுந்த கெடுதியுண்டாகும். இவர் உம்முடைய ஸ்தானம் (இருப்பிடம்), ஐசுவரியம், தேஜஸ், கீர்த்தி ஆகிய இவைகளை உம்மிடமிருந்து அபகரித்து இந்திரனுக்குக் கொடுக்கப்

போகிருர். இவர் இப்பொழுது சிறுவராக இருந்தாலும் பெரிய சரீரமெடுத்து லோகம் முழுவதையும் மூன்றடியாக அளந்துவிடுவார். எல்லாவற்றையும் விஷ்ணுவுக்குக் கொடுத்து நீர் எப்படி ஜீவிக்கப் போகிறீர்? உம்மை மூடனென்று நினைக்கிறேன். ஒரு அடியால் பூமியையும், மற்றொரு அடியால் த்யுலோகத்தையும் ஆகாசத்தையும் அளந்துவிடுவார். மூன்ருவது அடிகொண்ட பூமியை எப்படிக் கொடுக்கப் போகிறீர்? கொடுப்பதாக உறுதிசெய்தபடி கொடாதவனுக்கு நரகம் கிடைக்கும். நீர் பிரதிக்ஞை செய்தபடி கொடுக்கமுடியாதவராக ஆகப் போகிறீர். புருஷனுடைய ஜீவனோபாயம், யக்ஞம், தபஸ் முதலிய கர்மங்கள் எந்தத் தானத்தால் கொடுக்கப் படுகின்றனவோ அது தானமல்ல. தன்னுடைய பணத்தைத் தர்மம், அர்த்தம், காமம், கீர்த்தி, பந்துக்கள் ஆகிய இவர்களுக்காக ஐந்துவகையாகப் பிரித்து அதனை அதற்கு உபயோகிப்பவன் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் சந்தோஷப்படுவான். ஓ அசுர சிரேஷ்ட! இந்த விஷயத்தில் வேதத்தில் சொல்லியிருப்பதைச் சொல்லுகிறேன், கேளும். அதாவது கொடுக்கிறேன் என்று ஒப்புக்கொள்வது சத்தியம். திரும்பவும் இல்லை யென்பது அனிருதம். (அஸத்யம்) சரீரமாகிய விருக்ஷத்திற்கு ஸத்யமானது புஷ்பமாகவும் பழமாகவு மிருக்கிற தென்று சுருதியில் சொல்லப்படுகிறது. விருக்ஷத்திற்கு நாசம் நேருமானல் புஷ்பமாவது பழமாவது எப்படி யுண்டாகும்? ஆனதால் சரீரமாகிய விருக்ஷத்திற்கு அநிருதம (அஸத்யம்) காரணமாக விருக்கிறது. அஸத்யத்தால்தான் ஸத்யமுண்டாக வேண்டு மென்று தாத்பரியம். வேரற்ற மரமானது எப்படிச் சீக்கிரம் உலர்ந்து கீழே விழுகிறதோ, அப்படி அனிருதமில்லாத வரையில் தேகம் நாசத்தை அடையும். எல்லாவற்றையும் கொடுக்கிறேன் என்று அர்த்தமுள்ள 'ஓம்' என்றதை உச்சரித்தால் அது அர்த்தமில்லாதாக ஆகிறது. எல்லாவற்றையும் கொடுத்துவிட்டால் ஜீவனத்திற்கு மார்க்கமில்லாமல் சரீரம் நசிக்கிறது. இப்படிக் கொடுப்பவனுக்கே நாசமுண்டாகிறபடியால் தானம் பயனற்றதென்பது கருத்து. ஆனதுபற்றிச் சிலவற்றை

கொடுக்கிறேன் என்று ஒப்புக்கொள்வதே மேலானது. அதனால் க்ஷேமமுண்டு. அத்யத்தில் தோஷம் காட்டப்பட்டது. ஆகையால் எல்லாவற்றையும் யாசகனுக்கு கொடுப்பதாகப் பிரதிக்ஞை செய்யக்கூடாது. அப்படிச் சிலருக்கு போகங் கிடைக்கிறதில்லை. என்னிடம் ஒன்றுமில்லை; நான் ஒன்றையும் கொடுக்கமாட்டேன் என்று சொல்லிக்கொண்டு பிறரிடத்தில் பணத்தைச் சம்பாதிப்பதற்காகச் சொல்லும் அனிருதம் பூர்ணமான அனிருதம். பூர்ணமான அர்த்தமுள்ளதாகிய, (பணச் செலவில்லாத போகத்திற்கு ஸாதனமென்று தாத்பர்யம்) ஆனால் எப்பொழுதும் அனிருதமே சொல்லலாமோ வென்றால் அதுவும் நியாயமல்ல. யாசகர்களைக் கண்டபொழுதெல்லாம் ஒன்றுமில்லையென்று சொல்பவன் அபகீர்த்தியை அடைவான். அவன் ஜீவித்திருந்தாலும் மரணமடைந்தவனுக்குச் சமமாவன். ஆனதால் ஸ்திரீகளை உற்சாகப்படுத்தி ஸ்வாதீனஞ்செய்துகொள்வதற்காகவும், பரிஹாஸத்திற்காகவும், விவாஹத்திற்காகவும், ஜீவனத்திற்காகவும், பிராணனுக்கு ஆபத்து நேரும் சமயத்திலும், பசுக்களுக்கும், பிராம்மணர்களுக்கும் உபத்திரவ முண்டாகும்பொழுதும் அனிருதம் (பொய்) சொல்வதால் தோஷமில்லை'' என்றார்.

# அத்தியாயம் 20

## பலி வாமனருக்குப் பூமியைக் கொடுத்தது

தன்னுடைய குலத்திற்கு ஆசாரியராகிய சுக்கிராசாரியருடைய வார்த்தையைக் கேட்டு பலி க்ஷணகாலம் தியானஞ்செய்து ஆசாரியரை நோக்கி, ''அர்த்தம், காமம், கீர்த்தி, ஜீவனம் ஆகிய இவைகளுக்கு விருத்தமில்லாததே கிருஹஸ்தர்களுக்குத் தர்மம் என்று உம்மால் சொல்லப்பட்டது உண்மையே. ஆனாலும் பிரகலாதருடைய குலத்தில் ஜனித்தவனாகிய நான் வஞ்சகன் போல் பிராம்மணனுக்குக் கொடுப்பதாகப் பிரதிஞ்ஞை

செய்து எப்படி மறுதளிப்பேன்? இந்தப் பூமியானவள் 'ஸத்தியத்தைவிட மேலானது ஒன்றுமில்லை. பொய் சொல்லுகிறவனைச் சுமக்கமுடியவில்லை. ஸத்தியவாதிகள் எவ்வளவு மனிதர்களானாலும் அவர்களைச் சுமப்பேன்' என்றாள். ஆனதால் எனக்கு நரகத்திலிருந்து பயமில்லை. துக்க சமுத்திரத்திலிருந்தும் பயமில்லை. கிடைத்த அதிகாரம் போய்விட்டாலும் பயமில்லை; மரணத்திலும் பயமில்லை. பிராமணனை வஞ்சிப்பதிலிருந்து பயப்படுகிறேன். மரணமடைந்த புருஷனைப் பணம் முதலியவைகள் விட்டுவிடுகின்றனவல்லவா? அவைகளைச் சொற்பமாகக் கொடுத்து அதனால் பிராமணன் ஸந்தோஷமடையாமலிருப்பதால் என்ன பிரயோஜனம்? (எல்லாவற்றையும் கொடுப்பதே மேலானதென்று தாத்பர்யம்) ததீசி மஹரிஷி, சிபிச்சக்ரவர்த்தி முதலிய ஸாதுக்கள் தங்களுடைய பிராணனைக் கொடுத்துப் பிறருக்கு ஸந்தோஷத்தைச் செய்திருக்கிறார்கள். பூமி முதலியவைகளைக் கொடுப்பதில் என்ன சந்தேகம்? அசுர குலத்திற் பிறந்த வெகு வீரர்கள் இந்தப் பூமியை அநுபவித்தார்கள். அவர்களுடைய போகத்தைக் காலம் நாசஞ்செய்ததேயொழியக் கீர்த்தியை நாசஞ்செய்யவில்லை. (இப்பொழுதும் அவர்களுடைய கீர்த்தி லோகத்திலிருக்கிறது. யுத்தம் நேர்ந்தபோது பிராணனைத் திருணமாக நினைப்பவர்கள் அநேகர்களுண்டு. நல்ல பாத்திரமான யாசகர்கள் வந்தபொழுது பணத்தைக் கொடுப்பவர்கள் மிகவும் அரிது. கம்பீர மனமுள்ளவனும், கருணையுள்ளவனுமான புருஷன் யாசகர்களுடைய அபிஷ்டத்தைப் பூர்த்திசெய்து, அதனால் தரித்திரனாவது மேலானதேயாம். அப்படியிருக்க உம்மைப்போன்ற பிரம்ம வித்துக்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்வதில் என்ன ஆக்ஷேபம்? ஆனதால் இந்தப் பிரம்மசாரியின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்கிறேன். மேலும், வேதத்தில் சொல்லப் விதியை நன்றாக அறிந்து நீங்கள் எவரை யாகத்தால் பூஜிக்கிறீர்களோ, அந்த ஸ்ரீ மஹாவிஷ்ணு இந்த வாமனரூபியாக வந்திருந்தால் அதுவே மேலானது. அவர் எனக்கு வரங்கொடுப்பவராக ஆகட்டும்; அல்லது எனக்குச் சத்ருவாகவிருந்தாலும் இருக்கட்டும். அவரால்

யாசிக்கப்பட்ட பூமியை அவருக்குக் கொடுக்கிறேன். இவர் குற்றஞ்செய்யாதவனாகிய என்னை அதர்ம மார்க்கமாகக் கட்டினாலும் பிராமணவேஷந் தரித்தவரானமையால் இவரை நான் இம்சிக்கிறதில்லை. உத்தம சுலோகராகிய இவர் கீர்த்தியை விரும்பியவராகில் என்னை யுத்தத்தில் கொன்று இப்பூமியை அபகரிப்பார்; அல்லது என்னால் அடிக்கப்பட்டு யுத்த பூமியில் படுப்பார். (என்னுடைய ஹிருதயத்தில் வஸிப்பாரென்றும் அர்த்தஞ் சொல்வதுண்டு). ஆனதால் ஒப்புக்கொண்டபடி கொடுக்கிறேன்" என்றான்.

14—15. அதனைக் கேட்ட சுக்ராசாரியர் கம்பீர மனமுள்ளவனும், ஸத்திய பிரதிஞ்ஞனுமாகிய சிஷ்யனிடத்தில் சந்தோஷப்படவேண்டியவரானாலும் தெய்வச் செயலால் அவனிடம் கோபங்கொண்டு, 'நீ மதங்கொண்டவன்; வித்வானென்று நினைத்துக்கொண்டவன்; ஆசார்யனை உபேக்ஷித்தவன்; என்னுடைய உத்தரவை மீறி நடப்பதால் வெகு சீக்கிரத்தில் ஐசுவரியமில்லாதவனாகிவிடுவாய்" என்று சபித்தார்.

16—20. இப்படிக் குருவால் சபிக்கப்பட்டும் பலியின் புத்தி ஸத்தியத்தைவிட்டு மாறவில்லை. வாமனரைப் பூஜித்து உதகதாரா பூர்வமாக (ஜலத்துடன்) பூமியைத் தானஞ்செய்தான். அப்பொழுது அவனுடைய பத்னியாகிய விந்த்யாவளி யென்பவள் முத்து ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டவளாகித் தீர்த்தம் நிறைந்த தங்கக் குடத்தை யெடுத்துக்கொண்டாள். யஜமானனாகிய பலி வாமனருடைய காலை அலம்பினான். அவனுடைய பத்னி தீர்த்தம் வார்த்தாள். பின்பு லோகத்தைப் பரிசுத்தப்படுத்தும் அந்தத் தீர்த்தத்தைத் தலையில் புரோக்ஷித்துக்கொண்டான். அப்பொழுது தேவர்களும், கந்தர்வர்களும், கிம்புருஷர்களும், கின்னரர்களும புஷ்பங்களை வர்ஷித்தார்கள். 'இந்த பலி கம்பீரமானமுள்ளவன்; சத்துருவென்று அறிந்திருந்தும் ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு மூவுலகத்தையும் கொடுத்தான்' என்று துதித்தார்கள்; தேவ துந்துபிகளை முழக்கினார்கள்; கானஞ்செய்தார்கள். அப்பொழுது அற்புதமான அந்த

வாமனருடைய சரீரமானது விருத்தியடைந்தது (பருத்தது). மஹாவிபூதியுள்ள அந்தப் பகவானுடைய சரீரத்தில் பூமி, ஆகாயம், திக்குகள், அந்தரிக்ஷம், ஸகல சமுத்திரங்கள், பசுக்கள், பறவைகள், மனிதர்கள், தேவர்கள், முனிகள் ஆகிய இவர்கள் காணப்பட்டார்கள். மேலும், அந்தச் சரீரத்தில் மஹா பலி முக்குணங்களாலேற்பட்டதும், பூதங்கள், இந்திரியங்கள், விஷயங்கள், மனம், ஜீவன் இவைகளுடன் கூடிய இந்த ஜகத்தைப் பார்த்தான். அந்தப் பகவானுடைய உள்ளங்காலில் ரஸாதலத்தையும், பாதங்களில் பூமியையும், கணைக்கால்களில் பர்வதங்களையும், முழங்கால்களில் பறவைகளையும், தொடைகளில் வாயுவின கணத்தையும், வஸ்திரத்தில் ஸந்தியா காலத்தையும், குஹ்யத்தில் பிரஜாபதிகளையும், ஜகனத்தில் (இடுப்பிற்குக் கீழ்ப்பாகம்) தன்னையும் மற்ற அசுரர்களையும், தொப்புளில் ஆகாசத்தையும், வயிற்றில் ஏழு சமுத்திரங்களையும், மார்பில் நட்சத்திரங்களையும், ஹிருதயத்தில் தர்மத்தையும், இரண்டு ஸ்தனங்களில் ரிதம் ஸத்யம் இவைகளையும், மனத்தில் சந்திரனையும், வக்ஷஸ்ஸில் தாமரை மலரைக் கையில் பிடித்த லக்ஷ்மீ தேவியையும், கழுத்தில் ஸாமம் முதலிய ஸகல வேதங்களையும், கைகளில் இந்திரன் முதலிய தேவர்களையும், காதுகளில் திக்குகளையும், தலையில் அந்தரிக்ஷத்தையும், தலைமயிர்களில் மேகங்களையும், மூக்கில் வாயுவையும், கண்களில் சூரியனையும், முகத்தில் அக்னியையும், வாக்கில் சந்தஸ்ஸுக்களையும், நாக்கில் வருணனையும், புருவங்களில் நிஷேதத்தையும் விதியையும், இமை மயிர்களில் பகலையும் ராத்திரியையும், நெற்றியில் கோபத்தையும், உதட்டில் லோப குணத்தையும், ஸ்பரிசத்தில் காமத்தையும், ரேதஸ்ஸில் ஜலத்தையும், பின்பக்கத்தில் அதர்மத்தையும், காலடி வைப்பில் யாகத்தையும், சாயையில் மிருத்யுவையும், சிரிப்பில் மாயையையும், சரீரத்திலுள்ள மயிர்க்கால்களில் ஓஷதி ஜாதிகளையும், நாடிகளில் நதிகளையும், நகங்களில் கற்களையும், புத்தியில் பிரம்மதேவரையும் தேவகணங்களையும் மகர்ஷிகளையும், பிராணனிடத்திலும் சரீரத்திலும் சராசரங்களடங்கிய ஜகத்தைக் கண்டான். ஸகல

பிராணிகளுடைய சுரூபியாக விருக்கும் பகவானிடத்தில் இந்த ஜகத்திருப்பதைக் கண்டு எல்லா அசுரர்களும் துக்கித்தார்கள். அந்தச் சமயத்தில் சகிக்க முடியாத தேஜஸ் உள்ள சுதர்சனமென்ற சக்ரமும், மேகம்போல் சப்திக்கும் சார்ங்கமென்ற வில்லும், இடி முழக்கம்போன்ற தொனியுள்ள பாஞ்சஜன்யமென்ற சங்கமும், கௌமோதகியென்ற கதாயுதமும், வித்யாதரமென்ற கத்தியும், கேடகமும், குறையாத பாணங்களுள்ள உத்தமங்களான தூணங்களும், ஸுநந்தர் முதலிய விஷ்ணு பார்ஷதர்களும், லோகபாலகர்களும் பகவானுடைய சமீபஞ்சென்று அவரை உபாசித்தார்கள். அப்பொழுது பகவான் பிரகாசிக்கும் கிரீடத்தாலும், தோள்வளைகளாலும், மகர குண்டலங்களாலும், ஸ்ரீ வத்ஸத்தாலும், கௌஸ்துபத்தாலும், பீதாம்பரத்தாலும், வண்டுகளுடன் கூடிய வனமாலையாலும், மின்னலுடன் கூடிய மஹா மேகம்போல விளங்கினார். பலியின் பூமியை ஒரு அடியாக அளந்தார். ஆகாயத்தைப் பருத்த சரீரத்தாலும் கைகளாலும் வியாபித்து மேலுலகத்தை ஒரு அடியாக அளந்தார் மூன்றுவது அடி வைக்க இடமில்லை. அவருடைய பாதமானது மஹர்லோகம், ஜனலோகம் ஆகிய இவைகளை அதிக்ரமித்து, தபோலோகத்திற்கும் மேலான ஸத்ய லோகஞ் சென்றது.

# அத்தியாயம் 21

## ஸ்ரீ மஹாவிஷ்ணு பலியை நிக்ரஹித்தது

ஓ மஹாராஜ! ஸத்யலோகத்திற்கு வந்த ஸ்ரீ பகவானுடைய பாதாரவிந்தத்தைக் கண்ட பிரம்மதேவர் அந்தப்பாதத்தின் காந்தியால் ஸத்யலோகத்தின் காந்தியும் குறைந்திருப்பதைப் பார்த்து ஸ்ரீ பகவானுடைய அருகில் சென்றார். மேலும் மரீசி முதலிய பிரஜாபதிகளும், ஸநந்தனர் முதலிய யோகிகளும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவினிடம் வந்தார்கள். பின்னும் வேதங்கள்,

உபவேதங்கள், நியமங்கள், நீதி சாஸ்திரம், தர்க்கம், இதிஹாசம், வேதாங்கங்கள், புராணங்கள் ஆகிய இவைகளும் பகவானை உபாசித்தன. யோகமாகிய காற்றினால் விருத்திசெய்யப்பட்ட ஞானமாகிய அக்னியினால் கர்மமாகிய மலத்தை யெரித்தவர்களான யோகிகளும் அவ்விடம் வந்தார்கள். அவர்கள் எந்தப் பகவானுடைய பாதத்தை ஸ்மரித்து அதன் மகிமையால் கர்மங்களால் அடையமுடியாத ஸத்யலோகத்தை யடைந்தவர்களாகையால் அந்தப் பகவானுடைய பாதத்தை நமஸ்கரித்தார்கள். அப்பொழுது உயரத் தூக்கப்பட்டிருக்கும் பாதத்தை யுத்தேசித்து, பிரம்மதேவர் கமண்டலுவின் ஜலத்தால் அந்தப் பாதத்தை அலம்ப அந்தத் தீர்த்தமானது ஆகாச கங்கையாயிற்று அதுவே மூவுலகத்திலும் பிரவேசித்து ஜனங்களுடைய பாபத்தை நிவர்த்திக்கிறது. பிறகு ஸ்ரீ மஹாவிஷ்ணு தம்முடைய ரூபத்தை முன்போல் மாற்றிக்கொண்டு வாமனராக ஆனார். அப்பொழுது பிரம்மா முதலிய லோகபாலகர்கள் தங்கள் சேவகர்களுடன் தங்களுக்கு அதிபதியான பகவானை மிகுந்த ஆதரவுடன் பூஜித்தார்கள்; அர்க்கியம், பாத்தியம் இவைகளைக் கொடுத்தார்கள், புஷ்பமாலை, திவ்யமான சந்தனம், தூபம், தீபம், நெல் பொரி, அக்ஷதை, பழங்கள், இவைகளைச் சமர்ப்பித்தார்கள். பகவானுடைய மகிமையைச் சொல்லித் துதித்தார்கள். ஜய சப்தத்தைக் கோஷித்தார்கள்; நர்த்தனஞ் செய்தார்கள்; சங்கம், துந்துபி முதலிய வாத்தியங்களை முழக்கினார்கள்; கானஞ் செய்தார்கள். கரடிகளுக்கு அதிபதியாகிய ஜாம்பவான் பேரி வாத்தியத்தை முழக்கி ஸகல திக்குகளிலும் ஜய சப்தத்தை ஒலிக்கச் செய்தார்.

10—25. அப்பொழுது ஸ்ரீ மஹாவிஷ்ணுவினால் மூன்றடி கொண்ட பூமியை யாசிப்பதென்ற வியாஜமாக ஸகல பூமியும் அபகரிக்கப்பட்டதைக் கண்ணுற்ற அசுரர்கள் மிகுந்த கோபத்துடன், "இவர் பிராமணனல்ல. ஸ்ரீ மஹாவிஷ்ணுவே தேவர்களுக்குச் சகாயஞ்செய்ய விரும்பி பிராமண வேஷத்தைத் தரித்திருக்கிறார்.

இந்தப் பிரம்மசாரி நம்முடைய அரசராகிய பலியை யாசித்து அவருடைய ஸகல சொத்தையும் அபகரித்தார். நம்முடைய அரசரான பலி பொய் சொல்லாதவர் (ஸத்ய விரதமுள்ளவர்); அதிலும் இப்பொழுது யாகதீக்ஷையுள்ளவர்; அப்படிப்பட்டவர் பிராமணன் முன்பாகப் பொய் சொல்வாரா? ஆகையால் இந்தப் பிரம்மசாரியைக் கொல்வதே நியாயம். அப்படிச் செய்வதால் யஜமானனுக்குப் பேருதவி செய்ததாக ஆகும்" என்று யோசித்து அவர்களின் அரசராகிய பலியின் உத்தரவை யெதிர்பாராமலேயே சூலம், பட்டஸம் முதலிய ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு வாமனரை அடிக்க வேண்டி ஓடிவந்தார்கள். அவர்களைக் கண்ணுற்ற நந்தர், ஸுநந்தர், விஜயர், ஜயர், பிரபலர், உத்பலர், குமுதர், குமுதாக்ஷர், விஷ்வக்ஸேனர், கருடன், ஜயந்தர், சிருதஸேதவர், புஷ்பதந்தர், ஸாத்வதர் என்ற விஷ்ணு பார்ஷதர்கள் ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு அசுர சைன்னியங்களை அடித்தார்கள். அந்த விஷ்ணு தூதர்கள் எல்லோரும் பதினாயிரம் யானைகளின் பலமுள்ளவர்கள். அவர்களால் அடிக்கப்பட்டுக் கதறுகின்ற அசுர சைனியத்தைப் பார்த்துப் பலியானவன் சுக்ராச்சார்யருடைய சாபத்தை நினைத்துக்கொண்டு, "ஓ விப்ரசித்தியே! ஓ ராஹுவே! ஓ ஹேதியே! என்னுடைய வார்த்தையைக் கேளுங்கள். இது நமக்கு க்ஷேம காலமல்ல. ஆனதால் யுத்தஞ்செய்யவேண்டாம்; திரும்புங்கள். பிராணிகளுக்குச் சுகத்தையும், துக்கத்தையும் எவர் கொடுக்கிறாரோ அவரைப் புருஷப் பிரயத்தனத்தால் வெற்றி கொள்ள முடியாது. எந்தப் பகவானுடைய அநுக்ரகத்தால் முன்காலத்தில் நாம் க்ஷேமத்தை அடைந்தோமோ அவருடைய கிருபை இப்பொழுது தேவர்களிடம் ஏற்பட்டிருக்கிறது. தேக பலத்தாலும், மந்திரிகளாலும், தன்னுடைய புத்தியாலும், கோட்டைகளாலும், மந்திரங்களாலும், ஔஷதங்களாலும், ஸாமம் முதலிய உபாயங்களாலும் காலத்தை வெல்ல முடியாது. பல முறை உங்களால் ஜயிக்கப்பட்ட தேவர்களே தெய்வ பலமுள்ளவர்களாகி இப்பொழுது உங்களை ஜயித்துக் கர்ஜிக்கிறார்கள். நமக்குத் தெய்வம் அநுகூலமாக இருக்

கும்பொழுது நல்ல காலம் வருமென்று காலத்தை எதிர் பார்த்திருங்கள்'' என்று சமாதானஞ் செய்தான்.

26—35. இப்படி விஷ்ணுவின் பார்ஷதர்களால் பீடிக்கப்பட்ட அசுர சேனாதிபதிகள் தங்கள் யஜமானனுடைய வார்த்தையைக் கேட்டுப் பாதாளத்தில் பிரவேசித்தார்கள். பிறகு கருடன் பகவானுடைய அபிப்பிராயத்தையறிந்து சுத்யா தினத்தில் வருண பாசத்தால் பலியைக் கட்டினார். (இந்தப் பலியின் ஸகல சொத்தையும் அபகரித்தபடியால் இவனுக்கு 'என்னுடைய' தென்ற அபிமானம் நிவர்த்தியாயிற்று; சரீரத்தையும் கட்டி அகங்காரத்தையும் நிவர்த்தித்து, பலியை அநுக்ரஹிக்கவேண்டுமென்பது பகவானுடைய அபிப்பிராயம்.) பிரபுவாகிய மஹாவிஷ்ணுவினால் அசுரர்களுக்கு அதிபதியான பலி கட்டப்பட்டபொழுது, ஆகாயத்திலும், பூமியிலும், ஸகல திக்குகளிலும் ஹா ஹா என்ற சப்தம் உண்டாயிற்று. பின்பு வருண பாசத்தால் கட்டப்பட்டவனும், ஐசுவரிய மற்றவனும், நிலையான புத்தியுள்ளவனும், விவேகியும், மிகுந்த கீர்த்தியுள்ளவனுமான பலியை நோக்கி வாமனரூபியான ஸ்ரீபகவான், ''ஓ அசுர! மூன்றடி பூமி எனக்குக் கொடுப்பதாக உறுதிசொன்னாய் அல்லவா? சூரியனுடைய பிரகாசம் எதுவரையிலிருக்கிறதோ, சந்திரனுடைய ஒளி எதுவரையில் பிரகாசிக்கிறதோ, எதுவரையில் அக்னியின் வெளிச்சமிருக்கிறதோ, மேகம் மழை பெய்கிறதோ அதுவரையிலுள்ள உன்னுடையதான ஸகல பூமியும் ஒரு அடியாக அளக்கப்பட்டது. மூன்றாவது அடிக்கு இடங்கொடு. உறுதி சொன்னபடி கொடுக்காவிடில் நரகத்தை அடையவேண்டும். இந்த விஷயத்தை உன்னுடைய குருவாகிய சுக்கிரனும் சொல்லியிருக்கிறார். சுவர்க்கத்தை அடையலாமென்ற உன்னுடைய எண்ணம் நிறைவேறாது. எவன் யாசகனுக்குக் கொடுப்பதாக உறுதிசொல்லிப் பின்பு அதனைக் கொடுக்கவில்லையோ, அவன் நரகத்தை அடைவான். பணக்காரன் என்ற கர்வங்கொண்ட நீ மூன்றடி கொண்ட பூமியைக் கொடுப்பதாகப் பிரதிஞ்ஞைசெய்து என்னை ஏமாற்றினாய்; அதனால் பொய் சொன்னதின் பலனை சில வருஷ காலம் நரகத்தில் அநுபவி' என்றார்.

# அத்தியாயம் 22

## பகவான் பலியை அநுக்ரஹித்தது

ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! இப்படிப் பலி சக்கரவர்த்தி பகவானுல் அபகாரஞ் செய்யப்பட்டும் விகாரத்தை அடையாமல் தைரியத்துடன் பகவானை நோக்கி, " உத்தமரே! என்னுல் சொல்லப்பட்ட வார்த்தையைப் பொய்யென்று நினைக்கிறீர். அதனை நான் ஸத்தியமாகச் செய்துவிடுகிறேன். உம்மை வஞ்சிக்கவில்லை. என்னுடைய தலையில் மூன்ருவது அடியை வைக்கலாம். நரகத்திலிருந்து நான் பயப்படேன். ஐசுவரிய நாசத்தில் பயப்படவில்லை. பாசத்தால் கட்டினதில் துக்கமில்லை. கஷ்டத்திலிருந்து பயமில்லை. அபகீர்த்தியிலிருந்து மிகவும் பயப்படுகிறேன். மேலும், தாய், தகப்பன், சகோதரன், மித்திரர்கள் ஆகிய இவர்களும் எதனைச் செய்யவில்லையோ அந்த நிக்ரஹத்தை நீர் செய்தவராலுைம் மிகவும் மேலானவராகையால் அந்த நிக்ரஹமும் மேலானதேயாம். நீர் அசுர ஜாதியில் பிறந்த எனக்கு மறு லோகத்தில் ஹிதத்தைச் செய்பவர்; சௌரியம முதலியவைகளால் மதித்தவர்களான எங்களுக்கு அந்த மதத்தைப போக்கும் ஞானத்தைப்போலத் தண்டத்தைச் செய்தீரல்லவா? அநேக அசுரர்கள் உம்மிடத்தில் விரோத புத்தியை அடைந்தார்கள். பலவிதமான சரிதமுள்ளவரான உம்மால் சிட்சிக்கப்பட்டேன். வருண பாசத்தால் கட்டப்பட்டேன். ஆனுலும் நான் வெட்கப் படவில்லை; துக்கிக்கவுமில்லை. என்னை அநுக்ரஹிப் பதற்காக நீர் என்னுடைய கண்ணுக்குப் புலப்பட்டு என்னை வருண பாசத்தால் கட்டியது மிகவும் மேலான தென்றும், நல்ல காரியமென்றும் நினைக்கிறேன். என்னுடைய பிதாமஹரான பிரகலாதர் பாகவதர்களுக்கு ஸம்மதர்; மிக்க கீர்த்தியுள்ளவர்; அவருக்குப் பிதாவும் உம்மிடத்தில் விரோத புத்தியுள்ளவருமான ஹிரண்ய கசிபு தம் புத்திரராகிய பிரகலாதரைக் கொல்வதற்குப் பலவகையாக முயற்சித்தும் பிரகலாதர் உம்மையே

கதியாக நினைத்திருந்தாரல்லவா? பிரகலாதர் சரீரம் முதலிய அனித்ய வஸ்துக்கள் அபிமானிக்கக்கூடியவைகளல்லவென்று நினைத்து உம்முடைய பாதாரவிந்தத்தையே ஆசிரயித்திருந்தார் என்று கருத்து) மேலும் பிரகலாதர், 'இந்தச் சரீரத்தால் என்ன பிரயோஜனம்? மரித்த பிறகு பணத்தை அபகரிப்பவர்களும், திருடர்களுக்குச் சமானர்களுமான பந்துக்களால் என்ன பிரயோஜனம்? ஸம்ஸாரத்திற்குக் காரணமான ஸ்திரீயினால் என்ன பயன்? வீட்டினால் என்ன பயன்? ஆயுள் குறைகிறதே யொழிய வேறில்லை' என்று நிச்சயித்து மிகுந்த ஞானமுள்ளவராகி, ஸம்ஸாரிகளான ஜனங்களுடைய சங்கத்தில் பயந்து, அசுரர்களைக் கொல்பவரான உம்முடைய பாதாரவிந்தமே பயமற்ற இடமென்ற நிச்சயத்துடன் அதனையடைந்தார். நானும் என்னுடைய பாக்கியத்தால் உம்முடைய ஸமீபஞ் சென்றேன். பலாத்காரமாக என்னுடைய ஐசுவரியத்தையும் குறைத்தீர். ஐசுவரிய மதத்தால் வாழ்க்கை நிலையற்றதென்பதை ஜனங்கள் தெரிந்துகொள்ளுகிறதில்லை. ஆனதால் உம்முடைய பாதத்தைச் சரணமடைகிறேன்' என்றான்.

13—18. அப்பொழுது பிரகலாதர் உதயமாகும் சந்திரன்போல் அவ்விடம் வந்தார். அவர் மிகுந்த காந்தியுள்ளவர்; தாமரை இதழ்போல் நீண்ட கண்களுள்ளவர்; உயரமானவர்; பீதாம்பரமுள்ளவர்; மிகவும் அழகானவர்; அப்படிப்பட்ட பிதாமஹரான பிரகலாதரைப் பலி பார்த்ததும் வருண பாசத்தால் கட்டப்பட்டிருந்ததால் முன்போல் அவரைப் பூஜிக்கவில்லை. நமஸ்காரத்தை மாத்திரஞ் செய்தான்; வெட்கத்தால் முகத்தைத் திருப்பிக்கொண்டான்; கண்ணீரைப் பெருக்கினான். அப்பொழுது பிரகலாதர், ஸனந்தர் முதலியவர்களால் உபாஸிக்கப்பட்டு அவ்விடத்தில வீற்றிருக்கும் ஸ்ரீ பகவானிடஞ் சென்று ஆனந்த பாஷ்பத்துடன் மயிர்க்கூச்சலுள்ளவராகி நமஸ்கரித்தார். பின்னுமவர் பகவானை நோக்கி, "இந்தப் பலிக்கு இந்திர பதத்தை நீரே கொடுத்தீர்; திரும்பவும் அதனை அபகரித்தவரும் நீரே. சம்பத்து ஆத்மாவிற்கு மோஹத்தை யுண்டு

பண்ணக்கூடியதாகையால் ஐசுவரிய மற்றவனாகப் பலியைச் செய்தது அநுக்கிரகமேயாம். வித்துவானாக இருப்பவனும் சம்பத்தினால் மோகத்தை அடைகிறான். ஐசுவரிய மிருக்குமானால் ஆத்மாவின் உண்மையை அறியமுடியாது. ஆனதால் ஜகத்திற்கு அதிபதியும், சகல கர்மங்களுக்கும் சாட்சியும் நாராயணனுமாகிய உமக்கு நமஸ்காரம்" என்று துதித்தார்.

9—22. இப்படித் துதித்து அஞ்ஜலி பந்தஞ் செய்துகொண்டிருக்கும் பிரகலாதருக்கு முன்பாக பிரம்ம தேவர் சொல்லவாரம்பித்து, அதே சமயத்தில் வித்யா வளி பேச வந்ததை யங்கீகரித்துத் தாம் மௌனமாக விருந்தார். அப்பொழுது வித்யாவளியானவள் தன்னுடைய பர்த்தா வருண பாசத்தால் கட்டப்பட்டதைக் கண்ணுற்று மிகவும் பயந்து, கண்ணீரைப் பெருக்கி, பக வானை நமஸ்கரித்து, "ஈச! இந்த மூவுலகத்தையும் நீர் உண்டுபண்ணி அதனைச் சங்கரிக்கிறீர். இந்த ஜகத்து ஒருவருடையதுமல்ல; அப்படியிருக்க மந்த 'புத்திகள்' என்னுடையது, என்னுடையது என்று சொல்கிறார்கள்" என்றாள். (மூவுலகத்திற்கும் நீர் யஜமானனாகையால் அது உம்முடையதேயாம். அதனை என்னுடைய பர்த்தா தம்முடையதாக நினைத்து, அதனை உமக்குக் கொடுத்ததாக நினைப்பது அறியாத் தனமே. ஆகையால் அவரைக் காப்பாற்றும் என்று கருத்து).

22—24. அப்பொழுது பிரம்மதேவர் பகவானை நோக்கி, "ஓ பிராணிகளுக்கு அதிபதியாக இருப்பவரே! ஜகத்தைப் படைப்பவரே! ஜகத்சுரூபியே! தேவர்களுக்கும் தேவரே! இவனுடைய ஐசுவரியம் எல்லாம் அபகரிக்கப்பட்டபடியால் இவனை நிக்ரகிக்கவேண்டாம். இவனை விட்டுவிடவேண்டும். இவன் சுத்த சித்தத்துடன் ஸகல பூமியையும் உமக்குத் தானஞ் செய்தான்; புண்ய கர்மங்களால் ஸம்பாதிக்கப்பட்ட லோகங்களையும் உம்மிடம் ஸமர்ப்பித்தான். இப்படி ஸகல சொத்தையும் கொடுத்தான்; ஆத்மாவையும் ஸமர்பித்தான். உம்முடைய பாதங்களை ஜலத்தால் அலம்பி, அருகம்புல்லால் பூஜை

செய்தவன்கூட உத்தம கதியை அடைகிறான். சுத்த சித்தத்துடன் மூவுலகத்தையும் உம்மிடத்தில் ஸமர்ப்பித்தவன் பந்தத்திரவத்தை யடைவது நியாயமாகுமா?" என்றார்.

15—27 அதனைக் கேட்ட ஸ்ரீபகவான் பிரம தேவரை நோக்கி, "ஓ பிரமதேவரே! எவனை அநுக்ரஹிக்கவேண்டுமென்று நான் விரும்புகிறேனோ, அவனுடைய ஐசுவரியத்தை அபகரிக்கிறேன். ஐசுவரிய மதங்கொண்டவன் விவேகமற்றவனாகி லோகத்தையும், என்னையும் அவமதிப்பான். இந்த ஜீவன் கர்மத்திற்கு வசப்பட்டு, பலவகையான ஜன்மங்களை அடைந்து எப்பொழுது புருஷ ஜன்மத்தை அடைகிறானோ, அப்பொழுது நல்ல குணம், அநுஷ்டானம், யௌவனம், பலம், ரூபம், வித்தை, ஐசுவரியம் முதலியவைகளால் மதத்தை அடையக்கூடாது. அப்படி மதமற்றவனாகியிருந்தால் அவனுக்கு என்னுடைய அநுக்ரகம் கிடைக்கும். மேற்சொல்லிய குலம் முதலியவை மானத்திற்கும், ஸ்தம்பிதத்திற்கும் காரணங்கள்; ஸகலவிதமான க்ஷேமத்திற்கு விக்னங்கள், ஆனாலும் அவைகளில் என்னுடைய பக்தன் மோகிக்கமாட்டான். இந்தப் பலியானவன் தானவர்களுக்கும் தைத்தியர்களுக்கும் அதிபதி; கீர்த்தியை விருத்திசெய்பவன்; கஷ்டத்தை அநுபவிக்கும்பொழுதும் மோகத்தை அடையாமலிருப்பதால் ஜயிக்கமுடியாத என்னுடைய மாயையை ஜயித்தான். இவனுடைய ஐசுவரியத்தைக் குறைத்தேன்; இந்திர பதத்தை அபகரித்தேன்; பாசத்தால் கட்டினேன். ஜாதிகளும் அவனை விட்டுவிட்டார்கள்; பலவகையான துக்கங்களை அநுபவிக்கும்படி செய்யப்பட்டான்; குருவினாலும் சபிக்கப்பட்டான்; அப்படியும் ஸத்தியத்தை விடவில்லை; நன்மார்க்கத்தை விடுகிறதில்லை. ஆனதால் எட்டாவது மன்வந்தரத்தில் இவன தேவர்களுக்கும் கிடைக்காத இந்திர பதத்தை அடைவான். அப்பொழுதும் என்னிடத்தில் பக்தியுள்ளவனாக இருப்பான். அதுவரையில் விச்வகர்மாவினால் உண்டுபண்ணப்பட்ட சுதலத்தில் வசிக்கட்டும். அவ்

விடத்தில் வசிப்பவர்களுக்கு என்னுடைய கிருபையால் மனோவியாதி, சிரமம், சோம்பல், அவமானம் முதலியவைகள் உண்டாகிறதில்லை" என்று சொல்லிப் பலியை நோக்கி, "இந்திரஸேந! உன்னுடைய பந்துக்களுடன் சுதலத்திற்குச் செல்லும். அந்த லோகம் தேவர்களாலும் விரும்பக்கூடியது. உமக்கு க்ஷேமமுண்டாகும். லோகபாலகர்களும் உம்மை அவமதிக்கமாட்டார்கள். உம்முடைய உத்தரவை மீறி நடப்பவர்களை என்னுடைய சக்கரமானது நாசஞ்செய்யும். உம்மை நான்கு புறத்திலும் நான் ரக்ஷிக்கிறேன். ஓ வீர! எப்பொழுதும் நான் அவ்விடத்திலிருப்பேன். என்னை நீர் தரிசிக்கலாம். தானவர்கள், தைத்யர்கள் ஆகிய இவர்களுடைய சங்கத்தால் உண்டாகும் அசுர சுபாவமானது என்னுடைய தரிசனத்தால் மாறிவிடும்" என்று அநுக்கிரகித்தார்.

# அத்தியாயம் 23

## பலி சுதலஞ் சென்றது

மிகுந்த மகிமை பொருந்தியவரும், ஸகல ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவருமான பலியானவர் அஞ்ஜலிபந்தஞ் செய்துகொண்டு (கைகளைக் கூட்டி) மிகுந்த பக்தியால் ஆனந்தக் கண்ணீர், மயிர்க்கூச்சல் ஆகிய இவைகளுள்ளவராகி இம்மாதிரி சொன்ன புராண புருஷரை நோக்கி, "நான் உம்மை ஒருவகையிலும் பூஜிக்கவில்லை. நமஸ்காரஞ்செய்வதாக முயன்றதாலேயே தேவர்களுக்கும் அரிதான அநுக்கிரகத்தை மிக்க அற்பனாகிய என்னிடத்தில் செய்தீர். ஆனதால் உம்மை நமஸ்காரஞ்செய்வதின் மகிமை வியக்கத்தக்கது" என்று துதித்து, அவரையும், பிரமதேவரையும், பரமசிவனையும் நமஸ்கரித்து, தம்முடைய பரிவாரங்களுடன் சுதல லோகஞ் சென்றார். இப்படிப் பகவான் இந்திரனுக்கு சுவர்க்கத்தைக் கொடுத்து அதிதியின் மனோ

ரதத்தைப் பூர்த்திசெய்து ஸகல லோகத்தையும் பரி பாலித்தார். அப்பொழுது பிரகலாதர் தம்முடைய பௌத்திரனுகிய பலியின் சரிதத்தைக் கண்ணுற்று, "ஸகல ஜகத்தாலும் நமஸ்கரிக்கக்கூடிய பாதாரவிந்த முள்ள பகவான் அசுரனுகிய பலியின் துவாரபாலகராக இருக்கிறார். இந்த அநுக்கிரகம் பிரமதேவருக்கும் கிடைக்கவில்லை, பரமசிவனுக்கு அரிதாயிற்று; லக்ஷ்மி தேவிக்குக் கிடைக்கவில்லை; மற்றவர்களுக்குக் கிடைக் குமா? பிரம்மா முதலியவர்களும் உம்முடைய பாதாரவிந்த மதுவைப் பானஞ்செய்ததால் அணிமா முதலிய விபூ தியை அடைந்தார்கள். உக்கிரமான ஜாதியில் பிறந்த வர்களும், துஷ்டர்களுமான எங்களிடத்தில் அநுக்கிரக திருஷ்டியைச் செய்வது துர்லபமல்லவா? நீர் அளவற்ற மாயையால் ஸகல லோகத்தையும் படைப்பவர்; ஸகல சுரூபியாக இருப்பவர்; எல்லோரையும் சமமாகப் பார்ப் பவர்; பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவர். ஆனதால் உம்முடைய சரிதம் ஆச்சரியகரமானது. கற்பக விருக் ஷத்தின் சுபாவம்போன்ற சுபாவமுள்ளவர். (விரும்பி யதைக் கொடுப்பவரென்று தாத்பரியம்) விஷம சுபா வம் உம்மிடத்திலில்லை" என்றார்.

9—12. அந்தப் பிரகலாதரைப் பார்த்துப் பகவான், "ஓ குழந்தை பிரகலாத! உனக்கு க்ஷேமமுண்டாகும், சுதல லோகஞ்சென்று பௌத்ரனுடன் கூடிச் சந்தோஷ மாக வசி. அவ்விடத்தில் எப்பொழுதும் கதையைக் கையில் வைத்துக்கொண்டு உனக்குத் தரிசனங் கொடுக் கிறேன். என்னுடைய தரிசனத்தால் கர்ம பந்தத்தை நிவர்த்தித்துக்கொண்டு, பந்துக்களுக்கு சந்தோஷத்தை யுண்டுபண்ணு" என்று ஆஞ்ஞாபித்தார். அதனைக் கேட்ட பிரகலாதர் பகவானுடைய ஆஞ்ஞையை ஒப்புக் கொண்டு, சிரசில் அஞ்ஜலிசெய்து பகவானைப் பிரதக் ஷிணஞ்செய்து நமஸ்கரித்து விடைபெற்றுச் சுதலஞ் சென்றார்.

13—18. பின்பு பகவான் ரித்விக்குகளின் மத்தி யில் உட்கார்ந்திருக்கும் சுக்ராச்சாரியரை நோக்கி, "ஓ பிராமண! உம்முடைய சிஷ்யனுகிய பலியின் யாகத்

தில் நேர்ந்த இடையூறுகளுக்காக எதைச் செய்தால் அது பூர்த்தியாகுமோ அதனைச் செய்யும்" என்றார். அதனைக் கேட்ட சுக்ராச்சாரியர் பகவானை நோக்கி, "மந்திரத்தாலும், தந்திரத்தாலும், தேசத்தாலும், காலத்தாலும், வஸ்துவினாலும் எவ்விதக் குறை நேர்ந்தாலும் அவை யாவும் யக்ஞபுருஷராகிய உம்மைப் பூஜித்தால் பூர்ணமாகிறது. ஆனதால் உம்மை மூன்று கரணங்களாலும் பலி பூஜித்தான். அப்படியிருக்க யாகத்தில் குறைவு நேருமா? உம்முடைய திவ்ய நாமதேயத்தை உச்சரிப்பதே எல்லாவற்றிற்கும் பிராயச்சித்தம். ஆனாலும், உம்முடைய ஆக்ஞையின்படி நடப்பதே க்ஷேமகரமான காரியம்" என்று சிலாகித்து பலியின் யாக பூர்த்தியை உத்தேசித்து, மகரிஷிகளுடன் பிராயச்சித்தத்தை யநுஷ்டித்தார்.

19—27. இப்படி வாமனர் பலியிடமிருந்து பூமியை யாசித்து, மூவுலகத்தையும் சகோதரனாகிய இந்திரனுக்குக் கொடுத்தார். பின்பு பிரமதேவர் தேவர்கள், மகரிஷிகள், அரசர்கள், தக்ஷர், பிருகு, அங்கிரஸ், ஸனகாதிகள், பரமசிவன் ஆகிய இவர்களை முன்னிட்டு கசியபர், அதிதி இவர்களுடைய பிரீதிக்காகவும், ஸகல பிராணிகளுடைய சுகத்திற்காகவும் வாமனரை லோக பாலர்களுக்கும் அதிபதியாக அபிஷேகஞ்செய்தார். தேவர்கள், ஸகல வேதங்கள், தர்மம், தபஸ், ஐசுவரியம், மங்களம், விரதம், சுவர்க்கம், மோக்ஷம் இவைகளைக் காப்பாற்றுவதில் சமர்த்தராகிய உபேந்திரனை ஸகல லோகங்களுக்கும் ஸகல விபூதிகளுக்கும் அதிபதியாகச் செய்தார். அப்பொழுது ஸகல பிராணிகளும் சந்தோஷப்பட்டார்கள். பின்பு மஹேந்திரன் பிரம தேவருடைய அநுமதிப்படி லோகபாலகர்களை முன்னிட்டு விமானத்தில் வாமனரை ஏற்றிச் சுவர்க்கத்திற்கு அழைத்துப் போனான். இப்படி மஹேந்திரன் மூவுலகத்தின் ஐசுவரியத்தை உபேந்திரருடைய சகாயத்தால் அடைந்து, மிகுந்த காந்தியுடன் பயமில்லாதவனாகிச் சந்தோஷத்தை அடைந்தான். பிரமதேவர், பரமசிவன், ஸனகாதிகள், பிருகு முதலிய மகரிஷிகள், பிதிருக்கள்,

ஸகல பிராணிகள், ஸித்தர்கள், விமானத்தில் ஸஞ்சரிப்பவர்களான தேவர்கள் ஆகிய எல்லோரும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய அற்புதமான அந்தச் சரிதத்தைக் கானஞ்செய்துகொண்டு தங்களிருப்பிடஞ் சென்றார்கள்; அதிதி தேவியையும் ஸ்லாகித்தார்கள்.

28—31. ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! பகவானுடைய சரிதத்தைச் சொன்னேன். அது கேட்பவருக்குப் பாபத்தை நிவர்த்திக்கக்கூடியது; பகவானுடைய எல்லா மஹிமையையும் எவன் சொல்வானோ, அவன் பூமியிலுள்ள தூளிகளைத் தனியே பிரித்தெண்ணுவான். (பூமியின் தூளிகளை எண்ணுவது எப்படி முடியாத காரியமோ அப்படியே பகவானுடைய குணங்களைச் சொல்லமுடியாதென்று கருத்து) மேலும், பிறந்தவனும், ஜனிப்பவனும் பகவானுடைய குணங்கள் முழுவதையும் அறியமாட்டான் என்று வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகள் சொல்லியிருக்கிறார்கள். எவன் பகவானுடைய வாமனாவதார சரித்திரத்தைக் கேட்கிறானோ அவன் மேலான கதியை அடைவான். தேவதையை உத்தேசித்துச் செய்யும் காரியங்களிலும், பித்ரு காரியங்களிலும் இந்தச் சரித்திரத்தைப் படித்தால் அவர்களுக்கு மிகுந்த புண்ணியம் கிடைக்கும்.

# அத்தியாயம் 24

## மத்ஸ்யாவதாரம்

பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி, "ஓ பகவன்! ஆச்சரியகரமான சரிதங்களைச் செய்தவராகிய பகவான் ஸர்வத்திற்கும் ஸ்வாமியாயிருந்தாலும் காலத்திற்கு வசப்பட்டவர்போல லோகத்தால் வெறுக்கக் கூடியதும், தமோகுண ஸம்பந்தமுள்ளதுமான மத்ஸ்ய ஸ்வரூபத்தை எதற்காக அங்கீகரித்தார்? உத்தம ச்லோகருடைய சரித்திரமானது ஸகல லோகங்களுக்கும் ஸுகத்தைக் கொடுக்கக்கூடியதாகையால் அதனை

விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

4—14. அதனைக் கேட்ட சுகர் மத்ஸ்யாவதாரக் கதையைச் சொல்ல ஆரம்பித்தார். பசுக்கள், பிராமணர்கள், தேவர்கள், ஸாதுக்கள், வேதங்கள், தர்மம் ஆகிய இவைகளைக் காப்பாற்றவேண்டி பகவான் பல வகையான பிறவிகளாக அவதரிக்கிறார். ஆனாலும், தாம் குண சம்பந்தமற்றவரானமையால் அதன் குணங்களை அடைகிறதில்லை. வாயு எங்கும் சஞ்சரிப்பவரானாலும் அதன் குணங்களை அடைகிறதில்லையல்லவா? சென்ற கல்பத்தின் முடிவில் பிரமதேவருடைய நித்திரை நிமித்தமாகப் பிரளயமுண்டாயிற்று. அப்பொழுது பூ முதலிய லோகங்கள் சமுத்திரத்தில் மூழ்கின. அப்பொழுது பிரமதேவர் நித்திரைசெய்யும்பொழுது அவருடைய முகத்திலிருந்து நழுவிய வேதங்களை ஸமீபத்திலிருந்த ஹயக்ரீவனென்ற அசுரன் அபகரித்தான். அவனுடைய நடையைக் கண்ணுற்ற ஸ்ரீமந் நாராயணன் மத்ஸ்ய ரூபத்தைத் தரித்தார். முன் கல்பத்தில் ஸத்யவிரதர் என்ற ஒரு அரசர் இருந்தார். அவர் மிகவும் மஹான்; நாராயணனிடத்தில் பக்தியுள்ளவர்; அவர் ஜலத்தைப் புசித்துத் தபஸ் செய்தார். அவரே இந்தக் கல்பத்தில் விவஸ்வானுடைய புத்திரரான சிராத்த தேவரென்ற மனுவெனப்படுகிறார். அந்த ஸத்யவிரதர் என்பவர் கிருதமாலையென்ற நதியில் ஒருகால் ஜல தர்ப்பணஞ் செய்யும்பொழுது அவருடைய அஞ்ஜலியில் ஒரு மீன் ஜலத்துடனிருந்தது. திராவிட தேசத்தரசராகிய அவர் அதனை ஜலத்துடன் நதியின் ஜலத்தில் போட்டார். அப்பொழுது அந்த மீன் மிகுந்த கருணையுள்ள அரசனை நோக்கி, "தீனர்களிடத்தில் பிரியமுள்ளவரே, பந்துக்களைக் கொல்லும் சுபாவமுள்ள ஜல ஜந்துக்களிடம் பயந்து, உம்முடைய கையை அடைந்த என்னை ஏன் நதியின் ஜலத்தில் போடுகிறீர்'' என்றது.

15-30. அவர் தம்மை அநுக்கிரகிப்பதற்காக பகவான் மத்ஸ்யமாக அவதரித்திருக்கிறாரென்பதை

யறியாமல் அதனுடைய தீனமான சப்தத்தைக் கேட்டு, அதனைக் கமண்டலு ஜலத்தில் வைத்து, தமது ஆச்சிரமஞ் சென்றார். அன்றைய ராத்திரி அது கமண்டலு ஜலத்தில் பருத்து, இடமில்லாமல் அரசனை நோக்கி, "இந்தக் கமண்டலுவில் கஷ்டப்பட்டு வசிக்க எனக்கு இஷ்டமில்லை. நான் வசிக்கக்கூடிய விசாலமான வேறு இடத்தை ஏற்படுத்தும்" என்றது. அதனைக் கேட்ட அரசன் அந்த மத்ஸ்யத்தை மணி ஜலத்தில் போட்டார் (வைசுவதேவம் முதலிய கர்மாக்களுக்கு உபயோகமான மந்திரித்த ஜலம் மணிஜலம்). அது ஒரு முகூர்த்தத்திற்குள் மூன்று முழம் வளர்ந்தது பின்பு அந்த மத்ஸ்யமானது, "ஓ மஹாராஜா! இந்த ஸ்தலம் என்னுடைய வாசத்திற்குப் போதுமானதாக இருக்கவில்லை. உம்மை நான் சரணமடைந்திருப்பதால் இன்னும் விசாலமான இடத்தை ஏற்படுத்தும்" என்றது. அதனைக் கேட்ட அரசர் அதனை ஒரு குளத்தில் போட்டார். அது குளத்தை வியாபித்துக்கொண்டு பெரிய மீனாக விருத்தியடைந்தது. அப்பொழுதும் அந்த மத்ஸ்யம், "ஓ ராஜனே! இந்தக் குளமும் என்னுடைய வாசத்திற்குப் போதவில்லை; ஆனதால் குறையாத ஜலமுள்ள ஒரு மடுவில் என்னை விட்டுவிடும்" என்றது. அதனைக் கேட்ட அரசர் அதனை மடுவில் போட்டார். அதிலும் பருத்து மடுவை வியாபித்துக்கொண்டது. பின்பு அதனைச் சமுத்திரத்தில் போட்டார். அப்பொழுதும் அந்த மத்ஸ்யம், 'இந்தச் சமுத்திரத்தில் பலசாலிகளான மகரம் முதலியவைகள் இருக்கின்றன. அவைகள் என்னைப் புசித்துவிடும்; ஆனதால் என்னை இதில் விட வேண்டா'மென்றது. அதனைக் கேட்ட அரசர் மிகுந்த ஆச்சரியத்தை அடைந்து அதை நோக்கி, "நீர் யார்? மத்ஸ்ய ரூபத்தை எடுத்து என்னை மோகிக்கச்செய்கிறீர். இவ்வளவு பலமுள்ள ஜந்துக்களை நான் பார்த்ததில்லை; கேட்டதுமில்லை. ஒரு நாளைக்கு நூறு யோஜனை தூரம் உம்முடைய சரீரம் வளருகிறது. நீர் அழிவற்றவராகிய ஸ்ரீமந் நாராயணனே; சந்தேகமில்லை. பிராணிகளை அநுக்கிரகிப்பதற்காக மத்ஸ்ய ரூபத்தைத் தரிக்கிறீர். ஜகத்தைப் படைத்தவரும், காப்பாற்றுகிற

வரும், அழிவற்றவருமாகிய பிரபுவிற்கு நமஸ்காரம். சரணமடைந்த பக்தர்களான எங்களுக்கு நீர் முக்கிய கதியல்லவா? உம்முடைய விராவதாரங்கள் எல்லாப் பிராணிகளுக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கின்றன. ஆனதால் இந்த சுருபத்தைத் தரித்த காரணத்தைச் சொல்லவேண்டும். உம்முடைய அற்புதமான இந்த சுருபத்தைத் தரிசித்தபடியால் உம்முடைய பாதாரவிந்த ஸேவை வீண்போகாது. தேஹாத்மாபிமானமுள்ளவர்களைப் போல எங்களை நினையாமல் உம்முடைய சுருபத்தின் உண்மையைச் சொல்லவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

31—37. அதனைக் கேட்டுப் பிரளய ஜலத்தில் விளையாடவேண்டுமென்ற எண்ணமுள்ளவரும், பக்தர்களிடத்தில் மிக்க கருணையுள்ளவரும், பிரபுவுமாகிய பகவான் அரசனை நோக்கி, "நான் அவதரித்த தினம் முதல் ஏழாவது நாளில் மூவுலகமும் பிரளய ஜலத்தில் மூழ்கிவிடும். அப்பொழுது ஒரு கப்பல் என்னால் அனுப்பப்பட்டு, உம்முடைய சமீபம் வரப்போகிறது. அது மிகவும் விசாலமானது. நீர் சகல ஓஷதிகளையும், பலவகையான வித்துகளையும் அதில் ஏற்றிக்கொண்டு ஸப்தரிஷிகளுடன் நீரும் அதன்மேலேறிப் பயமில்லாமல் சஞ்சரிப்பீர். லோகங்கள் ஒரே ஜலமாக இருக்கும் பொழுது இருட்டாக இருக்கும். அப்பொழுது ஸப்தரிஷிகளுடைய தேஜஸால் இருள் விலகும். பிரளய கால வாயுவினால் கப்பல் ஓட்டப்படும். அப்பொழுது வாஸுகியாகிய கயிற்றைக்கொண்டு என்னுடைய கொம்பில் அந்தக் கப்பலைக் கட்டிவிடும். பிரம்மதேவருடைய ராத்திரி முடிவாகிறவரையில் ஸப்தரிஷிகளுடன் கூடிய உம்மை ஓடத்தில் வைத்து அதனை இழுத்துக்கொண்டு ஜலத்தில் விளையாடுவேன். அப்பொழுது என்னால் அநுக்ரகிக்கப்பட்டு நீர் ஹிருதயத்தில் பரப்பிரம்மமென்று சொல்லப்படும் என்னுடைய மகிமையைத் தெரிந்துகொள்வீர். நீர் இப்பொழுது கேட்டபடியால் அதனைச் சொன்னேன்" என்று சொல்லிப் பகவான் அந்தர்த்தானத்தை அடைந்தார்.

38—53. அரசன் பகவானால் சொல்லப்பட்ட காலத்தை எதிர்பார்த்து, கிழக்கு நுனியாகத் தர்ப்பங்களைப் பரப்பி, அவற்றின் மீது வடக்கு முகமாக உட்கார்ந்து, மத்ஸ்யரூபியான பகவானுடைய பாதத்தைத் தியானித்துக்கொண்டிருந்தார். பகவான் சொன்னபடி ஏழாவது நாளில் ஸமுத்திரம் கரை புரண்டது. மேகங்கள் மழையைப் பெய்தன. லோகங்கள் ஜலத்தில் மூழ்கின. அப்பொழுது பகவானைத் தியானித்துக்கொண்டிருக்கும் அரசனுடைய சமீபம் ஒரு கப்பல் வந்தது. ஸத்யவிரதர் ஓஷதி முதலியவைகளை எடுத்துக்கொண்டு ஸப்தரிஷிகளுடன் அதன் மீதேறினார். அப்பொழுது ஸப்தரிஷிகள் அரசனை நோக்கி, 'ஓ மஹாராஜ! கேசவனைத் தியானஞ்செய்யும். அவர் இந்தக் கஷ்டத்திலிருந்து நம்மைக் காப்பாற்றுவார்!' என்றார்கள். அரசனும் அப்படியே பகவானைத் தியானித்தார். அப்பொழுது ஒரு சிருங்கத்துடன் (ஒற்றைக் கொம்புடன்) லட்ச யோசனை தூரம் நீளமுள்ள தங்கமயமான மத்ஸ்யரூபத்துடன் பகவான் அவ்விடம் வந்தார். பகவானுடைய உத்தரவின்படி வாசுகியாகிய கயிற்றினால் அந்தக் கப்பலை அவருடைய சிருங்கத்தில் கட்டி, சந்தோஷத்துடன் பின் வருமாறு துதிக்கலானார். அநாதியான அவித்தையால் ஆத்ம தத்வத்தை மறந்து, அதனால் ஸம்ஸார கஷ்டத்தை யநுபவிக்கும் ஜீவன் எவருடைய அநுக்ரகத்தால் எவரை அடைகிறானோ, அந்தப் பரம குரு நீரே. முக்தியைக் கொடுப்பவரும் நீரே. அஞ்ஞானாகிய மனிதன் தன்னுடைய கர்மத்தால் கட்டுப்பட்டு, சுகத்தை யடைய விரும்பி, துக்கத்திற்கு ஏதுவான காரியத்தைச் செய்கிறான். ஆனாலும் அந்தக் கெட்ட புத்தியை எந்தப் பகவானைச் சேவித்து நிவர்த்தித்துக்கொள்ளுகிறானோ, அந்தக் குருவாகிய பகவான் என்னுடைய ஹ்ருதயக் கிரந்தியைப் பேதிக்கட்டும். ஸுவர்ணத்திலிருக்கும் மலமானது அக்னியின் சேர்க்கையால் எப்படி நிவர்த்தியாகிறதோ, தன்னுடைய வர்ணத்தையும் அடைகிறதோ, அதுபோல உம்மைச் சேவிப்பதால் அஞ்ஞானம் நிவர்த்தியாகிறது. ஸ்வரூபத்தின் உண்மை

பிரகாசிக்கிறது. குருவுக்கும் குருவாகிய அந்தப் பகவான் எனக்குக் குருவாக இருக்கவேண்டும். உம்மைத் தவிர மற்ற தேவர்களும், குருக்களும் சேர்ந்து உம்மால் செய்யப்படும் பிரசாதத்தின் லட்சத்திலொரு பாகத்தையுஞ் செய்யச் சக்தியற்றவர்களாகிறார்கள். ஆனது பற்றி ஈசுவரனாகிய உம்மைச் சரணமடைகிறேன். குருடனுக்குக் கண்ணுள்ளவன் எப்படி ஒத்தாசையாக இருக்கிறானோ, அதுபோல சகல இந்திரியங்களையும் சூரியன் போல் பிரகாசிக்கச்செய்பவரான உம்மை நல்ல கதியை அடைய விரும்பிய நான் குருவாக வரிக்கிறேன். பிராகிருத குருக்கள் அர்த்தம், காமம் முதலியவைகளை உபதேசிக்கிறார்கள். அதனால் ஸம்ஸாரத்தை அடைகிறான். நீர் அழிவற்ற ஞானத்தை உபதேசிக்கிறீர். அதனால் உம்முடைய பதத்தை அடைகிறான். (எல்லாக் குருக்களிலும் நீர் மேலானவரென்று கருத்து.) நீர் சகல லோகத்திற்கும் சுஹிருத்; பிரியர்; ஈசுவரன்; ஆத்மா. குரு; ஞானசுரூபி; இஷ்ட சித்தியைக் கொடுப்பவர்; ஆனாலும், ஜனங்கள் வேறு தேவதைகளிடம் பக்தி செய்து, தங்களுடைய ஹிருதயத்திலிருப்பவரானாலும் உம்மை அறியவில்லை. மேலும், நீர் தேவர்களுக்குச் சிறந்தவர்; தோத்திரஞ் செய்யக்கூடியவர்; ஈசுவரன்; அப்படிப்பட்ட உம்மை ஞானத்தை அடைய விரும்பிச் சரணமடைகிறேன். நீர் ம்போன்ற வார்த்தைகளால் என்னுடைய ஹிருதயத்திலிருக்கும் அகங்காரத்தை நிவர்த்தியும். ஆத்மதத்வத்தைப் பிரகாசிக்கச் செய்யும்'' என்று பிரார்த்தித்தார்.

54—55. அதைக் கேட்ட ஆதிபுருஷனாகிய பகவான் பிரளய ஜலத்தில் மத்ஸ்ய ரூபத்துடன் கிரீடித்துக்கொண்டு, ஸத்யவிரதருக்கு ஸாங்கிய யோகம், கர்ம யோகம் இவைகளுள்ள புராணத்தை (மத்ஸ்ய புராணத்தை) உபதேசித்து, ஆத்மாவின் உண்மையை உபதேசித்தார். அரசர் கப்பலிலிருந்தபடியே மகரிஷிகளுடன் பகவானால் உபதேசிக்கப்பட்ட பிர்ம்ம சுரூபத்தைச் சிரவணஞ்செய்தார் (கேட்டார்).

56—61. முன் கல்பத்தில் பிரளயம் முடிந்தவுடன் பிர்ம்மதேவர் தூங்கி விழித்தபொழுது பகவான் ஹயக்ரீவனைக் கொன்று வேதங்களைப் பிர்ம்மதேவரிடம் கொடுத்தார். அந்த ஸத்யவிரதர் ஞானம், விஞ்ஞானம் இவைகளை அடைந்து, இந்தக் கல்பத்தில் ஸ்ரீமகாவிஷ்ணுவின் அநுக்ரகத்தால் வைவஸ்வத மநுவாக ஆனார். ஸத்யவிரதருக்கும், மத்ஸ்ய ரூபியான பகவானுக்கும் நேர்ந்த ஸம்வாதமாகிய இந்த உபாக்யானத்தைக் கேட்பவனுக்குப் பாபங்கள் நிவர்த்தியாகின்றன. இந்த மத்ஸ்யாவதாரத்தை எவன் ஒவ்வொரு நாளும் படிக்கிறானோ, அவனுடைய எண்ணங்கள் யாவும் சித்திக்கின்றன. அவன் உத்தம கதியையும் அடைவான். பிரளய ஜலத்தில் தூங்கியவரான பிரம்மதேவருடைய முகத்திலிருந்து ஹயக்ரீவன் வேதங்களை அபகரித்தபொழுது எந்தப் பகவான் அந்த அசுரனைக் கொன்று வேதத்தைத் திருப்பிக் கொண்டுவந்தாரோ, எவர் சத்யவிரதருக்கும், மகரிஷிகளுக்கும் பிர்ம்மத்தை யுபதேசித்தாரோ அந்தக் கபட மத்ஸ்ய சுரூபியும், ஜகத்காரணருமான பகவானை நமஸ்கரிக்கிறேன்.

எட்டாவது ஸ்கந்தம் முற்றிற்று.

சுபம்



Printed at the Oriental Printing Works, G. T. Madras.
Q. H. MS. 511—For Sri Mahabharatham Press,
KMU. Q H. TE. 4 — 31-3-48. Copies 2,000.

உ

ஸ்ரீ கிருஷ்ணாய பரமாத்மனே நம:

# ஸ்ரீமத் பாகவதம்

[தமிழ் வசனம்]

## ஒன்பதாவது ஸ்கந்தம்

மொழிபெயர்த்தவர்:
பண்டிட் R. சிவராம சாஸ்திரிகள்
இஞ்சிக்கொல்லை

ஸ்ரீ மஹா பாரதம் பிரஸ்
ஸ்ரீ வேதவிநாயகர் தெரு
கும்பகோணம்

# பொருளடக்கம்

# ஸ்ரீமத் பாகவதம்

## ஸ்கந்தம்—9

### அத்தியாயம் 1

#### ஸுத்யும்னன் பெண் பிறவியை அடைந்தது

பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "மன்வந்தரங்கள் எல்லாவற்றையும் சொன்னீர். அந்த மன்வந்தரங்களில் ஸ்ரீ பகவானால் செய்யப்பட்ட அவதாரங்களையும் சரிதங்களையும் வர்ணித்தீர். திராவிட தேசத்திற்கு அதிபதியான சத்யவிரதர் முன் கல்பத்தின் முடிவில் மகாபுருஷனை ஸேவித்து ஞானத்தை அடைந்தாரல்லவா? அவரே விவஸ்வானுடைய புத்திரனாகிய மனுவாகப் பிறந்தாரென்றும், இக்ஷ்வாகு முதலியவர்கள் அவருடைய புத்திரர்களென்றும் சொன்னீர்; ஓ பிராமண! அவர்களுடைய வமிசத்தையும சரிதத்தையும் கேட்க விருப்பமுள்ளவனாகியிருப்பதால் அதனைச் சொல்ல வேண்டும். புண்ணியகரமான கீர்த்தியுள்ளவர்களாக எவர்கள் உண்டாகப்போகிறார்களோ, எவர்கள் இப்பொழுது இருக்கிறார்களோ, எவர்கள் பூலோகத்தை அலங்கரித்தார்களோ அவர்களுடைய சரிதங்களைச் சொல்லவேண்டும" என்று கேட்டார்.

6-12. இப்படி பரீக்ஷித்து மகாராஜனால் கேட்கப்பட்ட சுகர் பிரமவித்துக்களுடைய சபையில் அரசனை நோக்கி, பின்வருமாறு சொல்லலானார்:— "மனுவின் வமிசத்தை அநேக ஆண்டுகள் சொன்னாலும் விஸ்தாரமாகச் சொல்ல முடியாது; ஆகையால் பெரும்பா

லும் அதனைச் சொல்லுகிறேன். எவர் சகல பிராணி களுக்கும் ஆத்மாவோ, எவர் பிரகிருதியைக் காட்டி லும் மேலானவரோ, அவர் ஒருவரே பிரளயகாலத்தின் முடிவிலிருந்தார். வேறொன்றுமில்லை. பின்பு அவரு டைய தொப்புளிலிருந்து தங்கமயமான தாமரை மலர் உண்டாயிற்று. அதிலிருந்து பிராணிகளைப் படைப்பவ ரான பிரமதேவர் உண்டானார். அவருடைய மனத்தி லிருந்து மரீசியுண்டானார். அவருக்குத் தாக்ஷாயணியி னிடத்தில் காசிபரென்ற புத்திரர் பிறந்தார். அவருக்கு அதிதியினிடம் விவஸ்வான் உண்டானார். அவருக்கு ஸம்ஞை யென்பவளிடத்தில் சிராத்ததேவரென்ற மனு உண்டானார். அவருக்குச் சிரத்தை யென்பவளிடத் தில் இக்ஷ்வாகு, நிருகன், சையாதி, திஷ்டன், திருஷ் டன், கரூசகன், நரிஷ்யந்தன், விருஷத்ரன், நபகன், கவி என்ற பத்துப் புத்திரர்கள் பிறந்தார்கள்.

13—18. இக்ஷ்வாகு முதலிய புத்திரர்கள் பிறப்ப தற்கு முன் மனு அபுத்திரராகவிருந்தபடியால் அவருக் குப் புத்திரன் பிறக்கவேண்டி, பகவானாகிய வஸிஷ்டர் மித்திராவருணர்களை யுத்தேசித்து ஒரு இஷ்டியைச் செய்து வைத்தார். அப்பொழுது அந்த மனுவின் பத்தினியான சிரத்தை யென்பவள் பாலைப் புசித்து நியமமுள்ளவளாகி, தனக்குப் பெண் பிறக்கும்படி செய்ய வேண்டுமென்று ஹோதாவைக் கேட்டுக்கொண்டாள். அத்வர்யுவானவர் ஹோதாவை 'யஜ' என்று தூண்டி னார். அப்பொழுது ஹோதா சிரத்தையின் பிரார்த்த னையை நினைத்துக்கொண்டே ஹவிஸ்ஸை யெடுத்து வஷட்காரத்துடன் ஹோமஞ்செய்தார். ஹோதாவான வர் பெண் பிறக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் ஹோமஞ்செய்தபடியால் இளை என்ற பெண் உண்டா னாள். அதனைக் கண்ணுற்ற மனுவானவர் வஸிஷ்டரை நோக்கி, " ஓ பகவன்! பிரமநிஷ்டர்களான உங்களால் அநுஷ்டிக்கப்பட்ட கர்மங்களில் இம்மாதிரியான விபரீ தம் உண்டாயிற்றே. மந்திரங்கள் வேறு பலத்தைக் கொடுக்குமா? நீங்கள் சகல மந்திரங்களையும் அறிந்த வர்கள்; மிகுந்த தபஸ்விகளாகையால் பாவமற்றவர்கள்;

அப்படியிருக்க, எண்ணத்திற்கு மாறான பயனுண்டானதற்கு என்ன காரணம்? தேவர்களும் பொய்சொல்வார்களா?" என்று கேட்டார்.

19—27. அதனைக் கேட்ட வஸிஷ்ட மகரிஷி, ஹோதாவினுடைய தவறுதலால் இப்படி நேர்ந்தது என்று தெரிந்துகொண்டு மனுவை நோக்கி, "ஹோதாவினுடைய தவறுதலால் பெண் உண்டானாள். ஆனாலும் புத்திரனுண்டாகும்படி நான் செய்கிறேன்" என்று சொல்லி, அந்த இளையென்பவள் புருஷனாகவேண்டுமென்று ஸ்ரீமந் நாராயணனைத் துதித்தார். அதனால் பகவான் சந்தோஷித்து அனுக்கிரகித்தபடியால் இளை புருஷனானாள். அப்புருஷனுக்கு ஸுத்யும்னனென்று பெயருண்டாயிற்று. அந்த ஸுத்யும்னனென்பவர் ஸிந்து தேசத்திலுண்டான உத்தமமான குதிரையிலேறி வேட்டைக்குச் சென்றார். பின்னுமவர் அழகான வில்லையெடுத்து, அற்புதமான பாணங்களைச் சந்தானஞ் செய்து மிகுந்த முயற்சியுடன் மிருகங்களை அடித்துக்கொண்டு வடக்குத் திக்கில் சஞ்சரித்தார். சில மந்திரிகள் அவர் பின் சென்றார்கள். இப்படி வேட்டையாடி வனங்களில் சஞ்சரிக்கும்பொழுது மேருவின் கீழ்ப்பாகத்திலிருக்கும் குமாரவனத்தில் பிரவேசித்தார். அந்த வனத்தில் பகவானாகிய பரமசிவன் பார்வதியுடன் ரமித்துக்கொண்டிருக்கிறார். அந்த வனத்தில் பிரவேசித்தவுடன் ஸுத்யும்னன் பெண்ணுரு ஆனார். குதிரையும் பெண் குதிரையாயிற்று. அவருடைய பரிவாரங்கள் எல்லாம் பெண் பிறவியை அடைந்தார்கள். அதனால் அரசனும், அவருடைய சேவகர்களும் கவலைப்பட்டு ஒருவருக்கொருவர் பார்த்துக்கொண்டார்கள்" என்றார்.

28—32. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, "ஓ பகவன்! அந்த வனத்தில் பிரவேசித்தவர்கள் பெண் சன்மத்தை அடையும்படி யாரால் செய்யப்பட்டது; அதனைச் சொல்லவேண்டும்" என்றார். அதனைக் கேட்டுச் சுகர் அரசனைப் பார்த்து, "முன்னொருகால் பகவானைத் தரிசிப்பதற்காக மகரிஷிகள் அவ்விடம் வந்

தார்கள். அவர்கள் மிகுந்த தேஜசுள்ளவர்கள். அப்பொழுது பரமசிவன் கிரீடித்துக்கொண்டிருந்தபடியால் ஆடையில்லாமலிருந்த பார்வதி வெட்கமடைந்து ஆடை யுடுத்திக்கொண்டாள். மகரிஷிகளும் அங்கிருந்து நரநாராயணர்களுடைய ஆசிரமஞ் சென்றார்கள். அதனைக் கண்ணுற்ற பரமசிவன் பார்வதியின் அபிப்ராயப்படி, "இந்த வனத்தில் பிரவேசிப்பவன் பெண் ஆகட்டும்" என்று சபித்தார். ஆனதால் அந்த வனத்திற்கு ஆடவர்கள் போகிறதில்லை. அதனை யறியாதவனாகிய ஸுத்யும்னன் அந்த வனத்தில் பிரவேசித்துப் பெண் சன்மத்தை அடைந்தான். பின்னுமவன் பெண் சன்மத்தை அடைந்த சேவகர்களுடன் புதனுடைய ஆசிரமத்தின் சமீபத்தில் சஞ்சரித்தான். புதன் அவளிடத்தில் ஆசைப்பட்டார். அவளும் சந்திரனுடைய புத்திரரான அவரிடத்தில் ஆசைப்பட்டாள். அவ்விருவர்களுக்கும் பிறந்த பிள்ளைதான் புரூரவஸ் என்பவர். இப்படிப் பெண் சன்மத்தை அடைந்த ஸுத்யும்னன் தன்னுடைய குலகுருவாகிய வஸிஷ்டரை வணங்கினன். அவர் சிஷ்யனுக்குப் பெண் பிறவி நிவர்த்தியாகவேண்டி, பரமசிவனைத் துதித்தார். அதனால் பரமசிவன் சந்தோஷித்து, வஸிஷ்டருடைய இஷ்டத்தை நிறைவேற்றுவதற்காகவும், தாமுடைய வாக்கைச் சத்தியமாகச் செய்வதற்காகவும் "ஒருமாதம் ஆணாகவும் ஒருமாதம் பெண்ணாகவும் இருக்கட்டும்" என்று அருள்செய்தார். இப்படி வஸிஷ்டருடைய உதவியினால் ஒரு மாதம் பெண்ணாகவும், ஒரு மாதம் புருஷனாகவும் இருந்து ஸுத்யும்னன் உலகத்தைக் காத்தார். மக்கள் அவரிடத்தில் அதிகமாகப் பிரியப்படவில்லை. அவருக்கு உத்கலர், கயர், விமலர் என்று மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்கள் தர்மத்தைச் செய்வதிலேயே நோக்கமுள்ளவர்கள். வடக்கிலுள்ள தேசத்தைப் பரிபாலித்துவந்தார்கள். இப்படி வெகு காலஞ்சென்றபிறகு பிரதிஷ்டான பட்டணத்திற்கு அதிபதியான ஸுத்யும்னர் கிழமையை அடைந்து புரூரவஸுக்கு இராஜ்யத்தைக் கொடுத்து வனஞ்சென்றார்.

# அத்தியாயம் 2

## கருசகர் முதலியவர்களுடைய வமிசங்கள்

வைவசுவத மனுவின் புத்திரராகிய ஸுத்யும்னன் இப்படி வனஞ்சென்றபின் மனுவானவர் புத்திரன் பிறக்க வேண்டி நூறு வருஷங்கள் யமுனையில் தவஞ் செய்து ஸ்ரீமந்நாராயணனைப் பூசித்தார். பகவானுடைய அனுக்கிரகத்தால் இக்ஷ்வாகு முதலிய புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் பிருஷத்திரர் என்பவர் பிதாவின் உத்தரவின்படி கத்தியைக் கையில் வைத்துக்கொண்டு இராத்திரியில் விழித்துக்கொண்டிருப்பதாகிய வீராஸன விரதத்துடன் பசுக்களைக் காப்பாற்றிவந்தார். ஒரு நாள் இராத்திரியில் மழை பெய்தது. அப்பொழுது ஒரு புலியானது பசுக்கள் கட்டியிருக்கும் கொட்டிலில் நுழைந்தது. அதனைக் கண்டவுடன் பசுக்கள் பயந்து அங்குமிங்கும் அலைந்தன. அவைகளில் ஒரு பசுவைப் புலி பிடித்துக் கொண்டது. அதனால் பசு உரக்கக் கதறிற்று. அதனைக் கேட்ட பிருஷத்திரர் கத்தியை யெடுத்துக் கொண்டு அதன்பின் சென்றார். ஆனாலும், மிகுந்த இருளாயிருந்தபடியால் நக்ஷத்திரங்களுடைய பிரகாசமுமில்லாதிருந்தது. அப்பொழுது புலியென்று பிரமித்து அந்தப் பசுவைக் (காராம் பசு) கொன்றார். அந்தக் கத்தியின் முனையானது புலியின் காதில்பட்டு காது வெட்டப்பட்டது. புலி மிகவும் பயந்து ஓடிற்று. இரத்தம் மார்க்கத்தில் பெருகியது. பிருஷத்திரர் புலியைக் கொன்றதாகவே நினைத்திருந்தார். காலையில் பசு வெட்டுப்பட்டிறந்ததைப் பார்த்து மிகவும் துக்கித்தார். இப்படி அஞ்ஞானத்தால் குற்றஞ்செய்தவரான பிருஷத்திரரை நோக்கி வஸிஸ்ட மகர்ஷி, "நீ க்ஷத்திரபந்துவல்ல; உன்னால் செய்யப்பட்ட கர்மத்தால் நீ சூத்திரனாகிவிடுவாய்' என்று சபித்தார். பிருஷத்திரர் அந்தச் சாபத்தை அஞ்சலி செய்துகொண்டு அங்கீகரித்தார். மேலும் அவர் ஊர்த்வரேதஸ்ஸாகவிருந்து முனி விரதத்தை அனுஷ்டித்தார். பின்னும் அவர் சகலசுரூபியும், பரரும், சுத்தருமாகிய ஸ்ரீ வாஸுதேவரிடத்தில் ஏகாந்த

பக்தி செய்து, சகல பிராணிகளிடத்திலும் சமபுத்தியுள்ளவரும், சுஹிருத்துயாக ஆகி ஆசைகளை யொழித்து, சாந்தமான சித்தமுள்ளவராய், இந்திரியங்களை அடக்கிக்கொண்டவராகி, ஒன்றிலும் பற்றற்று தெய்வச்செயலாகக் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷத்தை அடைந்துமிருந்தார். பின்னுமவர் சித்தத்தை ஆத்மாவிடத்தில் செலுத்தி ஞானத்தால் திருப்தியடைந்து ஜடன் போலவும், செவிடன் போலவும் பூமியில் சஞ்சரித்தார். இம்மாதிரியான விருத்தியுள்ள பிருஷத்திரர் காட்டிற்குச் சென்று அவ்விடத்தில் விருத்தியடைந்த காட்டுத்தீயில் தம்முடைய சரீரத்தைத் தகித்துப் பிரம்மத்தை அடைந்தார்.

15—18. கவியென்பவர் பால்ய வயதிலேயே விஷயங்களில் ஆசையை யொழித்து, இராஜ்யத்தையும் பந்துக்களையும், வீட்டையும் விட்டு ஹிருதயத்தில் புராண புருஷனைத் தியானித்து உத்தம கதியை அடைந்தார். கருசகரிடமிருந்து காருசர்கள் என்ற க்ஷத்திரிய ஜாதியுண்டாயிற்று. அவர்கள் பிராம்மண பக்தியுள்ளவர்கள்; தர்மத்தில் பிரீதியுள்ளவர்கள்; வடக்குதேசத்தரசர்கள். திருஷ்டனிடமிருந்து தார்ஷ்டமென்ற க்ஷத்திரியகணமுண்டாயிற்று. அது பிரமதத்வத்தை அடைந்தது. நிருசருடைய புத்திரன் சுமதி; அவருடைய புத்திரன் பூதஜ்யோதி; அவருடைய புத்திரன் வஸு. அவருடைய புத்திரன் பிரதீகரென்பவர். அவருடைய புத்திரன் ஓகவானென்பவர். அவருடைய புத்திரனும் ஓகவானென்பவர். அவருடைய புத்திரி ஓகவதி யென்பவள். அவளை ஸுதர்சனரென்பவர் கல்யாணஞ் செய்துகொண்டார்.

19—22. நரிஷ்யந்தனுக்குச் சித்திரஸேனன் புத்திரர். அவருடைய புத்திரர் தக்ஷரென்பவர். அவருடைய புத்திரர் மீட்வானென்பவர். அவருடைய புத்திரர் சரவர் என்பவர். (கூர்ச்சனென்றும் பாடம்) அவருடைய புத்திரர் இந்திரசேனன். அவருடைய புத்திரர் வீதிஹோத்ரன். அவருடைய புத்திரர் ஸத்யச்ரவஸ். அவருடைய புத்திரர் உருச்ரவஸென்பவர். அவருடைய புத்திரர் தேவதத்தர். அவருக்கு அக்கினிவே

சனென்பவர் புத்திரர். அவருக்குக் கானீனனென்றும், ஜாதுகர்ணியென்றும் பெயருண்டு. அக்கினிவேச கோத்திரமுள்ள பிராம்மண வமிசம் அவரிடமிருந்து உண்டாயிற்று. நரிஷ்யந்தருடைய வமிசத்தைச் சொன்னேன்.

இனி, திஷ்டனுடைய வமிசத்தைச் சொல்லுகிறேன், கேளும். திஷ்டருடைய புத்திரர் நாபாகரென்பவர். (இவர் மனுவின் புத்திரராகிய நாபாகரைவிட வேறு) அவர் வைசியனுக்குரிய கர்மத்தை அநுஷ்டித்தபடியால் அவர் வைசியராக ஆனார். அவருடைய புத்திரர் ஹலந்தனர். அவருடைய புத்திரர் வத்ஸப்ரீதி என்பவர். அவருக்குப் பிராமசுவென்றும், அவருக்குப் பிரமிதியென்றும், அவருக்குக் கனித்திரரென்றும், அவருக்குச் சாக்ஷுஷரென்றும், அவருக்கு விவிம்சதியென்றும், அவருக்கு ரம்பரென்றும், அவருக்குக் கனிநேத்திரரென்றும், அவருக்குக் கரந்தனரென்றும் புத்திரர்களுண்டானார்கள். கரந்தனருடைய புத்திரர் அவிக்ஷித் என்பவர். அவருடைய புத்திரர் மருத்தனென்பவர். அவர் சக்கரவர்த்தியாக இருந்தனர். மகாயோகியும் அங்கிரஸின் புத்திரருமான ஸம்வர்த்தரென்பவர் அந்த மருத்தருக்கு யாகஞ்செய்வித்தார். மருத்தருடைய யாகத்திற்கு வேறொருவருடைய யாகமும் சமானமல்ல. யாக பாத்திரங்களெல்லாம் பொன்மயங்களாகவிருந்தன. இந்திரன் சோமத்தால் திருப்தியடைந்தான். பிராமணர்கள் தக்ஷிணையால் திருப்தியடைந்தார்கள்: மேலும், அந்த யாகத்தில் பிராமணர்களுக்கு மருத்துக்கள் அன்னம் முதலியவைகளைப் பரிமாறினார்கள். விசுவேதேவர்கள் சதஸ்யர்களாக விருந்தார்கள். அந்த மருத்தருடைய புத்திரர் தமனென்பவர். அவருடைய புத்திரர் ராஜ்யவர்த்தனர். அவருடைய புத்திரர் ஸுத்ருதியென்பவர். அவருக்கு நரரென்றும், அவருக்குக் கேவலரென்றும், அவருக்குப் பந்துமான் என்றும், அவருக்கு வேகவானென்றும், அவருக்குப் பந்துவென்றும், அவருக்குத் திருணபிந்துவென்றும் புத்திரர்களுண்டானார்கள். அந்தத் திருணபிந்து என்பவர் சகல குணங்களுக்கும் இருப்பிடமானவர். அவரை அப்ஸரஸ்

திரீகளுள் சிறந்தவளான அலம்புஸா என்பவள் பர்த்தா வாக அடைந்தாள். அவ்விருவர்களுக்கும் விசாலன், சூன்யபந்து, தூம்ரகேது என்ற புத்திரர்களும், இலபிலா வென்ற ஒரு புத்திரியும் உண்டானார்கள். அந்த இலபிலா என்பவளை விச்ரவஸ் என்பவர் கல்யாணஞ் செய்து கொண்டு குபேரனைப் பெற்றார். அவர் யோகேசராகிய தகப்பனாரிடமிருந்து மேலான வித்தையை அடைந்தார். திருணபிந்துவின் புத்திரர்களுக்குள் விசாலனென்பவர் வம்சமுள்ளவர்; வைசாலி யென்ற பட்டணத்தை யுண்டு பண்ணினார். விசாலனுடைய புத்திரர் ஹேமசந்திரர். அவருடைய புத்திரர் தூம்ராக்ஷர். அவருடைய புத்திரர் ஸஹதேவர்; அவருடைய புத்திரர் கிருசாச்வர். அவருடைய புத்திரர் சோமதத்தர். அவர் அசுவமேத யாகஞ்செய்து ஸ்ரீமந் நாராயணனை ஆராதித்து யோகிகளால் விரும்பக்கூடிய உத்தம கதியை அடைந்தார். (மோக்ஷத்தை அடைந்தாரென்று கருத்து) அந்த சோமதத்தருடைய புத்திரர் சுமதியென்பவர். அவருடைய புத்திரர் ஜனமேஜயன். இவர்கள் விசாலருடைய வம்சத்தில் பிறந்த அரசர்கள். திருணபிந்துவின் கீர்த்தியை விருத்திசெய்பவர்கள்.

# அத்தியாயம் 3

## ஸுகன்யை உபாக்கியானம்

மனுவின் புத்திரராகிய சையாதி யென்பவர் வேதங்களுடைய அர்த்தத்தைத் தெரிந்துகொண்டவர். அவர் அங்கிரஸர்களுடைய ஸத்திரத்தில் இரண்டாவது நாளில் செய்யவேண்டிய கார்யத்தைச் சொன்னவர். அவருக்குச் சுகன்யாவென்ற பெயருள்ள ஒரு பெண்ணுண்டு அவள் தாமரை மலர்போன்ற கண்களுள்ளவள், சையாதி அந்தப் பெண்ணுடனும், சைனியத்துடனும் சியவனருடைய ஆசிரமஞ் சென்றார். அவ்விடத்தில் அந்தச் சுகன்யாவென்பவள் தன் தோழிகளுடன் விருக்ஷங்களைப் பார்த்து வரும்பொழுது ஒரு புற்றின் துவாரத்தில் மின்மினிப் பூச்சிபோன்ற இரண்டு ஒளியைக் கண்டாள். அவள் ஒரு முள்ளினால் அவைகளைக்

குத்தினாள். இது தெய்வச்செயலாக நேர்ந்தது. அவைக ளிலிருந்து உதிரம் பெருகியது. அந்த க்ஷணத்தில் அரசனுடைய சைனியத்திற்கு மலமும் மூத்திரமும் கட்டுப் பட்டு, சைன்யம் மிகவும் துன்பத்தை அடைந்தது. அதனைக் கண்ட அரசன் ஆச்சரியமடைந்து, "சியவனருக்கு யார் அபராதம் செய்தீர்கள்? நமக்குள் யாராவது ஆசிரம விருத்தமான காரியத்தைச் செய்திருக்கவேண்டும்" என்று கேட்டார். அப்பொழுது சுகன்யை மிகவும் பயந்து பிதாவை நோக்கி, "புற்றில் தோன்றிய இரண்டு ஒளியை அறியாத்தனத்தினால் முள்ளினால் குத்தினேன்" என்றாள். அதனைக் கேட்ட அரசன் மிக்க நடுக்கமுற்று, புற்றுக்குள்ளிருக்கும் மகரிஷியை 'அறியாதவள் செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டும்' என்று நல்ல வார்த்தையால் சமாதானஞ்செய்தார். பின்பு மகரிஷியின் அபிப்பிராயத்தை அறிந்து, தம் புத்திரியான சுகன்யையைச் சியவனருக்குக் கன்யாதானஞ் செய்து, அவரிடம் விடைபெற்றுச் சைனியங்களுடன் தமது நகரஞ் சென்றார்.

10—17. சுகன்யை மிகுந்த கோபமுள்ள சியவனரைப் பர்த்தாவாக அடைந்து, அவருடைய அபிப்பிராயப்படி நடந்து வந்தாள். இப்படிச் சில காலஞ் சென்றபிறகு, அச்வினி தேவர்கள் அவருடைய ஆசிரமத்திற்கு வந்தார்கள். சியவனர் அவர்களைப் பூஜித்து "ஓ அச்வினி தேவர்களே! பெண்களால் விரும்பக் கூடிய யௌவன வயதை எனக்குக் கொடுங்கள். உங்களுக்கு யாகத்தில் சோமபானத்தை யுண்டுபண்ணுகிறேன்" என்றார். அதனைக் கேட்ட அச்வினி தேவர்கள் அதனை யொப்புக்கொண்டு பிராமணனைப் புகழ்ந்து, "நீர் சித்தர்களால் செய்யப்பட்ட இந்த மடுவில் ஸ்நானஞ்செய்யும்" என்றார்கள். அதனைக் கேட்ட சியவனர் கிழத்தன்மையுள்ள சரீரத்துடன் அந்த மடுவில் ஸ்நானஞ்செய்தார். பின்பு அதிலிருந்து மூன்று புருஷர்கள் கிளம்பினார்கள். அவர்கள் யௌவன வயதுள்ளவர்கள்; மாதர்களால் விரும்பக்கூடியவர்கள்; தாமரை மாலையைத் தரித்தவர்கள்; குண்டலங்களால்

அலங்கரிக்கப்பட்டவர்கள்; நல்ல ஆடையைத் தரித்தவர்கள்; ஸமமான உருவமுள்ளவர்கள்; சூரியன் போலப் பிரகாசிக்கும் அம்மூன்று புருஷர்களையும் பார்த்து, சுகன்யையானவள் தன்னுடைய பாத்தாவை இன்னாரென்று அறியாமல் அச்வினி தேவர்களைச் சரணமடைந்தாள். அந்தத் தேவர்கள் அவளுடைய பதிவிரதா தர்மத்தால் சந்தோஷத்தை அடைந்து, ச்யவனரை அவளுக்குக் காண்பித்து, மகரிஷியினிடம் விடைபெற்று அவரால் துதிக்கப்பட்டவர்களாகி, சுவர்க்கஞ் சென்றார்கள்.

18—26. பின்பு சையாதி மகாராஜன் யாகஞ்செய்ய விரும்பி, ச்யவனருடைய ஆசிரமஞ் சென்றார். அவ்விடத்தில் தம்முடைய பெண்ணாகிய சுகன்யையின் பக்கத்தில் சூரியன்போலப் பிரகாசிக்கும் புருஷனைக் கண்டார். அரசனைக் கண்டு சுகன்யை நமஸ்கரித்தாள். அரசன் பெண்ணுக்கு ஆசிர்வாதஞ் செய்யாமலேயே அதிக சந்தோஷத்தை யடையாமல், "சகல உலகங்களால் நமஸ்கரிக்கக்கூடிய மகரிஷியை வஞ்சித்து நீ வழிப்போக்கனாகிய ஜார புருஷனை அடைந்திருக்கிறாய். நல்ல குலத்தில் பிறந்தவளான உனக்கு இம்மாதிரி கெட்ட எண்ணமுண்டானது உசிதமா? குலத்திற்கு இது அபகீர்த்தியை யுண்டுபண்ணுமே. நீ வெட்கமில்லாமல் ஜாரபுருஷனை வைத்துக்கொண்டிருப்பதால் பிதா, பர்த்தா ஆகிய இவர்களுடைய குலத்தை நரகத்தில் தள்ளுகிறாய். இதன் காரணமென்ன?" என்று கேட்டார். இதனைக் கேட்ட சுகன்யை "ஓ அண்ணலே, இவர் உம்முடைய மணப்பிள்ளையே தவிர வேறில்லை" என்று அவருக்கு யௌவன மெய்து கிடைத்த காரணத்தைத் தெரிவித்தாள். அதனைக் கேட்ட சையாதி மிகவும் ஆச்சரியமடைந்து பெண்ணைத் தழுவிக்கொண்டார். பின்பு ச்யவனர் சையாதியின் யாகத்தை நடத்தி, யாகத்தில் ஸோமபானமில்லாதவர்களான அச்வினி தேவர்களுக்குத் தம்முடைய ஒளியால் ஸோமத்தில் பாகத்தை யேற்படுத்தினார். அதனைக் கண்டு மகேந்திரன் மிகுந்த கோபத்துடன் ச்ய

னரை அடிப்பதற்காக வச்ராயுதத்தை யெடுத்து வந்தார். சியவனர் வச்சிரத்துடன் மகேந்திரனுடைய கையைத் தம்பிக்கச் செய்தார். அச்வினி தேவர்கள் வைத்தியர்களாகையால் அவர்களுக்குச் சோமத்தில் பாகமில்லாதிருந்தும் அதுமுதல் அவர்களுக்கும் அந்தப் பாகத்தை எல்லாத் தேவர்களும் ஒப்புக்கொண்டார்கள்.

27—36. உத்தானபர்ஹி, ஆனர்த்தர், பூரிஷேணர் என்ற மூன்று புத்திரர்கள் சையாதிக்குப் பிறந்தார்கள். ஆனர்த்தருக்கு இரைவதரென்று ஒரு புத்திரருண்டானார். அவர் சமுத்திரத்தின் மத்தியில் குசஸ்தலியென்ற பட்டணத்தை யுண்டுபண்ணினார். அதில் அவர் வசித்து ஆனர்த்தம் முதலிய தேசங்களை அனுபவித்தார். அவருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் மூத்தவன் ககுத்மி யென்றவன். அந்த இரைவதருக்கு இரேவதி யென்று ஒரு கன்னிகை பிறந்தாள். அவர் பெண்ணை அழைத்துக்கொண்டு அவளுக்குப் புருஷன் யாரென்று கேட்பதற்குச் சத்தியலோகஞ் சென்றார். அவ்விடத்தில் பிரமதேவருடைய சபையில் கந்தருவர்கள் கானஞ்செய்துகொண்டிருந்தபடியால் க்ஷணநேரம் அவ்விடம் தாமதித்து, பின்பு பிரமதேவரைத் தரிசித்தார்; வந்த காரியத்தையும் தெரிவித்தார். அதனைக் கேட்ட பிரமதேவர் சிரித்து, "ஓ மகாராஜ! நீர் பூலோகத்தைவிட்டு இவ்விடம் வந்து வெகு நாளாகிவிட்டது. அதனால் உம்முடைய பந்துக்கள், அவர்களுடைய புத்திரர்கள், பௌத்திரர்கள் ஆகிய இவர்களுடைய பெயர்கூட இப்பொழுது காதில் விழவில்லை. இருபத்தேழு சதுர்யுகஞ்சென்றுவிட்டன. ஆனதால் இப்பொழுது பூமியில் பகவானுடைய அமிசம் பலதேவராகப் பூமியின் பாரத்தை நிவர்த்திப்பதற்காக அவதரித்திருக்கிறது. மனிதர்களுக்குட் சிறந்தவராகிய அந்தப் பலராமருக்கு இந்தக் கன்யா ரத்தினத்தைக் கொடும்" என்றார். இப்படி பிரமதேவருடைய உத்தரவின்படி இரைவதர் பூமிக்கு வந்தார். அவ்விடத்தில் தமது பட்டணத்தில் தம்முடைய சகோதரர்

களில்லை. அவர்கள் சுவர்க்கஞ் சென்றார்கள். அப்பொழுது இரைவதர் பலராமருக்கு இரேவதியைக் கன்னிகாதானஞ் செய்துகொடுத்து, தவம் செய்வதற்காகப் பதரிகா வனஞ்சென்றார். அது நரநாராயணர்கள் வசிக்கும் இடம்.

# அத்யாயம்—4

## அம்பரீஷ சரிதம்

நபகருடைய புத்திரர் நாபாகர். அவர் பிரமசாரியாகக் குருகுலத்தில் வித்தியாப்பியாசஞ் செய்துகொண்டு வெகுநாள் வசித்தார். அப்பொழுது அவருடைய சகோதரர்கள் பிரமசாரிக்குப் பாகம் இல்லையென்று அவருக்குப் பாகம் வைக்காமலேயே செல்வத்தைப் பிரித்துக் கொண்டார்கள். குருகுலவாஸஞ் செய்த பின்பு நாபாகர் வந்து, சகோதரர்களை நோக்கி, "ஓ சகோதரர்களே! என்னுடைய பாகமெங்கே?" என்று கேட்டார். அதற்கு அவர்கள் "உன்னுடைய பாகம் தகப்பன்" என்று சொன்னார்கள். அதைக் கேட்ட நாபாகர் பிதாவினிடஞ் சென்று இதைத் தெரிவித்தார். அதைக் கேட்டுப் பிதா, "ஓ புத்திர! அவர்களுடைய வார்த்தையை நம்ப வேண்டாம். தகப்பன் பாகமாக ஆவனோ? உன்னை ஏமாற்றினார்கள். ஆனாலும் உனக்குச் சிவனோபாயத்தைச் சொல்லுகிறேன். அங்கிரஸின கோத்திரத்தில் பிறந்த மகரிஷிகள் சத்திரத்தை (பன்னிரண்டு நாளில் முடியும் வேள்வி) அனுஷ்டிக்கிறார்கள். அவர்கள் ஆறுவது நாளில் செய்யவேண்டிய காரியத்தில் வைச்வ தேவ மந்திரங்களை அறியாமல் சிரமப்படுகிறார்கள். நீ அவ்விடஞ் சென்று, அந்த இரண்டு சூக்தங்களை யுச்சரித்துத் தோத்திரஞ்செய் அவர்கள் சத்திரம் முடிந்து சுவர்க்கஞ் செல்லும்பொழுது யாகத்திற்குபயோகப்பட்டு எஞ்சிய தனத்தை உனக்குக் கொடுப்பார்கள். அவ்விடம் போ" என்றார். நாபாகரும் பிதாவின் வார்த்தையின்படி ஆங்கிரஸர்களுடைய சத்திரபூமிக்குச் சென்று, விச்வே

தேவர்களை யுத்தேசித்த சூக்தங்களை யுச்சரித்துத் துதித்தார் அவர்கள் யாகத்தை முடித்து, சொர்க்கஞ் செல்லும்பொழுது எஞ்சிய தனத்தை நாபாகருக்குக் கொடுத்தார்கள். பின்பு கறுத்த நிறமுள்ள ஒரு புருடர் (ருத்ரன்) வடக்குத் திக்கிலிருந்து அவ்விடம் வந்து, 'இந்தத் தனம் எனனுடையது' என்றார். நாபாகர் 'இந்தத் தனத்தை மகரிஷிகள் எனக்குக் கொடுத்தார்கள். அதனால் என்னுடையது' என்றார். அப்பொழுது உருத்திரன் 'நம்முடைய விவாதத்தை உம்முடைய பிதாவிடத்தில் தெரிவித்துக் கேளும். அவர் சொன்னபடி நடப்போம்' என்றார். அப்படியே நாபாகர் தம்முடைய பிதாவை இவ்விஷயமாகக் கேட்டார். மனு புத்திரனை நோக்கி, 'யாகத்தில் எஞ்சிய தனம் உருத்திரருடைய பாகமென்று மகரிஷிகளால் (தக்ஷ யாகத்தில்) ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனதால் அது உருத்திரருடையதேயாம்' என்றார். அதனைக் கேட்ட நாபாகர், உருத்திரரிடம் வந்து, அவரை நமஸ்கரித்து, 'என்னுடைய பிதா யாகத்தில் எஞ்சிய பாகம் உருத்திரருடையது தான் என்று சொன்னார். ஆனாலும் உம்மை நமஸ்கரித்துக் கேட்கிறேன். இந்தத் தனத்தை எனக்குக் கொடுக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண்டார். அப்பொழுது உருத்திரர் சந்தோஷித்து, 'உம்முடைய பிதா பக்ஷபாதமின்றித் தர்மத்தைச் சொனனபடியாலும், அவர் சொன்னதை மறைக்காமல் சத்தியத்தை நீர் சொன்னபடியாலும், வைச்வதேவ மந்திரத்தை யறிந்தவராகிய உமக்குப் பிரம்ம ஞானத்தை யுபதேசிக்கிறேன். ஆனதால் மிகுந்த ஆபத்துக்காலத்திலும பொய்சொல்லக்கூடாது. சத்தியத்தால் நான் சந்தோஷப்படுவேன். சத்தியவாதியே எனக்கு இஷ்டன். இந்த யாகத்தில் எஞ்சிய தனத்தை உமக்குக் கொடுத்தேன். அதனை யெடுத்துக்கொள்ளும்' என்று சொல்லி, சத்தியத்தில் பிரீதியுள்ளவரான பகவான் அந்தர்த்தானத்தை அடைந்தார் (மறைந்தார்). எவன் இந்த உபாக்யானத்தைக் காலையிலும், மாலையிலும் சுத்தனாய் நினைக்கிறானோ, அவன் ஞானத்தை அடைவான்; மந்திரங்களை யறிவான்; ஆத்மாவின் உண்மையைத் தெரிந்துகொள்வான்.

15—57. அந்த நாபாகருடைய புத்திரர் அம்பரீஷரென்பவர். அவர் மகா பாகவதர்; ஞானமுள்ளவர்; பிராமண சாபம் நிவர்த்திக்கமுடியாததாயினும் அவரிடத்தில் சம்பந்திக்கவில்லை என்றார். அதனைக் கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ பகவன்! பிராமண சாபம் அம்பரீஷரிடத்தில் சம்பந்திக்கவில்லையென்று சொன்னீரே, அதனை விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். அதைக் கேட்டுச் சுகர் பின் வருமாறு சொல்லலானார். "மஹா பாக்கியசாலியாகிய அம்பரீஷர் ஏழு தீவுகளுள்ள பூமியையும், உபத்திரவமற்ற சம்பத்தையும், ஒப்பற்ற ஐசுவர்யத்தையும் அடைந்தார். ஆனாலும் அவைகளைச் சாசுவதமில்லாதவையென்று தெரிந்து கொண்டவராகையாலும், அவைகளில் ஆசை வைத்தவன் நரகத்தை அடைவானென்று அறிந்தவராகையாலும் வைராக்கியத்தை அடைந்தார். மேலும் அவர் தனம் முதலியவைகளை ஓட்டுச்சல்லியாக நினைத்து, பகவானாகிய வாஸுதேவரிடத்திலும், அவருடைய பக்தர்களிடத்திலும் மிகுந்த பிரீதிவைத்திருந்தார். பின்னும் அவர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் மனத்தைச் செலுத்தினார். பகவானுடைய குணங்களையே வாக்கினால் உச்சரித்தார். கைகளைத் தேவாலயத்தை மெழுகல் முதலியவற்றில் உபயோகித்தார். அற்புதமான பகவத்கதைகளைக் கேட்பதிலேயே காதுகளைச் செலுத்தினார். ஸ்ரீ பகவானுடைய பிம்பத்தையும் ஆலயத்தையும் தரிசிப்பதில் கண்களை யுபயோகித்தார். பகவத்பக்தர்களை ஆலிங்கனஞ்செய்து கொள்வதே சுகமென்று நினைத்தார். பகவானுடைய பாதாரவிந்தத்திலிருக்கும் துளஸியின் மணத்தில் கிராணேந்திரியத்தை (மூக்கை) உபயோகித்தார். பகவானுக்கு நிவேதனமான அன்னம் முதலியவைகளையே புசித்தார். உத்தம க்ஷேத்திரங்களுக்குச் செல்வதில் பாதங்களை யுபயோகித்தார். பகவானை நமஸ்காரஞ் செய்வதிலேயே சிரசை உபயோகித்தார். பகவானுடைய பிரசாதமாகிய மாலை, சந்தனம் முதலியவைகளைப் பகவானுடைய அனுக்கிரகமென்று கிரகித்தாரே

யொழிய விஷய ஆசையால் ரஞ்சிக்கவில்லை. அதனால் உத்தமசுலோகராகிய பகவானுடைய பக்தர்களை ஆச்ர யிக்கவேண்டுமென்ற பக்தியுண்டாயிற்று. இப்படி அந்த மகாராஜன் எல்லாவற்றையும் ஆத்மாவாகப் பாவித்து, தம்மால் செய்யப்படும் கருமங்களெல்லாவற் றையும் பகவானிடத்தில் சமர்ப்பித்து, பாகவதர்களு டைய சொற்படி பூமியைப் பரிபாலித்தார். மேலும் அவர் பூரணமாகத் தக்ஷிணை கொடுத்து, குறைவின்றி வஸிஷ்டர் முதலிய மகரிஷிகளை வைத்துக்கொண்டு சரஸ்வதி நதிக்கரையில் பலமுறை அசுவமேதங்களைச் செய்து பகவானை ஆராதித்தார். அவருடைய யாகத் தில் நல்ல வஸ்திரங்கள், ஆபரணங்கள் ஆகிய இவை களால் அலங்கிருதர்களான ஜனங்கள் தேவர்களுக்குச் சமானர்களாக இருந்தார்கள். அந்த அரசனுடைய ஜனங்கள் உத்தமசுலோகராகிய பகவானுடைய சரிதங் களைக் கேட்பதாலும், கானஞ்செய்வதாலும், திருப்தி யடைந்திருப்பதால் தேவர்களுக்குப் பிரியமான சுவர்க் கத்தையும் விரும்பவில்லை. மேலும் அந்த ஜனங்கள் ஸ்ரீ முகுந்தராகிய பகவானையே இதயத்தில் தியானஞ் செய்திருந்தபடியால் சொரூப சுகத்தை அடைந்து விஷயங்களில் ஆசையற்றவர்களாக இருந்தார்கள். அந்த அரசன் இப்படி பக்தி யோகத்தை அநுஷ்டித்து, இந்திரியங்களை யடக்கி, தமக்குரிய தர்மத்தைச் செய் வதால் ஸ்ரீ பகவானை சந்தோஷிக்கச்செய்து, சகல ஆசைகளையும் காலக்கிரமத்தில் ஒழித்தார். பின்னு மவர் கிருகம், களத்திரம், புத்திரன், பந்துக்கள், யானைகள், இரதம், குதிரை, காலாட்படை, குறைவற்ற வஸ்திரம், ஆபரணம், ஆயுதம், பொக்கிஷம் ஆகிய இவைகளைத் துக்கத்தைக் கொடுக்கக்கூடியவை களென்று நிச்சயித்து வைராக்கியத்தை அடைந்தார். இப்படி பகவத்பரரான அரசனிடத்தில் பகவான் சந் தோஷித்து, அவருடைய சத்துருக்களை நாசஞ்செய் வதற்காகச் சக்கரத்தைக் கொடுத்தார். ஒருகால் அந்த அரசன் பகவானுடைய பிரீதிக்காக ஒரு வருஷகாலம் பார்யையுடன் துவாதசி விரதத்தை அநுஷ்டித்தார். விரதத்தின் முடிவில் கார்த்திகை மாதத்துத் துவாதசி

யில் மூன்று நாள் உபவாஸமிருந்து (தசமி தினம் ஒரு வேளை போஜனம், ஏகாதசியில் உபவாஸம், துவாதசியில் ஒருவேளை போஜனம். இப்படி மூன்று உபவாஸமென்று கருத்து) துவாதசி தினத்தில் யமுனாநதியில் ஸ்நானஞ் செய்து மதுவனத்தில் பூஜைக்குபயோகமான ஸாமக்கிரிகளுடன் பகவானைப் பூசித்தார். ஆயிரங் கடங்கள் வைத்துப் பூசித்து, அவைகளின் தீர்த்தத்தால் பகவானுக்கு அபிஷேகஞ்செய்து உத்தமமான ஆபரணங்களாலும், சந்தனத்தாலும், புஷ்பமாலைகளாலும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப் பூசித்து, அவரையே தியானஞ் செய்தார். பின்னும், மகா பாக்கியசாலிகளும் ஆத்மலாபத்தால் பூரணர்களுமான பாகவதர்களையும் பூசித்தார். அவர்களுக்கு ஆயிரக்கணக்கான பசுக்களைத் தானஞ்செய்தார். அவைகளுடைய கொம்புகள் சுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டன. கால்கள் வெள்ளியினால் பூஷிக்கப்பட்டன. மேலும் அவைகள் நல்ல கன்றுகளுள்ளவை, பால் கறக்கும் பாத்திரங்களுள்ளவை. இன்னும் அந்த அரசன் பிராமணர்களுக்கு உத்தமமான போஜனஞ்செய்வித்து, அவர்களிடம் விடைபெற்றுப் பாரணைசெய்ய முயற்சித்தார். அந்தச் சமயத்தில் துருவாசர் என்றவர் அதிதியாக அரசனிடம் வந்தார். அரசன் அவரை எதிர்கொண்டழைப்பது முதலியவைகளால் பூசித்து, போஜனஞ்செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அதனை ஒப்புக்கொண்டு மாத்யான்னிகம் முதலியவைகளைச் செய்ய யமுனாநதிக்குச் சென்றார். அரசன் துவாதசி அரை முகூர்த்தம் பாக்கியிருந்தபடியால் அதற்குள் பாரணை செய்யவேண்டுமென்று விரும்பி, "துவாதசியில் பாரணை செய்யவேண்டியது தருமம்; பிராமணரை வைத்துவிட்டுப் புசிப்பதும சரியல்ல; இதற்கென்ன செய்யலாம்? எதனைச் செய்தால் தர்மவிரோதமில்லாமலிருக்கும்? ஜலத்தைப் புசிப்பது போஜனத்திற்கும் உபவாஸத்திற்கும் சமமானது; ஆனதால ஜலத்தால் பாரணையை முடித்துக்கொள்வோம்" என்று நிச்சயித்து, ஜலத்தால் பாரணைசெய்து மனதில் பகவானைத் தியானித்து, பிராமணருடைய வரவை யெதிர்பார்த்திருந்தார். பின்பு

துர்வாசர் யமுனையிலிருந்து அம்பரீஷரிடம் வந்து அவர் ஜலத்தைப் புசித்ததை ஞானதிருஷ்டியால் தெரிந்துகொண்டு பசியுள்ளவராகி, மிகுந்த கோபங்கொண்டு, கைகூப்பி நிற்கும் அரசனை நோக்கி, "இந்த அரசன் மிகவும் கர்வங்கொண்டவன்; ஐசுவர்ய மதமுள்ளவன்; விஷ்ணுவிடம் பக்தியில்லாதவன்; இவன் தருமத்தை மீறி நடந்தான். இவன் என்னைப் போஜனத்துக்கு அழைத்து எனக்கு அன்னங் கொடாமல் புசித்தான். அதன் பயனைக் காண்பிக்கிறேன்" என்று சொல்லி, தம்முடைய சடையிலிருந்து பிரளயகாலத்து அக்கினிக்குச் சமமான பிசாசத்தை (கிருத்யை) உண்டு பண்ணினார். அது கையில் கத்தியை வைத்துக்கொண்டு அரசனுக்கு எதிரில் சென்றது. அதனைக் கண்டும் அரசன் பயப்படாமலேயே நின்றார். அப்பொழுது பக்தனைக் காப்பாற்றுவதற்காகப் பகவானால் தூண்டப்பட்ட சக்கரமானது சர்ப்பத்தை அக்கினி எரிப்பதுபோல அந்தப் பிசாசத்தை நாசஞ்செய்து துர்வாசரைப் பின் தொடர்ந்தது. அதனைக் கண்ட மகரிஷி தம்முடைய முயற்சி வீணாய்ப்போனதாலும், பகவானுடைய சக்கரம் பின்தொடருவதாலும் பயந்து, பிராணனைக் காப்பாற்றிக்கொள்ள விரும்பி ஒவ்வொரு திக்குகளிலும் ஓடினார். சர்ப்பத்தை அக்கினி துரத்தினாற்போல, தம்மைத் துரத்திக்கொண்டு பின்வரும் பகவானுடைய சக்கரத்தை அடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டு, துர்வாசர் மேருவின் குகையில் நுழைந்தார். திக்குகள், ஆகாசம், பூமியின் பிலங்கள், சமுத்திரங்கள், உலகபாலர்களுடைய உலகங்கள் ஆகிய இவ்விடங்களுக்குச் சென்றார், சக்கரமும் கூடவே துரத்திற்று. அப்பொழுது மிக்க கவலையுடன் சத்தியலோகஞ் சென்று பிரமதேவரைத் தரிசித்துக் காப்பாற்றும்படி வேண்டிக்கொண்டார். அதனைக் கேட்ட பிரமதேவர், "ஓ பிராமணா! என்னுடைய பிரமபதமானது இரண்டுபரார்த்தம் முடிந்தவுடன் பகவானுடைய விளையாட்டு முடியுங்காலத்தில் காலசுரூபியான எந்தப் பகவானுடைய புருவ நெரித்தலால் நாசமாகிவிடுகிறதோ, எவருடைய உத்தரவைச் சிரசால் வகித்து நானும், தக்ஷரும், பிருகு முதலிய

பிரஜாபதிகளும், தேவசிரேஷ்டர்களும் உலகத்திற்கு இதமானதைச் செய்கிறேமோ, அந்தப் பகவானுடைய பக்தர்களுக்கு அபராதஞ் செய்தவர்களைக் காப்பாற்ற என்னால் முடியாது' என்றார்.

58—62. இம்மாதிரியான பிரமதேவருடைய வார்த்தையைக் கேட்டு ஸ்ரீ மகாவிஷ்ணுவின் சக்கரத்தால் தபிக்கப்பட்ட துர்வாசர் கைலாச பருவதஞ் சென்று, பரமசிவனைச் சரணமடைந்தார். அவர் மகரிஷியை நோக்கி, "ஓ மகரிஷியே! ஸ்ரீ மகாவிஷ்ணு எங்களாலும் துதிக்கக்கூடியவர்; எல்லாவற்றிற்கும் மேலானவர்; இந்தப் பிரமாண்டம்போல அநேக பிரமாண்டங்கள் அவரிடமிருந்து உண்டாகின்றன. பிரளயகாலத்தில் இலயிக்கின்றன. இந்தப் பிரமாண்டத்தில் நாங்கள் உலகேசர்கள் என்ற அபிமானமுள்ளவர்களாகிச் சுற்றுகிறோம். மேலும் நான், சனத்குமாரர், நாரதர், பிரமதேவர், கபிலர், தேவலர், தருமர், ஆஸுரி, மரீசி முதலிய சித்தர்களுக்கதிபதிகள் முதலியவர்கள் மகாவிஷ்ணுவின் மகிமையை அறியமாட்டோம். நாங்கள் அவருடைய மாயையால் மோகமடைந்தவர்கள். ஜகத்பதியான அந்தப் பகவானுடைய சக்கரமானது சகிக்கமுடியாதது. ஆனதால் அந்த நாராயணனையே சரணமடையும். அவர் உமக்கு க்ஷேமத்தைச் செய்வார்" என்றார்.

63—66. அதனைக் கேட்ட துர்வாசர் அவ்விடத்தில் மனோரதம் நிறைவேறாமல் வைகுண்டஞ் சென்றார். அவ்விடத்தில் லக்ஷ்மீதேவியுடன் ஸ்ரீமந்நாராயணன் வஸிக்கிறார். சக்கரத்தால் தகிக்கப்பட்ட மகரிஷி பகவானுடைய பாதாரவிந்தத்தில் நமஸ்கரித்து, "ஓ பிரபுவே! அச்சுத! அனந்த! சாதுக்களுக்குச் சம்மதனாகிய என்னைக் காப்பாற்றும். உம்முடைய பக்தருக்கு அறியாமையால் அபராதஞ் செய்தேன். அதற்குப் பிராயச்சித்தஞ் செய்யும். பக்தருக்குக் குற்றஞ்செய்தவர்களுக்குப் பிராயச்சித்தமில்லையென்று சொல்வது நியாயமல்ல. நரகத்திலிருப்பவனானாலும் உம்முடைய நாமத்தை யுச்சரித்தமாத்திரத்தில் நல்ல கதியை அடைகிறானல்லவா" என்று பிரார்த்தித்தார்.

67—74. அதனைக் கேட்ட பகவான், "ஓ பிராமணா! நான் பக்தர்களுக்கு வசப்பட்டவன்; சாதுக்கள் என்னை ஹிருதய் குகையில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதனால் நான் பராதீனனாக இருக்கிறேன். பக்தர்கள் என்னையே கதியாக நம்பியிருப்பதால் எனக்கு ஆத்மா வும், லக்ஷ்மீதேவியும், ஐசுவர்யமும் பக்தர்களைவிட மேலானதல்ல. எவர்கள் களத்ரம், புத்திரன், ஆப்தர் கள், பிராணன், பணம் ஆகிய இவைகளை விட்டு என் னையே சரணமடைந்திருக்கிறார்களோ அவர்களை விடு வதற்கு எனக்கிஷ்டமில்லை. மேலும், பதிவிரதைகள் தங்களுடைய் குணங்களால் பர்த்தாவைச் சுவாதீனப் படுத்திக்கொள்வதுபோல எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பவர்களும், என்னிடத்திலேயே மனத்தைச் செலுத்தியவர்களுமான சாதுக்கள் என்னை வசப்படுத் திக் கொண்டிருக்கிறார்கள். மேலுமவர்கள் என்னைக் காட்டிலும் வேறான சாலோக்யம் முதலியவைகளையும் விரும்புகிறதில்லை. ஆனதால் யாருக்கு அபராதஞ் செய்தீரோ, அவரைச் சரணமடையும். சாதுக்களுக்கு அபராதஞ்செய்தவன் கெடுதியை அடைவான். பிரா மணர்களுக்குத் தவமும், வித்தையுமாகிய இரண்டும் நலத்தைக் கொடுக்கக்கூடியவைகள். அவைகளே கெட்ட சுபாவமுள்ளவனுக்குக் கெடுதியைக் கொடுக் கின்றன. ஆனதால் ஓ பிராம்மணா! நாபாகருடைய புத்திராகிய அம்பரீஷரிடஞ்சென்று அவரைச் சமாதா னப்படுத்தும்; உமக்கு நலமுண்டாகும்" என்று அனுக் கிரகித்தார்.

---

# அத்தியாயம் 5

## அம்பரீஷன் துர்வாசரைக் காப்பாற்றியது

பின்பு பகவானுடைய ஆஞ்ஞையின்படி துர்வாசர் அம்பரீஷரிடஞ் சென்று, சக்கரத்தால் தபிக்கப்பட்டு மிகுந்த துக்கத்துடன் அரசனுடைய பாதங்களைப் பிடித் துக்கொண்டார். அதனைக் கண்ட அரசன் மிகுந்த வெட் கத்தை அடைந்து மகரிஷியின் மீது கருணைவைத்துப் பின்வருமாறு சக்கரத்தைத் துதித்தார். எப்படி

யெனில்—"நீர் அக்கினி; பகவானுகிய சூரியன். நீர் சந்திரன். நீரே ஜலம். நீர் பூமி. ஆகாயமும் நீரே. நீரே வாயு. தன்மாத்திரைகளும், இந்திரியங்களும் நீரே. ஓ ஸுதரிசன! ஆயிரம் முனைகளுள்ளவரே! அச்சுதருக்குப் பிரியமானவரே! எல்லா அஸ்திரங்களையும் நாசஞ்செய்பவரே! பூமிக்கு அதிபதியே! உம்மை நமஸ்கரிக்கிறேன். பிராமணருக்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணும். நீரே தருமமாகவும், தைரியமாகவும், சத்தியமாகவும், யாகமாகவும், யாகத்தைப் புசிப்பவராகவும், சகல உலகபாலசுரூபியாகவும் இருக்கிறீர். பரமபுருஷனுடைய தேஜசு சுரூபியாகவு மிருக்கிறீர். ஓ அழகான நாபியுள்ளவரே! சகல தருமங்களையும காப்பாற்றுபவரே! அதருமசுபாவமுள்ள அசுரர்களை நாசஞ் செய்பவரே! மூவுலகங்களைக் காப்பாற்றுபவரே! சுத்தமான தேஜசுள்ளவரே! மனம்போல் வேகமுள்ளவரே! அற்புதமான சரிதமுள்ளவரே! உம்மை நமஸ்கரிக்கிறேன். உம்முடைய தருமமயமான தேஜசினுல் சாதுக்களுடைய அஞ்ஞானம் போக்கடிக்கப்படுகிறது. உம்முடைய பிரகாசத்தால் சூரியன் முதலிய ஒளி பிரகாசிக்கிறது. உம்முடைய மகிமையானது ஒருவராலும் தாண்டமுடியாதது. பலவகையான இந்தச் சகத்தானது உம்முடைய சுரூபமேயாம். ஓ ஒருவராலும் வெல்லப்படாதவரே! பகவான் எப்பொழுது அசுரர்களைக் கொல்வதற்காக உம்மைப் பிரயோகிக்கிறாரோ, அப்பொழுது அசுரர்களை நீர் கொல்லுகிறீர். ஜகத்திற்குப் பிராணனுகிய நீர் துஷ்டர்களைக்கொல்பவர்; எல்லாவற்றையும் சகிப்பவர்; பிராமணருக்கு க்ஷேமத்தைச் செய்யும். அதுவே நம்முடைய குலத்திற்கு அனுக்கிரகஞ் செய்ததாகும். தானம், யாகம், சுதருமம் ஆகிய இவைகளை நான் அநுஷ்டித்தது வாஸ்தவமானல் பிராமணருடைய தாபம சாந்தமாகட்டும். சகல பிராணிகளின் சுரூபியும், சகல குணங்களுக்கு ஆசிரயமாகவிருப்பவரும், ஒருவருமான பகவான் என்னிடத்தில் சந்தோஷ மடைந்திருந்தால் பிராமணருக்குத் தாபம் நிவர்த்தியாகட்டும" என்று தோத்திரஞ் செய்தார்.

13—17. இப்படி அரசனுல் துதிக்கப்பட்ட விஷ்ணு சக்கரமானது அம்பரீஷருடைய பிரார்த்தனைப்படி மக

ரிஷியை எரிக்கவில்லை. அஸ்திர பயத்திலிருந்து விடு பட்ட துர்வாசரானவர் க்ஷேமத்தை யடைந்து மிகுந்த ஆச்சரியத்துடன் அரசனுக்கு ஆசீர்வாதஞ்செய்து, பகவத் பக்தர்களுடைய மாகாத்மியத்தைப் பார்த்தேன். ஆச்சரியம். ஓ அரசனே! குற்றஞ்செய்த எனக்கு க்ஷேமத்தைச்செய்தீர்! உம்முடைய குணம் மேலானது. மகான்களுக்கும் பகவான் வசப்படுவதால் அவர்களால் எதுதான் செய்யமுடியாது? எதைத்தான் அவர்கள் விடமாட்டார்கள்? எந்தப் பகவானுடைய திவ்ய நாமத்தைக் கேட்டமாத்திரத்தால் புருஷன் சுத்தனாகிறானோ, அவருடைய பக்தர்களுக்கு எதுதான் கிடைக்காது? ஓ மகாராஜா! நான் செய்த அபராதத்தை நினையாமல் என்னுடைய உயிரைக் காப்பாற்றியபடியால் நான் அனுக்கிரகிக்கப்பட்டேன்" என்று சிலாகித்தார்.

18—22. அரசன் அதுவரையில் போஜனஞ் செய்யாமலிருந்தவரானபடியால் மகரிஷிக்குப் போஜனஞ் செய்வித்தார். மகரிஷி புசித்துத் திருப்தியடைந்து, புசிக்கும்படி அரசனுக்கு உத்தரவுகொடுத்தார். பின்பு அந்த மகரிஷி அரசனைக் நோக்கி, "உம்மிடத்தில் பிரியமடைந்தேன். உம்மைத் தரிசித்ததாலும், சம்பாஷித்ததாலும், உம்முடைய அங்க பரிசத்தாலும் அனுக்கிரகிக்கப்பட்டேன். உம்முடைய இந்தக் கீர்த்தியைப் பூமியிலுள்ள ஜனங்களும் தேவமாதர்களும் கானஞ்செய்வார்கள்" என்று சொல்லி மிகுந்த சந்தோஷத்துடன் அம்பரீஷனிடம் விடைபெற்று ஆகாய மார்க்கமாகப் பிரமலோகஞ் சென்றார்.

23—27. துர்வாசர் உலகம் முழுவதுஞ்சுற்றித் திரும்பிவருவதற்கு ஒரு வருஷஞ் சென்றபடியால் அதுவரையில் அரசன் ஜலத்தைப் புசித்து மகரிஷியின் வரவை யெதிர்பார்த்திருந்தார். பின்பு பிராமணருக்கு அன்னங் கொடுத்து எஞ்சியதைப் புசித்தார். தன் மகிமையை பகவானுடையதென்றே நினைத்தார். இம்மாதிரியான அநேக அற்புத சரிதங்களுள்ள அந்த அரசன் சுதருமத்தை யநுஷ்டித்து அதனை, வாஸுதேவரும் பரமாத்மாவுமான ஸ்ரீ பிரமத்தினிடம் சமர்ப்

பித்து, பிரமலோகம் வரையிலுள்ள சுகங்களை நரகமாகவே நினைத்தார். (அவைகளை விரும்பவில்லை.) பின்பு அவர் தமக்குச் சமமான குணங்களுள்ள புத்திரர்களிடத்தில் இராஜ்யத்தை ஒப்புவித்து வனஞ் சென்று பகவானிடத்தில் மனத்தைச் செலுத்தினார். குணசம்பந்தத்தை நிவர்த்தித்துக்கொண்டார். இந்த அம்பரீஷருடைய புண்ணிய சரித்திரத்தைப் படிப்பவனும், மனதில் தியானிப்பவனும் பகவானிடத்தில் பக்தியை அடைவான்.

---

# அத்தியாயம் 6

## சசாதருடைய வம்சம்

விரூபன், கேதுமாலன், சம்பு என்ற மூவர்களும் அம்பரீஷருடைய புத்திரர்கள். அவர்களில் விரூபருடைய புத்திரன் பிரஷதச்வர். அவருடைய புத்திரன் இரதீதரர். அவருக்குப் புத்திரனில்லாமலிருந்தபடியால் ஆங்கிரஸ் என்ற மகரிஷி இரதீதரருடைய பத்தினியினிடத்தில் பிரவேசித்து, பிரமதேஜசுள்ள புத்திரர்களையுண்டுபண்ணினார். அவர்கள் க்ஷத்திரிய ஸ்திரீயினிடத்தில் பிராமணருடைய வீர்யத்திற்குண்டானவர்களாகையால் இரண்டு ஜாதியிலும் சம்பந்தமுள்ளவர்களானார்கள்.

4—19. வைவஸ்வத மநு தும்மும்பொழுது அவருடைய மூக்கிலிருந்து இக்ஷ்வாகு உண்டானார். அவருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் விகுக்ஷி, நிமி, தண்டகனென்ற மூவர்களும் சிரேஷ்டர்கள். அவர்களில் இருபத்தைந்து புத்திரர்கள் கிழக்கு திக்கிலிருக்கும் ஆரியாவர்த்தத்தில் (விந்தியம், ஹிமவான் என்ற இரண்டு பர்வதங்களுக்கும் மத்தியமான தலம்) அரசர்களாக இருந்தார்கள். மேற்கிலிருக்கும் ஆரியாவர்த்தத்தில் இருபத்துஐந்து புத்திரர்கள் இராஜ்யபரிபாலனஞ் செய்தார்கள். மத்தியில் மூன்று புத்திரர்கள் பூமியைப் பரிபாலித்தார்கள். மற்றவர்கள் வடக்கிலும் தெற்கிலுமுள்ள தேசங்களுக்கு அரசர்களாக இருந்தார்கள். அந்த இக்ஷ்வாகுவானவர் தம்

முடைய புத்திரனாகிய விகுக்ஷியை நோக்கி, "அஷ்டகா சிராத்தத்திற்காக மாமிசம் கொண்டுவா" என்று ஆஞ்ஞாபித்தார். அதனைக் கேட்டு விகுக்ஷி வனத்திற்குச் சென்று கருமத்திற்கு உபயோகமான மிருகங்களைக் கொன்று களைப்படைந்தான். அவனுக்குப் பசியுண்டாயிற்று. அதனால் சிராத்தத்திற்காக மாம்ஸம் கொண்டுவரச் சொன்னதை மறந்து ஒரு முயலைப் புசித்தான். பாக்கியான மாம்ஸத்தைக் கொண்டுவந்து தகப்பனாரிடம் கொடுத்தான். அவர் வஸிஷ்டரிடம் தெரிவித்தார். அப்பொழுது வஸிஷ்டர் அதனைக் கர்மத்திற்கு உபயோகமாகச் செய்வதற்காகப் புரோக்ஷிக்கும்பொழுது இந்த மாம்ஸம் தோஷமுள்ளது; கருமத்திற்கு உபயோகப் படாது" என்று சொன்னார். அதனைக் கேட்ட அரசன் தம்முடைய புத்திரன் முயலைப் புசித்து எஞ்சியதைக் கொண்டுவந்தானென்பதைத் தெரிந்துகொண்டு, நல்ல ஆசாரமற்றவனாகிய விகுக்ஷியைத் தேசத்தைவிட்டுத் துரத்தினார். பின்பு அவர் வஸிஷ்டருடைய உத்தரவின்படி நடந்து, கடைசியில் சரீரத்தைவிட்டு உத்தம கதியை அடைந்தார். அவருக்குப் பிறகு விகுக்ஷி ராஜ்யத்தை அடைந்தார். அநேக யக்ஞங்களைச் செய்து ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் பூஜித்தார். அவருக்குச் சசாதரென்று பெயருண்டாயிற்று (முயலைப் புசித்தவர்). அவருடைய புத்திரருக்குப் புரஞ்சயன், இந்திரவாஹன், ககுஸ்தன் என்று மூன்று பெயர்களுண்டு. அதன் காரணமென்னவென்றால் பிரளயகாலத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தம் நேர்ந்தது. அதில் தைத்தியர்கள் தேவர்களை ஜயித்தார்கள். அப்பொழுது தேவர்கள் தங்களுக்கு ஒத்தாசை செய்யவேண்டுமென்று சசாதருடைய புத்திரரைப் பிரார்த்தித்தார்கள். அதனைக் கேட்ட அவ்வரசன், "இந்திரன் எனக்கு வாகனமாக இருப்பானானால் நான் உங்களுக்குச் சகாயஞ் செய்வேன்" என்றார். அதற்கு இந்திரன் சம்மதிக்காதவரானாலும் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் ஆஞ்ஞையினால் அதற்குச் சம்மதித்தார். அப்பொழுது மகேந்திரன் விருஷபமாக ஆனார். சசாதருடைய குமாரர் அந்த விருஷபத்தின் மீதேறி அதன் முதுகில் [ககுத்] இருந்து, திவ்வியமாகிய வில்,

பாணம் ஆகிய இவைகளைத் தரித்து, ஸ்ரீமந்நாராயண னுடைய தேஜஸினால் அனுக்கிரகிக்கப்பட்டு, மேற்கு திக்கிலிருக்கும் தைத்தியர்களுடைய பட்டணஞ்சென்று அதனை முற்றுகை போட்டார். அப்பொழுது அஸுரர் களுடன் யுத்தஞ்செய்தார். அது பார்ப்பவர்களுக்கு மிக்க பயங்கரமாகவும், மயிர்க்கூச்சலை யுண்டுபண்ணக் கூடியதுமாக இருந்தது. இந்த அரசனுடைய பல்ல மென்ற பாணங்களால் அடிக்கப்பட்ட அஸுரர்கள் யமலோகஞ் சென்றார்கள். மற்றவர்கள் பயந்து பாதா லத்தை நோக்கி ஓடினார்கள். அவர்களுடைய பட்ட ணத்தை ஜயித்து, அங்கிருந்த சகல தனங்களையும் மகேந்திரனுக்குக் கொடுத்தார். பட்டணத்தை ஜயித்த படியால் புரஞ்சயனென்ற பெயரை அடைந்தார். விருஷ பத்தின் முதுகில் ஏறியபடியால் ககுஸ்தரென்று சொல் லப்பட்டார். அவருக்கு இந்திரன் வாகனமாக இருந்த படியால் இந்திரவாகனென்று அவர் சொல்லப்பட்டார்.

20—55. புரஞ்சயருக்கு அனேனஸ் என்ற புத்திர னுண்டானார். அவருடைய புத்திரர் பிரது. அவரு ருடைய குமாரர் விச்வகந்தர். அவருடைய குமாரர் சந்திரன். அவருடைய குமாரர் யுவனாச்வர். அவருடைய புத்திரர் சவஸ்தரென்பவர். இவரால் சாவஸ்தியென்ற பட்டண முண்டுபண்ணப்பட்டது. அவருடைய குமாரர் பிரகதச்வர். அவருடைய புத்திரர் குவலயாச்வர். அவர் உதங்கருடைய பிரீதிக்காக இருபத்தொரு ஆயிரம் புத்திரர்களால் சூழப்பட்டு துந்து என்ற அஸுரனை யெதிர்த்துக் கொன்றார். அதனால் அவருக் குத் துந்துமாரரென்று பெயருண்டாயிற்று. துந்து வின் முகத்திலிருந்து கிளம்பிய அக்கினியினால் அரச னுடைய புத்திரர்கள் எரிக்கப்பட்டார்கள். ஆனால் திருடாச்வர், கபிலாச்வர், பத்திராச்வர் என்ற மூன்று குமாரர்கள் உயிருடனிருந்தார்கள். திருடாச்வருடைய புத்திரர் ஹர்யச்வர். அவருடைய புத்திரர் நிகும்பர். அவருடைய புத்திரர் பர்கிணாச்வர். அவருடைய புத்திரர் கிருதாச்வர். அவருடைய புத்திரர் ஸேனஜித். அவருடைய புத்திரர் யுவனாச்வர். அவருக்கு நூறு

பத்தினிகளிருந்தும் ஒருவரிடத்திலும் புத்திரனுண்டா காததனல் நிர்வேதத்தை அடைந்து, காட்டிற்குப் போனார். அவரிடத்தில் மகரிஷிகள் கிருபை கூர்ந்து இந்திரனை யுத்தேசித்து ஒரு இஷ்டியைச் செய்து வைத்தார்கள். ஒரு நாள் ராத்திரியில் யாகசாலையில் மகரிஷிகள் நித்திரை செய்யும்பொழுது அரசன் மிகுந்த தாக முள்ளவனுகி மந்திரித்த குடத்திலிருக்கும் நீரைப் பருகினுர். மறுநாள் மகரிஷிகள் குடத்தில் ஜலமில்லாதிருப்பதைப் பார்த்து, 'இந்த ஜலம் புத்திரனைக் கொடுக்கக் கூடியதாகையால் இதை யார் குடித்தார்கள்' என்று விசாரித்தார்கள். தெய்வச்செயலாக அரசன் பானஞ் செய்தாரென்பதைத் தெரிந்துகொண்டு, 'தெய்வம் ஒருவராலும் அதிக்கிரமிக்க முடியாதது' என்று சொல்லி அச்வரனுக்கு நமஸ்காரஞ் செய்தார்கள். பின்பு பிரசவகாலம் நேர்ந்தபொழுது யுவனுச்வருடைய வலது பக்கத்தைப் பேதித்துக்கொண்டு குழந்தை பிறந்தது. அப்பொழுது மகரிஷிகள், 'இந்தக் குழந்தை எதனைப் பானஞ்செய்யப் போகிறது? மிகவும் அழுகிறதே' என்று சொல்லிக் கொண்டார்கள். அப்பொழுது மகேந்திரன், 'ஓ குழந்தாய், நீ அழவேண்டாம்; என்னைக் குடி' (விரலிலிருந்து பெருகும் அமிருதத்தை) என்று ஆள்காட்டி விரலைக் கொடுத்தான். அதனுல் அவருக்கு மாந்தாதாவென்று பெயர் வந்தது. அக்குழந்தையின் பிதாவாகிய யுவனுச்வரென்பவர் பிராமணர்கள், தேவர்கள் ஆகிய இவர்களுடைய அனுக்கிரகத்தினுல் மரணமடையவில்லை. மேலும் அவர் அவ்விடத்திலேயே தவஞ்செய்து சித்தி அடைந்தார். மாந்தாதாவிடமிருந்து ராவணன் முதலிய திருடர்கள் பயந்தபடியால் அவருக்குத் திரஸதஸ்யுவென்று மகேந்திரன் பெயரிட்டார். இப்படி யுவனுச்வருடைய புத்திரராகிய மாந்தாதாவானவர் சக்கரவர்த்தியாகி, ஏழு திவுகளுள்ள இந்தப் பூமியைப் பரிபாலித்தார். எது வரையில் சூரியனுடைய பிரகாசம் இருக்கிறதோ அதுவரையிலுள்ள சகல பூமியும் மாந்தாதாவினுடைய இராஜ்யமேயாம். திரவியம், மந்திரம், ஔஷதி, யஞ்ஞம், யசமானன், ரித்விக்குகள், தருமம், தேசம், காலம் ஆகிய இவைகளெல்லாம் எவருடைய

சுரூபமோ, எவர் சர்வ வேதசுரூபியோ, எவர் இந்திரியங்களுக்குப் புலப்படாதவரோ, அந்த ஸ்ரீமந்நாராயணனை அவர் அநேக யாகங்களைச் செய்து பூசித்தார். பின்னுமவர் சதபிந்துவின் பெண்ணாகிய பிந்துமதி என்பவளிடத்தில் புருகுற்சன், அம்பரீஷன், யோகியான முசுகுந்தன் என்ற மூன்று புத்திரர்களையும், ஐம்பது பெண்களையும் உண்டுபண்ணினார். அந்தப் பெண்கள் சௌபரி என்பவரைப் பர்த்தாவாக அடைந்தார்கள். மிகுந்த தவசியான சௌபரிக்கு விவாகம் செய்து கொள்ளவேண்டுமென்ற எண்ணம் எப்படி உண்டாயிற்று? கிழத்தனமுள்ள அவரிடத்தில் அந்தப் பெண்கள் எப்படி ஆசைப்பட்டார்கள் என்றால், சௌபரி எனபவர் யமுனையின் ஜலத்தில் மூழ்கி வெகுகாலம் தவஞ்செய்தார். அப்பொழுது அந்த ஜலத்தில் மச்சராஜன் புத்திரபௌத்திரர்களுடன் விளையாடிக்கொண்டு சுகமாக இருப்பதைப் பார்த்து, தாமும் கிருகஸ்தனாக இருக்கவேணுமென்று ஆசைப்பட்டார். பின்பு ஜலத்திலிருந்து வெளிவந்து மாந்தாதாவின் சமீபம் சென்று, 'உம்முடைய பெண்களில் எனக்கு ஒரு பெண்ணைக் கன்யாதானம் செய்யவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார். அதனைக் கேட்ட அரசன் சௌபரியை நோக்கி 'எங்களுடைய பெண்களுக்குள் உம்மை யார் வரிக்கிறாளோ, அவளை உமக்குக் கொடுக்கிறேன்' என்றார். அதனைக் கேட்ட சௌபரி, "பிராமணன் வய்து சென்றவராக இருப்பதால் பெண்களுடைய மனத்துக்குப் பிடிக்காதவர், இவருடைய மயிர்கள் நரைத்திருக்கின்றன, சரீரம் எப்பொழுதும் நடுங்குகிறது, ஆனதால் இவரை நம்முடைய பெண்களில் ஒருத்தியும் வரிக்கமாட்டாள்' என்று நினைத்து அரசன் இபபடிச் சொல்லுகிறான். ஆனதால் தேவமாதர்களாலும் ஆசைப்படக்கூடிய வடிவத்தை எடுத்துக்கொண்டு இந்தக் காரியத்தை முடிக்கிறேன். அப்படிப்பட்ட என்னுடைய வடிவத்தைக் கண்டு மனிதப் பெண்கள் ஆசைப்படுவார்கள் என்பதில் சந்தேகமில்லை" என்று தமக்குள் யோசித்து அரசனுடைய அனுமதியின்படி கன்னிகைகள் இருக்கும் அந்தப்புரம் சென்றார். அவ

ரைக் கண்ட இராஜகன்னிகைகள் எல்லோரும் 'இவரை நான் கலியாணம் செய்துகொள்வேன்; இவரை நான் பர்த்தாவாக வரிப்பேன்' என்று கலகஞ்செய்து கொண்டு மகரிஷியினிடம் மிகுந்த ஆசைகொண்டு எல்லாப் பெண்களும் அவரைக் கலியாணஞ் செய்து கொண்டார்கள். அப்பொழுது அந்த மகரிஷி தவசின் மகிமையால் பெரியதான அரண்மனையை உண்டு பண்ணினார். அதிலுள்ள சிரமான்கள் விலையுயர்ந்தவைகள். மேலும், அரண்மனையின் பக்கத்தில் பலவகையான தோட்டங்கள் இருக்கின்றன. அவைகளில் தெளிந்த ஜலமுள்ளவைகளும், தாமரை முதலிய பூக்களுள்ளவைகளுமான குளங்களிருக்கின்றன. அவ்விடத்திலிருக்கும் மாதர்களும், புருஷர்களும் நல்ல ஆடைகளாலும், ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிறார்கள். வந்திகள் துதிக்கிறார்கள். வண்டுகளும், மற்றுமுள்ள பறவைகளும் பாடுகின்றன. அப்படிப்பட்ட அரண்மனையில் நல்ல உடைகள், ஆபரணங்கள், சந்தனம், புஷ்பம், ஆகாரம் முதலிய போக்கியப் பொருள்களால் சந்தோஷத்தை அடைந்த அந்த ராஜகன்னிகைகளுடன் மகரிஷி கிரீடித்தார். அதனைக் கண்ட மாந்தாதாவானவர் தாம் சக்கரவர்த்தியானாலும் மஹாராஜன் என்ற கர்வத்தை விட்டுவிட்டார். இம்மாதிரி சௌபரியானவர் பலவகையான விஷயசுகங்களை அனுபவித்தும் போதுமென்ற திருப்தியை அடையவில்லை. நெய்த்துளிகளால் அக்கினிக்குத் திருப்தி உண்டாகுமா? இப்படி வெகுகாலஞ் சென்றபின் அவர் ஒருகால் தமக்கு நேர்ந்த கெடுதியைத் தெரிந்துகொண்டு பின்வருமாறு தமக்குள் யோசிக்கலானார். எப்படியெனில்—ஆச்சரியம்! தவசியாக விரதங்களை அனுட்டித்து ஜலத்தில் மூழ்கியிருந்த எனக்கு மீன்களுடைய சேர்க்கையால் நேர்ந்த கெடுதியைப் பாருங்கள். வெகு காலமாய்ச் சம்பாதிக்கப்பட்ட தவமானது குறைந்துவிட்டது. மோக்ஷத்தை அடையவேண்டுமென்ற விருப்பமுள்ளவன் கிருகஸ்தர்களுடன் சேரக்கூடாது. இந்திரியங்களை வெளியில் இருக்கும் விஷயங்களில் செலுத்தக்கூடாது. கிருகஸ்தர்களாலும் சாதுக்களாலும் சேர

லாம். நான் ஒருவனாகச் சஞ்சரித்து அனந்தனாகிய ஈசுவரனிடத்தில் சித்தத்தைச் செலுத்துவது மேலானதாகும். நான் ஜலத்தில் தவஞ்செய்யும்பொழுது ஒருவனாக இருந்தேன், மச்சத்தினுடைய சேர்க்கையால் ஐம்பது பெண்களை அடைந்தேன். இப்பொழுது ஐந்து ஆயிரம் புத்திரர்களுள்ளவனாக இருக்கிறேன். மாயையால் விஷயத்தையே புருஷார்த்தமாக நினைத்திருப்பதால் இவ்வுலகும், மேலுலகம் இவைகளுக்கு வேண்டிய கருமங்களைச்செய்து அதிலும் திருப்தி அடையவில்லை" என்று பச்சாத்தாபத்தை அடைந்து வைராக்கியத்துடன் வானப்பிரஸ்த தருமத்தை ஆசிரயித்து வனஞ்சென்றார். பர்த்தாவையே தெய்வமாகக்கொண்ட அவருடைய பத்தினிகள் அவர்பின் சென்றார்கள். பின்பு அந்த மகரிஷியானவர் அவ்விடத்தில் தவஞ்செய்து தம் முடைய ஆத்மாவை அக்னிகளுடன் பரப்பிரமத்தினிடத்தில் இலயிக்கச்செய்தார். அவருடைய பத்தினிகளும் அவருடைய மகிமையாலே அவருடைய கதியை அடைந்தார்கள். அக்கினி அணையும்பொழுது அதன் ஜ்வாலைகள் அக்கினியை அனுசரிக்கின்றனவல்லவா?

# அத்தியாயம் 7

## ஹரிச்சந்திருடைய சரிதம்

மாந்தாதாவின் புத்திரர்களுள் சிறந்தவரான அம்பரீஷர் நடுப்பிள்ளையாலும் அவருடைய பிதாமகராகிய யுவனாசுவரால் நல்ல புத்திரனாக அங்கீகரிக்கப்பட்டார். அதனால் அம்பரீஷருடைய புத்திரருக்கும் யுவனாசுவரென்று பெயர் வைக்கப்பட்டது. அவருடைய குமாரர் ஹரிதரென்பவர். ஆனதால் அம்பரீஷர், ஹரிதர் ஆகிய இவைகள் மாந்தாதாவின் சந்தானங்கள்.

2—28. மாந்தாதாவின் புத்திரராகிய புருகுற்சவர் நாகங்களுடைய ஸஹோதரியான நர்மதாவென்ற நாககன்னிகையைக் கல்யாணம் செய்துகொண்டு நாகங்களால் தூண்டப்பட்ட நர்மதையின் அபிப்பிராயப்படி

பாதாளலோகஞ் சென்றார். அவ்விடத்தில் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவர்களான கந்தருவர்களை ஸ்ரீ மகா விஷ்ணுவின் அம்சமுள்ள அந்தப் புருகுற்சவர் கொன்றார். அதனால் நாகங்கள் ஸந்தோஷத்தை அடைந்து, "இந்தக் கதையை நினைப்பவர்களுக்கு சர்ப்பங்களின் பயமில்லாமலிருக்கட்டும்" என்று வரங் கொடுத்தார்கள். அந்தப புருகுற்சவருடைய புத்திரர் திரஸதஸ்யு. அவருடைய புத்திரர் அனரண்யர். அவருடைய புத்திரர் ஹரியச்வர். அவருடைய குமாரர் அருணர். அவருடைய புத்திரர் திருபந்துரர். அவருடைய புத்திரர் சத்ய விரதரென்பவர். அவருக்கே திரிசங்குவென்றும் பெயருண்டு. அவர் குருவாகிய வஸிஷ்ட மகரிஷியின் சாபத்தால் சண்டாள சன்மத்தை அடைந்தார். அதன்பின் விசுவாமித்திரருடைய மகிமையால் சரீரத்துடன் சுவர்க்கஞ் சென்றார். அப்பொழுது மகேந்திரன் அவரைச் சுவர்க்கத்திலிருந்து கீழே தள்ளினார் விசுவாமித்ரருடைய மகிமையால் ஆகாயத்திலே நின்றார். இப்பொழுதும் ஆகாயத்தில் காணப்படுகிறார். அவருடைய புத்திரர் அரிச்சந்திரன். அவர் நிமித்தமாக விசுவாமித்திரரும், வஸிஷ்டரும் பறவையாகி அநேக வருஷ காலம் சண்டை செய்தார்கள் அவருக்கு வெகுநாள் புத்திரன் பிறக்கவில்லை. அதனால் கவலையை அடைந்திருந்தார். அப்பொழுது நாரதர் வருணனை யுபாஸிக்கும்படி ஆஞ்ஞாபித்தார். அதன்படி அரசன், "ஓ பிரபுவே! எனக்குப் புத்திரனை அனுக்ரகிக்கவேண்டும். சூரனாகிய புத்திரன் பிறந்தால் அவனையே பசுவாக வைத்து உம்மைப் பூசிக்கிறேன்" என்று பிரார்த்தித்தார். அப்படியே வருணன் அநுக்கிரகித்தார். அந்தக் குமாரனுக்கு ரோஹிதர் என்று பெயர். குழந்தை பிறந்தவுடன் வருணன் அரசனை நோக்கிப் "உமக்கு புத்திரன் பிறந்தான். அவனைப் பசுவாக வைத்துக்கொண்டு யாகஞ்செய்யும்" என்றார். அதனைக் கேட்ட அரசன், "பத்து நாளாகிவிட்டால் அந்தப் பசு சுத்தமாகும். பின்பு அதனைக்கொண்டு யாகஞ் செய்கிறேன்" என்றார். அதனைக் கேட்ட வருணன் பத்து நாள் சென்றபிறகு அரசனை நோக்கி, "பத்து நாளாகி

விட்டதே, இப்பொழுது யாகஞ்செய்யலாமே" என்றார். அப்பொழுது குழந்தைக்குப் பற்கள் முளைக்கட்டும் என்றார். அதனைக் கேட்ட வருணன் குழந்தைக்குப் பல் முளைத்தபிறகும் கேட்டார். அப்பொழுது அரசன் பல் விழட்டும் என்றார். பல் விழுந்த பிறகும் வருணன் அரசனைக் கேட்க, "திரும்பவும் பல் முளைக்கட்டும்" என்றார். அந்தக் காலத்தையும எதிர்பார்த்திருந்து வருணன் அரசனைக் கேட்டார். அப்பொழுதும் அரசன், "குழந்தைக்கு ஆயுதங்களைப் பிடிக்கும் வயது வந்த பின் சொன்னபடியே செய்வேன்" என்றார். இப்படி அரிச்சந்திரன் புத்திரனிடத்திலிருக்கும் பிரீதியினால் வருணனை ஏமாற்றிக்கொண்டுவந்தார். வருணனும் அந்தந்தக் காலத்தை எதிர்பார்த்திருந்தார். ரோஹிதர் அதனையறிந்து உயிர்தப்பிப் பிழைப்பதற்காக வில்லையெடுத்துக்கொண்டு வனஞ்சென்றார். வருணன் கோபங்கொண்டு அரிச்சந்திரனுக்கு மகோதரமென்ற வியாதியை யுண்டுபண்ணினார். அரிச்சந்திரன் மகோதர வியாதியால் உபத்திரவப்படுவதைக் கேள்விப்பட்ட ரோஹிதர் காட்டிலிருந்து நாட்டுக்குப் புறப்பட்டார். மகேந்திரன் பிராமண வேஷங்கொண்டு அவரைத் தடுத்து, தீர்த்த யாத்திரை செய்யும்படியும், அதனால் பிதாவினுடைய ரோகம் நிவர்த்தியாகுமென்றும் சொல்லி நகரத்திற்குப் போகாமலிருக்கும்படி செய்தார். அவரும் அப்படியே காட்டில் தீர்த்தயாத்திரை செய்தார். இப்படி ஒரு வருஷஞ் சென்றபின் ரோஹிதர் நகரத்தைநோக்கிப் பிரயாணப்பட்டார். அத்தருணத்திலும் பிராமண வேஷங்கொண்ட இந்திரன் முன்போலத் தடைசெய்தார். பின்னும் இரண்டாவது வருஷத்திலும், மூன்றாவது வருஷத்திலும், நான்காவது வருஷத்திலும், ஐந்தாவது வருஷத்திலும் பிராமண வேஷங்கொண்ட மகேந்திரனால் தடுக்கப்பட்டு ரோஹிதர் பட்டணத்திற்கு வரவில்லை. ஆறாவது வருஷத்தையும் வனத்தில் கழித்துவிட்டு ரோஹிதர் நகரத்திற்கு வரும் வழியில் அஜீகர்த்தரைக் கண்டு, அவருடைய நடுப்பிள்ளையாகிய சுனச்சேபனை விலைக்கு வாங்கி வந்து தமக்குப் பதிலாகப் பிதாவினிடங் கொடுத்தார்.

பின்பு அரிச்சந்திரர் சுனச்சேபனைப் பசுவாக வைத்துக் கொண்டு புருஷமேதஞ்செய்து வருணன் முதலிய தேவர்களைப் பூசித்தார். அதனால் அவருக்கு மகோதர வியாதி நிவர்த்தியாயிற்று. அந்த யாகத்தில் விசுவாமித்திரர் ஹோதாவாக இருந்தார். ஜமதக்னி அத்வர்யுவாக இருந்தார். வஸிஷ்டர் பிரமாவாக இருந்தார். அயாஸ்யர் என்பவர் உத்காதாவாக இருந்தார். அதனால் மகேந்திரன் சந்தோஷித்து, அரசனுக்கு சுவர்ணமயமான இரதத்தைக் கொடுத்தார். சுனச்சேபனுடைய மகிமையைப்பற்றிப் பின்னே (16-ம் அத்தியாயத்தில்) சொல்வோம். அப்பொழுது அரிச்சந்திரன் தமது பத்தினியுடன் சத்தியம் தவறுமலிருந்ததால் விசுவாமித்திரர் சந்தோஷித்து ஆத்மஞானத்தை யுபதேசித்தார். அரசன் விசுவாமித்திரருடைய உபதேசத்தால் மனத்தைப் பிருதிவியிலும், அதனை ஜலத்திலும், அதனை நெருப்பிலும், அதனை வாயுவிலும், அதனை ஆகாயத்திலும், அதனை அகங்காரத்திலும், அதனை மகத்தத்வத்திலும் இலயிக்கச்செய்து, அதனை ஞானசுருபியான ஆத்மாவாகத் தியானித்து, அதனால் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கொண்டு நிர்வாண ரூபமாகப் பாவித்து சகல பந்தங்களற்றவராகி, குறிப்பிட முடியாததும், ஊகிக்க முடியாததுமான சொரூபமாக ஆனார்.

---

# அத்தியாயம் 8

## சகரருடைய அசுவமேதம்

ரோகிதருடைய புத்திரர் ஹரிதர். அவருடைய புத்திரர் சம்பர். அவரால் சம்பா வென்னும் பட்டணம் உண்டுபண்ணப்பட்டது. அவருக்கு சுதேவரென்பவர் புத்திரர். அவருடைய புத்திரர் விசயர். அவருடைய புத்திரர் ருருகர். அவருடைய புத்திரர் விருகர். அவருடைய புத்திரர் பாருகர். அவர் சத்துருக்களால் வெல்லப்பட்டு, பொருளற்றவராகிப் பத்தினியுடன் காட்டுக்குச் சென்றார். அவர் வனத்திலேயே வசித்து மரணமடைந்தார். அப்பொழுது அவருடைய பத்தினி கர்ப்

பிணியாக இருந்தாள். அவள் பர்த்தாவுடன் உடன் கட்டை யேறுவதற்கு யத்தனித்தாள். அதனைக் கண்ட ஔரவர் என்ற மகரிஷி தடுத்தார். பின்பு அவள் கர்ப் பிணியாக இருப்பதைத் தெரிந்துகொண்ட ஸபத்தினி கள் அன்னத்தில் விஷத்தைக் கலந்து கொடுத்தார்கள். அந்த விஷத்துடன் குழந்தை பிறந்தது. அவருக்கு, சகரரென்று பெயர் (விஷத்துடன் கூடியவர்). அவர் சக் கரவர்த்தியானார். அவருடைய புத்திரர்களால் சாகரம் (சமுத்திரம்) வெட்டப்பட்டது. அவர் தாலசங்கர்களை யும், யவனர்களையும், சகரர்களையும், ஹைஹயர்களையும், பர்பரர்களையும ஔரவருடைய ஆஞ்ஞையால் கொல்லா மல் சிலருக்குச் சவரத்தைச் செய்தார். சிலருக்கு மீசையை மாத்திரம் வைத்திருந்தார். சிலரை உத்தரீய மில்லாதவர்களாகவும், சிலரை இடுப்பு வஸ்திர மில்லா தவர்களாகவும செய்தார். பின்னுமவர் ஔரவருடைய உத்தரவின்படி அசுவமேதங்களைச் செய்து சகல தேவ சுரூபியும், தேவாகளுக்கு மேலானவரும், எல்லோ ருக்கும் அந்தராத்மாவுமாகிய ஸ்ரீமந் நாராயணனைப் பூசித்தார். அவருடைய யாகத்தில் யாகக்குதிரையை மகேந்திரன் அபகரித்தார். அவருடைய இரண்டாவது பத்தினியாகிய சுமதியின் புத்திரர்கள் குதிரையைத் தேடிச் சென்று பூமியை வெட்டினார்கள். அவ்விடத்தில் ஈசான திக்கில் கபில மகரிஷியின் சமீபத்திலிருக்கும் குதிரையைக் கண்டார்கள். மேலுமவர்கள், "குதிரை யைத் திருடினவன் இவன்தான்; ஒன்றையும் அறியாத வன்போல் கண்களை மூடிக்கொண்டிருக்கிறான்; இவ னைக் கொல்லுங்கள்" என்று சொல்லிக்கொண்டு ஆயு தங்களுடன் ஓடிவந்தார்கள். அப்பொழுது மகரிஷி கண் களை விழித்தார். அந்த அறுபது ஆயிரம் சகர புத்திரர் கள் நல்ல சுபாவமுள்ளவர்களானலும் அவர்களுடைய மனம மகேந்திரனால் மாற்றப்பட்டது. அதனால் கபிலரி டம் அபராதஞ் செய்தார்கள். அப்பொழுது அவர்களு டைய சரீரத்தில் அக்கினி யுண்டாயிற்று. அதனால் எரிக்கப்பட்டு அவர்கள் சாம்பலானார்கள். 'மகரிஷியின் கோபாக்கினியால் எரிக்கப்பட்டார்கள்' என்று சிலர் சொல்லுகிறார்கள். அது சரியல்ல. கபில மகரிஷி சத்வ

குணம்பொருந்தியவர்; சுத்தமான சித்தமுள்ளவர்; அவ ரிடத்தில் தமோகுணத்தால் ஏற்படக்கூடிய கோபத் திற்கு இடமிருக்குமா? ஆகாயத்தில் தூளி சம்பந்திக் குமா? (காலால் அடிக்கப்பட்ட பூமியிலிருந்து கிளம்பிய தூளி ஆகாயத்திலிருப்பதுபோல எப்படித் தோன்று கிறதோ, அப்படி சகர புத்திரர்களுடைய அபரா தம் மகரிஷியினிடத்திலிருப்பதாகத் தோற்றுகிறது) மேலும் அந்த மகரிஷி சாங்கியமாகிய கெட்டியான கப்பலை யுண்டுபண்ணியிருக்கிறார். முமுட்சுக்கள் தாண்ட முடியாத சமசார சமுத்திரத்தை, அதனைக்கொண்டு தாண்டுகிறார்கள். அப்படிப்பட்ட மகரிஷிக்குப் பேத புத்தியுண்டாகுமா?

15—27. சகரருடைய முதல் பத்தினியான கேசினி யென்பவளுடைய புத்திரர் அஸமஞ்சஸரென்பவர். அவ ருடைய புத்திரர் அம்சுமான். அவர் சகரருக்கு அனு கூலத்தைச் செய்பவர். அஸமஞ்சஸரென்பவர் முன் ஜன்மத்தில் யோகியாகவிருந்தும் அது பூர்த்தியாகாமல் மறுஜன்மத்தை யடைந்தவர்; அவர் பூர்வஜன்ம ஞாபக முள்ளவர்; அவர் ஜனங்களுடைய சேர்க்கையின்றி, காட் டிற்குப் போக விரும்பிப் பட்டணத்தில் வீதியில் விளை யாடும் குழந்தைகளைச் சரயூ நதியின் ஜலத்தில் எறிந் தார். இன்னும் பந்துக்களுக்கு விரோதமானதையே செய்துவந்தார். அதனால் தகப்பனாராகிய சகரர் புத் திர சிநேகத்தையும் விட்டு, அவரைப் பட்டணத்தை விட்டுத் துரத்தினார். அப்பொழுது அவரால் சரயூ நதி யில் போடப்பட்ட குழந்தைகளைத் தம்முடைய யோக பலத்தால் பிழைக்கச்செய்து அவரவர்களுடைய வீட்டிற்கு அனுப்பிவிட்டு வனஞ்சென்றார். அதனைக் கண்ட அயோத்தியில் வசிக்கும் ஜனங்கள் ஆச்சரி யத்தை அடைந்தார்கள். அரசன் பச்சாத்தாபத்தை அடைந்தார். பின்பு அம்சுமான் சகரருடைய உத்தர வின்படியாகக் குதிரையைத் தேடிக்கொண்டு தம் முடைய சிறிய தகப்பனார்களால் வெட்டப்பட்ட மார்க்க மாகச் சென்றார். அவ்விடத்தில் சாம்பல் மேட்டையும், குதிரையையும், ஸமீபத்தில் கபில மகரிஷியையும் கண்

டார். பின்னும் அவர் மகரிஷியை நமஸ்கரித்து, சாவதான மனமுள்ளவராகி, அஞ்சலிபந்தஞ் செய்து கொண்டு, "ஓ பகவன்! பிரமதேவராலும் பரமாத்மாவாகிய உம்முடைய சொரூபத்தைச் சமாதியாலும், யுக்திகளாலும் அறியமுடியவில்லை. மற்றவர்களால் எப்படி அறியமுடியும்? ஆனதால் அந்தப் பிரமதேவருடைய மனம், சரீரம், புத்தி ஆகிய இவைகளால் சிருஷ்டிக்கப் பட்ட அஞ்ஞர்களான எங்களால் உம்முடைய சுரூபம் எப்படி அறியமுடியும்? உம்முடைய மாயையால் மோகித்த சரீரிகள் (பிராணிகள்) முக்குணங்களையே பிரதானமாக உடையவர்களாகையால் அவர் நனவு கனவு முதலிய அவஸ்தைகளில் விஷயங்களைப் பார்க்கிறார்கள். வெளியிலிருக்கும் விஷயங்களிலேயே அவர்களுடைய புத்தி பிரவர்த்திக்கிறது; அல்லது தமஸ்ஸைப் பார்க்கிறார்கள். தங்களிடத்திலிருக்கும் நிர்க்குணராகிய உமமைத் தெரிந்துகொள்ளவில்லை. இயற்கையில் மாயாகுணங்களற்றவர்களும், பேதமற்றவர்களும், மோகமற்றவர்களுமான சனகர் முதலியவர்களால் அறியக்கூடியவரும, ஞானகனருமாகிய உம்மை மூடனாகிய நான் எப்படித் தெரிந்துகொள்வேன்?! ஓ சாந்தரே! மாயையின் குணங்களால் சுகத்தைப் படைப்பது முதலியவைகளைப் பிரமா முதலியவர்களின் உருவாகவிருந்து செய்பவரும், நாமரூபங்களற்றவரும், காரியகாரணங்களுக்கு மேலானவரும், ஞானத்தை யுபதேசிப்பதற்காகவே மகரிஷி வடிவத்தைத் தரித்தவரும், புராண புருஷருமாகிய உமக்கு நமஸ்காரம். உம்முடைய மாயையால் செய்யப்பட்ட உலகத்தில் ஜனங்கள் வீடு முதலியவைகளைப் பொருளாக நினைத்து, காமம், உலோபம், மோகம் ஈரிஷை ஆகிய இவைகளுள்ள மனமுள்ளவர்களாகிப் பிரமிக்கிறார்கள். ஓ சகல பிராணிகளின் சுரூபியாகவிருப்பவரே! காமம், கருமம், இந்திரியம், மனம் ஆகிய இவைகளின் சுரூபமான கெட்டியான மோகபாசமானது உம்மைத் தரிசித்தால் அறுக்கப்பட்டது" என்று துதித்தார்.

28—31. இம்மாதிரி தோத்திரஞ்செய்த அம்சுமானை நோக்கிக், கபில மகரிஷி, "உம்முடைய பிதாமகருடைய

யாகக் குதிரையைக்கொண்டுபோய் யாகத்தை முடியும். உம்முடைய சிறிய தகப்பனார்களுக்குக் கங்கைநீரால் நல்ல கதியுண்டாகுமே யல்லாமல் மற்றவையால் உண்டாகாது" என்று அனுக்கிரகித்தார். அதனைக் கேட்ட அம்சுமான் அவரை வலஞ்செய்து நமஸ்கரித்து அந்தக் குதிரையை ஓட்டிக்கொண்டு அயோத்யா நகரஞ் சேர்ந்தார். சகரர் அந்தப் பசுவைக்கொண்டு யாகத்தை முடித்தார். பின்னும் அவர் அம்சுமானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து ஔர்வ மகரிஷியால் உபதேசிக்கப் பட்ட உபாயத்தால் உத்தம கதியை அடைந்தார்.

# அத்தியாயம் 9

## பகீரதர் கங்கையைப் பூமிக்கு வரவழைத்தது

அம்சுமான் கங்கையைப் பூமியில் வரவழைப்பதற்காக வெகுகாலம் தவஞ்செய்தார். அப்படியும் எண்ணம் நிறைவேறாமல் மரணமடைந்தார்; அதன்பின் அவருடைய புத்திரராகிய திலீபரென்பவர் தம்முடைய பிதாவைப்போலவே தவஞ்செய்தும் கங்கையைக் கொண்டு வர முடியாமல் காலஞ்சென்றார். அவருடைய புத்திரராகிய பகீரதர் மிகவும் கடுமையாகத் தவஞ்செய்தார். அப்பொழுது கங்கா தேவியானவள் அரசனுக்குப் பிரத்யட்சமாகி, "உமக்கு இஷ்டமான வரத்தைக் கொடுக்கிறேன்" என்றாள். அதனைக் கேட்ட அரசன் வணக்கமாகத் தம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். அதனைக் கேட்டுக் கங்காதேவி அரசனை நோக்கி, "நான் ஆகாயத்திலிருந்து பூமியில் விழுந்தால் என்னுடைய ஜலவேகத்தைப் பூமியில் சகிக்கமுடியாது. பூமியைப் பேதித்துப் பாதாலம் போய்விடுவேன். ஆனதால் என்னைத் தாங்கிவிடவேண்டும். யார் என்னைத் தாங்குவார்கள்? மேலும், எனக்குப் பூமிக்கு வர இஷ்டமில்லை. பூமிக்கு வருவேனானால் ஜனங்கள் தங்கள் பாபத்தை என்னிடங் கொடுப்பார்கள். அந்தப் பாபங்களை நான் எப்படி நிவர்த்தித்துக்கொள்வேன்? அதனை யோசித்துச்

சொல்லும்" என்றாள். அதனைக் கேட்ட அரசன் கங்கையை நோக்கி, "சாந்தர்களும், லோகத்தைப் பரிசுத்தப்படுத்துகிறவர்களும், தார்மிஷ்டர்களுமான சாதுக்கள் உன்னுடைய ஜலத்தில் ஸ்நானஞ் செய்வார்கள். அவர்களுடைய சரீரம் பட்டால் உன்னுடைய பாபம் நிவர்த்தியாய்விடும். அவர்களுடைய சரீரத்தில் பாபங்களை நாசஞ் செய்பவரான ஸ்ரீமந்நாராயணன் வசிக்கிறார். பின்னும் எவர் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருக்கிறாரோ, நூல்களில் ஆடைபோல் எவரிடத்தில் இந்தச் சகத்தானது ஓதப்ரோதமாக இருக்கிறதோ, அந்தப் பகவானாகிய உருத்திரன் உன்னுடைய வேகத்தைத் தாங்குவார்" என்று சொன்னார்.

8—16. அதனைக் கேட்ட கங்கை, அரசனை நோக்கி "என்னுடைய ஜலத்தைத் தரிப்பதற்காக மகேசுவரனைப் பிரார்த்தியும்" என்றாள். அதனைக் கேட்ட அரசன பரமசிவனைக் குறித்துத் தவஞ்செய்தார். சிறிது காலத்தில் உலகத்திற்கு க்ஷேமத்தைச் செய்யும் பரமசிவன் அவரிடத்தில் சந்தோஷமடைந்து கங்கையைத் தாங்குகிறதாக ஒப்புக்கொண்டார். பின்னுமவர் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பாதத்தால் சுத்தமான ஜலமுள்ள கங்கையைத் தாங்கினார். அரசர்களுக்குச் சிறந்தவராகிய பகீரதர் தம்முடைய பிதிருக்களின் சரீரம் எவ்விடத்தில் சாம்பலாக இருக்கிறதோ, அவ்விடத்திற்கு உலகத்தைப் பரிசுத்தப்படுத்தும் கங்கையை அழைத்துப் போனார். கங்கையானவள் பகீரதருடைய இரதத்தின் பின் சென்று சகர புத்திரர்களுடைய சாம்பலை நனைத்தாள். அதனால் சகர புத்திரர்கள் பிராமணருக்கு அபராதஞ் செய்ததாகிய பாபத்திலிருந்து நிவர்த்தியடைந்து சுவர்க்கஞ்சென்றார்கள். சரீரத்தின் சாம்பல் கங்கைநீரில் நனைக்கப்பட்டவுடன் அவர்களுக்குச் சுவர்க்கம் கிடைத்ததென்றால் அந்த ஜலத்தில் சிரத்தையுடன் ஸ்நானஞ்செய்து சேவிக்கும் ஜனங்களுடைய மகிமையைப்பற்றியுஞ் சொல்லவேண்டுமோ? முனிகள் எந்தப் பகவானிடத்தில் சிரத்தையுடன் மனத்தைச் செலுத்தி, விடமுடியாத சரீர சம்பந்தத்தை விட்டு, பிரமசொரூ

பத்தை அடைந்தார்களோ, அந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பாதாரவிந்தத்திலிருந்து உண்டான கங்கைக்கு மேற் சொல்லியபடியுள்ள மகிமையிருப்பது ஆச்சரியமா?

17—20. பகீரதருடைய குமாரர் சுருதரென்பவர். அவருடைய புத்திரர் நாபர்வார். அவருடைய புத்திரர் சிந்துத்வீபர். அவருடைய புத்திரர் அயுதாயுஸ் என்பவர். அவருடைய குமாரர் ரிதுபர்ணரென்பர். அவரே நளமகாராஜனுக்கு மித்திரர். அவர் அக்ஷஹிருதயத்தை நளனுக்கு உபதேசித்து அசுவஹிருதய வித்தையைப் பெற்றுக்கொண்டார். அவருடைய புத்திரர் சர்வகாமர். அவருடைய புத்திரர் சுதாச ரென்பவர். அவரே தமயந்தியின் கணவர். அவரை மித்திசகரென்றும் சொல்வதுண்டு. கல்மாஷபாதரென்றும் அவருக்குப் பெயருண்டு. அவர் வஸிஷ்ட மகரிஷியின் சாபத்தால் இராக்கத ஜன்மத்தை அடைந்ததுமன்றி, தம்முடைய செய்கையால் அபுத்திரனாக விருந்தார் என்று சுகர் சொல்லப் பரீக்ஷித்து மகாராஜன் மகரிஷியை நோக்கி, "சௌதாசரை வஸிஷ்டர் எதற்காகச் சபித்தார்? அந்த விஷயம் எனக்குச் சொல்லக்கூடியதானால் சொல்லவேண்டும்" என்றார்.

21—33. அதனைக் கேட்ட சுகர் பரீக்ஷித்தைநோக்கி, "சௌதாசரென்பவர் வேட்டைக்காக வனஞ்சென்ற பொழுது ஒரு ராக்ஷதனைக் கொன்றார். அவனுடைய சகோதரன் மிகவும் துக்கித்து, அரசனுடைய பாகசாலை சென்றான். ஒருகால் வஸிஷ்டர் அரசனை நோக்கி, 'எனக்கு அன்னங்கொடும்' என்று யாசிக்க, அரசன் சுத்தமான அன்னத்தைக் கொண்டுவரும்படி சமையல் காரர்களுக்கு உத்தரவுசெய்தார். அப்பொழுது அந்த ராக்ஷதன மானுட மாமிசத்தைக் கொண்டுவந்து வஸிஷ்டருக்குப் பரிமாறினன். அதனைக் கண்ட வஸிஷ்டர் புசிக்கக்கூடாததான மாமிசத்தைப் பரிமாறினதால் அரசனிடம் கோபங்கொண்டு அரசனை ராக்ஷதனாகும்படி சபித்தார். பின்பு, "இது ராக்ஷதனால் செய்யப்பட்டது. அரசனிடம் குற்றமில்லையென்று தெரிந்துகொண்டு பன்னிரண்டு வருடங்கள் ராக்ஷதனாகவிருந்து, பின்பு

உண்மையுருவத்தை அடைவாய்" என்று அனுக்கிரகித்தார். அதனைக் கேட்ட அரசன் ஆசாரியரிடத்தில் கோபங்கொண்டு அவரைச் சபிப்பதற்காகக் கையில் ஜலத்தை யெடுத்தார். அதனைக் கண்ட அவருடைய பத்தினியாகிய மதயந்தி யென்பவள், 'குருவைச் சபிக்கக் கூடாது' என்று தடுத்தாள். அரசன் ஆகாயம், பூமி, திக்குகள் எல்லாவற்றிலும் சீவர்களிருப்பதைப் பார்த்து அந்த ஜலத்தைத் தம்முடைய காலில் விட்டார். அது சாப ஜலமாகையால் பாதங்களைக் கறுக்கச்செய்தது. அதனால் அவருக்குக் கல்மாஷபாதரென்ற பெயருண்டாயிற்று. பின்னுமவர் குரு சாபத்தால் ராக்ஷதஜன்மத்தை அடைந்தார். அவர் காட்டில் ராக்ஷதனாகிச் சஞ்சரிக்கும் பொழுது கிரீடித்துக்கொண்டிருக்கும் ஒரு மகரிஷியையும் அவர் பத்தினியையும் கண்டார். மிகுந்த பசியினால் அந்த மகரிஷியைப் புசிக்க யத்தனித்தார். அதனைக் கண்ட ரிஷிபத்தினி ராக்ஷதனை நோக்கி, "நீர் ராக்ஷதஜாதியில் பிறந்தவரல்ல. இக்ஷ்வாகுவின் குலத்தில் ஜனித்த மகா ரதர். மதயந்தியின் பர்த்தாவல்லவா? அதர்மத்தைச் செய்யத்தகுந்தவரல்ல. புத்திரன் பிறக்கவேண்டி நாங்கள் கிரீடிக்கிறோம். அந்த ரதி முடிவாகிறதற்குள் என்னுடைய பர்த்தாவை நீர் கொல்வது சரியல்ல. ஓ அரசனே! இந்த மனித தேகமானது புருடனுக்குச் சகல புருடார்த்தங்களையும் கொடுக்கக்கூடியது. ஆனதால் இந்தச் சரீரத்தை நாசஞ் செய்தால் சகல புருடார்த்தங்களையும் கெடுத்ததாக ஆகிறது. இந்தப் பிராமணர் வித்வான்; தவசி; நல்ல சுபாவமுள்ளவர்; நற்குணம் பொருந்தியவர்; சகல பிராணிகளிடத்திலும் அந்தரியாமியாக மறைந்திருக்கும் மகாபுருடனென்ற பரப்பிரமத்தை ஆராதிக்க விரும்பியவர்; நீர் அரசர்களுக்குட் சிறந்தவர். ஆனதால் பிரம ரிஷியை நீர் கொல்வது உசிதமா? தகப்பன் பிள்ளையைக் கொல்லலாமா? சாதுசம்மதராகிய நீர் சாதுவும், பாபமற்றவரும், சுரோத்திரியரும், பிரம்மிஷ்டருமான இந்தப் பிராமணரை எப்படிக் கொல்லலாம்? இது பசுவைக் கொல்வது போலல்லவா? இவரை நீர் புசிப்பதானால் முந்தி என்னைப் புசியும்.

அவரை விட்டுப் பிரிந்து ஒரு க்ஷணமாகிலும் என்னுல் ஜீவித் திருக்கமுடியாது. அப்படி ஜீவித்தாலும் மரண மடைந்தவளுக்குச் சமமானவளேயாம்'' என்று தீன மாகச் சொல்லி அழுதாள்.

34—50. அதனைக் கேட்டும் சௌதாசர் புலி பசுவைப் புசிப்பதுபோலச் சாபத்தால் புத்தி மயக்கமுள்ளவராகி அந்தப் பிராமணனைப் புசித்தார். அப்பொழுது தன்னிடத்தில் கருப்பாதானத்தைச் செய்யும் கணவரை ராக்ஷதன் புசித்தபடியால் ரிஷி பத்தினி மிகுந்த துக்கத்தை அடைந்து கோபங்கொண்டு, 'குற்றமற்றவராகிய என்னுடைய பதியை ரதிகாலத்தில் நீர் புசித்தபடியால் மைதுனத்தாலேயே உமக்கு மரணமுண்டாகும்'' என்று அரசனைச் சபித்தாள். பின்னும் அவள் பர்த்தாவினுடைய லோகத்தை அடைய விரும்பியவளாகி, அவருடைய எலும்புகளை அக்கினியில் தகித்து உடன் கட்டையேறி, தன் பதியினுடைய லோகத்தை அடைந்தாள். பன்னிரண்டு வருஷங்கள் சென்றபின் சாபம் நீங்கி ராஜசரீரத்தை அடைந்த சௌதாசன் ஸ்திரீயுடன் மைதுனத்திற்கு ஆரம்பித்தார். ரிஷி பத்தினியின் சாபத்தை நினைத்து மதயந்தி தடுத்தாள். அதுமுதல் அரசன் ஸ்திரீ சுகத்தை மறுத்தார். அப்பொழுது அரசனுடைய அனுமதியினால் வஸிஷ்டர் மதயந்தியினிடத்தில் பிரவேசித்து, புத்திரனை யுண்டுபண்ணினார். அவள் கருப்பிணியாகி, ஏழு வருடங்களாகியும் பிரசவிக்கவில்லை. அதனால் அவள் கல்லால் வயிற்றில் அடித்துக்கொண்டாள். அதனால் பிறந்த குழந்தைக்கு அச்மகனென்று பெயர். அவருடைய புத்திரர் மூலகர். பரசுராமனால் க்ஷத்திரியர்கள் கொல்லப்பட்டபொழுது ஸ்திரீகள் இந்தக் குழந்தையைக் காப்பாற்றியபடியால் நாரீகவசரென்றும், குலத்திற்கு மூலாரகையால் மூலகரென்றும் பெயருண்டாயிற்று. அவருடைய புத்திரர் விச்வசகரென்பவர். அவருடைய புத்திரர் கட்வாங்கர். அவர் சக்கரவர்த்தியாக இருந்தார். அவர் தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டு, சுவர்க்கஞ்சென்று தேவ விரோதிகளான அசுரர்களைக் கொன்றார். பின்பு அவர் தம்

முடைய ஆயுளில் ஒரு முகூர்த்த காலந்தான் பாக்கி இருக்கிறதென்று தெரிந்துகொண்டு தம்முடைய நகரத்திற்கு வந்து, "எனக்குப் பிராணனைக்காட்டிலும் பிராமணர்களிடத்தில் விசேஷப் பிரீதி. அப்படியே குலதெய்வமாகிய பகவானிடத்தில் அதிகப் பக்தியிருக்கிறது. புத்திரன், இராஜ்யம், சம்பத்து,பூமி, மிக்க பிரியமுள்ள களத்திரம் இவைகளில் அதிகப் பிரியமில்லை. பாலியத்திலும் என்னுடைய மனம் அற்பமான விஷயங்களில் ரமிக்கும் வழக்கமில்லை. உத்தமசுலோகராகிய பகவானைவிட வேறு பொருள் இருப்பதாக நான் நினைக்கவில்லை. தேவர்கள் இஷ்டமான வரத்தைக் கொடுக்கிறோமென்று சொன்னார்கள். நான் ஒன்றையும் விரும்பவில்லை. தேவர்களுடைய இந்திரியங்களும், புத்தியும் விஷயத்தில் பிரவர்த்தித்திருப்பதால் அவர்கள் ஹ்ருதயாகாசத்தில் வசிக்கும் ஆத்மாவைத் தெரிந்து கொள்ளவில்லை. அந்தப் பகவானை மனிதர்களால் அறியமுடியுமா? ஆனதால் விஷயங்கள் ஈசுவரனுடைய மாயையால் செய்யப்பட்டவை; கந்தருவ நகரம் போன்றவை; அவைகளில் வெகு காலமாக அபிமானமுண்டாகியிருக்கிறது. அதனை விட்டு நான் பிரமசுரூபத்தை அடைகிறேன்" என்று நிச்சயித்து அஞ்ஞானத்தால் ஏற்படும் சங்கற்பங்களை யொழித்து ஆத்மசொரூபியாக ஆனார். அந்த நிலைமை எப்படிப்பட்டதென்றால்—எது பிரமமோ, எது மேலானதோ, எது சூக்குமமோ, எது சூனியமில்லாததோ, எது மனம் முதலியவைகளுக்கு அவிஷயமாக இருப்பதால் சூன்யம் போலக் கற்பிக்கப்பட்டதோ, அதுவே ஆத்ம சுரூபம். அதனையே பக்தர்கள் பகவானாகிய வாசுதேவரென்று சொல்லுகிறார்கள்.

# அத்தியாயம் 10

## ஸ்ரீராம சரிதம்

கட்வாங்கருடைய புத்திரர் தீர்க்கபாஹுவென்பவர். அவருடைய புத்திரர் இரகுவென்பவர். அவர் மிக்க கீர்த்தியுள்ளவர். அவருடைய புத்திரர் அஜரென்பவர். அவருடைய புத்திரர் தசரதர். பிரமசொரூபியும், பகவானுமாகிய ஸ்ரீமகா விஷ்ணுவானவர் தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டு ஸ்ரீ ராமன், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் என்ற திவ்ய நாமதேயங்களுடன் தசரதருக்குப் புத்திரர்களாக அவதரித்தார். அந்த ஸ்ரீ ராமனுடைய சரிதத்தை ஆத்ம தத்துவங்களை அறிந்த வால்மீகி முதலிய மகரிஷிகள் விஸ்தாரமாக வர்ணித்திருக்கிறார்கள். ஸீதையின் பதியாகிய அந்த ஸ்ரீ ராமனுடைய சரிதத்தைப் பல தடவை நீர் கேட்டிருக்கிறீர். அந்த ஸ்ரீ ராமன் தசரதருடைய சத்யவாக்யத்தைப் பரிபாலிப்பதற்காக இராஜ்யத்தை விட்டு வனஞ் சென்றார். அவருடைய பாதங்கள் தாமரை போல் மிருதுவானவைகள்; ஸீதையின் கையினாலும் பிடிக்கக்கூடாதவைகள். (அவ்வளவு மிருதுவானவை என்று கருத்து) அப்படிப்பட்ட காலால் காட்டில் சஞ்சரித்தார். மேலுமவர் வனத்தில் சூர்ப்பணகை என்ற ராக்ஷஸியின் சரீரத்தை விகாரப்படுத்தினார். (காதுகளையும் மூக்கையும் அறுத்தார்.) பின்பு ஸீதையை விட்டுப் பிரிந்து வனத்தில் அலைந்தார். அப்பொழுது லக்ஷ்மணரும், ஸுக்ரீவரும ஸ்ரீராமனுக்கு சமாதான வார்த்தைகளைச் சொல்லி, வழிநடந்து வருவது முதலியவைகளாலுண்டான சிரமத்தைப் போக்கினார்கள். அதன் பின் ஸீதையை விட்டுப் பிரிந்ததால் புருவநெரித்தலுடன் மிக்வும் கோபங்கொண்டார். அதனைக் கண்டு சமுத்திரராஜன் பயந்தார். பிறகு சமுத்திரத்தில் அணை கட்டினார். பின்னும் அவர் துஷ்டர்களான இராவணன் முதலிய ராக்ஷதர்களைக் கொன்றார். அப்படிப்பட்ட பகவான் நம்மைக் காப்பாற்றட்டும்.

5—56. அந்தத் தசரதருடைய புத்திரராகிய ஸ்ரீராமன் விசுவாமித்திர மகரிஷியின் ஆசிரமஞ் சென்று அவருடைய யாகத்திற்கு விக்கினஞ்செய்யும் மாரீசன் முதலிய ராக்ஷதர்களை லக்ஷ்மணர் பார்த்திருக்கும் பொழுது கொன்று யாகத்தைக் காப்பாற்றினார். மேலும், அந்தப் பகவான் மிதிலா நகரஞ்சென்று ஜனகருடைய கிருகத்திலிருந்த சிறந்த வில்லைப் பார்க்க விரும்பினார். அப்பொழுது ஜனகருடைய ஆஞ்ஞையால் முந்நூறு மனிதர்கள் அதனை யெடுத்துவந்தார்கள். ஸ்ரீராமசந்திரன் அநேகம் சிறந்த வீரர்கள் முன்பாகக் கெட்டியான பரமசிவனுடைய வில்லை யெடுத்து, குட்டியானை கரும்பை முறித்தாற்போல் நாண்கயிற்றைக் கட்டி இழுத்து நடுவில் ஒடித்தார். அதனால் ஸீதையென்ற கன்னியா ரத்தினத்தை விவாகஞ்செய்துகொண்டார். அவள் பகவானுடைய மார்பிலிருக்கும் லக்ஷ்மிதேவியின் அம்சம். பகவானுடைய உருவத்திற்குத் தகுதியான உருவமுள்ளவள்; ஸ்ரீராமனுடைய குணம் போன்ற குணங்களுள்ளவள்; மேலும் சுபாவத்திலும், வயதிலும் பகவானுக்கு ஒத்தவள். அந்த உத்தமியான பத்தினியுடன் தம்முடைய நகரத்தை நோக்கிப் புறப்பட்டார். வழியில் பரசுராமனைச் சந்தித்தார். அவர் இருபத்தொரு தடவை க்ஷத்திரியர்களைக் கொன்ற மகா பலசாலி. அவரை ஸ்ரீராமன் ஜயித்தார். அயோத்தியா நகரம் வந்து ஸீதையுடன் சுகமாகக் காலத்தைக் கழித்தார். அப்பொழுது தசரதர் தம்முடைய மூத்த குமாரராகிய ஸ்ரீராமனுக்கு ராஜ்யத்தைக் கொடுப்பதாக நிச்சயித்து, பட்டாபிஷேகஞ்செய்ய முயன்றார். அந்தச் சமயத்தில் கைகேயி என்ற அரசனுடைய பத்தினி தசரதரை நோக்கி, "முந்தி எனக்கு உம்மால் கொடுக்கப்பட்டு, சமயத்தில் பெற்றுக்கொள்வதாக உம்மிடத்தில் வைக்கப்பட்டவைகளான வரங்களைக் கொடுக்க வேண்டும். என்னுடைய புத்திரனாகிய பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யும். இராமனைக் காட்டிற்கு அனுப்பும்" என்று நிர்ப்பந்தித்தாள். தசரதர் இராமனைக் காட்டிற்கு அனுப்ப இஷ்டமில்லாதவராகி, சத்தியம் தவறுவதிலும் மனமில்லாமல் கஷ்டப்பட்டார். அதனைக்

கண்ட ஸ்ரீராமன் தசரதரைச் சத்தியவாதியாகச் செய்வதற்காகக் கைகேயின் ஆஞ்ஞையைச் சிரசால் வகித்து இராஜ்ய சம்பத்தையும், மித்திரர்களையும், பந்துக்களையும், தம்முடைய மேலான அரண்மனையையும் விட்டு, பத்னியான ஸீதையுடன் காட்டிற்குச் சென்றார். அது விஷயங்களில் ஆசையற்ற யோகியானவன் பிராணனிடத்திலும் அபிமானத்தை விடுவதுபோலிருந்தது. இப்படி வனஞ்சென்று ஒவ்வொரு காட்டிலும் சஞ்சரித்து, பஞ்சவடியென்ற விடத்தில் ஆச்சிரமங் கட்டிக்கொண்டு லக்ஷ்மணனுடனும், ஸீதையுடனும் வசித்தார். அப்பொழுது இராவணனுடைய சகோதரியான சூர்ப்பனகை என்பவள் ஸ்ரீராமனைக் கல்யாணஞ் செய்து கொள்ள விரும்பி, ஸீதையைத் தின்பதற்கு முயன்றாள். அதனைக் கண்ட ஸ்ரீஇராமன் லக்ஷ்மணரைக் கொண்டு, அவளுடைய காது மூக்குகளை அறுத்து இவளை விகாரப்படுத்தினார். அதனால் கோபங் கொண்டு யுத்தத்திற்கு வந்த கரன், தூஷணன், திரிசிரஸ் முதலிய பதினான்கு ஆயிரம் ராக்ஷத சைனியங்களைத் தாம ஒருவராகக் கோதண்டத்தைக் கையிலெடுத்துக் கொன்றார். இப்படி வனத்தில் சிரமப்பட்டு வாசஞ்செய்தார். பின்பு சூர்ப்பனகை இலங்கை நகரஞ் சென்று இராவணனிடத்தில் கரன் முதலியவர்களுடைய நாசத்தைத் தெரிவித்ததுமன்றி ஸீதையின் அழகைப்பற்றியும் வருணித்தாள். அதனைக் கேட்ட இராவணனுக்கு ஸீதையினிடத்தில் ஆசையுண்டாயிற்று. அதனால் இராவணன் மன்மத தாபத்தையடைந்தான். பின்பு இராவணன் இராம லக்ஷ்மணர்களை ஆசிரமத்தைவிட்டு வெளிப்படுத்துவதற்காக மாரீசனை அனுப்பினான். அவன் மான் வேஷம் தரித்து ஸீதையின் முன் விளையாடினான். அதனைப் பிடிப்பதற்காக ஸ்ரீராமன் அவன்பின் சென்று பரமசிவன் தக்ஷனைக் கொன்றதுபோல், அந்த மானைக் கொன்றார். ஸ்ரீராமன் ஆசிரமத்திலில்லாத சமயம் பார்த்து ராக்ஷதனாகிய இராவணன் ஸீதையை பலாத்காரமாகத் தூக்கிக் கொண்டு இலங்கா நகரஞ் சென்றான். பின்பு ஸ்ரீராமன் ஸீதையை விட்டுப் பிரிந்து, தம்முடைய சகோதரனாகிய லக்ஷ்மணருடன் மிகவும் பிரலாபித்து, 'ஸ்திரீகளிடத்தில்

மிகுந்த ஆசை வைத்தவர்கள் இம்மாதிரி துக்கப்படு வார்கள்' என்று ஜனங்களுக்குப் புத்தியைப் புகட்டினார். பின்னும் அவர் தமக்காக இராவணனுடன் யுத்தஞ்செய் தவராகிய ஜடாயுவிற்குத் தகனக்கிரியையைச் செய்து ஸீதையைத் தேடி வனத்தில் சஞ்சரித்தார். அப் பொழுது கபந்தனென்ற ராக்ஷஸனை வதஞ்செய்தார். பிறகு ஸுக்ரீவனென்ற வானரனுடன் சிநேகஞ் செய்து கொண்டு, அவன் முகமாக ஸீதையை இராவணன் அபக ரித்தான் என்பதைத் தெரிந்துகொண்டு ஸுக்ரீவருக் காக அவருடைய சகோதரராகிய வாலியைச் சங்கரித் தார். பின்பு ஸுக்ரீவருக்குக் கிஷ்கிந்தை அரசைக் கொடுத்து வானரர்களை ஸீதையைத் தேடும்படி சகல திக்குகளிலும் அனுப்பினார். அவர்களைக் கொண்டு ஸீதை யிருக்குமிடத்தைத் தெரிந்துகொண்டு அநேக வானர சைனியங்களுடன் சமுத்திரக்கரை சேர்ந்தார். சமுத்திரத்தில் அணை கட்டுவதற்காக ஸ்ரீராமன் பிரம தேவராலும், பரமசிவனாலும் பூசிக்கப்பட்ட பாதங் களுள்ளவரானாலும் சமுத்திரத்தைச் சரணமடைந்தார். அப்படியும் சமுத்திர ராஜன் பிரத்தியட்சமாகாதிருந்த படியால் ஸ்ரீ ராமன் மிகுந்த கோபத்தை வரவழைத்துக் கொண்டார். அதனால் அவருடைய கண்கள் சிவந்தன. அப்படிப்பட்ட கண்களால் சமுத்திரத் தைப் பார்த்தார். அதனால் சமுத்திரம் பயந்தது. அதிலுள்ள முதலைகளும் மகரங்களும் கலங்கின; சத் தம் அடங்கியது. அப்பொழுது சமுத்திரராஜன் உண்மை யுருவத்துடன் பூஜாதிரவ்யங்களை யெடுத்து வந்து ஸ்ரீ ராமனுடைய பாதாரவிந்தத்தில் சமர்ப்பித்து அவரை நோக்கி, "ஓ பிரபுவே! நீர் கூடஸ்தர்; ஆதி புருஷர்; ஜகத்திற்கு அதிபதி! அப்படிப்பட்ட உம் முடைய மகிமையை மூடர்களான எங்களால் அறியமுடி யுமா? உம்முடைய சத்வகுணத்திலிருந்து தேவர்களும், ரஜோகுணத்திலிருந்து பிரஜாபதிகளும், கோபத்தி லிருந்து பூதபதிகளும் உண்டானார்கள். ஆனதால் நீர் சகல குணங்களுக்கும் அதிபதி. உம்முடைய இஷ்டப் படி இலங்கை நகரத்திற்குப் போகலாம். விசிரவசுவின் புத்திரனும், மூவுலகத்தையும் உபத்திரவிப்பவனுமாகிய

இராவணனைக் கொல்லும். ஸீதையைச் சீக்கிரத்தில் பார்ப்பீர். என்னுடைய ஜலத்தில் அணையைக் கட்டும். அதனால் உம்முடைய கீர்த்தி விருத்தியடையும். திக் விஜயஞ்செய்யும் அரசர்கள் உம்மால் கட்டப்பட்ட சேதுவைப் பார்த்து ஆச்சரியப்பட்டு உம்முடைய மகிமையைக் கானஞ்செய்வார்கள்" என்று சொன்னார். அதனைக் கேட்ட ஸ்ரீ ராமசந்திரன் வானரர்களால் கொண்டுவரப் பட்ட விருக்ஷங்களாலும், மலைகளாலும் சமுத்திரத்தில் அணை கட்டினார். அதன் வழியாக விபீஷணருடைய உபாயத்தால் ஸுக்ரீவர், அனுமான், நீலன் முதலிய சேனைபதிகளுடன் இலங்கை நகரஞ் சென்றார். அந்த இலங்கையானது ஏற்கனவே ஸீதையைத் தேடுவதற்காக வந்த அனுமான் என்ற வானரனால் தகிக்கப்பட்டது. அப்படிப்பட்ட இலங்கை நகரத்தை வானர சைனியங்கள் சுற்றிக்கொண்டன. அதிலுள்ள விளையாடும் பூமிகளும், தானியம் வைக்கும் கிருகம் (களஞ்சியம்), பொக்கிஷம், கோபுர வாயில், சபை, கொடுங்கைகள், துவசங்கள், பொற்கலசங்கள், நாற்சந்தி மண்டபங்கள் ஆகிய இவைகள் வானரர்களால் இடிக்கப்பட்டன. அதனைப் பார்த்து ராக்ஷத ராஜனாகிய இராவணன், நிகும்பன், கும்பன், தூம்ராக்ஷன், துர்முகன், தேவாந்தகன், நராந்தகன், இந்திரஜித், பிரகஸ்தன், அதிகாயன், அகம்பனன் முதலிய ராக்ஷதர்களையும், சகோதரனாகிய கும்பகர்ணனையும் யுத்தத்திற்காக அனுப்பினான். அந்த ராக்ஷத சைனியமானது கத்தி, சூலம், வில், பிராசம், தடி, சக்தி, தோமரம் (இரும்புலக்கை), பட்டாக் கத்தி முதலிய ஆயுதங்களைத் தரித்து, பிறரால் ஜயிக்கமுடியாததாக இருந்தது. ஸ்ரீராமன், ஸுக்ரீவர், லக்ஷ்மணர், அனுமான், கந்தமாதனன், நீலன், அங்கதன், ஜாம்பவான், பனசன் முதலிய சேனாதிபதிகளுடன் ராக்ஷதர்களை எதிர்த்தார். அந்த ஸ்ரீராமனுடைய சேனாதிபதிகள் யானை, குதிரை, தேர், காலாட்படை இவைகளுள்ள ராக்ஷச சைனியத்தில் புகுந்து மலைகளாலும், விருட்சங்களாலும், கதைகளாலும், பாணங்களாலும் அடித்தார்கள். அந்த ராக்ஷசர்கள் ஸீதையைத் தொட்டதினால் அதிருஷ்டம் குறைந்த

வனாகிய இராவணனுடைய சேவகர்களர்கையால் வானரர்களால் அடிக்கப்பட்டு மரணமடைந்தார்கள். அப்பொழுது இராவணன் தன்னுடைய சைனியம் நாசமடைவதைப் பார்த்து மிகவும் கோபங்கொண்டு தேரின் மீதேறி இராமனை யெதிர்த்தான். அப்பொழுது மாதலியானவன் (இந்திரனுடைய சாரதி) மகேந்திரனுடைய இரதத்தை இராமனுக்காக அவ்விடங் கொண்டுவந்தார். ஸ்ரீராமன் அந்த இரதத்தில் ஏறிக்கொண்டார். அவரை இராவணன் க்ஷுரப்பிரமென்ற பாணங்களால் அடித்தான். அவனை நோக்கி ஸ்ரீராமன், "ஓ ராக்ஷசாதம! நீயானது யஜமானனுக்குத் தெரியாமல் வீட்டில் புகுந்து பொருள்களைத் திருடுவதுபோல, நான் ஆசிரமத்திலில்லாத காலத்தில் ஸீதையை அபகரித்தாயல்லவா? அதருமத்தை யநுஷ்டிப்பவனுக்குக் காலம் பலங்கொடுப்பதுபோல, வெறுக்கக்கூடிய காரியத்தைச் செய்தும் வெட்கமில்லாதிருக்கும் உனக்குப் பயனைக் கொடுக்கிறேன்" என்று சொல்லி, பாணத்தை வில்லில் பூட்டி இராவணன்மீது பிரயோகித்தார். அந்தப் பாணமானது வச்சிரம்போல அவனுடைய மார்பைப்பிளந்தது. இராவணன் பத்து முகங்களாலும் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு தேரிலிருந்து விழுந்தான். அது புண்ணியஞ்செய்தவர்கள் அதன் பலத்தைச் சுவர்க்கத்தில் அனுபவித்து, புண்ணியம் குறைந்தவுடன் விமானத்திலிருந்து விழுவதுபோலிருந்தது. ஜனங்கள் ஆ, ஆ என்றார்கள். பின்பு மந்தோதரி யென்ற இராவணனுடைய பத்தினியும் அநேகஇராக்ஷச ஸ்திரீகளும் லங்கையிலிருந்து வெளியில் வந்து அவர் அவர்களுடைய பந்துக்களை ஆலிங்கனஞ்செய்துகொண்டு அழுதார்கள். மார்பில் அடித்துக்கொண்டார்கள். பின்னும் அவர்கள் ஓ, உலகங்களை உபத்திரவித்தவனே! இராவணா! நாத! நாங்கள் பாக்கியமற்றவர்களானோம். கஷ்டம்; உம்மால் பரிபாலிக்கப்பட்ட இலங்கையானது யாரைச் சரணமடையும்? மன்மதனுக்கு வசப்பட்டிருந்தபடியால் ஸீதையின் மகிமையை அறியவில்லை. அதனால் இந்த இன்னலை அடைந்தீர். ஓ, குலத்தைச் சந்தோஷப்படுத்துகிறவரே! இலங்கை நகரம் அநாதமாயிற்று. நாங்கள் விதவைகளானோம். உம்முடைய

சரீரம் கழுகுகளுக்கு ஆகாரமாயிற்று. ஆத்மா நரகத்திற்குப் பாத்திரமாயிற்று" என்று பிரலாபித்தார்கள். பின்பு இராமனுடைய உத்தரவின்மீது விபீஷணர் பந்துக்களுக்குப் பிதிருமேத விதிப்படி உத்தரக்கிரியைகளைச் செய்தார். பிறகு ஸ்ரீராமன் தம்மை விட்டுப் பிரிந்த துக்கத்தால் இளைத்த சரீரமுடையவளும், சிம்சுபா மரத்தின் அடியில் வசிப்பவளுமான ஸீதையைப் பார்த்து அனுக்கிரகித்தார். இராமனைத் தரிசித்தவுடன் ஸீதாதேவியின் முகம் மலர்ந்தது. அவளிடத்தில் இராமனுக்கு அதிகப் பிரியம். அந்த ஸீதையை இராமன் புஷ்பக விமானத்தின் மீதேற்றிக்கொண்டு லக்ஷ்மணருடனும், ஸுக்ரீவருடனும், அனுமானுடனும் விமானத்தில் ஏறினார். விபீஷணருக்கு இலங்கை ராஜ்யத்தைக் கொடுத்ததுமின்றி, கல்பகம் வரையில் சிரஞ்சீவியாக இருக்கும்படி அனுக்கிரகித்து அயோத்யா நகரத்தை நோக்கிச்சென்றார். பதினன்கு வருடங்களும் முடிந்தன. போகும் மார்க்கத்தில் உலகபாலகர்கள் புஷ்பங்களைப் பொழிந்தார்கள். பிரமதேவர்முதலியவர்கள் ஸ்ரீராமனுடைய சரிதத்தைக் கானஞ்செய்தார்கள். நந்திக்கிராமத்தில் பரதன் கோமூத்ரத்தில் பக்குவமான அன்னத்தைப் புசித்துப் பூமியில் படுத்து சடைகளைத் தரித்து ராமனுடைய வரவை யெதிர்பார்த்திருந்தார். ஸ்ரீராமன் தமக்காகத் தம்முடைய சகோதரன் விரதமுள்ளவராக இருப்பதைக் கேட்டு, மிகவும் வருத்தப்பட்டார். பரதர் இராமன் வருவதைக் கேள்விப்பட்டுப் பாதுகைகளைத் தலையில் வைத்துக்கொண்டுபட்டணத்து ஜனங்களுடனும், மந்திரிகளுடனும், புரோகிதருடனும் எதிர்சென்று அழைத்தார். அப்பொழுது வாத்தியங்கள் முழங்கின. பிராமணர்கள் வேதங்களைக் கோஷித்தார்கள். அநேகம் தேர்கள் பரதனைச்சூழ்ந்துவந்தன. அந்தத் தேர்கள் பொன்மயமான கக்ஷ்யங்களுள்ளவைகள்; பலவகையான கொடிகளுள்ளவைகள்; பொன்னால் அலங்கரிக்கப்பட்ட உத்தமமான குதிரைகள் கட்டியவைகள்; காலாட்படைகள் பொற்கவசம் தரித்திருந்தார்கள். அரசனுக்குரியதான குடை, சாமரம் முதலியவைகளையும், பலவகையான உபகாரங்களையும் எடுத்துக்கொண்டு ஜனங்கள் பரதரைச் சூழ்ந்து வந்தார்கள். அப்பொழுது

பரதன் [illegible]னைக் கண்டு இருதயம் மலர்ந்து கண்களில் ஆனந்தத்துளி பெருகினவராகிப் பாதுகைகளை இராமனுடைய முன்பாக வைத்துப் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். ஸ்ரீராமன் பரதனைத் தூக்கி ஆலிங்கனஞ் செய்துகொண்டு இரு கண்களிலிருந்தும் பெருகிய ஆனந்த நீரினால் அவருடைய சரீரத்தை நனைத்தார். பின்னுமவர் பிராமணர்களுக்கும், மற்ற பெரியோர்களுக்கும் நமஸ்காரஞ் செய்தார். ஸீதையும் பெரியோர்களை நமஸ்கரித்தாள். லக்ஷ்மணரும் வணங்கினார். பிரஜைகள் ஸ்ரீராமனை நமஸ்கரித்தார்கள். அந்த உத்தரகோசல தேசத்திய ஜனங்கள் தங்களுக்கு அரசனாக இராமன் வந்ததைக் கண்டு மிகவும் சந்தோஷத்தை யடைந்தார்கள். உத்தரீயத்தை மேலே எறிந்து பிடித்தார்கள். பூக்களைச் சொரிந்தார்கள். நர்த்தனஞ்செய்தார்கள். பின்பு, பரதர் பாதுகைகளை எடுத்துக்கொண்டார். விபீஷணரும் ஸுக்ரீவரும் சாமரங்களை யெடுத்துக்கொண்டார்கள். அனுமான் வெள்ளைக்குடை யெடுத்துப் பிடித்தார். சத்ருக்னர் வில், அம்புக்கூடு இவைகளை எடுத்துக்கொண்டார். தீர்த்தம் நிறைந்த கடத்தை ஸீதை யெடுத்துக்கொண்டாள். அங்கதன் கத்தியையும், ஜாம்பவான் தங்கமயமான கத்தியின் உறையையும் எடுத்துக்கொண்டார்கள். இப்படி ஸ்ரீராமன் புஷ்பக விமானத்தில் உபசரிக்கப்பட்டு, உதித்த சந்திரன் கிரகங்களுடன் விளங்குவதைப் போலப் பிரகாசித்தார். அப்பொழுது வந்திகள் தோத்திரஞ் செய்தார்கள். இப்படி சகல ஜனங்களாலும் துதிக்கப்பட்டு ஸ்ரீராமசந்திரன் அயோத்தியா நகரத்தில் பிரவேசித்தார். நகரமானது அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஸ்ரீராமன் அரசனுடைய அரண்மனைக்குச் சென்று, கைகேயி முதலியவர்களையும், கௌஸல்யையும் நமஸ்கரித்தார். பின்னும் அங்கிருந்த மித்திரர்களும், சேவகர்களும் இராமனைப் பூஜிக்க, இராமனும் அவர்களுக்குப் பதில் மரியாதை செய்தார். ஸீதையும், லக்ஷ்மணரும் மாதாவைக் கண்ட குழந்தைகள்போலக் கௌஸல்யை முதலியவர்களிடஞ் சென்றார்கள். அவர்களைக் கண்ட ஸ்திரீகள் பிராணனைக் கண்ட

சரீரங்கள் போல, மடியிலெடுத்து வைத்து ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கினார்கள். அப்பொழுது வஸிஷ்ட மகரிஷியானவர் ஸ்ரீராமன் முதலியவர்களுக்கு ஜடா சோதனம் முதலியவைகளைச் செய்வித்து (க்ஷௌரஞ் செய்வித்து) மஹேந்திரனுக்கு அபிஷேகம் செய்தாற் போல ஸ்ரீராமனுக்கு நான்கு சமுத்திரங்களிலிருந்து கொண்டுவரப்பட்ட ஜலத்தால் பட்டாபிஷேகஞ் செய்தார். இப்படிப் பகவானாகிய ஸ்ரீராமன் மங்களஸ்நானஞ் செய்து, நல்ல ஆடை ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, அலங்கிருதர்களான சகோதரர்களுடனும் ஸீதையுடனும் பிரகாசித்தார். பரதனுடைய பிரார்த்தனைப்படி சிம்மாஸனத்தை யடைந்து பிரஜைகளைக் காப்பாற்றினார். அப்பொழுது ஜனங்கள் அவர் அவர்களுடைய ஜாதிக்கும் ஆசிரமத்திற்கும் உரியதான தர்மத்தைக் குறைவின்றி அநுஷ்டித்தார்கள். அரசனாகிய இராமனைப் பிதாவாக நினைத்திருந்தார்கள். திரேதா யுகம் நடைபெற்றிருந்தாலும் கிருதயுகம்போலிருந்தது. சகல பிராணிகளுக்கும் சுகத்தைக் கொடுப்பவரும், தருமத்தை யறிந்தவருமான இராமன் அரசனாயிருக்கும் பொழுது வனங்களும், மலைகளும், நதிகளும், வருடங்களும், தீவுகளும், சமுத்திரங்களும் பிரஜைகளுக்கு வேண்டிய பொருள்களை யுண்டுபண்ணின. மேலும், இராமருடைய ராஜ்யத்தில் பிரஜைகளுக்கு மன வியாதி, சரீர வியாதி, ஜரை (கிழத்தனம்), பசி, தாகம், துக்கம், பயம், சிரமம் ஆகிய இவைகளுடைய உபத்திரவமில்லை. இப்படிப் பிரஜைகளைப் பரிபாலித்து, ஸ்ரீராமன் ஏக பத்தினி விரதத்துடன் (மற்ற ஸ்திரீயை ஆசிக்காமல்) சுத்தராக இல்லற தருமத்தைத் தாம் அநுஷ்டித்தார். ஜனங்களும் அதனைக் கண்டு அவர் அவர்கள் தருமத்தை விடாமல் செய்தார்கள். கணவனுடைய அபிப்பிராயத்தை யறிந்தவளான ஸீதையும் பிரீதியாலும் நன்னடையாலும், எப்பொழுதுங்கூடவே சஞ்சரிப்பதாலும், வணக்கத்தாலும், பயத்தாலும், வெட்கத்தாலும் ஸ்ரீராமனுடைய மனத்தை அபகரித்தாள்.

# அத்தியாயம் 11

## ஸ்ரீ ராம சரிதம்

### (முன் அத்தியாயத் தொடர்ச்சி)

ஸ்ரீ ராமன் வஸிஷ்டரை ஆசாரியராக வைத்துக் கொண்டு விதிப்படி யாகங்களைச் செய்து சகல தேவ சொரூபியாகிய தம்மைப் பூசித்தார். ஹோதாவிற்குக் கிழக்குத் திக்கையும், பிரமாவிற்குத் தெற்குத் திக்கையும், அத்வர்யுவிற்கு மேற்குத் திக்கையும், உத்கா தாவுக்கு வடக்குத் திக்கையும், திக்குகளின் இடையிலிருக்கும் பூமியை ஆசாரியருக்கும் கொடுத்தார். மேலும் அவர் எல்லாப் பொருளையும் பிராமணர்களுக்குக் கொடுப்பதே மேலானதென்று நினைத்து, தம்முடைய ஆபரணங்களெல்லாவற்றையும் பிராமணர்களுக்குக் கொடுத்தார். அவர் தரித்திருக்கும் இரண்டு ஆடைகள் மாத்திரம் எஞ்சின. அதனைக் கண்ட ஸீதையும் பர்த்தாவின் அபிப்பிராயப்படி தன்னுடைய ஆபரணங்களைத் தானஞ்செய்தாள். அவளுக்கும் ஸ்ரீமாங்கல்யம் மாத்திரம் எஞ்சியது. அந்தப் பிராமணர்கள் ஸ்ரீராமனுக்கு ஸாதுக்களிடத்திலிருக்கும் வாத்ஸல்யத்தைப் பார்த்து மிகுந்த பிரியத்துடன் பூமியைத் திருப்பிக்கொடுத்து, "ஓ பகவான்! உம்மால் எங்களுக்கு எதுதான் கொடுக்கப்படவில்லை? எங்களுடைய இருதயத்தில் பிரவேசித்து, தம்முடைய தேஜஸினால் அஞ்ஞானத்தைப் போக்கடிக்கிறீர். பிராமணர்களைத் தெய்வமாகக் கொண்டவரும், தடையற்ற ஞானமுள்ளவரும், உத்தமசுலோகர்களுக்குச் சிறந்தவரும், முனிகளால் தியானஞ் செய்யப்பட்ட பாதங்களுள்ளவருமான ஸ்ரீராமனுக்கு நமஸ்காரம்" என்றார்கள்.

8—16. ஸ்ரீராமன் இராஜ்யத்தைக் காப்பாற்றி வரும்போது ஒரு நாள் இராத்திரியில் மக்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்வதற்காக நகரத்தில் சஞ்சரித்தார். அப்பொழுது ஒருவன் தன்னுடைய மனைவியை நோக்கி, "நீ மிகவும் துஷ்டை; கெட்டவள்;

பிறருடைய வீட்டிலேயே வசிப்பவள்; அப்படிப்பட்ட உன்னை நான் வைத்துகொள்ளமாட்டேன். உனக்கு அன்னம், வஸ்திரம் முதலியவைகளைக் கொடுக்கமாட்டேன். ஸ்திரீகளுக்கு வசப்பட்டவனாகிய இராமன் இராவணனுடைய கிருகத்தில் வெகுகாலம் வசித்தவளாகிய ஸீதையை வீட்டில் வைத்துக்கொண்டிருப்பதுபோல் நான் உன்னை வைத்துக்கொள்ளச் சம்மதிப்பேனா?'' என்று சொன்னான். அதனைக் கேட்ட ஸ்ரீராமன், ''ஜனங்கள் அஞ்ஞர்கள் (மூடர்கள்). அவர்களை ஆராதிப்பது மிகவும் கஷ்டம். இப்படி ஒருவன் சொல்ல ஆரம்பித்தபடியால் இனி எல்லாரும் சொல்லுவார்கள். அந்த அபகீர்த்தியைச் சம்பாதிக்கக்கூடாது'' என்று உலக அபவாதத்திற்குப் பயந்து கர்ப்பிணியான ஸீதையைக் காட்டில் விட்டுவிட்டார். அவள் வால்மீகியின் ஆசிரமஞ் சென்று அவருடைய சம்மதத்தின்மீது அவ்விடம் வசித்தாள். அவள் பிரசவ காலம் நேர்ந்தபொழுது இரண்டு குழந்தைகளைப் பெற்றாள். வால்மீகி மஹரிஷி அவ்விரண்டு குழந்தைகளில் ஒருவனுக்குக் குசனென்றும், மற்றொருவனுக்கு லவனென்றும் பெயர் வைத்தார். லக்ஷ்மணருக்கும் அங்கதன், சந்திரகேது என்ற இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். சத்ருக்னருக்கு சுபாகு, சுருதசேனன் என்ற இரண்டு புத்திரர்களுண்டானார்கள். பரதர் திக்குகளை ஜயித்துவரும்பொழுது கோடிக்கணக்கான கந்தருவர்களைக் கொன்று, அவர்களுடைய ஸகல தனத்தையும் அரசனாகிய ஸ்ரீராமனிடம் சமர்ப்பித்தார். சத்துருக்னர் மதுவின் புத்திரனாகிய லவணனென்ற ராக்ஷதனைக் கொன்று யமுனையின் கரையில் மதுவனத்தில் மதுரையென்ற நகரத்தை யுண்டுபண்ணினார். ஸீதையானவள் குச லவர்களை வால்மீகியினிடம் ஒப்புவித்து, பர்த்தாவின் பாதங்களைத் தியானஞ்செய்துகொண்டு பூமிக்குள் சென்றாள். அதனைக் கேட்டு ஸ்ரீராமன் தாம் ஈசுவரரானாலும், தைரியத்தாலும், துக்கத்தை யடக்கிக்கொண்டவரானாலும், ஸீதையின் உத்தம குணங்களை நினைத்து நினைத்துத் துக்கித்தார். ஸ்திரீகளுக்கும் புருஷர்களுக்கும் ஏற்பட்டிருக்கும் சிநேகமானது இம்மாதிரியானதேயாம். அது பயம், துக்கம்

இவைகளைக் கொடுக்கக்கூடியது. ஜகத்பதியான ஸ்ரீராம னுக்கே துக்கத்தை யுண்டுபண்ணினதென்றால் பிரா கிருத ஜனங்களுக்கு ஸ்திரீ விஷயமான ஆசை துக்கத் தைக் கொடுக்குமென்பதில் என்ன சந்தேகம்?

17—23. ஸீதை பூமிக்குள் சென்றபிறகு ஸ்ரீ ராமன் வேறு ஸ்திரீயை விவாகஞ் செய்துகொள்ளாமல் ஸீதையை நினைத்துக்கொண்டே வசித்தார். மேலு மவர் பதின்மூன்று ஆயிரம் வருஷங்கள் தொடர்ச்சியாக அக்கினிஹோத்திரஞ் செய்துவந்தார். இப்படி ஸ்ரீ ராமன் ஜனங்களை சம்ரக்ஷித்து, தருமத்தை ஸ்தா பித்து, தம்முடைய தேஜஸை அடைந்தார். அவருடைய பாதங்களை எப்பொழுதும் ஜனங்கள் இருதயத்தில் தியானஞ் செய்கிறார்கள். அவைகள் தண்டகவனத்தி லுள்ள முட்களில் சஞ்சரித்தவைகள். பகவான் தேவர் களுடைய பிரார்த்தனைப்படி ரகு வமிசத்தில் அவ தரித்து, சுக்ரீவன் முதலியவர்களைச் சகாயமாகக் கொண்டு சமுத்திரத்தில் அணை கட்டி அஸ்திரங்களைப் பிரயோகித்து ராக்ஷதர்களைக் கொன்றது ஆச்சரியமல்ல. ஏனென்றால் அவருக்கு மேலானவனாவது, சமமானவனா வது ஒருவனுமில்லை. மிகுந்த சக்தியுள்ளவரானாலும் வானரர்களைச் சஹாயர்களாக வைத்துக்கொண்டது எப்படி ஒரு விளையாட்டோ, அதுபோல ராக்ஷதர்களைக் கொல்வதும் விளையாட்டேயாம். எந்தப் பகவா னுடைய சுத்தமாகிய கீர்த்தியைத் தருமபுத்திரர் முத லிய அரசர்களுடைய சபையில், மார்க்கண்டேயர் முதலிய மகரிஷிகள் கானஞ்செய்கிறார்களோ, எவருடைய பாதாரவிந்தமானது சகல பாபங்களையும் போக்கடிக் கிறதோ, எவருடைய கீர்த்தியானது சகல திக்குகளிலும் வியாபித்திருக்கிறதோ, எவருடைய பாதங்களைத் தேவர்களும் சிறந்த அரசர்களும் வணங்குகிறார்களோ, அந்த ஸ்ரீராமனுடைய பாதாரவிந்தத்தைச் சரணமடை கிறேன். ஸ்ரீராமனை எவர்கள் பார்த்தார்களோ, தொட் டார்களோ, அவருடன் வசித்தார்களோ, அவர்பின் சென்றார்களோ, அந்தக் கோசல தேசத்திய ஜனங்கள் யோகிகளால் அடையக்கூடிய உத்தம கதியை அடைந்

தார்கள். ஸ்ரீராமனுடைய சரித்தை எவன் கேட்டுச் சாந்தியடைகிறானோ, அவன் கர்ம பந்தத்தை விட்டு நிவர்த்தியடைவான்'' என்று சுகர் சொன்னார்.

24. அதனைக் கேட்ட பரீக்ஷித்து சுகரை நோக்கி, "அந்த ஸ்ரீராமன் தம்முடைய அமிசர்களான சகோதரர்களிடத்தில் எப்படி இருந்தார்? தாம் எவ்விதமாக நடந்துவந்தார்? சகோதரர்கள் ஸ்ரீராமனிடத்தில் எப்படி நடந்துகொண்டார்கள்? பட்டணத்து ஜனங்கள் அரசனாகிய ஸ்ரீராமனிடத்தில் எவ்விதமாக நடந்துகொண்டார்கள்? அதனைச் சொல்லவேண்டும்'' என்று கேட்டார்.

25—26. அதனைக் கேட்டு, சுகர் அரசனை நோக்கி, "மூவுலகங்களுக்கும் அதிபதியாகிய ஸ்ரீராமன் கோசலராஜ்யத்தை அடைந்து தம்முடைய சகோதரர்களைத் திக்விஜயஞ் செய்துவரும்படி ஆஞ்ஞாபித்தார். (அவர்களும் அப்படியே நடந்தார்கள்.) தாம் பந்துக்களுக்குத் தரிசனங் கொடுத்துக்கொண்டு நகரத்தில் வசித்தார். அந்த அயோத்யா பட்டணத்திலுள்ள வீதிகள் சந்தனக் குழம்பினாலும், யானைகளின் மதநீராலும் நனைந்திருக்கின்றன. மேலும் அந்த நகரமானது தம்முடைய யஜமானனாகிய இராமன் வந்ததால் கர்வங்கொண்டது போல விளங்கிற்று. பின்னும் அந்தப் பட்டணத்தில் மாடிகளிலும், கோபுரங்களிலும், சபைகளிலும், தேவாலயங்களிலும், நாற்சந்தி மண்டபங்களிலும் பொற்கலசங்கள் வைக்கப்பட்டுக் கொடிகளும் கட்டப்பட்டிருந்தன. பாக்குக் குலைகளாலும், ரஸ்தாளி வாழைகளாலும், பட்டாடைகளாலும், கண்ணாடிகளாலும், பூமாலைகளாலும் அந்த நகரமானது அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பட்டணத்திலுள்ள ஜனங்கள் காணிக்கைகளைக் கையில் வைத்துக்கொண்டு ஸ்ரீராமனிடம், "உம்மால் பாதாளத்திலிருந்து கொண்டுவரப்பட்ட இந்தப் பூமியைக் காப்பாற்றும்'' என்று ஆசீர்வதித்தார்கள். வெகுநாள் கழித்து வந்தவராகிய ஸ்ரீராமனைத் தரிசிக்க வேண்டி மாதர்களும், ஆடவர்களும் வீட்டுவேலைகளையும்

விட்டு, மாடியின்மீதேறி மலர் பொழிந்தார்கள். அவர்கள் பகவானை அடிக்கடி தரிசித்தும் போதுமென்ற திருப்தியடையவில்லை. (இதனால் குடிகள் அரசனிடத்தில் ப்ரியம் வைத்திருந்தார்களென்று தெரியவருகிறது.) அப்படிப்பட்ட பகவான் தம்முடைய அரண்மனையில் வசித்தார். அது முந்திய அரசர்களால் வசிக்கப்பட்டது; சகல இரத்தினங்களாலும், செல்வங்களாலும் பூரணமானது; விலையற்ற மேலான பொருள்களுள்ளது; அதன் வாசற்படிகளிலும், இரேழியிலும் பவழங்களால் தளவரிசை செய்யப்பட்டிருந்தது. தூண்கள் வைடூரியங்களால் செய்யப்பட்டிருந்தன. பூமியானது மரகத இரத்தினங்களால் தளவரிசை செய்யப்பட்டிருந்தது. சுவர்கள் தந்தத்தாலும், படிகத்தாலும் கட்டப்பட்டிருந்தன. அந்தச் சுவர்களில் முத்து முதலிய மணிகளிழைக்கப்பட்டிருந்தன. மேலும், பலவகையான மலர் மாலைகளாலும், கொடிகளாலும், ஆடைகளுடைய காந்தியாலும், மணிகளுடைய ஒளியாலும், அழகான போக்கியப் பொருள்களாலும் நிறைந்திருந்தது. பின்னும் வாசனையுள்ள தூபத்தாலும், தீபங்களாலும், பூக்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கிருக்கும் பெண்டிரும், ஆடவரும், தேவர்களும் நிகரான ஒளியுள்ளவர்கள்; ஆபரணங்களையும் அலங்கரிப்பவர்கள். (மிகுந்த அழகுள்ளவர்களென்று கருத்து) ஆத்மாராமர்களுக்கு அதிபதியாகிய ஸ்ரீராமன் தம்மிடத்தில் மிகுந்த அன்பும் பக்தியுமுள்ளவளாகிய ஸீதையுடன் மகிழ்வுற்றார். தருமத்திற்கு விரோதமின்றி, இன்பத்தை அனுபவித்துக்கொண்டு அநேக வருஷ காலம் இராஜ்யத்தைக் காப்பாற்றினார். அவருடைய தளிர்போன்ற பாதங்களை மக்கள் தியானஞ்செய்துகொண்டிருந்தார்கள்.

# அத்தியாயம் 12

## குசருடைய வமிசம்

குசருடைய புத்திரர் அதிதியென்பவர். அவருடைய புத்திரர் நிஷதர். அவருடைய புத்திரர் நபர். அவருடைய புத்திரர் புண்டரீகர். அவருடைய புத்திரர் க்ஷேமதன்வா. அவருடைய புத்திரர் தேவாநீகர். அவருடைய புத்திரர் ஹீனர். அவருடைய புத்திரர் பாரியாத்ரர். அவருடைய புத்திரர் பலர். அவருடைய புத்திரர் சலர். அவருடைய புத்திரர் வஜ்ரநாபர். அவர் சூர்யனுடைய அமிசம். அவருடைய புத்திரர் சங்கணர். அவருடைய புத்திரர் விதிருதி. அவருடைய புத்திரர் ஹிரண்யநாபர். அவர் ஜைமினியின் சிஷ்யர். அவரிடமிருந்து (கௌசல்யர்) யாஞ்யவல்கிய மகரிஷி ஆத்ம சாஸ்திரத்தை அப்பியசித்தார். அந்தச் சாஸ்திரம் அணிமா முதலிய சித்திகளைக் கொடுக்கக்கூடியது; இருதயத்திலிருக்கும் அஞ்ஞானத்தைப் போக்கக்கூடியது; அந்த இரணியநாபருடைய புத்திரர் புஷ்யர். அவருடைய புத்திரர் துருவஸந்தி யென்பவர். அவருடைய புத்திரர் சுதர்சனர். அவருடைய புத்திரர் அக்கினிவர்ணர். அவருடைய புத்திரர் மருவென்பவர். அவர் சித்தராகக் கலாப கிராமத்திலிருந்து கலியின் முடிவில் சூர்ய வமிசத்தை விருத்திசெய்வார். அவருடைய புத்திரர் ஸந்தியென்பவர். அவருடைய புத்திரர் விசுவாகியர். அவருடைய புத்திரர் பிரகத்பலர். அவர்தான் உம்முடைய பிதாவாகிய அபிமன்யுவினல் கொல்லப்பட்டார். இக்ஷ்வாகுவின் வமிசத்திய அரசர்களில் சென்றவர்களைச் சொன்னேன். இனி யுண்டாகப் போகிறவர்களைச் சொல்லுகிறேன், கேளும். பிரகத்பலருக்கு பிரகிதரணரென்ற புத்திரனுண்டாவார். அவருக்கு உருக்ஷதரென்றும், அவருக்கு வத்ஸபரீதரென்றும், அவருக்கு பிரதிவ்யாமரென்றும், அவருக்குப் பானுவென்பவரும், அவருக்குத் திவௌகஸ் என்பவரும், அவருக்கு ஸஹதேவரும், அவருக்கு பிரகதச்வரும், அவருக்குப் பானுமானென்பவரும், பானுமானுக்குப் பிரதீகாச்வரும், அவருக்குச் சுப்ரதீகரும், அவருக்கு

மேருதேவரும், அவருக்கு சுநக்ஷத்திரரும், அவருக்கு ரிக்ஷகரும், அவருக்கு அந்தரிக்ஷரும், அவருக்கு சுதபஸ் என்பவரும், அவருக்கு அமித்ரஜித் என்பரும், அவருக்குப் பிரத்வாஜி என்பவரும், அவருக்குத் தனஞ்ஜய ரென்பவரும், அவருக்கு ரணஞ்ஜயரென்பவரும், அவருக்குச் சிருஞ்ஜயரும், அவருக்குச் சாக்யரும், அவருக்குச் சுத்தோதரும், அவருக்கு லாங்கலரும், அவருக்குப் பிரஸேனஜித் என்பவரும், அவருக்கு க்ஷுத்ரகரும், அவருக்கு ரிணகரும், அவருக்கு சுரதரும், அவருக்கு சுமித்திரரும் உண்டாகப்போகிறார்கள். இக்ஷ்வாகு வமிசம் கலியில் சுமித்திரருடன் முடிந்து விடும்.

# அத்தியாயம் 13

## நிமியின் வமிசம்

இக்ஷ்வாகுவின் புத்திரராகிய நிமியென்பவர் யாகஞ் செய்ய யத்தனித்து, 'வஸிஷ்ட மகரிஷியை ரித்விக்காக இருக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண்டார். அதனைக் கேட்ட வஸிஷ்ட மகரிஷி அரசனை நோக்கி, "ஓ மஹாராஜ! மகேந்திரன் யாகஞ் செய்யப்போகிறார். அதில் ரித்விக்காக வரிக்கப்பட்டு ஒப்புக்கொண்டிருக்கிறேன். அந்த யாகம் முடிந்தவுடன் உமக்கு யாகஞ்செய்விக்கிறேன். என்னுடைய வரவை எதிர்பார்த்திரும்" என்றார். அதனைக் கேட்ட அரசன் மௌனமாகவிருந்தார். வஸிஷ்ட மகரிஷி மகேந்திரனுடைய யாகத்திற்குச் சென்றார்.

*3—11.* அந்தச் சமயத்தில் நிமிச் சக்கரவர்த்தி, "ஆயுசானது நிலையில்லாதது; வஸிஷ்டர் வருகிற வரையில் நாம் ஜீவித்திருப்போமென்ற நிச்சயமுண்டா? ஆனதால் யாகத்தைச் சீக்கிரமாகச் செய்யவேண்டும்" என்று யோசித்து, வஸிஷ்டர் வருவதற்கு முன்னமேயே மற்ற மகரிஷிகளை வைத்துக்கொண்டு யாகத்தை ஆரம்பித்தார். அந்தச் சமயத்தில் வஸிஷ்ட மகரிஷி இந்திர

னுடைய யாகத்தை முடித்து நிமியினிடம் வந்தார். தான் வருவதற்கு முன்னமேயே யாகம் ஆரம்பிக்கப் பட்டதைப் பார்த்துக் கோபங்கொண்டு, "தன்னை வித்துவானாக நினைத்துக் கர்வங்கொண்டிருக்கும் நிமியின் சரீரமானது விழட்டும்" (சரீரத்தைவிட்டு உயிர் விலகட்டும்) என்று சபித்தார். அதனைக் கேட்ட நிமி ஆசாரியரை நோக்கி, 'தக்ஷிணையின் ஆசையால் தருமத்தை யறியாமல் நீர் என்னைச் சபித்தபடியால் உம்முடைய சரீரமும் விழக்கடவது" என்று பதில் சாபங்கொடுத்து ஆத்மவித்தையை யறிந்தவரான நிமியானவர் சரீரத்தை விட்டார். வஸிஷ்டரும் அந்தச் சரீரத்தை விட்டு ஊர்வசியைக் கண்டு மோகித்த மித்திரன், வருணன் ஆகிய இவர்களுடைய இரேதசுக்கு என்னுடைய பிதாமகராகப் பிறந்தார். அப்பொழுது மகரிஷிகள் நிமியின் சரீரத்தை வாசப்பொருள்களில் வைத்துவிட்டு, சத்திரயாகத்தை ஹவிர்ப்பாகத்தைப் பெற்றுக்கொள்வதற்காக வந்த தேவர்களை நோக்கி, "நீங்கள் இந்த அரசனிடத்தில் சந்தோஷமடைந்தீர்களானால் இவருடைய சரீரம் ஜீவிக்கும்படி அனுக்கிரகிக்கவேண்டும்" என்றார்கள். தேவர்களும் சம்மதித்தார்கள். அப்பொழுது நிமியானவர், "எனக்குச் சரீரம் வேண்டாம்: சரீரத்தைவிட்டுப் பிரிவது நிச்சயமானதையால் புத்திமான்கள் சரீரத்தை விரும்பமாட்டார்கள். மோக்ஷத்தைக் கொடுப்பவராகிய பகவானுடைய பாதாரவிந்தத்தைச் சேவிப்பார்கள். நீரில் மீன் எப்படிப் பந்துக்களிடமிருந்தும் பயமுண்டாகிறதோ, அப்படி அந்தச் சரீரத்திற்கு எவ்விடத்திலும் பயமிருக்கிறது. சரீரம் துக்கத்தையும், மோகத்தையும், பயத்தையும் கொடுக்கக்கூடியது. ஆனதால் அதனை நான் விரும்பவில்லை" என்றார். அதனைக் கேட்ட தேவர்கள் அரசனை நோக்கி, "நீர் தேக சம்பந்தமற்றவராகவே மக்களுடைய இமையில் கண்ணை மூடிக்கொள்ளுதல், திறப்பது ஆகிய இவைகளைச் செய்துகொண்டு வசியும்" என்று அநுக்கிரகித்தார்கள்.

12—27. பின்பு மகரிஷிகள் உலகத்திற்கு அரசனில்லாமலிருந்தால் தருமம் சரியாக நடைபெறாதென்

பது முதலிய குற்றங்களை யோசித்து, அந்த நிமியின் சரீரத்தைக் கடைந்தார்கள். அதனால் ஒரு குமாரன் பிறந்தான். விதேகரிடம் உண்டானவனாகையால் வைதாக னென்றும், பிறந்ததால் ஜனகனென்றும், கடைந்ததில் ஜனித்ததால் மிதிலனென்றும் அவன் பெயரடைந்தான். அவனால் உண்டுபண்ணப்பட்ட நகரம் மிதிலாவென்று பிரசித்தியடைந்தது. அந்த வைதேக ருடைய புத்திரர் உதாவஸு. அவருடைய புத்திரர் நந்திவர்த்தனர். அவருடைய புத்திரர் சுகேது. அவரு டைய புத்திரர் தேவராதர். அவருடைய புத்திரர் பிரகத் ரதர். அவருக்கு மகாவீரியனும், அவருக்கு சுதிருதியும், அவருக்கு திருஷ்டகேதுவும், அவருக்கு ஹர்யச்வரும், அவருக்கு மருவென்பவரும், அவருக்குப் பிரதிந்தகரும், அவருக்குக் கிருதரயரும், அவருக்குத் தேவமீடரும், அவருக்கு விதிதரும், அவருக்கு மகாதிருதியும், அவருக் குக் கீர்த்திராதரும், அவருக்கு மகாரோமாவும், அவ ருக்கு சுவர்ணரோமாவும் அவருக்கு ஹ்ருசுவரோமா வும், அவருக்கு சீரத்வசரும் புத்திரர்களாகப் பிறந் தார்கள். அவர் யாகஞ் செய்யவேண்டி யாகபூமியை உழுதார். அப்பொழுது அந்தக் கலப்பையின் மேழி யால் பெயர்க்கப்பட்ட பூமியிலிருந்து ஒரு பெண் உண் டானாள். அவளே ஸீதை யெனப்படுகிறாள். அவரு டைய புத்திரர் குசத்வஜரென்பவர். அவருக்குத் தர்ம த்வசரென்பவர் புத்திரர். அவருக்குக் கிருதத்வசர், மிதத்வசரென்ற இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். கிருதத்வசருடைய புத்திரர் கேசித்வசன். ஆத்மவித்தை யில் ஸமர்த்தர். காண்டிக்யர் கர்மயோகத்தை யறிந்த வர். அவர் கேசித்வசரிடம் பயந்து ஓடிப்போனார். கேசித்வசருடைய புத்திரன் பானுமான். அவருடைய புத்திரர் சதத்யும்னன். அவருடைய புத்திரர் சுசி யென்பவர். அவருடைய புத்திரர் ஸனத்வசன். அவருடைய புத்திரர் ஊர்த்வகேது. அவருடைய புத்திரர் அஜன். அவருடைய புத்திரர் புருஜித் (குருஜித் என்றும் சொல்லுவார் கள்) அவருடைய புத்திரர் அரிஷ்டநேமி. அவருக்கு சுருதாயுஸ் என்பவர் புத்திரர். அவருக்குப் பார்ச்வக

னென்பவர் புத்திரர். அவருக்குச் சித்ராதனும், அவருக்கு க்ஷேமாபி என்பவரும், அவருக்கு ஹேமாதரும், அவருக்கு ஸத்தியரதரும், அவருக்கு உபகுருவும், அவருக்கு அக்கினியின் அமிசமான உபகுர்வரும், (உபகுப்தரென்றும் சிலர் சொல்வார்கள்), அவருக்கு ஸாவனரும், அவருக்கு ஸுவர்ச்சஸ்ஸும், அவருக்கு ஸுபூஷணரும், அவருக்குச் சுருதரும், அவருக்கு ஜயரும், அவருக்கு விஜயரும், அவருக்குத் திருதரும், அவருக்கு அனகரும், அவருக்கு வீதிஹவ்யரும், அவருக்குத் திருதியும், அவருக்குப் பஹுளாச்வரும், அவருக்குக் கிருதியும், அவருக்கு மஹாவசியும் புத்திரர்களாக உண்டானார்கள். மேற்சொல்லிய மிதிலருடைய வம்சத்தில் பிறந்த அரசர்களெல்லாரும் ஆத்மவித்தை நன்றாக அப்பியசித்தவர்கள். அவர்கள் கிருகஸ்தர்களாக இருந்தும் யாஜ்ஞவல்கியர் முதலிய யோகேசர்களுடைய அனுக்கிரகத்தால் சுகதுக்கங்கள், சீதம், உஷ்ணம் ஆகிய இவைகளை விட்டவர்களாக இருந்தார்கள்.

# அத்தியாயம் 14

## சந்திர வம்சம்

ஓ மகாராஜ! பரிசுத்தமான சந்திரனுடைய வமிசத்தைக் கேளும். புண்ணியகரமான கீர்த்தியுள்ள ஜனன் முதலிய அரசர்கள் அந்த வம்சத்தில் உண்டானவர்கள். அநேகம் தலைகளுள்ள மகா புருஷனுடைய மடுப்போன்ற தொப்புளிலிருந்து ஒரு தாமரை மலர் உண்டாயிற்று. அதிலிருந்து பிரமதேவர் உண்டானார். அவருடைய புத்திரர் அத்திரியென்பவர். அவர் பிதாவுக்குச் சமமான குணங்களுள்ளவர். அவருடைய கண்களிலிருந்து அமிருத சொரூபியாகிய சந்திரன் உண்டானார். பிரமதேவர் அவரைப் பிராமணர்களுக்கும், ஓஷதிகளுக்கும் அதிபதியாகச் செய்தார். அந்தச் சந்திரன் மூவுலகத்தையும் ஜயித்து இராசசூயமென்ற யாகத்தைச் செய்தார். அவர் பிரகஸ்பதியின் பத்தினியாகிய தாரையென்பவளைப் பலாத்காரமாக அபகரித்தார். அப்

பொழுது தேவர்களுக்கு ஆசாரியராகிய பிரகஸ்பதி பக வான் சந்திரனிடஞ் சென்று தம்முடைய பத்தினியைக் கொடுக்கும்படி பலமுறை கேட்டார். அப்படியும் சந்திரன் கர்வங்கொண்டு தாரையைப் பிரகஸ்பதிக்குக் கொடுக்கவில்லை; அந்தச் சமயத்தில் சுக்கிராசாரியர் பிரகஸ்பதியினிடம் விரோதத்தால் சந்திரனுடைய பக்கத்திலிருந்து அவருக்கு சகாயஞ்செய்தார். அசுரர் களும் சந்திரனுக்கு உதவியாக இருந்தார்கள். பரம சிவன் குருவின் புத்திரராகிய பிரகஸ்பதிக்குத் தமது கணங்களுடன் ஒத்தாசைசெய்தார். மகேந்திரன் சகல தேவர்களுடன் பிரகஸ்பதி கட்சியிலிருந்தார். இப்படி தாரைக்காகத் தேவர்களும் அசுரர்களும் யுத்தஞ்செய் தார்கள். அதில் சில தேவர்களும், சில அசுரர்களும் நாசமடைந்தார்கள். பின்பு பிரகஸ்பதி பிரமதேவரிடஞ் சென்று இந்தச் சமாசாரத்தைத் தெரிவித்தார். அதனைக் கேட்ட சந்திரன் பயந்து தாரையை விட்டு விட்டார். அப்பொழுது அவள் கர்ப்பிணியாக இருந்த படியால் பிரகஸ்பதி பகவானுனவர் அவளை நோக்கி, "அடி துராபுத்திபுள்ளவளே! என்னுடைய க்ஷேத்திர மாகிய நீ பிறரால் உண்டுபண்ணப்பட்ட கர்ப்பத்தைத் தரிப்பது நியாயமா? சீக்கிரமாக அதனை விட்டுவிடு" (பிரஸவி) என்றார். அதனைக் கேட்டு, 'தன்னைச் சபித்து விடுவாரோ' என்று தாரை பயந்தாள். அவளை நோக்கிப் பிரகஸ்பதி, 'நான் குலவிருத்திகரனுகிய புத்திரனை அபேக்ஷித்தவனுகையால் உன்னைச் (சபிக்கவில்லை) சாபஞைச் செய்யவில்லை" என்றார். பின்பு தாரை சுவர்ணத்தின் நிறம்போன்ற குழந்தையைப் பெற்றாள். அந்தக் குழந்தையினிடத்தில் சந்திரனும், பிரகஸ்பதியும் சிநேகத்தை வைத்து, 'இந்தக் குழந்தை என்னுடை யது, என்னுடையது' என்று வாக்கலகஞ் செய்தார்கள். அப்பொழுது மகரிஷிகளும், தேவர்களும் தாரையை நோக்கி, 'இந்தக் குழந்தை யாருடையது' என்று கேட் டார்கள். அவள் வெட்கத்தால் பதில் சொல்லவில்லை. அப்பொழுது அந்தக் குமாரன் மிகுந்த கோபத்துடன் மாதாவை நோக்கி, "ஓ கெட்ட நடையுள்ளவளே! ஏன் வீணுக வெட்கப்படுகிருய்? உன்னுடைய குற்றத்தை

என்னிடம் விரைவில் சொல்" என்று கேட்டான். இவைகளைக் கண்ணுற்ற பிரமதேவர் தாரையை இரகசியத்தில் அழைத்துச் சமாதான வார்த்தைகளைச் சொல்லிக் கேட்க, 'சந்திரனுடைய குமாரன்' என்று மிருதுவாகச் சொன்னாள். அதனால் அந்தக் குமாரனைச் சந்திரன் இரகித்துக்கொண்டார். அந்தப் புத்திரன் மிக்க புத்திசாலியாக விருந்தது சந்திரனுக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணியதால் அவனுக்குப் புதனென்று பிரமதேவர் பெயரிட்டார்.

15—52. அந்தப் புதனுக்கு இளையினிடத்தில் (சுத்யும்னன் பெண்ணுருவத்தை அடைந்திருந்த சமயத்தில் இளையென்று பெயர்) புரூரவசு என்ற புத்திரன் பிறந்தார். அவருடைய அழகு, கொடை, நனடத்தை, பராக்கிரமம், தைரியம் முதலிய குணங்களைப்பற்றி மகேந்திரனுடைய சபையில் நாரத மகரிஷி சிலாகித்தார். அதனைக் கேட்ட ஊர்வசியானவள் மன்மத தாபத்தையடைந்து பூலோகத்தில் அந்த அரசனுடைய சமீபஞ் சென்றாள். அவள் தேவ மங்கையாருளும், மித்திராவர்ணர்களுடைய சாபத்தால் சில காலம் பூமியில் வசிக்கவேண்டியவளானாள்; மேலும் அவள் சரீரமுள்ள மன்மதன்போலிருக்கும் அந்த அரசனிடஞ் சென்று அவருடைய பக்கத்தில் நின்றாள். அவளைக் கண்ட அரசன் முகமலர்ச்சியையும், சந்தோஷத்தையுமடைந்து மயிர்க்கூச்சலுள்ளவராகி, 'ஓ கோமலானவளே! நல் வரவா' உட்கார. என்னால் என்ன செய்யவேண்டும்? என்னைக் கல்யாணஞ் செய்துகொள். நம்மிருவருக்கும் வெகுவருட காலம் பிரீதி குறையாமலிருக்கட்டும்" என்றார். அதைக் கேட்ட ஊர்வசியானவள், "ஓ சுந்தர புருஷனே! உம்மிடம் எவளுடைய மனம் தான் பிரவேசிக்காது? கண்கள் உம்மிடத்தில் பதிந்துவிடுகின்றனவே. உமமுடைய மார்பகத்தை அடைந்தவள் (ஆலிங்கனஞ் செய்துகொள்ளப்பட்டவள்) வேறிடஞ் செல்லமாட்டாள். எவன் புருஷர்களுக்குச் சிறந்தவனோ அவனையே ஸ்திரீகள் விரும்புவார்கள். ஆனதால் உம்மை விவாகஞ்செய்துகொண்டு ரமிக்கிறேன். ஆனால் இதோ இருக்கின்ற ஆடுகள் என்னால்

புத்திரர்கள் போல வளர்க்கப்பட்டன. இவைகளை நீர் காக்கவேண்டும். எனக்கு நெய்தான் உணவுப்பொருள். (வேறொன்றையும் புசிக்கமாட்டேன் என்று கருத்து) மைதுன காலந்தவிர மற்ற காலத்தில் ஆடையில்லாமல் நீர் என்முன் வரக்கூடாது" (மற்ற காலத்தில் நீர் எப்பொழுது என்முன் வருகிறீரோ, அப்பொழுது உம்மை விட்டுவிடுவேன் என்று கருத்து) என்று சொன்னாள். கம்பீர மனமுள்ள அரசனும் சம்மதித்து, "உன்னுடைய உருவமானது ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறது. உன்னுடைய அபிப்பிராயத்தைப்பற்றி என்ன சொல்வேன்? ஜனங்களுக்கு மோகத்தை யுண்டுபண்ணக்கூடியதாகவிருக்கிறது. தானாக வந்தவளான தேவலோகத்துப் பெண்ணிடத்தில் எவன்தான் ஆசைப்படமாட்டான்" என்று சொல்லி, சைத்ர ரதம் முதலிய தேவர்களுடைய தோட்டங்களில் அவளுடன் கிரீடித்தார். தாமரை மலரின் வாசனைபோன்ற வாசனையுள்ள அவளுடைய மூச்சுக்காற்றினால் மோகித்து அநேக வருடங்களைக் கழித்தார். இப்படி வெகுகாலஞ் சென்ற பின் மகேந்திரன் சில கந்தருவர்களை நோக்கி, "ஊர்வசியில்லாததினால் என்னுடைய சபை பிரகாசிக்கவில்லை. அவளை அழைத்துவரவேண்டும்" என்று ஆஞ்ஞாபித்தார். அவர்கள் மகேந்திரனுடைய உத்தரவின்படி ஒரு நாள் ராத்திரி இருட்டில் அரசனிடம் அடைக்கலமாக ஊர்வசியினால் வைக்கப்பட்டிருக்கும் இரண்டு ஆடுகளையும் மாயையால் மறைந்து அபகரித்தார்கள். அப்பொழுது அவைகள் கத்தின. அதனைக் கேட்ட ஊர்வசியானவள், "அற்பனைப் பர்த்தாவாக வரித்துத் துக்கத்தை அடைந்தேன். இவனுக்கு ஆண்மையில்லை. இவன் தன்னைச் சூரனென்று நினைத்துக்கொண்டவன். இவனை நம்பியபடியால் என்னுடைய புத்திரர்கள் திருடர்களால் அபகரிக்கப்படுகிறார்கள். பெண்களைப்போல் இவன் இரவில் பயந்து தூங்குகிறான். என்மீது வைத்துக்கொண்டிருக்கும் கைகளை எடுத்துவிடு; என்னை விட்டுவிடு. நீ மிகவும் பயந்தவன்" என்று பலவாறாக அரசனை நிந்தித்தாள். அதனைக் கேட்டஅரசன் அங்குசத்தால் அடிக்கப்பட்ட யானைபோல வேகமாகக் கத்தியை எடுத்துக்

கொண்டு ஆடையில்லாதவராகவே ஆடுகளைக் காப் பாற்றுவதற்காக ஓடினர். அந்தச் சமயத்தில் கந்தருவர் கள் அவ்விரண்டு ஆடுகளையும் விட்டுத் தங்களிருப்பிடஞ் சென்றார்கள். அப்பொழுது மின்னல்கள் பிரகாசித் தன. ஆடுகளை ஒட்டிக்கொண்டு ஆடையில்லாமல் வரும் பர்த்தாவை ஊர்வசி கண்டாள். அரசன் படுக்கை யின் சமீபஞ்சென்று ஊர்வசியைக் காணுமல் அவளையே தியானித்துப் பைத்தியங்கொண்டவன்போல் பூமியில் அலைந்தார். பின்பு அவர் ஒருகால் குருக்ஷேத்திரத்தில் சரஸ்வதி நதியின் கரையில் அந்த ஊர்வசியையும், அவ ளுடைய ஐந்து தோழிகளையும் கண்டார். அப்பொழுது அவர் மிகவும் சந்தோஷத்தையடைந்து, " அடி பத்னி! நில். என்னைத் துக்கப்படும்படி செய்யாதே. இரகசியத் தில் சொல்லிக்கொள்ளவேண்டிய வார்த்தைகள் இருக் கின்றன. நான் உன்னைத் தேடிக்கொண்டு வெகுதூரம் வந்தேன். நீ என்னுடைய சரீரத்தின்மீது தயைசெய் யாமற்போனல் இந்தச் சரீரம் இவ்விடத்திலேயே விழுந்துவிடும். இதனைச் செந்நாய்களும் கழுகுகளும் புசித்துவிடும்" என்று தீனமாகச் சொன்னார். அதனைக் கேட்ட ஊர்வசியானவள் அரசனை நோக்கி, "நீர் அற்ப புருஷனல்ல; உம்மைச் செந்நாய்களால் கொல்லமுடி யாது; இருதயம் செந்நாய்களுடைய மனம்போன்றதான தால் அவர்களுடைய பிரீதி நிலையற்றது; மாதர்கள் தயையற்றவர்கள்; பொறுமையற்றவர்கள்; பிடிவாத முள்ளவர்கள்; அற்ப பிரயோசனத்திற்காகப் பர்த்தா வையும், சகோதரர்களையும் கொன்றுவிடுவார்கள். மேலும், அவர்கள் பிரீதியாகவிருப்பதுபோல அபிநயஞ் செய்து, மாதர்களுடைய சுபாவத்தை யறியாத மூடர் களை வஞ்சிப்பார்கள். உண்மையில் சிநேகிக்கமாட் டார்கள். அடிக்கடி வெவ்வேறு புருஷனை விரும்புவார் கள்; விபசாரமுள்ளவர்கள்; தங்களிஷ்டப்படி நடப்ப வர்கள்; ஆனதால் மாதர்களை நம்பவேண்டாம். இது முதல் ஒரு வருஷத்தின் முடிவில் ஓரிரவு என்னிடம் இரமிக்கப்போகிறீர். அப்பொழுது என்னிடத்தில் உமக்குப் பின்னுஞ் சில புத்திரர்கள் உண்டாவார்கள்" (இப்பொழுது கர்ப்பிணியாக இருக்கிறேனென்று

கருத்து) என்று சொன்னாள். அதனைக் கேட்ட அரசன் அவள் கர்ப்பிணியாக இருக்கிறாளென்பதைத் தெரிந்துகொண்டு தம்முடைய பட்டணஞ் சென்றார். ஒரு வருஷஞ் சென்றபின் அரசன் சரஸ்வதி நதியின் கரைக்கு வந்தார். அப்பொழுது ஊர்வசியும் அவ்விடம் வந்தாள். அன்றிரவு அரசன் ஊர்வசியுடன் கிரீடித்தார். பின்னும் காலையில் தம்மை விட்டுப் போகயத்தனிக்கும் ஊர்வசியைப் பார்த்துத் துக்கித்தார். அப்பொழுது அவள் அரசனை நோக்கி, "நீர் கந்தர்வர்களை உபாசியும்; அவர்கள் என்னை உமக்குக் கொடுப்பார்கள்" என்றாள். (என்னுடைய உலகத்தை அடையும்படி செய்வார்கள் என்று தாத்பரியம்) அதனைக் கேட்ட அரசன் கந்தருவர்களைத் தோத்திரஞ்செய்தார். அவர்கள் அக்கினியின் ஆதானத்திற்கு உபயோகமான ஒரு வகைப் பாத்திரத்தைக் (அக்கினி ஸ்தாலியை) கொடுத்தார்கள். அரசன் ஊர்வசியின் உலகத்தை அடைவதற்கு இது சாதனம்' என்று நினைத்து, அதனை யெடுத்துக் கொண்டு வனத்தில் சஞ்சரிக்கும்பொழுது அந்தப் பாத்திரத்தை ஓரிடத்தில் வைத்து மறந்து விட்டுப் பட்டணஞ் சென்றார். அன்று இரவு தம்முடைய அரண்மனையில் வசித்தார். அப்பொழுது திரேதாயுகம் பிறந்தது. அரசனுடைய மனத்தில் வேதங்கள் தோன்றின. மறுநாள் அந்தப் பாத்திரம் வைத்தவிடஞ் சென்று வன்னிமரத்தின் கர்ப்பத்திலுண்டான அச்வத்தம் அக்கினி கடைவதற்கு உபயோகமென்று வேதவாக்கியத்தால் தெரிந்துகொண்டு, அதனால் இரண்டு அரணிகளைச் செய்து ஊர்வசியின் உலகத்தை அடையவேண்டுமென்ற விருப்பத்துடன் கீழிருக்கும் அரணியை ஊர்வசியாகவும், மேலரணியைத் தாமாகவும், மத்தியிலிருக்கும் தண்டத்தைப் புத்திரனாகவும் பாவித்து அதன் மந்திரத்தை யுச்சரித்துக் கடைந்தார். அதனால் அக்கினியுண்டாயிற்று. அந்த அக்கினியானது வேதத்தில் சொல்லிய ஆதானமென்கிற ஸம்ஸ்காரத்தால் ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்று மூன்று ஸ்வரூபத்தை யடைந்தது. மேலும் அரசனால் கண்டு பிடிக்கப்பட்டதால் அரசனுக்குப் புத்திரனாயிற்று. பின்பு

அந்த அக்கினியைக்கொண்டு சகல தேவரூபியும், யக்ஞங்களுக்கு அதிபதியுமான ஸ்ரீமந் நாராயணனைப் பூசித்தார் (யாகஞ் செய்தார்). அந்த அரசன் புத்திரன் போன்ற அக்கினியின் சகாயத்தால் ஊர்வசியின் உலகத்தை (கந்தருவ லோகத்தை) அடைந்தார். அதற்கு முன் சகல வேத சொரூபமாகிய பிரணவம் ஒன்றே வேதமாக இருந்தது. ஸ்ரீமந் நாராயணன் ஒருவரே எல்லோராலும் ஆராதிக்கப்படும் தெய்வமாக இருந்தார். (அக்கினி முதலியவைகளை ஜனங்கள் ஆராதிக்கிற தில்லை.) அக்கினியும் ஒன்றாகவே இருந்தது. வர்ணமும் ஒன்றுதான். மூன்று வேதங்கள் திரேதா யுகத்தின் ஆரம்பத்தில் புரூரவசு என்ற அரசனிடமிருந்தே உண்டாயின.

## நோட்டு

அநேக வருடங்கள் :—ஐம்பத்தொன்பது வருடங்கள் புரூரவசு ஊர்வசியுடன் வசித்தார்—அரி வம்சம் அத்தியாயம் 29. இரண்டு ஆடு—ஊர்வசியினால் அரசனிடம் வைக்கப்பட்டிருந்த இரண்டு ஆடுகளும் அரசனுடைய படுக்கையின் அருகில் கட்டப்பட்டிருந்தன. அவைகளில் ஒன்றை விசுவாவசு என்ற கந்தருவன் மாயையால் மறைந்து அபகரித்தான். அது கத்திற்று. அதனைக் கேட்ட ஊர்வசி அரசனை நோக்கி, "என்னுடைய புத்திரனை யாரோ கொண்டுபோகிறான்; அதனைக் காப்பாற்றும்" என்றாள். அதனைக் கேட்ட அரசன், "நான் ஆடையில்லாதிருப்பதால் இந்தச் சமயம் படுக்கையைவிட்டு வெளியில் போய்வந்தேனானால் ஊர்வசி என்னை விட்டுவிடுவாள்" என்று யோசித்து எழுந்திருக்கவில்லை. அப்பொழுது கந்தருவன் மற்றொரு ஆட்டையும் ஓட்டினான். அதனைக் கண்ட ஊர்வசி அரசனிடம் தெரிவித்தாள். அதனைக் கேட்டு அரசன் எழுந்து ஓடினார். கந்தருவன் ஆட்டை விட்டுவிட்டான். அவைகளை ஓட்டிக்கொண்டு திரும்பிவரும் போது மின்னல் பிரகாசித்தது. ஊர்வசி ஆடையில்லாதவராகிய அரசனைக் கண்டாள்—அரி வமிசம் அத்தியாயம் 29.

# அத்தியாயம் 15

## பரசுராமன் கார்த்தவீரியனைக் கொன்றது

புரூரவசுக்கு ஊர்வசியினிடத்தில் ஆயு, சுருதாயு, ஸத்யாயு, ரயன், விஜயன், ஜயன் என்று ஆறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் சுருதாயு என்பவருக்கு வஸுமானென்ற புத்திரன் பிறந்தான். ஸத்யாயுவுக்கு தனஞ்ஜயனென்ற குமாரன் உண்டானான். ரயனுடைய புத்திரன் ஏகனென்பவன், ஜயனுடைய புத்திரன் மிதனென்பவன் (விபுவென்பர் சிலர்), விஜயனுடைய புத்திரன் பீமன். அவருடைய புத்திரர் காஞ்சனர், அவருடைய புத்திரர் ஹோத்ருகர். அவருடைய புத்திரர் ஜஹ்நு என்பவர். அவர் கங்கையைப் பானஞ்செய்தவர். அவருடைய புத்திரர் பூருவென்பவர். அவருடைய புத்திரர் பாலகர். அவருடைய புத்திரர் அஜகர், அவருடைய புத்திரர் குசர். அவருக்குக் குசாம்பர், குசநாபர், வஸு, ஆதூர்த்தரயர் என்ற நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் குசாம்பரென்பவருக்குக் காதி என்ற புத்திரன் உண்டானார். அவருக்கு ஸத்யவதி என்ற பெண் பிறந்தாள். ரிசிகரென்ற பிராமணர் காதியினிடஞ் சென்று ஸத்யவதியைத் தமக்குக் கல்யாணஞ்செய்து கொடுக்கும்படி கேட்டார். அதைக் கேட்ட காதி, தம்முடைய பெண்ணுக்கு இவர் தக்க வரனல்லவென்று நினைத்து ரிசிகரை நோக்கி, "ஆயிரம் குதிரைகள் கன்யாசுல்கமாகக் கொடுக்கவேண்டும். அவைகள் சந்திரன் போன்ற வெண்மை நிறமுள்ளவைகளாக இருக்கவேண்டும். மேலும், அவைகளுடைய இடக்காதாவது, வலக்காதாவது கருமைநிறமுள்ளவைகளாகவும் இருக்கவேண்டும். நாங்கள் குசி வம்சத்தில் பிறந்தவர்களாகையால் இம்மாதிரியான ஆயிரங் குதிரைகளைக் கொடுப்பதே போதுமானதல்ல. நீர் மகரிஷியானதால் அதற்கதிகம் உம்மிடத்தில் அபேட்சிக்கக்கூடாது" என்றார்.

7—16. அதனைக் கேட்ட ரிசிகர் அதற்குச் சம்மதித்து, வருணனுடைய சமீபஞ்சென்று அவரிடமாக

அம்மா திரியான ஆயிரங் குதிரைகளைச் சம்பாதித்துக் காதியினிடம் கொடுத்து ஸத்யவதியை விவாகஞ் செய்து கொண்டார். பின்பு அவருடைய பத்தினியாகிய ஸத்யவதியும், மாமியாரும் (ஸத்யவதியின் மாதா) தங்களுக்குப் புத்திரன் பிறக்கும்படி அநுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதனைக் கேட்ட மகரிஷி தம்முடைய பத்தினிக்குப் புத்திரனுண்டாவதற்குப் பிராமணர்களுக்குரிய மந்திரத்தால் மந்திரித்த சருவையும், மாமியாருக்குப் புத்திரனுண்டாவதற்கு க்ஷத்திரியர்களுக்குரிய மந்திரத்தால் மந்திரிக்கப்பட்ட சருவையும் பாகஞ்செய்துவைத்து ஸ்நானஞ் செய்வதற்காகச் சென்றார். அவர் திரும்பிவருவதற்கு முன் ஸத்யவதியின் மாதா, 'ஸத்யவதிக்காக மந்திரித்த சரு மேலானதாக இருக்கும்' என்று நினைத்து அந்தச் சருவைத் தனக்குக் கொடுக்கும்படி பெண்ணைக் கேட்டுக்கொண்டாள். அவளும் சம்மதித்து அதனை மாதாவிற்குக் கொடுத்து, மாதாவின் சருவைத் தான் புசித்தாள். பிறகு மகரிஷி ஆசிரமம் வந்து சமாசாரத்தை யறிந்து பத்தினியை நோக்கி, 'நீ செய்தது உசிதமல்ல; உனக்குக் குரூரமான காரியத்தைச் செய்யும் புத்திரன் பிறப்பான் உன்னுடைய சகோதரன் பிரமவித்துகளுக்குட் சிறந்தவனாவான்' என்றார். அதனைக் கேட்ட ஸத்யவதி மகரிஷியை நோக்கி, 'தனக்கும் நல்ல புத்திரன் ஜனிக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தாள். அதனைக் கேட்ட ரிசீகர் பத்தினியை நோக்கி, 'உனக்குப் புத்திரன் நல்லவனாக ஜனிப்பான்; அவனுடைய புத்திரன் (பேரன்) கொடிய சுபாவமுள்ளவனாக இருப்பான்' என்று அநுக்கிரகித்தார். அதனால் அவளுக்கு ஜமதக்னி யுண்டானார். அந்த ஸத்யவதியும் கௌசிகியென்ற புண்ணிய நதியாகி, லோகத்தைப் பரிசுத்தப்படுத்தினள். ஜமதக்னியானவர் ரேணுவின் புத்திரியாகிய ரேணுகை என்பவளைக் கல்யாணஞ் செய்துகொண்டார். அவ்விருவர்களுக்கு வஸுமனன் முதலிய புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் இளையவருக்கு ராமனென்று பெயர். அவர் ஸ்ரீ வாஸுதேவருடைய அம்சம். ஹைஹய குலத்தை நாசஞ்செய்தவர். மேலும், அவர் பிரக

மண பக்தியில்லாதவர்களும், தர்மசிந்தையற்றவர்களும், ரஜோகுணம், தமோகுணமுள்ளவர்களும், பூமிக்குச் சுமையானவர்களும், கர்வமுள்ளவர்களுமான க்ஷத்திரியர்களைச் சிறு குற்றத்திற்காக இருபத்தொருதடவை கொன்ருர்' என்று சொன்னர்.

16. அதனைக் கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "க்ஷத்திரர்களுடைய குலத்தை அடிக்கடி பகவான் நாசஞ்செய்யும்படியாக அரசர்கள் என்ன குற்றஞ் செய்தார்கள்?" என்று கேட்டார்.

17—36. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, 'ஹைஹய தேசத்திற்கு அதிபதியான அர்ஜுனனென்பவர் பகவானுடைய அம்சமாகப் பூமியில் அவதரித்திருக்கும் தத்தாத்ரேயருக்குச் சிசுருஷைசெய்து அவருடைய அனுக்கிரகத்தால் ஆயிரம் கைகளை அடைந்தார். ஒருகாலும் குறையாத இந்திரிய பலம், தேககாந்தி, கீர்த்தி முதலியவைகளையும் அடைந்தார். சத்துருக்களால் ஜயிக்க முடியாதவராகவும் இருந்தார். அணிமா முதலிய ஐசுவர்யங்களையும் அடைந்தார். வாயு போலத் தடையின்றி எங்கும் சஞ்சரித்துவந்தார். அந்த அரசன் ஒருசமயம் ரேவாநதியில் அநேக மாதர்களுடன் நீர்விளையாடல் செய்துகொண்டு, தம்முடைய கைகளால் நீர்வேகத்தைத் தடுத்தார். அப்பொழுது அந்த நதியின் கரையில் இராவணன் கூடாரம அடித்திருந்தான். நீரானது எதிர்த்துச் சென்றபடியால் அவனுடைய கூடாரம் நீரில் மூழ்கியது. அதனை ஆற்ருமல் இராவணன் கோபங்கொண்டு நீர்விளையாட்டுச் செய்யும் அர்ஜுனனுடன் யுத்தத்திற்கு வந்தான். அர்ஜுனன் மாதர்களுடைய முன்பாக இராவணனைச் சிரமமின்றிப் பிடித்து மாஹிஷ்மதியென்னும் தமது பட்டணத்தில் வைத்திருந்து, குரங்கைப் பிடித்து விடுவதுபோல விட்டுவிட்டார். (இராவணனைவிட மேலான பராக்கிரமமுள்ளவரென்று தாத்பரியம்) அந்தக் கார்த்தவீர்யார்ஜுனன் ஒருகால் வேட்டைக்காகக் காட்டில் சஞ்சரிக்கும் பொழுது ஜமதக்னியின் ஆசிரமஞ் சென்ருர். ஜமதக்னியானவர் அதிதியாக வந்த அரசனுக்கும் அவருடைய

-சைன்யத்திற்கும், மந்திரி முதலியவர்களுக்கும் காமதேனுவைக்கொண்டு ஆதித்யம் (விருந்து) செய்வித்தார். அதனைக் கண்ட அரசன் 'நீ மகரிஷியின் ஐசுவர்யம் தம்முடையதைவிட மேலானது' என்று நினைத்து மகரிஷியால் செய்யப்பட்ட ஆதித்யத்தில் சந்தோஷத்தையடையாமல் அவருடையதேனுவை அபகரிக்க விரும்பித் தம்முடைய சேவகர்களை நோக்கி, "இந்த மகரிஷியின் காமதேனுவை நம்முடைய நகரத்திற்குக் கொண்டுபோக வேண்டும்" என்று ஆஞ்ஞாபித்தார். அவர்கள் அரசனுடைய உத்தரவின்படி அந்தப் பசுவை அதன் கன்றுடன் மாஹிஷ்மதி நகரத்திற்குப் பலாத்காரமாகக் கொண்டுபோனார்கள். அரசனும் தம்முடைய நகரஞ் சென்றார். அதன் பின்பு ஜமதக்னியின் இளைய குமாரராகிய ராமன் ஆசிரமத்திற்கு வந்து அரசன் செய்த குற்றத்தைக் கேள்விப்பட்டு, தண்டத்தால் அடிக்கப்பட்ட பாம்புபோலக் கோபங்கொண்டார். பின்னுமவர் உக்கிரமான பரசுவையும் (கோடரி), அம்பறையையும், வில்லையும், பாணத்தையும், கவசத்தையும் எடுத்துக்கொண்டு யானையைச் சிங்கம் பின்தொடர்ந்தாற்போல அரசன்பின் சென்றார். அப்பொழுது அரசனும் தம்மைப் பின்தொடர்ந்து வரும் ராமனைக் கண்டார். அந்த ராமன் பாணம், பரச்வதம் (கோடரி), வில் இவைகளைத் தரித்தவர்; மான்தோலை ஆடையாக உடுத்திக்கொண்டவர்; சூரியனுடைய காந்திபோன்ற சடைகளுள்ளவர்; அப்படிப்பட்ட ராமனுடன் யுத்தஞ்செய்வதற்காக அர்ஜுனன் பதினேழு அக்ஷௌஹிணி சைனியத்தை அனுப்பினார். கதாயுதம், கத்தி, பாணம், யஷ்டி, சக்தி முதலிய ஆயுதங்களுடன் அந்தச் சைனியமானது ராமனைச் சூழ்ந்துகொண்டது. அந்தச் சைனியத்துடன் பரசுராமன் ஒருவனாக யுத்தஞ்செய்தார். ராமனுடைய பரசுவானது மனம், வாயு இவைகள்போல மிக்க வேகமாக எந்தப் பக்கத்தில் சைனியத்தை அடித்ததோ அந்தவிடத்தில் யானைகளும், குதிரைகளும், ஸாரதிகளும், காலாட்களும் அடிபட்டு விழுந்தார்கள். இரத்த நதி ஓடிற்று கவசங்கள் உடைந்து சிதறின. கொடிகளும் தனுசுகளும் வெட்டப்பட்டன. அதனைக் கண்ணுற்ற

கார்த்தவீர்யன் ஐந்நூறு கைகளால் தனுசில் பாணங்களைத் தொடுத்துப் பரசுராமன்மீது பிரயோகித்தார். பரசுராமன் தாமொருவராகவே அநேக பாணங்களைப் பிரயோகித்து அவைகளை வெட்டினார். பின்பு கார்த்தவீர்யன் மலைகளையும், மரங்களையும் பிடுங்கிப் பரசுராமன்மீது பிரயோகித்தான். அப்பொழுது பரசுராமன் சிரித்துக்கொண்டு கூர்மையான முனையுள்ள பரசுவினால் கார்த்தவீர்யனுடைய கைகளைப் பலாத்காரமாக வெட்டினார். பின்னும், மலையின் சிகரம்போன்ற அவனுடைய தலையையும் வெட்டினார். அதனைக் கண்ணுற்ற அவனுடைய பதினாயிரம் புத்திரர்கள் ஜமதக்னியின் பசுவை அதன் கன்றுடன் பரசுராமனிடங் கொடுத்துப் பயந்து ஓடினார்கள். பின்பு பரசுராமன் தம்முடைய ஆச்சிரமஞ் சென்று அந்தப் பசுவைப் பிதாவாகிய ஜமதக்னியிடம் கொடுத்துக் கார்த்தவீர்ய வதத்தைப் பிதாவிற்கும் ஸஹோதரர்களுக்கும் தெரிவித்தார்.

37—41. அதனைக் கேட்ட ஜமதக்னியானவர், "மிக்க பலசாலியான ஓ ராம! அரசனாகிய அர்ஜுனனைக் கொன்றது மிக்க பாவமான காரியம். அரசன் சகல தேவசுரூபியல்லவா? நாமோ பிராமணர்கள். பொறுமையால் மேன்மையை அடைந்தவர்கள்; எல்லா உலகங்களுக்கும் குருவாகிய பிரமதேவர் பொறுமையாலேயே பிரமபதத்தை அடைந்தார். பிராமணனுடைய தேஜஸானது பொறுமையால்தான் சூரியனுடைய காந்தி போலப் பிரகாசிக்கிறது. சகல உலகத்திற்கும் அதிபதியாகிய பகவான் பொறுமையுள்ளவர்களிடத்தில் சந்தோஷிக்கிறார். சார்வபௌமனாகிய அரசனைக் கொல்வது பிரமகத்தியைக் காட்டிலும் மேலானது. ஆனதால் ஸ்ரீமந்நாராயணனையே தியானஞ்செய்துகொண்டு தீர்த்த யாத்திரை செய்து அந்தப் பாவத்தைப் போக்கிக்கொள்" என்று ஆஞ்ஞாபித்தார்.

## நோட்டு

ஜஹ்நு—பகீரதரால் கங்கை பூமிக்கு வரவழைக்கப்பட்டபொழுது ஜஹ்நு யாகஞ்செய்தார். கங்கை அவரைப் பார்த்தா

வாக வரித்தாள். அவர் சம்மதிக்கவில்லை. அதனால் கங்கை கோபங்கொண்டு அவருடைய யாகசாலையை மூழ்கச்செய்தாள். அவளுடைய கர்வத்தை அடக்குவதற்காக அரசன் அதன் ஜலம் முழுவதையும் பானஞ் செய்தார். கன்யாசுல்கம்—பெண்ணுக்காகக் கொடுக்கும் பணம். புசித்தாள்—ரிசீகர் தம்முடைய பத்னிக்கும் அவளுடைய மாதாவிற்கும் புத்திரன் பிறக்க வேண்டி இரண்டு சருவைச் செய்து ஸத்யவதியை நோக்கி, 'இது உன்னால் புசிக்கக்கூடியது; இது உன் தாயாரால் புசிக்கக்கூடியது' என்று காண்பித்து, காட்டிற்குச் சென்றார். அந்தச் சமயத்தில் காதியானவர் தம்முடைய பத்னியுடன் தீர்த்தயாத்திரை செய்து பெண்ணைப் பார்ப்பதற்காக ரிசீகருடைய ஆசிரமத்திற்கு வந்தார். அப்பொழுது ஸத்யவதியானவள் இரண்டு சருவையும் மாதாவிடத்தில் காண்பித்தாள். அவைகளை அவள் வாங்கித் தெய்வச் செயலாகத் தன்னுடைய சருவை ஸத்யவதிக் கொடுத்து, ஸத்யவதியின் சருவைத் தான் புசித்தாள். பின்பு ரிசீகர் ஆசிரமம் வந்து சருவை மாற்றிப் புசித்தார்களென்பதை யறிந்து ஸத்யவதியை நோக்கி, "உன்னுடைய மாதா உன்னை வஞ்சித்தாள். உனக்குக் குரூர சுபாவமுள்ளவனாகிய புத்திரனுண்டாவான்; உன்னுடைய மாதாவிற்கு மிக்க சாந்தனாகிய புத்திரன் பிறப்பான்" என்றார். அதனைக் கேட்ட ஸத்யவதியானவள் பர்த்தாவை வணங்கி, 'எனக்கு நல்ல சுபாவமுள்ள புத்திரன் பிறக்கும்படி அனுக்கிரகிக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண்டாள். அதனைக் கேட்ட மகரிஷி 'முந்திச் சங்கற்பித்த எண்ணம் மாறாது' என்றார். அதனைக் கேட்ட ஸத்யவதி, "உமக்கு இஷ்டமிருந்தால் உலகத்தையும் சிருஷ்டிப்பீர். அப்படிக்கிருக்க என்னுடைய எண்ணத்தை நிறைவேற்றுவது உம்மால் முடியாதா? ஆனதால் என்னுடைய புத்திரன் சாந்த சுபாவமுள்ளவனாகப் பிறக்கட்டும்; அவனுடைய புத்திரன் (பேரன்) குரூர சுபாவமுள்ளவனாக இருக்கட்டும்; அப்படி அனுக்கிரகியும்" என்றாள். மகரிஷியும் அதற்குச் சம்மதித்து அப்படியே அனுக்கிரகித்தார்.—அரி வம்சம், அத்—31. ஜமதக்னி—ரிசீகருக்கு ஜமதக்னி, சுனச்சேபன், சுனப்புச்சன் என்று மூன்று புத்திரர்கள்.

# அத்தியாயம் 16

## பரசுராமன் க்ஷத்திரியர்களைக் கொன்றது

பிதாவாகிய ஜமதக்னியினுடைய ஆஞ்ஞையின்படி பரசுராமன் ஒரு வருஷம் தீர்த்த யாத்திரைசெய்து திரும்பித் தம்முடைய ஆச்சிரமஞ் சென்றார். பின்பு ஒரு நாள் ஜமதக்னியின் பத்தினியாகிய ரேணுகாவென்பவள் தீர்த்த மெடுத்துவருவதற்காகக் கங்கைக்குச் சென்றாள். அவ்விடம் கங்கையின் நீரில் அப்சரசுகளுடன் சித்திரரதனென்ற கந்தருவன் கிரீடித்துக்கொண்டிருந்தான். அவனிடத்தில் கொஞ்சம் ஆசைப்பட்டு அவனைப் பார்த்துக்கொண்டே கொஞ்ச நேரம் தாமதித்தாள். பர்த்தா வேள்விசெய்யும் சமயம் இது என்பதை மறந்துவிட்டாள். பின்பு சிறிதுநேரத்தில் தான் தாமதித்தாள் என்பதைத் தெரிந்துகொண்டு மகரிஷி சபிப்பார் என்று பயந்து, குடம் நிறையத் தீர்த்தத்தை யெடுத்துக்கொண்டு ஆச்சிரமஞ் சென்று மகரிஷியின் சமீபத்தில் குடத்தை வைத்துக் கைகூப்பி நின்றாள்.

5—8 அவளைக் கண்ணுற்ற மகரிஷி அவள் சித்திரரதனிடம் ஆசைப்பட்டாள் என்பதை அறிந்து மிகுந்த கோபத்துடன் புத்திரர்களை நோக்கி, "ஓ புத்திரர்களே! பாவியான இவளைக் கொல்லுங்கள்" என்றார். அதனைக் கேட்ட அந்தக் குமாரர்கள மாதாவைக் கொல்லவில்லை. பின்பு அவர் பலராமனை நோக்கி, 'ரேணு'கையையும் தம்முடைய உத்தரவை மீறிய புத்திரர்களையும் கொல்" என்று ஆஞ்ஞாபித்தார். அதனைக் கேட்ட பரசுராமன் ஜமதக்னியின தவ மகிமையையும், ஸமாதியின் பிரபாவத்தையும் அறிந்தவரானகையால் சகோதரர்களையும், மாதாவையும கொன்றார். அதனைக் கேட்ட ஜமதக்னி பரசுராமனிடம் சந்தோஷித்து, 'விருப்பமான வரத்தைக் கேள்; கொடுக்கிறேன்' என்றார். அதனைக் கேட்ட பரசுராமன் பிதாவை நோக்கி, "என்னால் கொல்லப்பட்டவர்கள் பிழைக்க வேண்டும்; அவர்களைக் கொன்றதாக அவர்களுக்கு ஞாபகமிருக்கக்கூடாது" என்று கேட்டுக்

கொண்டார். அப்பொழுது ஜமதக்னியின் அனுக்கிரகத்தால் ரேணுகையும், வஸுமனன் முதலியவர்களும் தூங்கி விழித்தவர்கள்போல எழுந்திருந்தார்கள்.

9—24. ஓ பரிக்ஷித்து மகாராஜ! அர்ஜுனனுடைய புத்திரர்கள் பரசுராமனுடைய பராக்கிரமத்தால் பயந்து ஓடினார்கள் என்று சொன்னேனல்லவா? அவர்கள், தங்களுடைய பிதாவைக் கொன்ற பரசுராமனுக்குக் கெடுதியைச் செய்யமுடியாதவர்களாகிச் சமயம் பார்த்திருந்தார்கள். ஒரு நாள் பரசுராமனும், அவருடைய சகோதரர்களும் காட்டிற்குச் சென்ற சமயத்தில் ஜமதக்னி அக்கினி கிரஹத்தில் உத்தமசுலோகராகிய பகவானிடத்தில் மனதைச் செலுத்தித் தியானஞ்செய்துகொண்டிருந்தார். அப்பொழுது அர்ஜுனனுடைய புத்திரர்கள் கெட்ட எண்ணத்துடன் அவ்விடம் வந்து ஜமதக்னியைக் கொல்ல முயன்றார்கள். அப்பொழுது ரேணுகை தன்னுடைய பர்த்தாவைக் கொல்லவேண்டாம் என்று பலவகையாகக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். கொடிய சுபாவமுள்ள அவர்கள் அவளுடைய வார்த்தையைப் பொருட்படுத்தாமலேயே அவரைக் கொன்று, தலையையெடுத்துக்கொண்டு சென்றார்கள். அதனைக் கண்ட ரேணுகை மிகுந்த துக்கத்துடன் இரு கைகளால் மார்பில் அடித்துக்கொண்டு, 'ஓ சாதுவாகிய ராம! சீக்கிரம் வா' என்று கதறினாள். அந்தத் தீனமாகிய சப்தத்தை வெகு தூரத்திலிருந்த புத்திரர்கள் கேட்டு, வேகமாக ஆச்சிரமம் வந்து, மரணமடைந்திருக்கும் பிதாவைப் பார்த்துத் துக்கத்தாலும், கோபத்தாலும், பொறுமையாலும் மோகமடைந்தார்கள். அப்பொழுது பரசுராமன், "அண்ண! சாதுவே! எங்களை விட்டு நீர் ஒருவராகச் சுவர்க்கஞ் சென்றீரே' என்று பிரலாபித்து, பிதாவின் சரீரத்தைக் காப்பாற்றும்படி சகோதரர்களுக்குச் சொல்லி, பரசுவை யெடுத்து க்ஷத்திரியர்களை நாசஞ் செய்கிறதென்று நிச்சயித்தார். பின்னும் அவர் பிராமணனைக் கொன்ற பாவிகள் வசிப்பதால் காந்தியற்றதான மாஹிஷ்மதி நகரஞ் சென்று அவ்விடத்திலுள்ள க்ஷத்திரியர்களைக் கொன்று, அந்த நகரத்தின் மத்தியில்

அவர்களுடைய இரத்தமானது பயங்கரமான நதியாக ஓடும்படி செய்தார். இப்படிப் பரசுராமன், 'க்ஷத்திரியன் ஜமதக்னியைக் கொன்றான்' என்ற காரணத்தைக் கொண்டு இருபத்தொருதரம் க்ஷத்திரியர்களைக்கொன்று சியமந்த பஞ்சகமென்றவிடத்தில் ஐந்து இரத்த மடுக்களை யுண்டுபண்ணினார். மேலுமவர் ஜமதக்னியின் தலையைக் கொண்டுவந்து உடலுடன் சேர்த்து, சகல தேவரூபியான பகவானை யுத்தேசித்து யாகங்களைச் செய்தார். யாகங்கள் முடிந்தவுடன் கிழக்குத் திக்கை ஹோதாவிற்கும், தெற்குத் திக்கை பிரமாவிற்கும், மேற்குத் திக்கை அத்வர்யுவிற்கும், வடக்குத் திக்கை உத்காதாவிற்கும் கொடுத்தார். மற்ற ரித்விக்குகளுக்கு விதிக்குகளையும் (தென்கிழக்கு, வடமேற்கு, வடகிழக்கு), மத்தியத்திலிருக்கும ஆரியாவர்த்தத்தை உபத்ரஷ்டாவாகிய காச்யபருக்கும், ஆரியாவர்த்தத்திற்குப் பக்கத்திலிருக்கும் தேசங்களைச் சபையோர்களுக்கும் பிரித்துக் கொடுத்தார். பின்பு சரஸ்வதி நதியில் அவபிருத ஸ்நானஞ்செய்து சகல பாவங்களற்றவராகி, மேகத்தால் மறைக்கப்படாத சூரியன்போலப் பிரகாசித்தார். ஜமதக்னியானவர் தம்முடைய சரீரத்தை அடைந்து, பரசுராமனால் பூசிக்கப்பட்டு, ரிஷிகளுடைய மண்டலத்தில் ஏழாவது ரிஷியாக ஆனார்.

25—27 ஜமதக்னி புத்திரரும், தாமரை மலர் போன்ற கண்களுள்ளவரும், பகவதம்சருமான பரசுராமன் அடுத்த மன்வந்தரத்தில் வேதங்களைப் பரவச் செய்வார். (ஸப்தரிஷிகளுக்குள் ஒருவராவாரென்று தாத்பரியம்) இப்பொழுதும அவர் மகேந்திர மலையில் சாந்தமான சித்தமுள்ளவராகி வசிக்கிறார். அவருடைய சரீரத்தைக் கந்தர்வர்களும், சித்தர்களும், சாரணர்களும் தோத்திரஞ் செய்கிறார்கள். இப்படி ஜகத்ரூபியான பகவான் பிருகு வம்சத்தில் அவதரித்துப் பூமிக்குச் சுமையாக இருந்த க்ஷத்திரியர்களைப் பலமுறை நாசஞ் செய்தார்.

28—37. காதியின் புத்திரர் விசுவாமித்திரர். அவர் பிரகாசிக்கும் அக்கினி போன்ற மிகுந்த தேஜசுள்ளவர்.

அவர் கடுந்தவஞ்செய்து க்ஷத்திரிய தேஜஸினை விட்டு பிரமதேஜஸினை அடைந்தவர். (பிராமணனுக்குரிய மந்திரித்த சருவைப் புசித்ததாலுண்டானவர்) அந்த விசுவாமித்ரருக்கு நூற்றொரு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் நடுபிள்ளை மதுச்சந்தஸ் என்ற பெயருள்ளவர். அதனால் அவர்களெல்லாருக்கும் அதே பெயருண்டாயிற்று. அந்த விசுவாமித்ரர் தம்முடைய புத்திரர்களை நோக்கி, "இந்தச் சுனச்சேபனை நான் புத்திரனாக வைத்துக்கொண்டிருக்கிறேன். இவன் ஹரிச்சந்திரனுடைய யாகத்திற்காகப் புருஷப் பசுவாக விற்கப்பட்டவன். வருணன் முதலியவர்களைத் தோத்திரஞ் செய்து ஜீவித்திருக்கிறான். தேவர்களால் கொடுக்கப்பட்ட பிராணனுள்ளவனாகையால் தேவராதனெனப்படுகிறான். இவனை நீங்கள் மூத்த சகோதரனாக வைத்துக்கொள்ளவேண்டும்" என்று ஆஞ்ஞாபித்தார். மதுச்சந்தசுக்கு மூத்தவர்களான ஐம்பது குமாரர்களும் அதற்குச் சம்மதிக்கவில்லை. விசுவாமித்திரர் கோபங்கொண்டு அவர்களை நோக்கி, "துஷ்டர்களே! நீங்கள் மிலேச்சர்களாகக்கடவீர்கள்" என்று சபித்தார். அதனைக் கேட்ட மதுச்சந்தஸ் என்பவர் தம்முடைய ஐம்பது இளைய சகோதரர்களுடன் பிதாவை நோக்கி, 'உம்முடைய உத்தரவின்படி நடக்கிறோம்' என்று சொல்லி, அந்தத் தேவராதரை (சுனச்சேபர்) நோக்கி, மந்திரத்தைக் கண்டுபிடித்தவரான உம்மை மூத்த சகோதரராக வைத்துக்கொண்டிருக்கிறோம். நாங்களெல்லோரும் உமக்குக் கனிஷ்டர்களாகி உம்மை அனுசரிக்கிறோம்" என்றார்கள். அதனைக் கேட்ட விசுவாமித்திரர் சந்தோஷமடைந்து புத்திரர்களை நோக்கி, "என்னுடைய உத்தரவின்படி இவனைச் சகோதரனாக நீங்கள் அங்கீகரித்தபடியால் நான் புத்திரனுள்ளவனானேன். ஆனதால் உங்களுக்கும் நல்ல புத்திரர்களுண்டாவார்கள். இவனை நான் புத்திரனாக அங்கீகரித்திருப்பதால் இந்தத் தேவராதன் குசிகர்களில் சேர்ந்தவனாகிறான். இவனை நீங்கள் அனுசரிக்கவேண்டும்" என்று சொன்னார். அஷ்டகன், ஹாரிதன், ஜயந்தன், ஸுமதன் முதலிய மற்றுஞ் சிலர் விசுவாமித்திரருக்குப் புத்திரர்களானார்கள். இப்படி கௌசிக

கோத்திரமானது பலவகையாக ஆயிற்று. தேவராதன் மூத்தவனாக ஆனபடியால் வேறு பிரவரத்தையும் அடைந்தான்.

## நோட்டு

**தவமகிமை**—இவருடைய உத்தரவின்படி செய்யாவிடில் நம்மையும் சபிப்பார். ஆனதால் இவருடைய ஆஜ்ஞையின்படி நடந்தோமேயாகில் மகரிஷி சந்தோஷப்பட்டுக் கொல்லப்பட்டவர்களைச் ஜீவிக்கச் செய்வார் என்று தெரிந்துகொண்டு, **இருபத்தொருதரம்**—ரேணுகை பர்த்தாவின் மரணத்தால் மிகுந்த துக்கத்தை அடைந்து இருபத்தொரு தடவை மார்பில் அடித்துக்கொண்டதால் அவ்வளவு தடவை க்ஷத்திரியர்களைப் பரசுராமன் கொன்றார். **சுனச்சேபன்**—சுனச்சேபன் பிருகு குலத்தில் பிறந்தவன், ஆதலால் பார்க்கவன் எனப்படுகிறான். வருணன் முதலிய தேவர்களால் அவனுடைய பிராணன் கொடுக்கப்பட்டதால் (காப்பாற்றப்பட்டதால்) தேவராதனெனப் படுகிறான். இவன் அஜீகர்த்தருடைய நடுப்பிள்ளை. அரிச்சந்திரனுடைய புத்திரனாகிய ரோகிதன் அரிச்சந்திரனுடைய யாகத்தின் பசுவிற்காக இவனை விலைக்கு வாங்கினார் இவனைத் தாய் தகப்பனார்கள் விற்றார்கள். அவன் அரிச்சந்திரனுடைய யாகத்தில் யூபத்தில் கட்டப்பட்டான். அப்பொழுது அவன் விசுவாமித்திரரைச் சரணமடைந்ததால் அவர் சில மந்திரத்தை யுபதேசித்தார். அதனால் தேவர்களைத் துதித்தான். அதனால் வருணன் முதலிய தேவர்கள் சந்தோஷித்து அவனுடைய பிராணனைக் காப்பாற்றினார்கள். அவனிடத்தில் விசுவாமித்திரர் கிருபைசெய்து தம்முடைய புத்திரனாக வைத்துக்கொண்டார். அதனால் மதுச்சந்தஸ் முதலியவர்களுக்கு மூத்தவனானான். **பல வகையாக**—சிலர் சபிக்கப்பட்டார்கள், சிலர் அனுசரிக்கப்பட்டார்கள், சுனச்சேபன் புத்திரனாக அங்கீகரிக்கப்பட்டானென்று தாத்பரியம்.

# அத்தியாயம் 17

## க்ஷத்திர விருத்தருடைய வம்சம்

புரூரவசுவின் புத்திரராகிய ஆயுவென்பவருக்கு நகுஷன், க்ஷத்திரவிருத்தன், ரஜி, ரம்பன், அநேநஸ் என்று ஐந்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் க்ஷத்திரவிருத்தருடைய வம்சத்தைக் கேளும். க்ஷத்திரவிருத்தருடைய புத்திரர் சுஹோத்திரர். அவருக்குக்

காச்யர், குசர், கிருத்ஸமதர் என்ற மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். கிருத்ஸமதருடைய புத்திரர் சுனகரென்பவர். அவருடைய புத்திரர் சௌனகரென்பவர். அவர் ரிக்வேதிகளுக்குச் சிறந்தவர். காச்யருக்குக் காசியென்பவர் புத்திரர். அவருடைய புத்திரர் தீர்க்கதபஸ் என்பவர். அவருடைய புத்திரர் தன்வந்தரியென்பவர். அவர் ஆயுர்வேதத்தைச் செய்தவர். அவர் யாகத்தில் பாகமுள்ளவர்: மேலுமவர் ஸ்ரீபகவானுடைய அமிசம்; தம்மை நினைத்தவர்களுடைய சகல உபத்திரவங்களையும் போக்கடிப்பவர்; அவருடைய புத்திரர் கேதுமான் என்பவர். அவருடைய புத்திரர் பீமரதன் அவருடைய புத்திரர் திவோதாஸர். அவருடைய புத்திரர் த்யுமான். அவருக்கு ப்ரதர்தனரென்றும், சத்ருஜித் என்றும், ரிதத்வஜரென்றும், குவலயாச்வரென்றும் பெயருண்டு. அவருக்கு அலர்கன் முதலிய புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் அலர்கர் என்பவர் யௌவன வயதை அடைந்து அறுபது ஆறு யிரம வருஷங்கள் பூமியைப பரிபாலித்தார். அவருக்குச் சனனிதி என்று ஒரு புத்திரர் உண்டானார். அவருக்குத் தர்மகேது வென்றும், அவருக்குக் சுகேதனரென்றும், அவருக்குச் சுநீதரென்றும், அவருக்கு ஸத்யகேது வென்றும், அவருக்குத் திருஷ்டகேதுவென்றும், அவருக்குச் சுகுமாரரென்றும், அவருக்கு விதிஹோத்திரரென்றும், அவருக்குப் பார்க்கரென்றும், அவருக்குப் பார்க்கபூமியென்றும புத்திரர்கள் உண்டானார்கள். இவர்கள காசியின் வமிசத்தில் பிறந்த அரசர்கள். க்ஷத்ரவிருத்தருடைய (காச்யருடைய பிதாமகர்) வமிசத்தை அனுசரித்தவர்கள்.

11—19. ரம்பனென்பவருக்கு ரபஸரென்பவர் புத்திரர். அவருக்குக் கம்பீரரென்பவர் புத்திரர். அவருக்குக் கிருதரென்பவர் புத்திரர். அவருடைய பத்தினியிடத்தில் பிராமண வமிசம் உண்டாயிற்று. அநேநஸ்ஸுடைய வமிசத்தைக் கேளும். அநேநஸின் புத்திரர் சுத்தரென்பவர். அவருடைய புத்திரர் சுசி என்பவர். அவருக்குத் திருககுப் என்ற புத்திரர் உண

டானர். அவருக்குத் தர்மஸாரதி என்றும் பெயருண்டு. அவருடைய புத்திரர் சாந்தரயர். அவர் ஞான யோகத்தை அனுஷ்டித்து மோக்ஷத்திற்கு உபயோக மானவைகளை அனுஷ்டித்தார். (அதனால் அவருக்குப் புத்திரனில்லை என்று தாத்பர்யம்) ரஜி என்பவருக்கு மிக்க தேஜஸுள்ள ஐந்நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அந்த ரஜி என்பவர் தேவர்களின் வேண்டுகோளின் படி சுவர்க்கலோகஞ் சென்று அசுரர்களைக் கொன்று மகேந்திரனுக்கு சுவர்க்கத்தைச் சுவாதீனப்படுத்தினார். மகேந்திரன் பிரகலாதரிடத்தில் மிகவும் சந்தேகப் பட்டு சுவர்க்க இராஜ்யத்தை ரஜி என்பவருக்குத் திருப் பிக்கொடுத்துத் தம்மை எப்பொழுதும் காப்பாற்ற வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். இப்படி சில காலம் சென்றபின் ரஜி என்ற அரசன் மரணமடைந் தார். அப்பொழுது மகேந்திரன் அவருடைய புத்திரர் களை நோக்கி, தன்னுடைய சுவர்க்க இராஜ்யத்தைத் தம்மிடம் திருப்பிக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார். அதைக் கேட்ட ரஜியின் புத்திரர்கள் அப்படிச் செய்யா திருந்தது மன்றி யஜ்ஞ பாகத்தையும் தாங்களே புசித்து வந்தார்கள். அப்பொழுது இந்திரனுடைய வேண்டு கோளின்படி பிரகஸ்பதி பகவான் ஆபிசார விதிப்படி அக்கினியில் ஹோமஞ்செய்தார். அதனால் ரஜியின் புத்திரர்களுடைய புத்தியானது மாறி, இந்திர பதத் திற்கு விரோதமாக நடக்க ஆரம்பித்தார்கள். அந்தச் சமயம் பார்த்து அவர்கள் எல்லோரையும் மகேந்திரன் கொன்றார். க்ஷத்ரவிருத்தருடைய பௌத்திரனாகிய குச ருக்குப் பிரீதி என்ற புத்திரர் பிறந்தார். அவருடைய புத்திரர் ஸஞ்சயரென்பவர். அவருடைய புத்திரர் ஜய ரென்பவர். அவருடைய புத்திரர் கிருதரென்பவர். (ஹரியச்வகரென்றும் சிலர் சொல்லுவதுண்டு) அவ ருடைய புத்திரர் சகதேவர் என்பவர். அவருடைய புத்திரர் பீமரென்பவர். அவருடைய புத்திரர் ஜயத் சேன ரென்பவர். அவருடைய புத்திரர் ஸங்கிருதி என் பவர். அவருடைய புத்திரர் ஜயரென்பவர். அவர் மிகுந்த சூரர்; மகா ரதர்; இவர்கள் க்ஷத்ரவிருத் தருடைய வமிசத்தில் பிறந்த அரசர்கள். நகுஷ வமிசத்

தில் பிறந்தவர்களைச் சொல்லுகிறேன், கேளும்" என்று சுகர் பரீக்ஷித்தைப் பார்த்துச் சொன்னார்.

## நோட்டு

தன்வந்திரி-இவர் அமிருதத்திற்காகத் திருப்பாற்கடலைக் கடையும்பொழுது சமுத்திரத்திலிருந்து உண்டானவரல்லவா? தீர்க்கதபஸின் புத்திரரென்று சொல்வது பொருந்துமாவென்றால் சமுத்திரத்திலிருந்து தன்வந்திரி ஜனித்தவுடன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை நோக்கி, "யாகத்தில் எனக்கு ஹவிர்ப்பாகம் கிடைக்கும்படி செய்யவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். அதனைக் கேட்ட ஸ்ரீமந் நாராயணன் தன்வந்திரியை நோக்கி, "யாகத்தில் பாகங்கள் ஏற்கனவே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. உமக்காகப் புதிதாக ஏற்படுத்த முடியாது. ஆனாலும் இரண்டாவது துவாபரயுகத்தில் நீர் வேறு ஜன்மத்தை அடைவீர். அந்த ஜன்மத்தில் அணிமா முதலிய ஸித்திகள் உமக்குக் கிடைக்கும். யாகத்தில் பாகமும் ஏற்படும். ஆயுர்வேதத்தை எட்டு வகையாகப் பிரித்து உலகத்தில் பரவச்செய்வீர்" என்று அநுக்கிரகித்து மறைந்தார். அதனால் அவர் இரண்டாவது துவாபர யுகத்தில் தீர்க்க தபஸ் என்பவருக்குப் புத்திரராக ஜனித்தார்—அரி வமிசம் அத்-33. பிரகலாதரிடம்—முன்னொருகால் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நேர்ந்தது. அப்பொழுது தேவர்களும் அசுரர்களும் பிரம்மதேவரிடம் சென்று, "ஓ பிரபுவே! எங்களுக்குள் யாருக்கு ஜயம் வரும்; யாருக்கு அபஜயம் வரும் சொல்லவேண்டும்" என்று கேட்டார்கள். அதனைக் கேட்ட பிரம்மதேவர் அவர்களை நோக்கி, "ரஜியென்ற அரசன் எந்தக் கக்ஷிக்கு ஒத்தாசை செய்வாரோ அந்தக் கக்ஷிக்கு ஜயமுண்டாகும்" என்றார். அதனைக் கேட்ட தேவர்கள் ரஜியிடஞ் சென்று தங்கள் பக்ஷத்திலிருந்து சகாயஞ் செய்யவேண்டுமாகக் கேட்டுக்கொண்டார்கள். அதனைக் கேட்ட ரஜியானவர் என்னை இந்திரனாக வைத்து எனக்குச் சுவர்க்க ராஜ்யத்தைக் கொடுப்பீர்களானால் உங்களுக்கு சகாயஞ் செய்வேனென்றார். அதற்குத் தேவர்கள் சம்மதித்தார்கள். பின்பு அசுரர்கள் ரஜியினிடம் வந்து 'தங்களுக்குச் சகாயஞ் செய்யவேண்டும்' என்று கேட்டுக்கொண்டார்கள். அதனைக் கேட்ட அரசன் அவர்களை நோக்கி, 'தேவர்களை ஜெயித்த பின் இந்திரபதத்தை எனக்குக் கொடுப்பதானால் உங்களுக்கு ஒத்தாசை செய்வேன்' என்றார். அதனைக் கேட்ட அசுரர்கள் அரசனை நோக்கி, 'எங்களுக்கு அதிபதி பிரகலாதர். அவருக்காக வல்லவோ இந்திர பதத்தைச் சம்பாதிக்க முயல்கிறோம், அதனை

உமக்கு எப்படிக் கொடுக்க முடியும்' என்று சொல்லி, தங்க ளிருப்பிடஞ் சென்றார்கள். பின்பு யுத்தம் நடந்தது. தேவர் களுடைய பக்ஷத்திலிருந்து ரஜி அசுரர்களை ஜயித்து இந்திர னானார்.—ஹரி வம்சம் அத்-32.

# அத்தியாயம் 18

## யயாதியின் சரிதம்

நஹுஷருக்கு யதி, யயாதி, ஸம்யாதி, ஆயாதி, வியதி, கிருதி என்று ஆறு புத்திரர்கள் ஜீவனுக்கு ஆறு இந்திரியங்கள் போலப் பிறந்தார்கள். அவர்களுக்குள் யதியென்பவருக்கு நஹுஷன் ராஜ்யாபிஷேகஞ் செய்ய முயன்றார். அதனைக் கண்ட யதி "ராஜ்யத்தை அடைந் தால் ஐச்வர்ய மதமுண்டாகும்; அதனால் தன்னை யறியா தவனாகிவிடுவான்" என்று யோசித்து இராஜ்யத்தை விரும்பவில்லை. சொற்பகாலத்தில் நஹுஷன் இந்திர பதத்தை அடைந்து சொர்க்க இராஜ்யத்தைப் பரிபா லித்தார். இந்திராணியின் நிமித்தமாக ஸப்தரிஷிகள் அவரைப் பாம்புப் பிறவியை அடையும்படி சபித்தார் கள். அவரும் அப்பிறவியை அடைந்தார். அதன் பின் யயாதி அரசனானார். அவர் சுக்ராசாரியருடைய பெண்ணையும், விருஷபர்வாவின் கன்னிகையையும் விவாகஞ் செய்துகொண்டார். தம்முடைய இளைய சகோதரர்களான சய்யாதி முதலியவர்களுக்கு நான்கு திக்குகளைக் கொடுத்து "அவ்விடத்துத் தேசங்களைப் பரி பாலிக்கும்படி ஆஞ்ஞாபித்தார்" என்று சுகர் பரீக்ஷித் திற்குச் சொன்னார்.

5—14. அதனைக் கேட்ட அரசன், "பகவானாகிய சுக்ரன் பிரமரிஷியல்லவா? யயாதி க்ஷத்திரியன் க்ஷத் திரியனுக்கும் பிராமணனுக்கும் எப்படி சம்பந்தம் நேர்ந் தது? அது பிரதிலோமமல்லவா?" என்று கேட்டார். அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "முன்னொரு கால் அசுரர்களுக்கு அரசனாகிய விருஷபர்வா வென்ற வனுடைய புத்திரியான சர்மிஷ்டை யென்பவள் அநேக தோழிகளுடன் உத்தியானவனத்தில் விளையாடினாள்.

6005

அப்பொழுது அசுரர்களுக்கு ஆசாரியரான சுக்கிரனுடைய கன்னிகையாகிய தேவயானியென்பவளும் அவர்களுடன் சேர்ந்து விளையாடிக்கொண்டிருந்தாள். அந்தத் தோட்டத்திலிருக்கும் மரங்கள் புஷ்பித்திருந்தன. அவைகளில் வண்டுகள் இனிமையாகச் சப்தித்துக்கொண்டுமிருந்தன. அந்தப் பெண்கள் எல்லோரும் அங்கிருக்கும் தடாகஞ் (குளம்) சென்று தங்கள் தங்கள் ஆடைகளைக் கரையில் வைத்துவிட்டு ஜலத்தில் இறங்கி ஒருவர்மேல் ஒருவர் ஜலத்தை இறைத்துக்கொண்டு கிரீடித்தார்கள். அப்பொழுது பரமசிவன் பார்வதியுடன் விருஷபத்தின்மீதேறி அந்த மார்க்கமாகச் சென்றார். அவரைக் கண்டவுடன் அந்தப் பெண்கள் கரையில் வந்து ஆடையை உடுத்திக்கொண்டார்கள். அப்பொழுது சர்மிஷ்டையானவள் (தன்னுடைய ஆடை என்று நினைத்து) தேவயானியின் ஆடையையுடுத்திக்கொண்டாள். அதனைக் கண்ட தேவயானி மிக்க கோபங்கொண்டு, "நம்முடைய வேலைக்காரி செய்ததைப் பாருங்கள். யாகத்து ஹவிஸை நாய் திருடிக்கொண்டாற்போல நாம் உடுத்திக்கொள்ளக்கூடிய ஆடையை இவள் கட்டிக்கொண்டாள். ஆச்சரியம்! பிராமணர்கள் பரம புருஷனுடைய முகத்திலிருந்து உண்டானவர்கள்; பரமாத்மாவை யுபாசிப்பவர்கள்; உலகத்திற்கு இதமான வேதநெறியைக் காண்பிப்பவர்கள்; உலகபாலர்களும், ஸ்ரீநிவாஸராகிய பகவானும் பிராமணர்களை வணங்குகிறார்கள். அந்தப் பிராமணர்களுக்குள் நாம் பிருகு குலத்தில் பிறந்தவர்களாகையால் சிறந்தவர்கள். இவளுடைய பிதாவாகிய அசுரன் எங்களுக்குச் சிஷ்யன். அப்படியிருக்க, சூத்திரன் வேதத்தைக் கிரகித்தாற்போல நம்முடைய ஆடையை இவள் எடுத்துக்கொண்டாள்" என்று சொன்னாள்.

15—23. அதனைக் கேட்ட சர்மிஷ்டை மிக்க கோபங்கொண்டு உதட்டைக் கடித்துக் குரு புத்திரியை நோக்கி, "அடி இரப்பவளே! உன்னுடைய நட்த்தையை நீ அறியாமல் ஏன் புலம்புகிறாய்? காக்கைகள்போல் நம்முடைய வீட்டில் நீ காத்துக்கொண்டிருக்கவில்லையா?"

என்று நிந்தித்து, அவளுடைய ஆடையைப் பிடுங்கிக் கொண்டு அவளைக் கிணற்றில் தள்ளித் தன்னுடைய அரண்மனைக்குச் சென்றாள். பின்பு யயாதி மகாராஜன் வேட்டைக்காக வனத்தில் சஞ்சரித்து வரும்பொழுது தண்ணீருக்காக அந்தக் கிணற்றின் சமீபம் வந்து அடைந்து அதனை எட்டிப்பார்த்தார். கிணற்றில் ஆடையில்லாதிருக்கும் தேவயானியிடம் மிகுந்த கிருபை வைத்துத் தம்முடைய மேலாடையைக் கொடுத்து உடுத்திக்கொள்ளச்செய்து, தமது கையினால் அவளைத் தூக்கினார். அந்தப் பெண் அரசனை நோக்கி, "ஓ மகா ராஜ! என்னுடைய கையை நீர் பிடித்தபடியால் எனக்கு நீரே பர்த்தா. வேறொருவர் என் கையைப் பிடிக்கவேண்டாம். கிணற்றுக்குள்ளிருக்கும் எனக்கும் உமக்கும் நேர்ந்த சம்பந்தமானது தெய்வச் செயலால் ஏற்பட்டதே யொழியப் புருஷ யத்தனத்தால் ஏற்பட்ட தல்ல மேலும், பிரகஸ்பதியின் புத்திரனாகிய கசனென்பவரை நான் சபித்தபடியால் அவர் எனக்குப் பதில் சாபங் கொடுத்தார். 'அதனால் பிராமணன் எனக்குப் பர்த்தாவாகமாட்டான்' என்றாள். அதனைக் கேட்ட யயாதியானவர் அவள் சொன்ன விஷயம் தம்முடைய மனத்திற்கு உசிதமென்று தோன்றாவிடினும் அவளிடத்தில் தமக்கு ஆசையுண்டானபடியாலும், தெய்வீகமாக ஏற்பட்ட சம்பந்தமாகையாலும் அதனை அங்கீகரித்துத் தமது நகரஞ் சென்றார்.

24—51. பின்பு தேவயானி அழுதுகொண்டு பிதாவிடஞ் சென்று சர்மிஷ்டையால் செய்யப்பட்ட எல்லாவற்றையும் தெரிவித்தாள். அதனைக் கேட்ட சுக்ராசாரியர் மிகவும் துக்கமடைந்து, புரோகிதனாகவிருப்பது மிகவும் தாழ்ந்தது; உஞ்சவிருத்தியே மேலானது என்று சொல்லிக்கொண்டு தேவயானியுடன் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டார். அசுரர்களுக்கு அரசனாகிய விருஷபர்வா வென்பவர் 'சுக்ராசாரியர் தேவர்களுக்கு ஜயத்தைக் கொடுக்கவேண்டுமென்று நினைத்திருக்கிறார்' என்பதை யறிந்து ஆசாரியரிடம் வந்து நமஸ்கரித்து அவரைச் சமாதானஞ் செய்தான். தீர்க்க

கோபமற்றவராகிய சுக்ரன் அசுரனை நோக்கி, "ஓ ராஜனே! என்னுடைய புத்திரியாகிய இவளுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்யவேண்டும். இவளை விட்டுவிடுவதற்கு எனக்கிஷ்டமில்லை" என்றார். அதனைக் கேட்ட அசுரன் 'அப்படியே செய்கிறேன்' என்று ஒப்புக்கொண்டான். அப்பொழுது தேவயானி 'என்னுடைய பிதா யாருக்குக் கல்யாணஞ்செய்து கொடுக்கிறாரோ அவ்விடத்திற்கு நான் போகும்பொழுது என்னுடன் சர்மிஷ்டையும் வரவேண்டும்' (வேலைசெய்வதற்கு என்று தாத்பரியம்) என்ற தன்னுடைய அபிப்பிராயத்தை வெளியிட்டாள். அதனைக் கேட்ட சர்மிஷ்டை தன்னுடைய பிதா முதலியவர்களுக்கு நேர்ந்த சங்கடத்திற்காகத் தன்னுடைய தோழிகளுடன் தேவயானிக்கு வேலைசெய்யச் சம்மதித்தாள். பின்பு சுக்ராசாரியர் தேவயானியைச் சர்மிஷ்டையுடன் யயாதிக்குக் கொடுத்து, அவரை நோக்கி, 'சர்மிஷ்டையை ஒருபொழுதும் படுக்கையில் வைத்துக்கொள்ளவேண்டாம்' என்றும் ஆஞ்ஞாபித்தார். இப்படிச் சிலகாலஞ் சென்றபின் தேவயானி நல்ல புத்திரனைப் பெற்று பர்த்தாவுடன் சுகித்திருப்பதைப் பார்த்து, சர்மிஷ்டை தனக்கும் புத்திரன் பிறக்கவேண்டி ருதுஸ்நானஞ் செய்த காலத்தில் யயாதியை வேண்டிக்கொண்டாள். யயாதி சுக்ரனுடைய வார்த்தையை நினைத்திருந்தும் (ருது காலத்தில் ஸ்திரீயைப் புணருவது தர்மமென்று நினைத்து) தெய்வச் செயலால் சர்மிஷ்டையுடன் ரமித்தார். யயாதிக்கு தேவயானியிடத்தில் யது, துர்வஸு என்ற இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். சர்மிஷ்டையினிடத்தில் த்ருஹ்யன், அநு, பூரு என்ற மூன்று புத்திரர்கள் உண்டானார்கள். மிக்க அகங்காரமுள்ள தேவயானி யானவள் தன்னுடைய பர்த்தாவினால் சர்மிஷ்டைக்குக் கர்ப்பம் உண்டாயிற்றென்பதை யறிந்து மிகுந்த கோபங்கொண்டு பிதாவிடஞ் சென்றாள். காமியான யயாதி பலவாறாக நல்வார்த்தைகளைச் சொல்லியும், அவளுடைய காலைப் பிடித்தும் அவள் சமாதானப்படவில்லை. சுக்ரன் தேவயானியின் முகமாகச் சமாசாரத்தை அறிந்து யயாதியை நோக்கி, "ஓ பெண்ணாசையால் பொய் சொல்ப

வனே! நீ நரையை (கிழத்தனம்) அடைவாய்" என்று சபித்தார். அதனைக் கேட்ட யயாதி சுக்ரனை நோக்கி, "ஓ பகவன்! விஷயங்களை இன்னும் அனுபவிக்க வேண்டுமென்ற விருப்பமுள்ளவனாக இருக்கிறேன். ஆனதால் யாராவது என்னுடைய கிழத்தனத்தைப் பெற்றுக்கொண்டு யௌவனத்தைக் கொடுக்கச் சம்மதித்தால் மாற்றிக்கொள்ளும் சக்தியை அனுக்கிரகிக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். அவரும் அப்படியே அனுக்கிரகித்தார். பின்பு நரையை அடைந்த யயாதி, மூத்த புத்திரனாகிய யதுவை நோக்கி, "ஓ யதுவே! விஷயங்களை அனுபவித்தது போதுமென்ற திருப்தி எனக்கு உண்டாகவில்லை. உன்னுடைய மாதாமகருடைய சாபத்தால் நரை வந்திருக்கிறது. இந்தக் கிழ வயதைப் பெற்றுக்கொண்டு உன்னுடைய யௌவனத்தை எனக்குக் கொடு. சில காலம் நான் யுவாவாக இருந்து போகங்களை அனுபவிக்கிறேன்" என்றார். அதனைக் கேட்ட யது, பிதாவை நோக்கி, "கிராமிய சுகங்களைப் பலமுறை அனுபவித்த உமக்கே திருப்தியுண்டாகவில்லை. அந்த சுகத்தையே அனுபவிக்காதவனாகிய நான் நரையை அடைந்து எப்படியிருப்பேன்? ஆனதால் எனக்குச் சம்மதமில்லை" என்றான். பின்பு யயாதி துர்வஸு, த்ருஹ்யன், அநு ஆகிய இவர்களை நோக்கி யதுவைக் கேட்டது போலக் கேட்டார். அவர்களும் அநித்திய இன்பங்களை நித்தியங்களாக நினைத்துச் சம்மதிக்கவில்லை. அப்பொழுது யயாதி வயதால் குறைந்தவனும், குணங்களால் மேலானவனுமான பூருவை நோக்கி, "உன்னுடைய சகோதரர்கள்போல நீயும் சொல்லக்கூடாது. என்னுடைய நரையைப் பெற்றுக்கொண்டு யௌவனத்தைக் கொடு" என்று கேட்டார். அதனைக் கேட்ட பூரு பிதாவை நோக்கி, "ஓ மகாராஜ! பிதாவினால் புத்திரனுடைய சரீரம் உண்டுபண்ணப்படுகிறபடியால் அதற்குப் பதிலாகப் பிதாவிற்குப் புத்திரன் என்ன உபகாரத்தைச் செய்யப்போகிறான்? எந்தப் புத்திரனிடத்தில் பிதா சந்தோஷத்தை அடைகிறாரோ அவன் மேலான க்ஷேமத்தை அடைவான். பிதாவினுடைய மனதிலிருப்பதைத் தெரிந்துகொண்டு

"செய்யும் புத்திரன் உத்தமன். பிதாவினால் சொல்லப் பட்டபடி நடப்பவன் மத்யமன். அதை அசிரத்தை யாய்ச் செய்பவன் அதமன். பிதாவின் உத்தரவை அனுஷ்டிக்காதவன் அவருடைய மூத்திரத்திற்கு ஒப் பானவன்" என்று அவருடைய நரையை வாங்கிக் கொண்டான். யயாதி பூருவின் யௌவனத்தை யடைந்து விஷய போகங்களை அனுபவித்து, ஏழு தீவு களுள்ள பூமியைப் பரிபாலித்தார். தேவயானியும் யயாதிக்குப் பிரியமானவைகளைச் செய்து, மனத்தாலும், காயத்தாலும், வாக்கினாலும் அவரை யுபாசித்தாள். பின்னுமவர் பூர்ணமாக தக்ஷிணை கொடுத்து அநேக யாகங்களைச் செய்து சகல தேவரூபியாகிய பகவானைப் பூசித்தார். மேலும், எந்தப் பகவானிடத்தில் இந்த ஜகத் தானது சொப்பன மாயைகளுடன் கூடிய மனோரதம் போல சில வேளை இருப்பதாகத் தோன்றுகிறதோ, சில சமயம் தோன்றவில்லையோ, ஆகாசத்தில் மேகங்கள் போலவும் தோன்றுகிறதோ, அந்த வாஸுதேவரும், இருதய குகையிலிருப்பவரும், அணுவிற்கு அணுவு மாகிய பரமபுருஷனையே தியானஞ் செய்து வேறொன் றையும் விரும்பாமல் யாகஞ்செய்தார். இப்படி அநேக வருஷங்கள் விஷய போகங்களை அனுபவித்து, இந்திரி யங்களைத் திருப்திசெய்தும் போதுமென்ற திருப்தி யுண்டாகவில்லை.

## நோட்டு

**இந்திர பதத்தை**—நகுஷன் இந்திர பதத்தை அடைந்து இந்தி ராணியை ஆசித்தார். அவள் ஸப்தரிஷிகளிடம் தெரிவித்தாள். அவர்கள் அதைமனதில் வைத்துக்கொண்டிருந்தார்கள். பின்பு ஸப்தரிஷிகள் பல்லக்குச் சுமக்க அதன் மீதிருந்த நகுஷன் காலால் மகரிஷிகளை உதைத்து, ஸர்ப்ப (சீக்கிரமாக நடக்கவேண்டும்) என்றார். அதனைக் கேட்ட மகரிஷிகள், 'சர்ப்ப ஜன்மத்தை அடைவாய்' என்று சபித்தார்கள். **கசனென்பவனை**—முன் னொருகால் பிரகஸ்பதியின் புத்திரர் கசனென்பவர் சுக்ரனிடம் சிஷ்யராகவிருந்து ஸஞ்சீவினி என்ற வித்தையைக் கற்றுக் கொண்டார். அப்பொழுது தேவயானி அவரிடம் ஆசைப்பட் டுத் தன்னைக் கல்யாணஞ் செய்துகொள்ளும்படி வேண்டிக் கொண்டாள். அதனைக் கேட்ட கசர், 'நீர் எனக்கு ஆசாரிய

னுடைய புத்திரியாகையால் உன்னைக் கல்யாணஞ் செய்து கொள்ளமாட்டேன்" என்றார். அதனைக் கேட்டுத் தேவயானி கோபமடைந்து, "என்னுடைய பிதாவினிடம் அப்யசித்த வித்தையானது பயனற்றதாக ஆகட்டும்" என்று சபித்தாள். அதனைக் கேட்ட கசன், "உனக்குப் பிராமணன் பர்த்தாவாக ஆகவேண்டாம்" என்று சபித்தான்.

# அத்தியாயம் 19

## யயாதி வைராக்கிய மடைந்தது

யயாதி வெகு காலமாக விஷய போகங்களை அனுபவித்து, 'மாதர்களால் ஜயிக்கப்பட்டோம்' என்றதை அறிந்து நிர்வேதத்தை அடைந்து பத்னியை நோக்கி, "அடி சுக்ரருடைய புத்திரி! என்னைப்போன்ற ஒருவனுடைய ஒரு கதையைச் சொல்லுகிறேன். அதனைக் கேள். வனத்தில் வசிப்பவர்களான தைரியசாலிகள் அதைப்பற்றித் துக்கிப்பார்கள். ஒரு காட்டில் ஒரு ஆடானது தான் கல்யாணஞ் செய்துகொள்வதற்காகப் பெண் ஆட்டைத் தேடித் திரிந்தது. அப்பொழுது ஒரு கிணற்றில் விழுந்திருந்த பெண் ஆட்டைத் தெய்வச் செயலாகக் கண்டது. அதனிடத்தில் ஆசைகொண்டு அதனை வெளியில் கொண்டுவருவதற்காக ஓர் உபாயஞ் செய்தது. எப்படியெனில், தன்னுடைய கொம்புகளால் கிணற்றின் மேற்புறத்தை இடித்தது. ஜலம் வெளியில் சென்றது. அதிலிருந்த பெண் ஆடும் வெளிப்பட்டு அதனிடத்தில் ஆசைப்பட்டது. அப்பொழுது அந்த ஆண் ஆடானது பருத்துக் கொழுத்து மைதுனத்தில் மிக்க சாமர்த்தியமுள்ளதாக இருந்தபடியால் இன்னும் பல பெண் ஆடுகள் அதனிடம் ஆசைப்பட்டு அதனைச் சுற்றிக்கொண்டன. அந்த ஒரு ஆண் ஆடானது அநேக பெண் ஆடுகளுடன் சேர்ந்து ரமித்ததுமன்றிக் காமனென்கிற பிசாசம் தன்னைப் பிடித்துக் கொண்டதென்பதையும் அறியாமலிருந்தது. கிணற்றிலிருந்த பெண் ஆடு அதனைச் சகியாமல் பார்வைக்கு மித்திரன்போலும், உண்மையில் சத்துருவும், காமியும், இந்திரியங்களுக்குத் திருப்திசெய்வதுமான அந்த

ஆட்டைவிட்டுச் சென்றது. அதனைக் கண்ட ஆண் ஆடு அதன் பின் சென்று பெண் பூனையை ஆண் பூனை யனுசரித்தாற்போலப் பலவகையாகச் சமாதானஞ்செய்தும் பெண் சமாதானப்படவில்லை. அந்தப் பெண்ணாட்டின் யசமானனாகிய ஒரு பிராமணன் ஆண் ஆட்டின் விருஷணத்தை (பீஜம்) அறுத்தான். பின்னும அந்தப் பிராமணன் தன்னுடைய பெண் ஆட்டிற்காக அந்த விருஷணத்தை ஒட்டிவைத்தான். அந்த ஆடு விருஷணத்தை அடைந்து கிணற்றிலிருந்து கிடைத்த பெண்ணுடன் வெகுநாளாகக் கிரீடித்தும் இப்பொழுதும் திருப்தியடையவில்லை. அதுபோல நான் உன்னிடத்தில் பிரேமையால் மோகித்துத் தன்னை மறந்தவனாகி இருக்கிறேன். அதிக ஆசையுள்ளவனுடைய மனத்தை நெல் முதலிய தானியங்களும், பசுக்களும், தங்கம் வெள்ளி முதலியவைகளும், மாதர்களும் திருப்திசெய்ய முடியாது. விஷயங்களைச் சேவிப்பதால் காமம் அடங்காது. அக்கினியில் அவியை ஹோமஞ்செய்தால் அக்கினி பிரகாசிக்குமே யொழிய அணையுமா? எப்பொழுது சகல பிராணிகளிடத்திலும் கெடுதலான எண்ணத்தைச் செய்யாமல் சமமாகப் பார்க்கிறானே, அவனுக்குச் சகல திக்குகளும் சுகக்ரங்களாக இருக்கும். கெட்ட புத்தியுள்ளவர்களால் எது விடமுடியாததோ, அவயவங்கள் ஜரையை அடைந்தாலும் எது குறைகிறதில்லையோ, துக்கங்களைக் கொடுக்கும் அந்த ஆசையை யொழிக்கவேண்டும். அதனால் சுகங் கிடைக்கும. மாதாவாலும், சகோதரியாலும், பெண்ணாலும் அவர்களுடன் ஏகாந்தமாக வசிக்கக்கூடாது. இந்திரியங்கள் மிக்க பலமுள்ளவைகளாகையால் வித்வானையும் விஷயத்தில் ஆசைப்படச் செய்கின்றன. விஷய போகங்களை நான் ஆயிரம் வருஷங்களாக அனுபவித்தேன். ஆனாலும் ஒவ்வொரு சமயத்திலும் அவைகளில் ஆசை விருத்தியாகிறதே யொழியக் குறையவில்லை. எப்பொழுதும் நான் மனத்தைப் பரமாத்மாவிடத்தில் சமர்ப்பித்து, சுக துக்கங்களை வென்று, அகங்காரமற்றவனாகி மான்களுடன் வனத்தில் சஞ்சரிப்பேன். நேரில் பார்க்கப்படும் இந்த உலகத்தின் சுகத்தையும், சாஸ்திரம் முதலியவை

களால் தெரிந்துகொள்ளப்பட்ட பரலோக சுகத்தையும் அநித்தியமென்று நினைத்து அவைகளில் ஆசைப்படாமலும் அவைகளை அனுபவிக்காமலும் இருக்கவேண்டும். அவைகளில் ஆசைப்படுவதால் சம்சாரமும் ஆத்மநாசமும் ஏற்படுகிறதென்பதை நன்ருகத் தெரிந்துகொள்ளவேண்டும். அவனே ஆத்மாவின் உண்மையைத் தெரிந்துகொள்வான்" என்று சொல்லிப் பூருவின் யௌவன வயதை அவருக்குக் கொடுத்து நரையை வாங்கிக்கொண்டார். பின்னுமவர் தென்கிழக்குத் தேசங்களைத் திருஹ்யனுக்கும், தெற்குத் தேசங்களை யதுவிற்கும், மேற்குத் தேசங்களை துர்வசுவிற்கும், வடக்குத் தேசங்களை அனுவிற்கும் கொடுத்து, மனிதர்களுக்குச் சிறந்தவரான பூருவிற்குச் சகல பூமண்டலத்தையும் கொடுத்து, மற்ற புத்திரர்களைப் பூருவின் உத்தரவின்படி நடக்கச்செய்து வனஞ் சென்ருர். மேலுமவர் இறக்கை முளைத்தவுடன் பறவை தன்னுடைய கூட்டை விட்டுவிடுவதுபோல அநேக வருஷங்களாக அனுபவிக்கப்பட்ட விஷயங்களில் ஆசையைக் கணநேரத்தில் ஒழித்தார் (வைராக்கியத்தை அடைந்தார்). இப்படி யயாதி எல்லா ஆசைகளையும் ஒழித்து ஆத்மானுபவத்தால் முக்குணங்களை வென்று, சுத்தனும பரனுமாகிய வாஸுதேவரிடத்தில் மனத்தை நிலையாகச் செலுத்திஞர்.

26—29. தேவயானியும் யயாதியிஞல் சொல்லப்பட்ட கதையைக் கேட்டுப் பரிகாசமென்றே நினைத்தாள். பின்னுமவள், 'தண்ணீர்ப்பந்தலிலே ஜனங்கள் வந்து சேர்ந்து, சிரமத்தை நிவர்த்திசெய்துகொண்டு பல திக்குகளில் செல்வதுபோலக் கர்மத்திற்கு வசப்பட்டு, ஜனங்கள் சில காலம பந்துக்களென்ற வியாஜத்துடன் வசித்துப் பிரிவையடைந்துவருகிருர்கள். ஆனதால் ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லை. ஈசுவரனுடைய மாயையால் ஏற்பட்டது அபிநிவேசம் என்று தெரிந்துகொண்டு சகல விஷயங்களையும் சொப்பனம் போன்றவைகள் என்று நினைத்துச் சகல ஆசைகளையும் ஒழித்தாள். ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மனத்தைச் சமர்ப்பித்துத் தன்

னுடைய சரீரத்தை விட்டாள். பகவானும், உலகத்தைப் படைப்பவரும், சகல பிராணிகளுக்கும் இருப்பிடமானவரும், சாந்தரும், வாஸுதேவருமான பிரமத்திற்கு நமஸ்காரம்.

---

# அத்தியாயம் 20

## பூருவின் வமிசம்

"ஓ பரதவமிசத்திய அரசனே! நீர் எந்த வமிசத்தில் பிறந்தீரோ, அந்தப் பூருவின் வமிசத்தைச் சொல்லுகிறேன், கேளும். அந்த வமிசத்தில் ராஜரிஷிகளும், பிராமண வமிச பிரவர்த்தர்களும் உண்டானார்கள். பூருவிற்கு ஜனமேஜயர் புத்திரர். அவருடைய புத்திரர் பிராசின்வா என்பவர். அவருடைய புத்திரர் பிரவீரோதர் என்பவர். அவருடைய புத்திரர் நமன்யுவென்பவர். அவருடைய புத்திரர் சாரு வென்பவர். அவருடைய புத்திரர் ஸுத்யு வென்பவர். அவருடைய புத்திரர் பஹுகதரென்பவர். அவருடைய புத்திரர் சரியாதியென்பவர். அவருடைய புத்திரர் ஸம்யாதி யென்பவர். அவருடைய புத்திரர் ரௌத்ராச்வரென்பவர். அவருக்குக் கிருதாசியென்ற தேவமங்கையினிடத்தில் ரிதேபு, கக்ஷேபு, ஸ்தலேபு, கிருதேபு, ஜலேபு, ஸன்னதேபு, தர்மேபு, ஸத்யேபு, வ்ரதேபு, வனேபு என்று பத்துப் புத்திரர்கள் பிறந்தார்கள். அது உலக உருவரான பகவானுக்குப் பத்து இந்திரியங்கள் உண்டானதுபோலிருந்தது. ரிதேபுவிற்கு ரந்திஸார னென்ற புத்திரருண்டானார். அவருக்கு ஸுமதி, த்ருவர், அப்ரதிரதர் என்று மூன்று புத்திரர்களுண்டானார்கள். அப்ரதிரதருடைய புத்திரர் கண்வரென்பவர். அவருடைய புத்திரர் மேதாதிதி யென்பவர். அவருக்கு ப்ரஸ்கந்தர் முதலிய பிராமணர்கள் உண்டானார்கள்.

7—58. ஸுமதியின் புத்திரர் ரைப்யரென்பவர். அவருடைய புத்திரர் துஷ்யந்தரென்பவர். அவர் வேட்டைக்காக வனத்திற்குச் சென்று கண்வ மகரிஷியின் ஆசிரமஞ் சென்றார். அவ்விடத்தில் லக்ஷ்மிதேவி போலமிகுந்த அழகு பொருந்தியவளான ஒரு பெண்

னைக் கண்டார். அவளுடைய காந்தியால் அந்த வனம் பிரகாசிக்கிறது. அவளைக் கண்டவுடன் வழி நடந்த சிரமம் நிவர்த்தியாயிற்று. மேலும் அவர் அவளிடம் ஆசைகொண்டு அவளிடஞ் சென்று காமவெறியுள்ளவராகி, "அடி! தாமரைமலரின் மத்தியம்போன்ற வர்ணமுள்ளவளே! நீ யார்? யாருடைய பெண்? எதற்காக இந்த நிர்ஜனமான காட்டில் வசிக்கிறாய்? புரு வம்சத்திய அரசர்களுடைய மனதானது அதர்மத்தில் செல்லுகிற வழக்கமில்லை. என்னுடைய மனது உன்னிடத்தில் ஆசைப்படுகிறது. ஆனதால் உன்னை க்ஷத்திரியனுடைய பெண்ணென்று நினைக்கிறேன்" என்றார். அதனைக் கேட்ட சகுந்தலை, "ஓ வீர! நான் விசுவாமித்திரருக்கு மேனகையிடத்திற் பிறந்தவள். மேனகை சொர்க்கத்திற்குப் போகும்பொழுது என்னைக் காட்டில் விட்டுப் போனாள். இது கண்வ மகரிஷிக்குத் தெரியும். உமக்கு என்னால் என்ன செய்யப்படவேண்டும்? தாமரை மலர் போன்ற கண்ணுள்ளவரே! உட்காரும். என்னால் செய்யப்படும் பூஜையைப் பெற்றுக்கொள்ளும். நீவாரங்களிருக்கின்றன, புசிக்கலாம், இஷ்டமிருந்தால் இவ்விடத்தில் வசிக்கலாம்" என்றாள். அதனைக் கேட்ட துஷ்யந்தன், "ஓ அழகான புருவங்களுள்ளவளே! குசிக வம்சத்தில் பிறந்த நீ சொன்ன வார்த்தை யுக்தமானதேயாம். இராஜகன்னிகைகள் தாங்களாகவே தங்களுக்குச் சமமான புருஷனை வரிப்பார்கள்" என்றான். அதற்கு அவள் சம்மதித்தாள். அதன்பின் தேசகாலங்களை யறிந்தவனாகிய அரசன் காந்தருவ விதிப்படி அவளைக் கல்யாணஞ்செய்துகொண்டு ரமித்தான். அவள் கர்ப்பிணியானாள். மறு நாள் அரசன் தன்னுடைய நகரஞ் சென்றான். சில காலஞ்சென்றபின் சகுந்தலை பிரசவித்தாள். கண்வர் அந்தக் குமாரனுக்கு ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்தார். அந்தக் குமாரன் சிங்கங்களைப் பிடித்துக் கட்டிவைத்துக்கொண்டு விளையாடினான். மிகுந்த பராக்கிரமமுள்ள அந்தக் குமாரனுடன் சகுந்தலை அரசனிடஞ் சென்றாள். அப்பொழுது குற்றமற்றவர்களான அவர்களை அரசன் தன்னுடையவர்களென்று அங்கீகரிக்கவில்லை. அப்பொழுது, "ஓ துஷ்

ய்ந்த! மாதாவென்பது தோல் மய்மான ப்ாத்திரம். அதில் பிதாவினுல் புத்திரன் உண்டுபண்ணப்படுகிற படியால் புத்திரனுக்கும் பிதாவிற்கும் பேதகமில்லை. புத்திரனை அங்கீகரித்துப் போஷியும். சகுந்தலையை அவமதிக்கவேண்டாம். வமிசத்தை விருத்திசெய்யும் புத்திரன் யமலோகத்திலிருந்து பிதர்வை சொர்க்கஞ்செல்லும்படி செய்கிறுன். சகுந்தலை சொல்வது உண்மை. இந்தக் கர்ப்பத்தை யுண்டுபண்ணியவன் நீயே. இந்தப் புத்திரன் ஸ்ரீ பகவானுடைய அமிசமுள்ளவன்; பிராமண பக்தியுள்ளவன்; சத்தியப் பிரதிக்ஞன்; கீர்த்தியை விருத்திசெய்பவன்; மிகுந்த உற்சாகமுள்ளவன்; மிகுந்த தாதா; செய்த உபகாரத்தை நினைப்பவன்; பெரியோர்களைச் சேவிப்பவன்; இவன் பாதனென்று பெயரடைவான். சகுந்தலையையும், புத்திரனையும் அங்கீகரிக்கலாம்" என்று எல்லோரும் கேட்டிருக்க ஆகாசவாணி சொல்லிற்று. அதனைக் கேட்டு அரசன் புத்திரனை அங்கீகரித்தான். அந்தப் புத்திரன் துஷ்யந்தனுக்குப் பிறகு சக்ரவர்த்தியானுர். அவர் ஸ்ரீமந் நாராயணனுடைய் அமிசம். மேலும், அவருடைய வலது கையில் சக்கர ரேகையும், பாதங்களில் பதும ரேகையும் இருக்கின்றன. அவர் கங்கைக்கரையில் இருநூற்றுஐம்பது அசுவமேதங்களை அனுஷ்டித்தார். பின்னுமவர் யமுனையின் கரையில் திர்க்க தபஸ் என்பவரைப் புரோகிதராக வைத்துக்கொண்டு பூர்ணமாகத் தக்ஷிணைக் கொடுத்து எழுபத்தெட்டு அசுவமேதங்களைச் செய்தார். துஷ்யந்தனுடைய புத்திரராகிய பரதருடைய அக்கினி சயனத்தில் அவரால் பூரிதக்ஷிணையாகக் கொடுக்கப்பட்ட பசுக்களை அநேகம் பிராமணர்கள் பிரித்தெடுத்துக்கொண்டார்கள். நூற்றுமுப்பத்துமூன்று அசுவமேதங்களை மஷ்கார மென்ற க்ஷேத்திரத்தில் செய்தார். அதற்குத் தேவர்களால் விக்கினஞ் செய்யமுடியவில்லை. இப்படி யாகங்களைச்செய்து ஸ்ரீமந் நாராயணனைப் பரதன் பூஜித்ததைப் பார்த்து எல்லா அரசர்களும் ஆச்சரியத்தை அடைந்தார்கள். மேலும் அவர் வெண்மையான பற்களுள்ளவைகளும், கருமை நிறமுள்ளவைகளும், அலங்கரிக்கப்பட்டவைகளுமான பத்திரமிருகம் முதலிய பதி

ஞன்கு லக்ஷம் யாகங்களைத் தானஞ்செய்தார். அவருக்கு முந்திய அரசர்கள் அப்படிப்பட்ட யாகங்களை ஆற்ற வில்லை; பிந்தியவர்களும் செய்யப்போகிறதில்லை. கைகளால் சொர்க்கத்தை எட்டிப் பிடிக்கமுடியுமா? பின்னுமவர் திக்விஜயஞ்செய்து வரும்பொழுது கிராதர்கள், ஹூணர்கள், யவனர்கள், ஆந்திரர்கள் (தெலுங்கு தேசத்து அரசன்), வங்க தேசத்தரசர்கள், சகர்கள், கஷர்கள, முதலிய பிராமண பக்தியில்லாத அரசர்களைக் கொன்றார். முன்காலத்தில் தேவர்களை வென்று அசுரர்கள் தேவ மாதர்களையும், மனிதர்களையும் பலாத்காரமாகப் பாதாலத்திற்குக் கொண்டுபோயிருந்தார்கள். அவர்களைப் பரதன் திருப்பிக்கொண்டுவந்தார். பரதருடைய இராஜ்யகாலத்தில் பூமியும், த்யுலோகமும் பிரஜைகளுக்கு இஷ்டமான வஸ்துக்களை யுண்டுபண்ணின. இவ்வாறு பரதர் இருபத்தேழு ஆயிரம் ஆண்டுகள் இராஜ்யபாலனஞ் செய்தார். அந்தச் சக்கரவர்த்தி உலகபாலர்களுக்கும் அரிதான ஐசுவரியத்தை அடைந்திருந்தும் அந்த ஐசுவரியத்தையும், களத்திரம் புத்திரன் முதலியவர்களையும் அனித்தியங்களென்று நினைத்து வைராக்கியத்தை அடைந்தார். ஓ பரீக்ஷித்து மஹாராஜ! அவருக்கு விதர்ப்ப தேசத்தரசனுடைய குமாரிகளாகிய மூன்று பத்தினிகளுண்டு. அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்தன. அவைகளைப் பார்த்துப் பரதர் 'இந்தக் குழந்தைகள் எனக்குத் தகுதியானவையல்ல' என்று சொன்னார். அதனால் அக்குழந்தைகளின் தாய்கள் அவைகளைக் கொன்றார்கள். ஆனதால் வம்சவிருத்திக்குத் தகுதியான புத்திரனில்லாமல் போய்விட்டது. அப்பொழுது அரசன் மருத்துக்களை யுத்தேசித்து யாகஞ்செய்தார். அதனால் மருத்துக்கள் மகிழ்ந்து பரத்வாஜரைப் புத்திரராகக் கொடுத்தார்கள். அவருக்கு விததனென்று பெயருண்டாயிற்று.

39—42. அவருக்குப் பரத்வாஜரென்று ஏன் பெயர் வந்ததென்றால்—முன்னொருகால் பிரகஸ்பதி பகவான் தம்முடைய சகோதரராகிய உசத்தியருடைய பத்தினியினிடம் ரமிக்க யத்தனித்தார். அப்பொழுது அவன்

கர்ப்பிணியாக இருந்தபடியால் அவளுடைய கர்ப்பத்தி லிருந்த பிரகஸ்பதியை நோக்கி, "இந்தக் கர்ப்பத்தில் என்னைத் தவிர வேறு சிசுவிற்கு இடமில்லை. ஆதலால் உம்முடைய வீரியத்தை இந்த யோனியில் விடவேண்டாம்" என்றது. அதனைக் கேட்ட பிரகஸ்பதி கோபங் கொண்டு, 'நீ குருடனாவாய்' என்று சிசுவைச் சபித்து, மமதையென்பவளுடைய யோனியில் தம்முடைய வீரியத்தை விட்டார். அப்பொழுது அந்தச் சிசுவானது காலால் உதைத்து, அந்த வீர்யத்தைப் பூமியில் கிடத்தினது. அந்த வீரியம் ஒரு புத்திரனாயிற்று. அதனைக் கண்ட மமதை தன்னுடைய புருஷனிடம் பயந்து அந்தக் குழந்தையை விட்டுப்போக முயலுவதைப் பார்த்துப் பிரகஸ்பதி, 'அடி மூடையே! ஒருவனுடைய வீரியத்திற்கு மற்றொருவனுடைய க்ஷேத்திரத்தில் உண்டானவனானதால் (த்வாஜன்) இவனைப் போஷிக்கவேண்டும்" என்றார். (உன்னுடைய பர்த்தாவிற்கும் இவன் புத்திரனாகையால் அவர் கோபிக்கமாட்டார் என்று கருத்து.) அதனைக் கேட்ட மமதை, "ஓ பிரகஸ்பதியே! நீர்தான இக்குழந்தையைப் போஷியும்" என்றாள். இப்படி அவ்விருவர்களும் விவாதஞ் செய்துகொண்டு அந்தக் குழந்தையை அவ்விடத்தில் விட்டுவிட்டுச் சென்றார்கள். அதனால் அக்குழந்தைக்குப் பரத்வாஜரென்று பெயருண்டாயிற்று. ('பர'வென்றால் 'போஷியும்' என்றதும்; த்வாஜனென்றால் இருவர்களால் உண்டானவரென்று அர்த்தம்) அக்குழந்தையை மருத்துக்கள் வளர்த்தார்கள். அந்தப் பரத்வாஜரைப் பரதருடைய வம்சவிருத்திக்காகப் பரதருக்கு கொடுத்தார்கள்.

# அத்தியாயம் 21

## விததருடைய வமிசம்

விததருடைய புத்திரர் மன்யுவென்பவர். அவருக்கு ப்ரகத்க்ஷத்திரன், ஜயன், மஹாவீர்யன், நரன், கர்க்கன் என்று ஐந்து புத்திரர்கள் பிறந்தார்கள். (பரத்வாஜர் பிராமணராலும் பரதருக்குத் தத்தபுத்திரரானார்.) நருடைய புத்திரர் ஸங்கிருதியென்பவர். அவருக்குக் குரு, ரந்திதேவர் என்ற இரண்டு புத்திரர்களுண்டானார்கள். அவர்களில் ரந்திதேவருடைய கீர்த்தியானது இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் கானஞ் செய்யப்படுகிறது. அந்த ரந்திதேவர் பணம் சம்பாதிக்க முயலுகிறதில்லை. பின்னுமவர் தெய்வச்செயலாகக் கிடைத்ததை யாசிப்பவர்களுக்குக் கொடுத்துவந்தார், அதனால் தரித்திரராக இருந்தார். ஆனாலும் தைரியமுள்ளவர்; மிக்க குடும்பமுள்ளவர்; இம்மாதிரியான சுபாவமுள்ளவராகிய ரந்திதேவர் ஒருகால் நாற்பத்தெட்டு நாட்கள் நீரைக் கூடப் புசியாமல் உபவாசமிருந்தார். இப்படி குடும்பத்துடன் கஷ்டப்படும்பொழுது தெய்வச்செயலாக நெய், பாயசம், கடலை, நீர் ஆகிய இவைகள் கிடைத்தன. அவைகளைப் புசிப்பதற்கு யத்தனித்த சமயத்தில் ஒரு பிராமணன் அதிதியாக வந்தார். அப்பொழுது ரந்திதேவர் சகல பிராணிகளிடத்திலும் பகவான் வசிக்கிறாரென்பதைத் தெரிந்துகொண்டு மிகுந்த ஆதரவுடன் அந்த அன்னத்தைப்பிரித்து, பிராமணனுக்குக் கொடுத்தார். அவர் அதனைப் புசித்துச் சென்றார். எஞ்சியதைக் குடும்பத்திற்கு பிரித்துக்கொடுத்து, தம்முடைய பாகத்தைப் புசிக்க ஆரம்பித்தார். அப்பொழுது ஒரு சூத்திரன் வந்து அன்னங் கேட்டான். அதனைக் கேட்ட ரந்திதேவர் தம்முடைய பாகமான அன்னத்தில் அவனுக்குக் கொடுத்தார். அவன் சென்றபின் அநேக நாய்களுடன் மற்றொரு அதிதி வந்தான். அவனுக்கும் நாய்களுக்கும் அன்னத்தைக் கொடுத்து மிகுந்த பிரீதியுடன் அவனை நமஸ்கரித்தார். நீர் மாத்திரம் எஞ்சியது. அதுவும் ஒரு புருஷனுக்கு மாத்திரம் போதுமானது. அதனை

அரசன் பானஞ்செய்ய முயலும் சமயத்தில் ஒரு சண்டாளன், " ஓ மஹாராஜ! நீச ஜாதியாகிய எனக்குத் தீர்த்தங் கொடுக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். அவனுடைய தீனமான வார்த்தையைக் கேட்ட அரசன் அவனை நோக்கி, " அணிமா முதலிய ஐசுவர்யங்களுள்ள பதங்களையாவது மோக்ஷத்தையாவது நான் விரும்பவில்லை. பசி தாகங்களால் உண்டாகும் சகல பிராணிகளுடைய துக்கத்தையும் நான் ஒருவனாக அநுபவிக்க விரும்புகிறேன். அவர்களெல்லாரும் சுகமாக இருக்கட்டும். மேலும், நீரைப் பருகுவதால் பசி தாகங்களால் உண்டான சிரமம், அலைச்சலாலுண்டான சிரமம், தைனியம், சோகம், மோகம் ஆகிய இவைகள் நிவர்த்தியாகின்றன" என்று அமிருதம் போன்ற வார்த்தையைச் சொல்லி, இயற்கையில் கருணையுள்ளவராகையால் அந்த நீரைச் சண்டாளனுக்குக் கொடுத்தார். அந்தச் சமயத்தில் அரசன் வெகு நாளாக ஆகாரமில்லாமலிருப்பதால் மரிக்க வேண்டிய நிலையிலிருப்பவரானாலும் மிக்க தைரியமுள்ளவராகையால் இப்படிச் செய்தார். பிரம்மா முதலிய தேவர்கள் அவருடைய மனத்தைப் பரீட்சிப்பதற்காகச் சூத்திரன் முதலிய அதிதியாக வந்து அவரால் கொடுக்கப்பட்டதைப் புசித்து அவரிடம் சந்தோஷத்தை அடைந்தார்கள். அந்த ரந்திதேவர் அவர்களை வணங்கித் தேகம் முதலியவைகளில் அபிமானத்தை யொழித்து, பகவானாகிய வாஸுதேவரிடத்தில் நிலையாகப் பக்திசெய்தார். வேறு விஷயத்தை விரும்பாமல் பகவானிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தியவரான அவருக்கு சொப்பனம்போல மாயை நசித்தது. அவரை அநுசரித்தவர்கள் நாராயணனையே தியானஞ்செய்து யோகிகளானார்கள்.

19—26. கர்க்கருடைய புத்திரர் சினியென்பவர். அவருடைய புத்திரர் கார்க்யர். அந்த க்ஷத்திரியரிடமிருந்து பிராமணகுலமும் உண்டாயிற்று. மகாவீரியருக்கு உருக்ஷயரென்பவர் புத்திரர். அவருக்குத் திரையாருணி, கவி, புஷ்கராருணி என்ற மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். அந்த மூவர்களும் பிராமணர்களானார்கள். பிருகத்க்ஷத்ரருக்கு ஸுஹோத்திரரென்ற குமாரர் பிறந்-

தார். அவருடைய் புத்திரர் அஸ்திபென்பவர். அதனுல் தான் அந்த நகரம் அஸ்திஞவென்று பெயரடைந்தது. அந்த அஸ்தியென்பவருக்கு அஜமீடர், த்விமீடர், புருமீடர் என்ற மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். பிரியமேதன் முதலிய பிராமணர்கள் அஜமீடருடைய் வமிசத்தில் பிறந்தவர்கள். அஜமீடருக்குப ப்ருகதிஷுவென்று ஒரு புத்திரருண்டு. அவருடைய புத்திரர் பிரகத்தநு. அவருடைய புத்திரர் பிரகத்காயர். அவருடைய புத்திரர் ஜயத்ரதர். அவருடைய புத்திரர் விசுவஜித் என்பவர். அவருடைய புத்திரர் ஸேனஜித். அவருக்கு ருசிராச்வர், த்ருடஹநு, காக்யர், வத்ஸர் என்று நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் ருசிராசவருடைய புத்திரர் பிராஞ்ஞரென்பவர். அவருடைய புத்திரர் பிரதுஸேனர். அவருடைய புத்திரர் பாரரென்பவர். அவருடைய புத்திரர் நீபரென்பவர். அவருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அந்த நீபர் சுகருடைய புத்திரியாகிய கிருத்வீ என்பவளிடத்தில் பிரமதத்தரென்பவரைப் பெற்ருர். யோகிகளுக்குச் சிறந்தவராகிய பிரமதத்தர் கோ வென்பவளிடத்தில் விஷ்வக்ஸேனரென்பவரை யுண்டுபண்ணிஞர். அந்த விஷ்வக்ஸேனர் ஜைகிஷவ்யரிடம் உபதேசம் பெற்று யோக சாஸ்திரத்தைச் செய்தார். அவருடைய புத்திரர் உதக்ஸேனரென்பவர். அவருடைய புத்திரர் பல்லாதர். பிரகதிஷுவின் வமிசத்திய அரசர்களைச் சொன்னேன்.

27—32. த்விமீடருடைய புத்திரர் யமீனரர். அவருடைய புத்திரர் கிருதிமான். அவருடைய புத்திரர் ஸத்யதிருதி. அவருடைய் புத்திரர் த்ருடநேமி. அவருடைய புத்திரர் ஸுபார்சுவர். அவருடைய புத்திரர் சுமதி. அவருடைய் புத்திரர் ஸந்நதிமான். அவருடைய புத்திரர் கிருதியென்பவர். அவர் இரண்யநாபரென்பவரிடம் யோகத்தையும், ஸாமத்தின் ஆறு ஸம்ஹிதைகளையும் பெற்றுக்கொண்டார். அவருடைய புத்திரர் உக்கிராயுதரென்பவர். அவருடைய புத்திரர் க்ஷேம்யர். அவருடைய் புத்திரர் ஸுவீர்யரென்பவர். அவருடைய் புத்திரர் புரஞ்சபர். அவருடைய புத்திரர்

பஹ்ராதரென்பவர். புருமீடருக்குப் புத்திரனில்லை ( அஜமீடருக்குப் பிரியமேதன் முதலிய பிராமணர்களும், பிரகதிஷு முதலிய அரசர்களும் புத்திரர்களென்று முன் சொல்லப்பட்டது. அவருடைய வேறு வம்சம் இனி சொல்லப்படுகிறது.) அஜமீடருக்கு நளினி யென்பவளிடத்தில் நீலனென்ற புத்திரனுண்டானார். அவருடைய புத்திரர் சாந்தியென்பவர். அவருடைய புத்திரர் ஸுசாந்தி யென்பவர். அவருடைய புத்திரர் புருஜரென்பவர். அவருடைய புத்திரர் அர்க்கரென்பவர். அவருடைய புத்திரர் பரமியாச்வரென்பவர். அவருக்கு முத்கலர், யீனரர், பிரகதிஷு, காம்பில்யர், சிருஞ்ஜயர் என்ற ஐந்து புத்திரர்கள் உண்டானார்கள். அவர்களை நோக்கி பர்மியாசுவர், "ஓ புத்திரர்களே! என்னுடைய ஐந்து தேசங்களையும் காப்பாற்ற நீங்கள் வல்லமையுள்ளவர்கள்" என்றார். அதனால் அவர்கள் பாஞ்சாலர்களெனப் பெயரடைந்தார்கள்.

33—37. முத்கலரிடத்திலிருந்து பிராமண வம்சம் உண்டாயிற்று. அது மௌத்கல கோத்திரமாயிற்று. முத்கலருக்குத் திவோதாஸரென்ற புத்திரரும், அகல்யா யென்ற கன்னிகையுமுண்டானார்கள். அந்த அகல்யை கௌதமரை விவாகஞ்செய்துகொண்டு சதானந்தரைப் பெற்றாள். அவருடைய புத்திரர் ஸத்யதிருதியென்பவர். அவர் வில் வித்தையில் சிறந்தவர். அவருடைய புத்திரர் சரத்வானென்பவர். அவர் ஊர்வசியைக் கண்டு மோகித்தார். அவருடைய வீர்யமானது நாணல் காட்டில் விழுந்ததனால் சரத்வான் என்று அவருக்குப் பெயருண்டாயிற்று. அந்த வீர்யமானது நல்நடையுள்ள ஒரு பெண்ணாகவும், ஒரு புத்திரனாகவும் ஆயிற்று. சந்தனுவென்ற அரசன் வேட்டைக்காக வனத்தில் சஞ்சரித்து அக்குழந்தைகளைக் கண்டு அவற்றைத் தாம் எடுத்து நகரத்திற்குக் கொண்டுபோய் வளர்த்தார். அந்தப் புத்திரன்தான் கிருபரென்பவர், அந்தப் பெண் கிருபியென்பவள். அவள் துரோணரைக் கல்யாணஞ் செய்துகொண்டாள்.

நோட்டு

கிருத்வீ—"பராசரருடைய குலத்திலுண்டான மிக்க கீர்த்தியுள்ள சுகரென்பவர் அரணியில் அக்னியுண்டாவதுபோல வியாசரிடமிருந்து ஜனித்தார். அந்தச் சுகர் பித்ருக்களின் கன்னிகையான விரிணி யென்பவளிடத்தில் கிருஷ்ணன், கௌரப்ரதன், சம்பு, பூரிச்ருவன், ஜயன் என்ற புத்திரர்களை யுண்டுபண்ணுவார். மேலுவர் கீர்த்திமதி என்ற கன்னிகையையும் உண்டுபண்ணுவார். அந்தக் கீர்த்திமதி என்பவளுக்குப் பிரமதத்தனென்ற குமாரன் ஜனிப்பான்"—அரிவம்சம். சுகர் பிறந்ததுமுதல் ஆசைகளை யொழித்தவராகையால் அவருக்கு விவாகமேயில்லை. ஆனாலும் தம்மைவிட்டுப் பிரிய மனமில்லாமல் துக்கிக்கும் வியாசரைச் சந்தோஷப்படுத்துவதற்காகச் சாயா சுகரை யுண்டுபண்ணிவைத்துத் தாம் சென்றார். அவருடைய புத்திரியென்று தாத்பரியம்.

# அத்தியாயம் 22

## ரிக்ஷ வமிசம்

முத்கலருடைய புத்திரராகிய திவோதாஸருக்கு மித்திராயுவென்ற புத்திரருண்டானார். அவருக்கு சியவனர், சுதாஸர், சகதேவர், சோமகர் என்ற நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். சோமகருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் ஜந்துவென்பவர் மூத்தவர். பிருஷதரென்பவர் இளையவர். பிருஷதருடைய புத்திரர் துருபதர். அவருக்குத் திருஷ்டத்யும்னனென்ற புத்திரரும், திரௌபதியென்ற பெண்ணுமுண்டானார்கள். திருஷ்டத்யும்னருடைய புத்திரர் திருஷ்டகேதுவென்பவர். இவர்கள் பர்மியாச்வருடைய வமிசத்தில் பிறந்தவர்கள். இவர்களுக்குப் பாஞ்சாலர்களென்று பெயர்.

3—8. அஜமீடருடைய புத்திரராகிய ரிக்ஷருக்கு ஸம்வரணரென்ற புத்திரருண்டானார். ஸம்வரணருக்கு (தபதியென்பவளிடத்தில்) குருவென்பவர் உண்டானார். அவர் குருக்ஷேத்திரத்திற்கு அரசனாக இருந்

தார். அவருக்குப் பரீக்ஷித்து, சுதனு, சன்னு, நிஷதர் என்ற நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் சுதனு என்பவருக்கு சுகோத்திரர் பிறந்தார். அவருடைய புத்திரர் சியவனர். அவருடைய புத்திரர் கிருதீ யென்பவர். அவருடைய புத்திரர் உபரிசரவஸுவென்பவர். அவருக்குப் பிரகத்ரதர், குஸும்பர், மத்ஸ்யர், பிரத்யக்கிரன், சேதிப முதலியவர்கள் பிறந்தார்கள். அவர்களில் பிரகத்ரதருடைய புத்திரர் குசாரச்வரென்பவர். அவருடைய புத்திரர் ரிஷபரென்பவர். அவருடைய புத்திரர் ஸத்யஹிதரென்பவர். அவருடைய புத்திரர் புஷ்பவர்னென்பவர். அவருடைய புத்திரர் சந்துவென்பவர். பிரகத்ரதருக்கு வேறு பத்தினியினிடத்தில் இரண்டு துண்டுகள் உண்டாயின. புத்திரனுகவில்லாமல் துண்டுகளாகவிருந்ததனுல் அவைகளை மாதா வெளியில் எறிந்துவிட்டாள். அவ்விடத்தில் விளையாடிக்கொண்டிருந்த ஜரா என்னும் ராக்ஷஸி "ஜீவ, ஜீவ' என்று சொல்லி அந்த இரண்டு துண்டுகளையும் சேர்த்தாள். அக்குழந்தை பிழைத்தது. அதனுல் அவனுக்கு ஜராஸந்தனென்று பெயருண்டாயிற்று. அந்த ஜராஸந்தனுக்குச் சகதேவரென்ற புத்திரருண்டானுர். அவருக்கு ஸோமாபி, சுருதச்ரவஸ் என்ற இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள்.

9—17. குருவின் புத்திரர்களில் பரீக்ஷித்திற்குப் புத்திரனில்லை. சந்துவென்பவருக்கு சுரதரென்ற புத்திரருண்டானுர். அவருடைய புத்திரர் விடூரதரென்பவர். அவருடைய புத்திரர் சார்வபௌமர். அவருடைய புத்திரர் ஜயசேனர். அவருடைய புத்திரர் ரதிகர். அவருடைய புத்திரர் அயுதாயுஸ். அவருடைய புத்திரர் குரோதனர். அவருடைய புத்திரர் தேவாதிதியென்பவர். அவருடைய புத்திரர் ரிக்ஷரென்பவர். அவருடைய புத்திரர் பீமசேனர். (திலீபரென்று சில புத்தகம்) அவருடைய புத்திரர் பிரதீபர். அவருக்குத் தேவாபி, சந்தனு, பாஹ்லீகர் என்ற மூன்று புத்திரர்களுண்டானுர்கள். அவர்களில் தேவாபியென்பவர் ராஜ்யத்தைவிட்டுக் காட்டிற்குச் சென்றுர். (அவருக்

குப் புத்திரனில்லை. சந்தனுவென்பவர் அரசராஞர். அவருக்கு முன்ஜன்மத்தில் மகாபிஷரென்று பெயர். அவர் நரையை அடைந்தவர்களைத் தம்முடைய கையி ஞல் தொட்டால் அவர்கள் யௌவன வய்தை அடை வார்கள். மேலான சாந்தியையும் அடைகிருர்கள். (கிழத்தனத்தாலுண்டாகும் உபத்திரவத்தைப் போக்கி, சுகத்தை யுண்டுபண்ணுவதால் சந்தனுவென்று பெய ரடைந்தார்). அவர் இராஜ்யபாலனஞ் செய்யும் பொழுது ஒருகால் பன்னிரண்டு வருஷங்கள் மழை பெய்யவில்லை. சந்தனுவானவர் பிராமணர்களை வர வழைத்து மழைபெய்யாத காரணமென்ன வென்று கேட்டார். அதனைக் கேட்ட பிராமணர்கள் அரசனை, "நீர் மூத்தவருக்கு இராஜ்யத்தைக் கொடாமல் அனு விப்பதால் பரிவேத்தாவாக இருக்கிறீர். அவருக்கு இராஜ்யத்தைக் கொடுத்தால் தேசத்திற்கு க்ஷேமமுண் டாகும்' என்ருர்கள். அதனைக் கேட்ட சந்தநு வனஞ் சென்று இராஜ்யத்தைப் பெற்றுக்கொள்ளும்படி மூத்த வரைப் பிரார்த்தித்தார். அதற்கு முன்னதாகவே அசும ராதரரென்ற மந்திரி சில பிராமணர்களை யனுப்பித் தேவாபியின் மனதைக் கலைத்தார். அதனுல் தேவாபி யானவர் வேதவிரோதமாகப் பாஷண்ட மதத்தை ஆசி ரயித்த வார்த்தைகளைச் சொல்லி அதிவாதஞ் செய் தார். அப்பொழுது அவர் இராஜ்யபாலனஞ் செய் வதற்கு அனர்கராகையால் சந்தனுவிற்குப் பரிவேத் தாவாகிய தோஷம் நீங்கியது; மழையும் பெய்தது. தேவாபியென்பவர் யோகாப்யாசஞ்செய்து கலாப கிரா மத்தில் வசித்துக்கொண்டிருப்பார். கலியுகத்தின் முடிவில் சந்திரவம்சம் சந்ததி யற்றுப்போகும். திரும்ப வும் கிருதயுகத்தின் ஆரம்பத்தில் தேவாபி சந்திர வம்சத்தை விருத்திசெய்வார்.

18—49. பிரதீபருடைய புத்திரராகிய பாஹ்லீகருக்கு சோமதத்தரென்ற புத்திரர் பிறந்தார். அவருக்குப் பூரி, பூரிச்ரவஸ், சலன் என்ற மூன்று புத்திரர்களுண்டா ஞர்கள். சந்தனுவிற்குக் கங்கையினிடத்தில் பிரமத்தை யறிந்தவராகிய பீஷ்மரென்ற புத்திரர் பிறந்தார். அவர்

தர்மத்தை அறிந்தவர்களுக்குட் சிறந்தவர்; பாகவதர்களுக்குள் மேலானவர்; வித்வான்; வீரர்களுக்குள் சிறந்தவர்; அவர் யுத்தத்தில் பரசுராமனையும் சந்தோஷிக்கச் செய்தவர். பின்னும் சந்தனுவிற்கு வலையர்களால் காப்பாற்றப்பட்ட சத்தியவதியினிடத்தில் சித்ராங்கதன், விசித்ரவீர்யன் என்ற இரண்டு புத்திரர்களுண்டானார்கள். சித்ராங்கதனைச் சித்ராங்கதனென்ற கந்தருவன் கொன்றான். அந்தச் சத்தியவதி கன்னிகையாக இருக்கும்பொழுது பராசர மகரிஷி அவளிடத்தில் வியாசரை யுண்டுபண்ணினார். அந்த வியாசர் ஸ்ரீமந் நாராயணனுடைய கலை; அவர் வேதங்களைக் காப்பாற்றியவர்; அவர் கிருஷ்ணத்துவைபாயனரென்ற பெயருள்ளவர்; அவருடைய புத்திரராகிய சுகனென்றவரிடமாக நான் இந்தப் பாகவத ஸம்ஹிதையை அத்யயனஞ் செய்தேன். சத்தியவதியின் புத்திரராகிய அந்த வியாசர், பைலர் முதலிய சிஷ்யர்களுக்கு இந்த ஸம்ஹிதையை உபதேசியாமல் மிகவும் சாந்தனாகிய எனக்கு, மிகவும் மேலானதாகிய இந்தப் புராணத்தை யுபதேசித்தார். விசித்ரவீர்யரென்பவர் சுயம்வரத்தில் பீஷ்மரால் பலாத்காரமாகக் கொண்டுவரப்பட்ட காசிராஜனுடைய இரண்டு பெண்களையும் விவாகஞ் செய்துகொண்டார். அந்தப் பெண்களுக்கு அம்பா, அம்பாலிகா என்று பெயர். அந்த விசித்ரவீர்யர் அந்தப் பத்தினிகளிடத்தில் மிக்க பிரீதியுடன் காலத்தைக் கழித்து க்ஷயரோகத்தால் மரணமடைந்தார். அவருக்குப் புத்திரனில்லை. ஆனதால் வியாசர் விசித்ரவீர்யருடைய பத்தினிகளிடத்தில் (தாசியிடத்திலும்) திருதராஷ்டிரர், பாண்டு, விதுரர் என்ற மூன்று புத்திரர்களை யுண்டுபண்ணினார். திருதராஷ்டிரருக்குக் காந்தாரியினிடத்தில் துச்சலா வென்ற புத்திரியும், துரியோதனன் முதலிய நூறு புத்திரர்களும் பிறந்தார்கள். மகரிஷியின் சாபத்தால் பாண்டு வென்பவர் மாதர் சேர்க்கையில்லாமலிருந்தார். அதனால் அவருடைய பத்தினியாகிய குந்தியினிடத்தில் தர்மனால் தர்மபுத்திரரும், வாயுவினால் பீமசேனரும், மகேந்திரனால் அர்ஜுனரும், மாத்திரியினிடத்தில் அசுவினீதேவர்களால் நகுலரும், சகதேவரும் உண்டு

பண்ணப்பட்டார்கள். அந்த ஐந்து பாண்டவர்களும் துரௌபதியைக் கல்யாணஞ் செய்து கொண்டார்கள். அந்தத் துரௌபதிக்கு ஐந்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்குப் புத்திரனில்லை. (அசுவத்தாமாவினால் கொல்லப்பட்டார்கள்.) அவர்கள் பிரதிவிந்தியன், சுருதசேனன், சுருதகீர்த்தி, சதானீகன், சுருதகர்மா என்ற பெயருள்ளவர்கள். பின்னும் தர்மபுத்திரருக்குப் பௌரவதியினிடத்தில் தேவகனென்பவன் உண்டானான். பீமசேனருக்கு இடும்பியினிடத்தில் கடோற்கசன் உண்டானான். காளியென்ற வேறு பத்தினியினிடத்தில் சர்வகதனென்ற புத்திரன் பிறந்தான். பர்வதத்தின் புத்திரியான சகதேவா என்பவளிடத்தில் சகதேவருக்கு சுகேத்திரனென்றவன் உண்டானான். நகுலன் கரேணுமதீ யென்பவளிடத்தில் வீரியமித்திர னென்பவனை யுண்டுபண்ணினான். அர்ஜுனன் இராவதியினிடத்தில் இராவானென்ற புத்திரனையும், மணலூருபுரத்திற்கு அதிபதியின் புத்திரியான உலூபிகையினிடத்தில் பப்ருவாகனனென்பவனையும் உண்டுபண்ணினார். அந்தப் பப்ருவாகனன் அர்ஜுனருக்குப் புத்திரனானாலும் மாதாமகருக்குப் புத்திரனானான். பின்னும் அர்ஜுனருக்கு சுபத்திரை யென்பவளிடத்தில் உம்முடைய பிதாவாகிய அபிமன்யு பிறந்தார். அவர் சகல அதிரதர்களையும் வென்றவர்; அந்த அபிமன்யுவிற்கு உத்தரை யென்பவளிடத்தில் பரீக்ஷித்தாகிய நீர் பிறந்தீர். துரியோதனன் முதலியவர்கள் மரண மடைந்தபின் அசுவத்தாமா பிரமாஸ்திரத்தைப் பிரயோகிக்க அதன் தேஜஸினால் நீர் எரிக்கப்பட்டும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையால் உயிருடன் பிழைத்தீர். உமக்கு ஜனமேஜயர், சுருதசேனர், பீமசேனர், பராக்கிரமசாலியான உக்கிரசேனர் என்ற நான்கு புத்திரர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஜனமேஜயர் உமக்குத் தக்ஷகனால் மரணம் நேர்ந்ததை அறிந்து கோபங்கொண்டு சர்ப்ப யாகஞ் செய்து, அந்த அக்கினியில் சர்ப்பங்களை ஹோமஞ் செய்யப்போகிறார். பின்னுமவர் சகல அரசர்களையும் வென்று, காவஷேயரைப் புரோகிதராக வைத்துக்கொண்டு அசுவ மேதங்களைச்

செய்வார். அவருக்குச் சதாநீகரென்று புத்திருண்டா வார். அவர் யாஜ்ஞவல்கியரிடம் வேதங்களை அத்தியயனஞ்செய்து கிருபாசாரியரிடமிருந்து அஸ்திர வித்தை அப்யசிப்பார். மேலுமவர் சௌனகரிடமாக ஆத்ம ஞானத்தை யடைவார். அவருடைய புத்திரர் சகஸ்ராநீகரென்பவர். அவருடைய புத்திரர் அசுவமேதஜரென்பவர். அவருடைய புத்திரர் அஸீமகிருஷ்ணரென்பவர். அவருடைய புத்திரர் நிச்சக்ருவென்பவர். அஸ்திநபுரம் கங்கையில் மூழ்கினபோது அதிலிருந்து வெளிக் கிளம்பி கௌசாம்பியில் வசிப்பார். அதனால் அவருக்கு அந்தப் பெயருண்டாயிற்று. அவருடைய புத்திரர் உக்தரென்பவர். அவருடைய புத்திரர் சித்திரரதரென்பவர். அவருக்குச் சுதிரதரென்பவர் புத்திரர். அவருடைய புத்திரர் விருஷ்டிமானென்பவர். அவருடைய புத்திரர் சுஷேணரென்பவர். அவருடைய புத்திரர் சுநீதரென்று உண்டாவார். அவருக்கு நிருசக்ஷு வென்றும், அவருக்குச் சுகாநிலரென்றும், அவருக்குப் பாரிப்லவரென்றும், அவருக்கு மேதாவியென்றும், அவருக்குச் சுநயரென்றும், அவருக்கு நிருபஞ்சயரென்றும், அவருக்குத் தூர்வரென்றும், அவருக்கு நிமியென்றும், நிமிக்குப் பிருகத்ரதரென்றும், அவருக்குச் சுதாஸரென்றும், அவருக்குச் சதாநீகரென்றும், அவருக்குத் துர்த்தமனரென்றும், அவருக்கு வீநரரென்றும், அவருக்குத் தண்டபாணி யென்றும், அவருக்கு மிதரென்றும் புத்திரர்கள் உண்டாவார்கள். அந்த மிதருக்கு (நிதியென்று சில புத்தகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.) க்ஷேமகரென்ற புத்திரர் பிறப்பார். கலியுகத்தில் க்ஷேமகருடன் அந்த வம்சம் முடிவாகும். இனி வரும் மாகத ராஜர்களைச் சொல்லுகிறேன். ஜராசந்தனுடைய புத்திரராகிய சகதேவருக்கு மார்ஜாரியென்றும், அவருக்குச் சுருதசிரவஸ் என்றும், அவருக்கு அயுதாயு வென்றும், அவருக்கு நிரமித்திரரென்றும், அவருக்குச் சுநக்ஷத்திரரென்றும், அவருக்குப் பிரமக்ஷத்திரரும், அவருக்குக் கர்மஜித் என்றும், அவருக்குச் சுருதஞ்சயரென்றும் புத்திரர்களுண்டாவார்கள். அவருக்குச் சுசியென்ற பிராமணன் புத்திரராவார். அவருடைய புத்தி

ரர் க்ஷேமரென்பவர். அவருடைய புத்திரர் சுவீரதரென்பவர். அவருடைய புத்திரர் தர்மநேத்திரரென்பவர். அவருடைய புத்திரர் சுருதரென்பவர். அவருக்குத் திருடசேனரென்றும், அவருக்குச் சுமதியென்றும், அவருக்கு ஷுபலரென்றும், அவருக்கு சுநீதரென்றும், அவருக்குச் சத்யஜித் என்றும், அவருக்கு விசுவஜித் என்றும், அவருக்குப் புரஞ்சயரென்றும் புத்திரர்கள் உண்டாவார்கள். இவர்கள் பிருகத்ரதருடைய சந்ததியிலுண்டாகும் அரசர்கள். ஆயிரம் வருஷங்கள் இந்த வமிசமிருக்கும்.

## நோட்டு

பதினன்கு மேலான ரத்னங்கள்—யானை, குதிரை, ரதம், ஸ்திரீ, பாணம், நிதி, மாலை, வஸ்திரம், விருட்சம், சக்தி, பாசம், ரத்தினம், குடை, விமானம் ஆகிய இவைகளில் மேலானவைகள்.

# அத்தியாயம் 23

## யதுவின் வமிசம்

அனுவிற்கு (யயாதியின் நான்காவது புத்திரர்) ஸபானரர், சக்ஷு, பரோக்ஷர் என்று மூன்று புத்திரர்கள் உண்டானார்கள். அவர்களில் ஸபானரருடைய புத்திரர் காலநாபரென்பவர். அவருடைய புத்திரர் சிருஞ்சயர். அவருடைய புத்திரர் ஜனமேஜயர். அவருடைய புத்திரர் மகாசாலரென்பவர். அவருடைய புத்திரர் மகாமனஸ் என்பவர். அவருக்கு உசீனரர், திதிக்ஷு என்ற இரண்டு புத்திரர்கள். உசீனரருக்குச் சிபி, வனர், கிருமி, தர்ப்பர் என்ற நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் சிபி யென்பவருக்கு விருஷதர்ப்பர், ஸுவீரர், மத்திரர், கேகயர் என்ற நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். திதிக்ஷுவிற்கு விருஷத்ரரென்ற புத்திரர் பிறந்தார். அவருடைய புத்திரர் ஹேமரென்பவர். அவருடைய புத்திரர் ஸுதபஸ் என்பவர். அவருடைய புத்திரர் பலியென்பவர். பலியினுடைய பத்தினியிடத்தில் தீர்க்க

தபஸ் என்பவரால் அங்க, வங்க, கலிங்க, ஸிம்ம, புண்டர, ஆந்திர முதலிய பெயருள்ள அரசர்களுண்டா ஞர்கள். அந்த ஆறு அரசர்களும் தங்கள் தங்கள் தேசத்திற்குத் தங்கள் தங்களுடைய பெயரை வைத் தார்கள். அவர்களில் அங்கருடைய புத்திரர் கனபான ரென்பவர். (அனுமான் என்று சில புத்தகங்களிலிருக் கிறது.) அவருடைய புத்திரர் ஹவிரதர். அவருடைய புத்திரர் தர்மரதரென்பவர். அவருடைய புத்திரர் சித்திரரதரென்பவர். அவருக்குப் புத்திரனில்லை. அவ ருக்கே உரோமபாத ரென்றும் பெயருண்டாயிற்று. அவ ருக்கும் தசரதருக்கும் மிகுந்த சிநேகமுண்டு. அதனுல் தசரதர் சாந்தா வென்னும் தம்முடைய கன்னிகையைப் புத்திரனில்லாதவராகிய உரோமபாதருக்குக் கொடுத் தார். அந்த உரோமபாதருடைய தேசத்தில் ஒருகால் மழை பெய்யாமலிருக்க அதற்காக, விபண்டகருடைய புத்திரராகிய ரிசியசிருங்கரை மாதர்களைக்கொண்டு அழைத்து வந்து சாந்தையை அவருக்குக் கன்னிகா தானஞ்செய்தார். மழைபெய்தது. அதனுல் உரோமபாத ரும் நல்ல புத்திரனை அடைந்தார். அந்த உரோமபாத ருடைய புத்திரர் சதுரங்கரென்பவர். அவருடைய புத் திரர் பிருதுலாக்ஷரென்பவர். அவருக்குப் பிருகத்ரதர், பிருகத்கர்மா, பிருகத்பானு என்று மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். பிருகத்ரதருடைய புத்திரர் பிருகன்மனஸ் என்பவர். அவருடைய புத்திரர் ஜயத்ரதர். அவருக்கு ஸம்பூதி யென்பவளிடத்தில் விசயரென்ற புத்திரர் பிறந்தார். அவருடைய புத்திரர் திருதவ்ரதர். அவரு டைய புத்திரர் சத்தியகர்மா வென்பவர். அவருடைய புத்திரர் அதிரதர். அவர் ஒருகால் கங்கையின் கரை யில் விளையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது கங் கையில் ஒரு பெட்டி மிதந்து வந்தது. அதனை யெடுத்துத் திறந்தார். அதில் ஒரு குழந்தை யிருந்தது. அந்தக் குழந்தையை அதிரதர் தம்முடைய புத்திர ணுகப் பாவித்துப் போஷித்தார். (அவருக்கு வேறு புத்திரனில்லை.) பாண்டுவின் பத்தினியாகிய குந்தியான வள் தான் கன்னிகையாக இருக்கும்பொழுது சூரிய னிடமாகப் புத்திரனை யடைந்து, அதனைப் பிறர் அறி

யாமலிருப்பதற்காகப் பெட்டியில் வைத்துக் கங்கையில் விட்டுவிட்டாள். அந்தக் குழந்தையே அதிரதருடைய புத்திரனானன். அவனைக் கர்ணன் என்று சொல்லுகிறார்கள். அவனுடைய புத்திரன் விருஷசேனனென்பவன்.

14—15. யயாதியின் மூன்றாவது புத்திரராகிய திருஹ்யருடைய புத்திரன் பப்ருவென்பவன். அவனுடைய புத்திரன் சேது வென்பவன். அவனுடைய புத்திரன் ஆரப்தனென்பவன். அவனுடைய புத்திரன காந்தாரன். அவனுடைய புத்திரன் கர்மன. அவனுடைய புத்திரன் கிருதன். அவனுடைய புத்திரன் துர்மதன். அவனுடைய புத்திரன் பிரசேதஸ் என்பவன். அவருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்கள் வடக்குத் திக்கில் மிலேச்சர்களுக்கு அதிபதியானார்கள்.

16—29. யயாதியின் இரண்டாவது குமாரராகிய துர்வஸுவினுடைய புத்திரன் வன்னி. அவருடைய புத்திரன் பாகனென்பவர். அவருடைய புத்திரர் பானுமான். அவருடைய புத்திரன் திருஸாநு. அவருடைய புத்திரர் கரந்தமர். அவர் மிக்க கம்பீர புத்தியுள்ளவர். அவருடைய புத்திரர் மருத்தர். அவருக்குப் புத்திரனில்லாததால் பூருவின் வமிசத்தில் பிறந்த துஷ்யந்தனைப் புத்திரனாக வைத்துக்கொண்டார். அந்தத் துஷ்யந்தன் இராஜ்யத்திற்காக ஆசைப்பட்டுத் திரும்பவும் தமது குலத்திற்கே சென்றார். ஓ மனிதர்களுக்குட் சிறந்தவரே! யயாதியின் முதல் குமாரராகிய யதுவின் வமிசத்தைச் சொல்லுகிறேன், கேளும். அது சகல பாபத்தையும் போக்கக்கூடியது; புண்ணியத்தைக் கொடுக்கக்கூடியது. அந்த யதுவின் வமிசத்தில் புராணபுருஷராகிய பகவான் அவதரித்தபடியால் அந்த வமிசத்துக் கதையைக் கேட்டமாத்திரத்தில் சகல பாபங்களும் விலகுகின்றன. யதுவிற்கு ஸஹஸ்ரஜித், குரோஷ்டு, நலன், ரிபு என்று நான்கு குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களுள் ஸஹஸ்ரஜித் என்பவருடைய புத்திரர் சதஜித் என்பவர். அவருக்கு மகா

ஹயர், வேணுஹயர், ஹேஹயர் என்று மூன்று புத்திரர்கள். ஹேஹயருடைய புத்திரர் தர்மரென்பவர். அவருடைய புத்திரர் நேத்ரரென்பவர். அவர் குந்தியின் பிதா. அவருக்கும் குந்தியென்று பெயருண்டு. அவருடைய புத்திரர் ஸோபஞ்ஜி யென்பவர். அவருடைய புத்திரர் மஹிஷ்மானென்பவர். அவருடைய புத்திரர் பத்திரசேனகரென்பவர். அவருக்குத் துர்மதன், தனிகன் என்று இரண்டு புத்திரர்கள். தனிகருக்குக் கிருதவீர்யன், கிருதாக்னி, கிருதவர்மா, கிருதௌஜஸ் என்ற நான்கு புத்திரர்கள். கிருதவீர்யருடைய புத்திரர் அர்ஜுனரென்பவர். அவர் ஏழு தீவுகளுக்கும் அதிபதியாக இருந்தார். மேலுமவர் பகவானுடைய அம்சமாகிய தத்தாத்ரேயரிடமாக யோகத்தையும், அணிமா முதலிய ஐசுவரியங்களையும் அடைந்தவர்; அநேக யாகங்களை யநுஷ்டித்தவர். தானஞ் செய்தவர்; தபஸ்வி; வேதங்களை அத்தியயனஞ்செய்தவர்; மிகுந்த பராக்கிரமமுள்ளவர்; எல்லாரையும் வென்றவர். மேற்சொல்லிய குணங்களில் அவருக்கு ஒப்பானவர் உலகத்தில் வேறொருவருமில்லை. பின்னுமவர் எப்பொழுதும் ஸ்ரீமந் நாராயணனையே தியானஞ் செய்துகொண்டு எண்பத்து ஐந்து ஆயிரம் வருஷங்கள் இராஜ்யத்தைப் பரிபாலித்தார். அவரை நினைத்தால் காணமற்போன பொருள் கிடைக்கும். அவருக்கும் ஆயிரம் புத்திரர்களுண்டு. ஆனால் அவர்கள் பரசுராமனால் கொல்லப்பட்டார்கள். அவர்களில் ஜயத்வஜன், சூரசேனன், விருஷணன், மது, ஊர்ஜிதன் என்ற ஐந்து புத்திரர்கள் பிரசித்தர்கள். அவர்களில் ஜயத்வருடைய புத்திரர் தாளஜங்கரென்பவர். அவருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்குத் தாளஜங்கர்களென்றே பெயர். ஔர்வ மகரிஷியின் அனுக்கிரகம் பெற்ற சகரரால் கொல்லப்பட்டார்கள். அவர்களில் மூத்தவர் வீதிஹோத்திரரென்பவர். அவருடைய புத்திரர் மதுவென்பவர். அவருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் மூத்தவனுக்கு விருஷ்ணியென்ற பெயராதலால் அவர்களுக்கே விருஷ்ணிகளென்று பெயருண்டாயிற்று. அதனால் அந்த

வமிசத்தில் பிறந்தவர்கள் யாதவர்களென்றும், மாத வர்களென்றும், விருஷ்ணிகளென்றும் சொல்லப்படு கிறார்கள்.

30-40. யதுவின் இரண்டாவது புத்திரராகிய குரோஷ்டுவினுடைய புத்திரர் விருஜினவானென்பவர். அவருடைய புத்திரர் சுவாஹிதரென்பவர். அவரு டைய புத்திரர் பேருசேகுவென்பவர். அவருடைய புத்திரர் சித்திரரதரென்பவர். அவருடைய புத்திரர் சசிபிந்துவென்பவர். அவர் யோகிகளுக்குட் சிறந்தவர்; மிகுந்த அதிருஷ்டமுள்ளவர்; மிகுந்த குணசாலி; பதினன்கு மேலான இரத்தினங்களுள்ளவர்; சக்கர வர்த்தி; ஒருவராலும் வெல்லப்படாதவர். அவருக்குப் பதினயிரம் பத்தினிகளிருந்தார்கள். அவர்களில் ஒவ் வொருவரிடத்திலும் அந்தச் சசிபிந்துவானவர் தனியே ஆயிரம் புத்திரர்களை யுண்டுபண்ணினர். (கோடி புத்திரர்கள்) அவர்களில் பிரதுசிரவஸ் முதலிய ஆறு புத்திரர்கள் சிறந்தவர்கள். அவர்களிலும் தர்மரென் பவருக்கு உசனஸ் என்பவர் புத்திரர். அவர் நூறு அசுவமேதங்களைச் செய்தவர். அவருடைய புத்திரர் ருசகரென்பவர். அவருக்குப் புருஜித், ருக்மன், ருக் மேஷு, பிருது, ஜ்யாமகன் என்று ஐந்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் ஜ்யாமகரென்பவர் சைப்யா என்பவளைக் கல்யாணஞ் செய்துகொண்டார். அவருக்கு அவளிடத்தில் புத்திரன் பிறக்கவில்லை. ஆனலும் அவர் தம்முடைய பத்தினியிடம் பயந்து வேறு பெண்ணையும் கல்யாணஞ் செய்துகொள்ளவில்லை. ஆனலுமவர் ஒருகால் சத்ருக்களை வென்று, சத்துருக் களிடமிருந்த ஒரு கன்னிகையைத் தம்முடைய தேரின் மேதேற்றிக்கொண்டு வந்தார். அதனைக் கண்ட சைப்யா வென்பவள் மிகுந்த கோபங்கொண்டு அரசனை நோக்கி, "ஓ வஞ்சகரே! நான் ஏறக்கூடிய தேரின்மீது யாரை ஏற்றிவைத்துக்கொண்டீர்? இவள் யார்?" என்று கேட்டாள். அதனைக் கேட்ட அரசன், "உன்னுடைய நாட்டுப்பெண் (புத்திரனுடைய பத்தினி)" என்றார். அதனைக் கேட்ட சைப்யா என்பவள் பர்த்தாவை நோக்கி,

"நான் மலடி (புத்திரனில்லாதவள்). எனக்கு ஸபத்னிகளுமில்லை. அப்படியிருக்க, எனக்கு நாட்டுப்பெண் எப்படிக் கிடைக்கும்' என்றாள். (புத்திரனில்லாதவளுக்குப் புத்திரனுடைய பத்தினியென்பது எப்படிப் பொருந்துமென்று கருத்து) அதனைக் கேட்டு அரசன், "உனக்கு இனி பிறக்கும் புத்திரனுக்கு இவள் பத்தினியாவாள்" என்றார். அப்படிச் சொல்லி மிகவும் பயந்து கவலையுடனிருக்கும் அரசனைக் கண்ட விச்வேதேவர்களும் பிதிருக்களும் புத்திரனுண்டாகும்படி அனுக்கிரகித்தார்கள். அதனால் அவள் கர்ப்பிணியாகி ஒரு புத்திரனைப் பெற்றாள். அவனுக்கு விதர்ப்பனென்று பெயர். அரசன் சொல்லியபடி அந்த விதர்ப்பருக்கு அந்தப் பெண்ணை விவாகஞ் செய்வித்தாள்.

# அத்தியாயம் 24

## விதர்ப்பருடைய வமிசங்கள்

விதர்ப்பருக்குக் குசர், குருதர், உரோமபாதர் என்று மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். உரோமபாதருடைய புத்திரர் பப்ருவென்பவர். அவருடைய புத்திரர் கிருதி யென்பவர். அவருடைய புத்திரர் உசிகரென்பவர். அவருடைய புத்திரர் சேதி யென்பவர். அவருக்குச் சைத்யன் முதலிய அரசர்கள் பிறந்தார்கள். குருதரென்பவருக்குக் குந்தி யென்ற புத்திரன் பிறந்தார். அவருடைய புத்திரர் திருஷ்டி யென்பவர். அவருடைய புத்திரர் நிர்விருதி யென்பவர். அவருடைய புத்திரர் தசார்கரென்பவர். அவருடைய புத்திரர் வியோமரென்பவர். அவருடைய புத்திரர் ஜீமுதர். அவருடைய புத்திரர் விகிருதியென்பவர். அவருடைய புத்திரர் பீமரதரென்பவர். அவருடைய புத்திரர் நவரதர். அவருடைய புத்திரர் தசரதர். அவருடைய புத்திரர் சகுனி. அவருடைய புத்திரர் குந்தி. அவருடைய புத்திரர் தேவராதர். அவருடைய புத்திரர் தேவக்ஷத்ரர். அவருடைய புத்திரர் மதுவென்பவர். அவருடைய புத்திரர் குருவசர். அவருடைய புத்திரர்

அனுவென்பவர். அவருடைய புத்திரர் புருஹோத்ரர். அவருடைய புத்திரர் அம்சரென்பவர். அவருடைய புத்திரர் ஸாத்வதர். அவருக்கு பஜமானர், பஜி, திவ்யர், விருஷ்ணி, தேவாபிருது, அந்தகர், மகாபோஜர் என்று ஏழு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் பஜமான ரென்பவருக்கு நிம்ரோசி, கங்கணர், விருஷ்ணியென்று மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். அவருக்கே மற்றொரு பத்தினியிடத்தில் சதஜித், ஸஹஸ்ரஜித், அயுதஜித் என்று மூன்று குமாரர்கள் பிறந்தார்கள். தேவாபிருத ருடைய புத்திரர் பப்ருஎன்பவர். அந்தத் தேவாபிருது, பப்ரு ஆகிய இவர்களுடைய மகிமையைப்பற்றிப் பெரி யோர்கள் பின்ருவமாறு சொல்லுகிறார்கள் எப்படியெனில் —இவ்விருவர்களுடைய குணங்களைப்பற்றி வெகு தூரத் தில் எப்படிக் கேள்விப்பட்டிருக்கிறோமோ அப்படியே சமீபத்தில் வந்து பார்த்தாலும் அது சரியாகவே இருக் கிறது. பப்ருவென்பவர் மனிதர்களுக்குச் சிறந்தவர்; தேவா பிருதுவென்பவர் தேவர்களுக்கு ஒப்பானவர். இவ்விருவர்களுடைய வமிசத்தில் பிறந்த பதினன்கு ஆயிரத்து அறுபத்துஐந்து அரசர்கள் மோக்ஷத்தை அடைந்தார்கள். மகாபோஜரென்பவர் மிகுந்த தர் மிஷ்டர். அவருடைய வமிசத்து அரசர்கள் போஜர்க ளென்ற பெயரடைந்தார்கள். விருஷ்ணி என்பவருக்கு ஸுமித்ரர், யுதாஜித் என்ற இரண்டு புத்திரர்கள். யுதாஜித் என்பவருக்குச் சினி, அனமித்திரர் என்று இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். அனமித்திரரு டைய புத்திரர் நிம்னரென்பவர். அவருக்கு சத்ராஜித், பிரசேனர் என்ற இரண்டு புத்திரர்கள். அனமித்திர ருக்குச் சினியென்னும் புத்திருண்டு. அவருடைய புத்திரர் ஸத்யகரென்பவர். அவருடைய புத்திரர் ஸாத்யகியென்பவர். அவருடைய புத்திரர் யுயுதானர். அவருடைய புத்திரர் ஜயர். அவருடைய புத்திரர் குணியென்பவர். அவருடைய புத்திரர் யுகந்தரர். அனமித்திரருக்கு வேறு பெண்ணிடத்தில் பிரச்னி யென்ற புத்திரர் பிறந்தார். அவருக்குச் சுவபல்கன், சித்திரனென்று இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் சுவபல்கருக்குக் காந்தினி யென்பவளிடத்

தில் அக்ரூரர், அஸங்கர், ஸாரமேயர், மின்துகர், மிருதுபத், சிவர், வர்மதிருக், திருஷ்டவர்மா, க்ஷத்ரோபேக்ஷர், அரிமர்த்தனர், சத்ருக்னர், கந்தமாதர், பிரதிபாகு என்று பதின்மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுடைய சகோதரி ஸுசாருவென்பவள். அக்ரூரருக்குத் தேவவான், உபதேவரென்ற இரண்டு புத்திரர்கள். சித்திரரதருக்குப் * பிருதுவிதூரதர் முதலிய அநேக புத்திரர்கள் பிறந்தார்கள். சாத்வருடைய புத்திரராகிய விருஷ்ணி யென்பவருக்குக் குகுரர், பஜமானர், கம்பல பர்ஹிஸ் முதலிய புத்திரர்கள் உண்டானார்கள். விருஷ்ணியின் புத்திரராகிய குகுரருடைய புத்திரர் விலோமாவென்பவர். அவருடைய புத்திரர் கபோதரோமாவென்பவர். அவருடைய புத்திரர் அனுவென்பவர். அவருக்குத் தும்புரு தோழனானார். (கபோதரோமாவிற்குத் தும்புரு வென்பவர் தோழனென்று சில புத்தகங்களில் இருக்கிறது.) அனுவின் புத்திரர் துந்துபி யென்பவர். அவருடைய புத்திரர் தவித்யோதர். அவருடைய புத்திரர் புனர்வஸுவென்பவர். அவருக்கு ஆருகரென்ற புத்திரனும், ஆருகி யென்ற புத்திரியும் உண்டானார்கள். ஆருகருக்குத் தேவகர், உக்ரசேனர் என்ற இரண்டு புத்திரர்கள். தேவகருக்குத் தேவலர், அநுபதேவர், ஸுதேவர், தேவவர்த்தனர் என்று நான்கு குமாரர்கள். மேலும், அந்தத் தேவகருக்குத் திருததேவா, சாந்திதேவா, உபதேவா, ஸ்ரீதேவா, தேவரக்ஷிதா, சகதேவா, தேவகீ என்ற ஏழு புத்திரிகள் பிறந்தார்கள். அவர்களை வசுதேவர் கல்யாணம் செய்துகொண்டார். உக்ரசேனருக்குக் கம்ஸன், ஸுநாமா, ந்யக்ரோதன், கஹ்வன், சங்கு, ஸுஹு, ராஷ்டிரசாலன், விசிருஷ்டன், துஷ்டமான் என்று ஒன்பது புத்திரர்கள் பிறந்தார்கள். பின்னும் உக்ரசேனருக்குக் கம்ஸா, கம்ஸவதி, கங்கா, ஸுரபூ, ராஷ்டிரபாலிகா என்று புத்திரிகள் உண்டானார்கள். அவர்களை வசுதேவருடைய சகோதரர்கள் கல்யாணம் செய்துகொண்டார்கள். பஜமானருடைய புத்திரர் விடூரதர். அவருடைய புத்திரர் சூரர். அவருடைய புத்திரர் சினி யென்பவர். அவருடைய புத்திரர் ஸ்வயம்போஜர். அவரு

டைய புத்திரர் ஹ்ருதிகர். அவருக்குத் தேவமீடர், சத
தநு, கிருதவர்மா என்று மூன்று புத்திரர்கள். தேவமீட
ருடைய புத்திரர் சூரர். அவருக்கு மாரிஷா என்பவளி
டத்தில் வசுதேவர், தேவபாகர், தேவச்ரவஸர், ஆன
கர், ஸ்ருஞ்ஜயர், சியாமகர், கங்கர், அனிகர், வத்ஸகர்,
விருகர் என்ற பத்துப் புத்திரர்கள் பிறந்தார்கள். வசு
தேவர் பிறந்த சமயத்தில் ஆனகம், தேவதுந்துபி
முதலிய வாத்தியங்கள் முழங்கின. அதனால் அவருக்கு
ஆனகதுந்துபியென்று பெயருண்டாயிற்று. அவருக்குப்
புத்திரனாகப் பகவான் அவதரித்தார். பிருதா (குந்தி),
சுருததேவா, சுருதகீர்த்தி, சுருதசிரவஸ், ராஜாதிதேவி
என்ற ஐந்து பெண்களும், மேற்சொல்லிய வசுதேவர்
முதலியவர்களுக்குச் சகோதரிகள். மேற்சொல்லிய
பெண்களுக்குப் பிதாவாகிய சூரர் தமமுடைய தோழரும்
புத்திரனில்லாதவருமான குந்திபோஜருக்குப் பிருதா
வென்பவளைக் கொடுத்தார். அவர் அவளைப் புத்திரியாக
வைத்துக்கொண்டார். அவள் ஒருகால் குந்திபோஜரு
டைய அரண்மனைக்கு வந்த துர்வாஸ மஹரிஷியை ஆரா
தித்து, அவரிடமாகத் தேவர்களை வரவழைக்கக்கூடிய
வித்தையை அடைந்தாள். பின்பு அவள் அந்த வித்தை
யைப் பரீட்சிப்பதற்காகச் சூரியனை அழைத்தாள். அந்த
வித்தையின் மகிமையால் சூர்யன் பிரத்யட்சரானார். அவ
ரைக் கண்ட குந்தி மிகவும் ஆச்சரியமடைந்து, 'ஓ தேவ!
வித்தையின் மகிமையைப் பரீட்சிப்பதற்காகப் பிரயோகஞ்
செய்தேன். உம்முடைய இருப்பிடம் போகலாம்; மன்னிக்க
வேண்டும்' என்றாள். அதைக் கேட்ட சூரியன், 'ஓ அழ
கான இடுப்புள்ளவளே! தேவதைகளைத் தரிசித்தால்
அது வீணாகாது. ஆனதால் உன்னிடத்தில் ஒரு புத்தி
ரனை யுண்டுபண்ணுகிறேன். உனக்கு வியபிசாரதோஷமு
மேற்படாது'' என்று சொல்லி, அவளைக் கர்ப்பிணியாகச்
செய்து தம்முடைய உலகஞ் சென்றார். உடனே அவளி
டத்தில் சூர்யன்போன்ற மிக்க ஒளியுள்ள குமாரன் பிறந்
தான். அவள் கல்யாணமாகாதிருந்தவளாகையால்
உலகத்திற்குப் பயந்து அந்தக் குமாரனைப் பெட்டியில்
வைத்து, கங்கை நீரில் விட்டாள். அந்தக் குந்தியென்ற
பெண்ணை உம்முடைய பிதாமகருக்குப் பிதாவாகிய

பாண்டு கல்யாணஞ் செய்துகொண்டார். சுருததேவா வென்பவளைக் கருசருடைய புத்திரராகிய விருத்தகர்மா வென்பவர் விவாகஞ்செய்து கொண்டார். அவளிடத்தில் தந்தவக்திரன் பிறந்தான். சுருதகீர்த்தி யென்பவளைக் கேகயன், திருஷ்டகேது என்ற இருவர்களும் திருட் டுத்தனமாக அடைந்தார்கள். கேகயனுக்கு அவளிடத் தில் பிரதர்த்தனர் முதலிய ஐந்து புத்திரர்கள் பிறந் தார்கள். ராஜாதிதேவிக்கு அவந்தியென்பவர் புத்திரன். அவருடைய புத்திரர் ஜயத்சேனன். சேதி தேசத்தரசனு கிய தமகோஷரென்பவர் சுருதசிரவஸ்ஸை விவாகஞ் செய்துகொண்டார். அவருடைய புத்திரர் சிசு பாலர். அவருடைய பிறப்பைப்பற்றி முன்னமேயே சொல்லியிருக்கிறோம். தேவபாகருக்குக் கம்ஸாவென் பவளிடத்தில் சித்திரகேது, பிரகத்பலன் என்ற இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். தேவசிரவஸ் என்பவருக்குக் கம்ஸவதியினிடத்தில் ஸுவீரன், இஷு மான் என்ற இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். கங்கருக்குக் கங்காவென்பவளிடத்தில் பகன், ஸத்யஜித், புருஜித் என்ற மூன்று புத்திரர்களுண்டானார்கள். ஸிருஞ்ஜயருக்கு ராஷ்டிரபாலியென்பவளிடத்தில் விரு ஷன், துர்மர்ஷணன் முதலியவர்கள் பிறந்தார்கள். சியா மகருக்கு ஸுரபூமியினிடத்தில் ஹரிகேசன், ஹிரண்யா க்ஷன் என்ற இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். வத்ஸ ரென்பவருக்கு மித்ரகேசி யென்ற தேவமாதினிடத்தில் விருகன் முதலியவர்கள் பிறந்தார்கள். விருகருக்குத் தூர்வாக்ஷி யென்பவளிடத்தில் தக்ஷன், புஷ்கரன், ஸால்வான் முதலியவர்கள் பிறந்தார்கள். அனீகருக்கு ஸுதாமனி யென்பவளிடத்தில் ஸுமித்திரன், அனீ கன், பாணன் முதலிய புத்திரர்கள் பிறந்தார்கள். ஆனகருக்குக் கர்ணிகா வென்பவளிடத்தில் ரித்தாமா, ஜயன் என்ற இரண்டு குமாரர்கள் பிறந்தார்கள். ஆனகதுந்துபியென்ற வசுதேவருக்குப் பௌரவி, ரோஹிணீ, பத்ரா, மதிரா, ரோசனு, இளா, தேவகீ முத லியவர்கள் பத்தினிகள். மேலும் அவருக்கு ரோஹிணீ யினிடத்தில் பலன் (பலராமன்), கதன், ஸாரணன், துர் மதன், விபுலன், துருவன், கிருதன் முதலிய புத்திரர்கள்

பிறந்தார்கள். பின்னுமவருக்குப் பௌரவியென்ப வளிடத்தில் ஸுபத்திரன், பத்திரபாகு, துர்மதன், பத்திரன், பூதன் முதலிய பன்னிரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். இன்னுமவருக்கு மதிராவென்பவளிடத்தில் நந்தன், உபநந்தன், கிருதகன், சூரன் முதலியவர்கள் பிறந்தார்கள். மேலுமவருக்குப் பத்ராவென்பவளிடத்தில் குலத்திற்குத் தீபம்போன்ற கேசியென்ற ஒரு புத்திரன் பிறந்தான். ரோசனு என்பவளிடத்தில் ஹஸ்தன், ஹேமாங்கதன் முதலியவர்கள் பிறந்தார்கள். இளாவென்பவளிடத்தில் உருவல்கன் முதலிய சிறந்த யாதவர்கள் பிறந்தார்கள். திருததேவா வென்பவளிடத்தில் திருபிருஷ்டனென்ற ஒரு புத்திரன் பிறந்தான். சாந்திதேவா என்பவளிடத்தில் பிரசிரமன், பிரச்ரிதன் முதலியவர்கள் பிறந்தார்கள். உபதேவா வென்பவளிடத்தில் கல்பவிருஷ்டி முதலிய பத்துப் புத்திரர்கள் பிறந்தார்கள். ஸ்ரீ தேவாவென்பவளிடத்தில் வஸு, ஹம்ஸ, ஸுதன்வா முதலிய ஆறு புத்திரர்கள் பிறந்தார்கள். தேவரக்ஷிதா வென்பவளிடத்தில் கதன் முதலிய ஒன்பது புத்திரர்கள் பிறந்தார்கள். சகதேவா வென்பவளிடத்தில் புருடன், சுருதன் முதலிய எட்டுக் குமாரர்கள் பிறந்தார்கள். அது தர்மத்திற்கு எட்டுக் குமாரர்கள் பிறந்தது போலிருந்தது. மேலும், வசுதேவர் தேவகியிடத்தில் கீர்த்திமான், ஸுஷேணர், பத்திரஸேனர், ரிது, ஸமதனன் (மதனனென்று சிலர் சொல்லுவார்கள்.) பத்திரன், ஆதிசேஷருடைய அம்சமாகிய பலராமன் ஆகிய ஏழு புத்திரர்களை யுண்டு பண்ணினர். தேவகியினிடத்தில் எட்டாவது கர்ப்பமாக ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீ கிருஷ்ணனென்ற திவ்ய நாமதேயத்துடன் தாம் அவதரித்தார். பின்னும், வசுதேவருக்குத் தேவகியினிடத்தில் ஸுபத்ராவென்ற ஒரு கன்னிகை யுண்டாளுள். ஓ மகாராஜ! அந்த ஸுபத்ரை உம்முடைய பிதாமகராகிய அர்ஜுனருடைய பத்தினி. எந்த எந்தக் காலத்தில் தர்மம் குறைந்து பாவம் விருத்தியாகுமோ, அந்த அந்தச் சமயத்தில் ஸ்ரீமந் நாராயணன் தம்மைத் தாம் சிருஷ்டிக்கிருர் (அவதரிக்கிருர்). அந்தப் பகவான் மாயைக்கு அதிபதி; ஒன்றிலும் பற்றுத

லில்லாதவர்; சாட்சியாக விருப்பவர்; எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பவர்; அப்படிப்பட்ட பிரபுவிற்கு உண்மையில் ஜனனமில்லை. அவர் பூமியில் அவதரிப்பது, கர்மங்களைச் செய்வது முதலியவை அவருக்குக் கிரிடையே யொழிய ஸம்ஸாரிகளுடையவைகள் போலல்ல. இம்மாதிரியான பகவானுடைய மாயாவிலாசமானது ஜீவர்களை யுண்டுபண்ணுகிறது; காப்பாற்றுகிறது; அழிக்கிறது; அது ஜீவர்களுக்கு அனுக்கிரகமேயாம். அந்தச் சிருஷ்டி முதலியவைகள் இல்லாமலிருக்கும் பொழுது மோக்ஷத்தையும் கொடுக்கிறது. மேலும், அசுரர்கள் அநேகர்கள் அரசர்களாகப் பிறந்து பூமிக்குச் சுமையாக இருந்தபடியால் அவர்களை நாசஞ்செய்து பூமியை அனுக்கிரகிப்பதற்காகவே பகவான் பூமியில் அவதரித்தார். அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவான் பலராமனுடன் சேர்ந்து செய்த லீலைகள் அற்புதமானவை; அவைகள் தேவர்களுடைய மனத்திற்கும் எட்டாதவை. இனி, கலியுகத்தில் உண்டாகும் ஜனங்கள் "இவைகளைக் கேட்டும், படித்தும் ஸம்ஸார துக்கங்களை நிவர்த்துக் கொள்ளட்டும்" என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் அற்புத விளையாட்டுக்களைச் செய்தார். சாதுக்களுடைய செவிகளுக்கு அமிருதமான பகவானுடைய கீர்த்தியாகிய மேலான நீரைச் செவிகளாகிய அஞ்சலியால் எவன் பானஞ்செய்கிறானோ (கேட்கிறானோ) அவனுக்குக் கர்ம வாசனை நிவர்த்தியாகும். அந்தப் பகவானுடைய சரிதத்தைப் போஜர்கள், விருஷ்ணிகள், அந்தகர்கள், மதுக்கள், சூரசேனர்கள், தாசார்ஹர்கள், குருக்கள், ஸிருஞ்ஜயர்கள், பாண்டவர்கள் ஆகிய இவர்கள் சிலாகித்தார்கள். அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய அழகான சிரிப்பு, பார்வை, கம்பீரமான வார்த்தை, விளையாட்டு, மிக்க ரமணீயமான சகல அவயவங்களுள்ள திவ்யசரீரம் ஆகிய இவைகளை ஜனங்கள் தரிசித்தார்கள். மேலும் அவருடைய முகமானது மகரகுண்டலங்களாலும் அழகான செவிகளாலும், பிரகாசிக்கும் கன்னங்களாலும், விலாசமுள்ள மந்தஹாசத்தாலும் ரமணீயமானது; எப்பொழுதும் சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியது. தாமரை மலர்போன்ற அந்த முகத்தைத் தரி

சித்த புருஷர்களும் பெண்களும் போதுமென்ற திருப்தியை அடையவில்லை; நிமிஷத்தை (கண்கொட்டலை) யுண்டுபண்ணும் நிமியினிடத்தில் கோபங்கொண்டார்கள். (இடைவிடாமல் பகவானைத் தரிசிக்க விரும்புகிறார்களென்று கருத்து) பரமபுருஷன் தேவகியினிடத்தில் தம்முடைய சொரூபத்துடன் அவதரித்து, பின்பு மனுஷ்ய சரீரமுள்ளவராகி, தகப்பனார் வசித்த காராகிருகத்திலிருந்து நந்தகோகுலஞ் சென்றார். அவ்விடத்திலிருக்கும் கோபர்களுக்குச் சகல புருஷார்த்தங்களையும் அளித்தார். பூதனை முதலிய சத்துருக்களைக் கொன்றார். ருக்மிணி முதலிய எட்டுப் பெண்களையும், மற்ற பதினாறாயிரம் பெண்களையும் விவாகஞ்செய்து கொண்டு, அவர்களிடத்தில் அநேக புத்திரர்களை யுண்டுபண்ணினார். வேத மார்க்கத்தை உலகத்தில் பரவச்செய்வதற்காக யாகங்களை யநுஷ்டித்துத் தம்மையே ஆராதித்தார். பின்னும் அவர், கௌரவர்கள் ஒருவருக்கொருவர் விரோதப்பட்டு யுத்தஞ்செய்யும் பொழுது பூமிக்குச் சுமையாக இருக்கும் அநேக அரசர்களைத் தம்முடைய பார்வையாலேயே அடித்து (அவர்களுடைய சக்தியை அபகரித்து) வென்று அர்ஜுனன் வென்றானென்று உத்கோஷித்து, உத்தவருக்கு ஆத்ம தத்வத்தை யுபதேசித்துத் தம்முடைய இடத்தை (தேஜஸை) அடைந்தார்.

## நோட்டு

மாயைக்கு அதிபதி—மாயை அவருக்கு வசப்பட்டது. அதனால் அவர் மாயாவீ. ஸம்ஸாரியான ஜீவனே மாயைக்கு வசப்பட்டவன். பரமாத்மா அபிமானமற்றவர். ஜீவனே சகல விஷயங்களிலும் திருடமான அபிமானமுள்ளவன்; பரமாத்மா சாட்சியாக இருப்பவர்; ஜீவனே எல்லாவற்றையும் அனுபவிப்பவன். பரமாத்மா வியாபகர். ஜீவன் வியாப்யன். ஆனதால் இவர்களுக்குப் பலவகையிலும் மிக்க வித்தியாசமிருப்பதால் அவருடைய ஜனனமும் சரித்திரமும் ஜீவனுடையது போலல்ல. ஜீவன் கர்மத்துக்கு வசப்பட்டவனாகையால் கர்மாதீனமான சரீரத்தை யடைகிறான். பகவான் தமக்கு விருப்பமிருந்தால் சரீரத்தை யெடுத்துக்கொள்வார்; ஆனதால் பகவான் பூமியில் வசுதேவருக்குப் புத்திரனாகப் பிறந்து, ருக்மிணி முதலிய பெண்

களை விவாகஞ்செய்துகொண்டு ஸம்ஸாரியாக இருந்தபடியால் அவரும் நம்மைப்போலொருவரென்று சிலர் சொல்வது முற்றி லும் பொருந்தாது.

ஜன்மயில்லை—பகவான் அவதரிப்பதற்கு அவருடைய சங்கற்பமே காரணம். ஜீவனுக்குப் புண்ய பாவங்களால் சரீரமுண்டாவதுபோலல்ல. பரமாத்மா புண்யபாவங்களற்றவர். அவர் புண்ய பாவங்களைச் செய்யும் ஜீவகோடிகளைப் பார்த்துக் கொண்டு சாட்சியாக இருப்பவர். சிதசித் சொரூபமான மூன்று உலகத்தையும் வியாபரித்து, அதன் தர்மங்களுடன் சம்பந்தியாமலிருப்பவர். மேலும், பகவானுடைய மாயா விலாசம் ஜீவர்களை அனுக்கிரகிப்பதற்காகவே. மாயை விலகும்பொழுது அதுவே மோட்சத்திற்கும் காரணமாகிறது.—வீரராகவீயம்.

ஓம் ஸ்ரீ கிருஷ்ணாய பரப்பிரம்மணே நம:

## ஒன்பதாவது ஸ்கந்தம்

முற்றிற்று.

Printed at the Oriental Printing Works, Madras.
For Sri Maha Bharatham Press, Kumbakonam.
2,000 copies—21-10-48.